உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

மாணிக்க வாசக சுவாமிகள்
அருளிச் செய்த

# திருவாசகம்—திருச்சதகம்

அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T

மகிபாலன்பட்டி
மகாமகோபாத்தியாய, முதுபெரும் புலவர்
பண்டிதமணி
## மு. கதிரேசச் செட்டியார்
இயற்றிய
## கதிர் மணி விளக்கம்
என்னும் பேருரை




அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T

ப்பன் பிரசுரம்
இராமச்சந்திரபுரம்
புதுக்கோட்டைத் தனியரசு

1947

அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T

73-2

உ

கணபதி துணை

# முன்னுரை

பெருந்துறையுண் மூழ்கிப் பெறலரும்பே ரின்பக்
குருந்துறையும் நன்மணியைக் கொண்ட—திருந்துணர்வின்
வாதவூர் வள்ளல் மணிவா சகப்பெருமான்
பாதமலர் நெஞ்சமே பற்று.

**சைவத்** திருமுறைகள் பன்னிரண்டனுள் எட்டாம் திருமுறையாக வகுக்கப் பெற்றது, மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருவாசகம் ஆகும். இத் திருவாசக ஆசிரியராகிய சுவாமிகள், தமிழ் வளம் கொழிக்கும் பாண்டி வளநாட்டில், தலைநகராகிய மதுரைக்கு அணிமையில் உள்ள திருவாதவூரில், ஆதி சைவ அந்தணர் மரபில் திருவவதாரம் செய்தவர்கள்; வடமொழி தென்மொழி களில் நிரம்பிய புலமையும், சிறப்பாகச் சிவாகமங்களில் மிக்க பயிற்சியும், சமய நூல் அறிவும் கைவரப் பெற்ற வர்கள்; சைவ சமயத் துறையில் மூழ்கிச் சிவாநுபவ உண்மைகளாகிய நன்மணிகளைக் கண்டவர்கள். இவர்கள் பாண்டியனுக்கு நல் அமைச்சராய் இருந்து, அரசியல் வினைகளைச் செம்மை பெற ஆற்றிவருங்கால், அரசியற் காரியமாகத் திருப்பெருந்துறை செல்ல நேர்ந்தவிடத்து, சிவபெருமானது திருவருட் சார்பால் பாச ஒழிவும், சிவத்துவப் பேறும் பெறும் பருவம் உற்றதாக, அங்கு ஒரு குருந்த மரத்து நீழலில், சிவகணங்களாகிய மாணவர் சூழ, இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளியிருக்கும் அரிய காட்சியைத் தம் கண்குளிரக் கண்டு, உள்ளம் நெக்கு நெக்கு உருகத் தம் வயமிழந்து வணங்கி நின்றனர். அந் நிலையில், அடிகளது பந்தமறும் எல்லையது பார்த்தினி திருந்த இறைவன், தன் அருள் நோக்கால் அடிகளைத் தீர்த்த நீராட்டி ஆட்கொண்டு, திருவைந்தெழுத்தை உபதேசித்து, ஞானப்புதல்வராக ஏற்றுக் கொண்டனன். பின்னர்த் தமிழ் மக்கள், அரிய சிவாநுபவ உண்மைகளை உணர்ந்து நலம் எய்தும் வண்ணம், ஆண்டவன், அடிகளை, 'நிலவுல கத்துச் சின்னாள் இருத்தி' எனக் கட்டளையிட்டு உருக் கரந்தனன் ஆக, அடிகள் அப்பிரிவு பொறாது பலவாறு வருந்தி, பின் இறைவன் கட்டளைப்படியே திருவுத்தர கோசமங்கை, திருக்கழுக்குன்றம் முதலிய தலங்களை

அடைந்து, இறை வழிபாடு செய்து, முடிவில் தில்லைப் பதியைச் சார்ந்து, ஞானப் பொதுவெளியில் ஐந்தொழில் திருக்கூத்து இயற்றும் கூத்தப்பெருமான் திருவடி நீழலில் இயைந்து, அழிவில்லாப் பேரின்ப நுகர்ச்சியில் தலைப் பட்டனர். இஃது அடிகள் வரலாற்றின் சுருக்கக் குறிப்பு ஆகும். மதுரையில் குதிரை பற்றிய நிகழ்ச்சிகளும், இறைவன் மண் சுமந்து, கூலிகொண்டு, அக் கோவால் மொத்துண்டது முதலியனவும், தில்லையில் நிகழ்ந்த பரசமய விவாத நிகழ்ச்சிகளும், பிறவும், அடிகள் வரலாற்றை விரித்துரைக்கும் திருவாதவூரடிகள் புராணம் முதலிய செய்யுள் நூல்களிலும், அன்பர் பலர் எழுதிய உரைநடை நூல்களிலும், விளக்கமாகக் காணலாம். அடிகள் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி நூல்களும் பல உள. ஈண்டு விரித்தற்கு இடன் இன்று.

இனி, அடிகள் அருளிச் செய்த அமிழ்தனைய திருப் பாட்டுக்களைப்பற்றி ஒரு சில கூறுவேன். அடிகள் தம் மெய்யுணர்விற் பொங்கி எழுந்த கனிந்த பேரன்பில், ஆண்டவனைக் கண்டும், அநுபவித்தும் உணர்ந்த உண்மை களைப் புலப்படுத்து, அவ்வப்போது கல்லும் கரையும்படி உருகிப் பாடிய திருப்பாட்டுக்களே **திருவாசகம்** ஆகும். திரு வாசகத்தை ஒத்த ஞானப்பனுவல் வேறு எம்மொழியி லும் காண்டற்கு அரிதாம் என்ப. நாடு நகர வருணனை முதலியன திருவாசகத்தில் பெரும்பாலும் இல்லையென்றே கூறலாம். எல்லாம் ஆண்டவனுக்கும் தமக்கும் உள்ள தொடர்பு பற்றிய அநுபவ உண்மைகளாகவே உள்ளன. ஆண்டவன் காட்சியில் எழுந்த உவகையினும், அப் பெரு மானது பிரிவு நிலையிற் கலங்கிய கலக்கம் பெரிதாகும். "தீயில் வீழ்கிலேன் திண்வரையுருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே" எனவும், "உடையாய் கூவிப் பணிகொள்ளாது ஒறுத்தால் ஒன்றும் போதுமே" எனவும் அருளிய பகுதிகள் நினைக்கத் தக்கன. அடிகள் மெய்யன்பரைப் பற்றிக் கூறுங்கால், "பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ்மேலாகப் பதைத்துருகும் அவர்" என்பர். இவ்விலக்கணத்திற்கு முற்றும் இலக்காக விளங்குபவர் அடிகளே ஆவர். திரு வாசகச் சொற்களும் சொற்றொடர்களும் இனிமைப் பண்பு மிக்கன. பொருள் நுணுக்கங்களோ, நினைக்க நினைக்க ஆழ்ந்து செல்லும் இயல்பின. "தன்மை பிறரால்

73-2



அறியாத தலைவா," "அருமையில் எளிய அழகே," "ஆழ்ந்த கன்ற நுண்ணியனே" என்னும் இன்னோரன்ன பாடற் பகுதிகள், திட்ப நுட்பம் செறிந்து, சூத்திர வடிவில் அமைந்திருத்தல் அறிந்து இன்புறத்தக்கது. திருப்பாட்டுக் களின் ஓசை இன்பம் தனிச் சிறப்புடையது. உரிய இசையிற் பாடுங்கால், ஓதுவார் கேட்பாருடைய உள்ளம் குழைந்து கண்ணீர் பெருகக் காணலாம். அவ் ஓசையிலே ஒரு தெய்விக உணர்வும், கேட்பவர் உள்ளத்தைக் கீழ் நிலைப்பட விடாமல், மேன் மேல் உயர்விக்கும் ஆற்றல் வளமும் அமைந்திருத்தலை, அநுபவ அறிவுடையார் நன்கு உணர்வர். இலக்கியச் சுவை உணர்வார்க்கும், அணி நலம் காண்பார்க்கும் சிறந்த விருந்தாகப் பலவிடங்களைக் காணலாம். உவமைகள் கண்கூடாகப் புலப்படுப்பன போல உள்ளன. அடிகள் அரசியல் வினைத்திறமை படைத்தவராதலின், உலகத்தலைவர், பணியாளர், வாணிகத் தொழிலாளர் முதலியோரின் குணஞ்செயல்களையும், மற்றை உலகியல்களையும் உரிய இடங்களில் தழுவியும், ஒரு சில இடங்களில், அவற்றிற்கு மாறாகக் கொண்டு, இறையருட் செயல்களைப் புலப்படுத்தும் இருத்தல் அறிந்து இன்புறத் தக்கது. சிவாகமங்களின் ஞான பாதப் பொருள்களாகிய சைவ சித்தாந்த முடிபுகள் திருப் பாட்டுக்களில் ஆங்காங்குச் சுருக்கமாகவும், விளக்க மாகவும் தெளிவுறுத்தப்பட்டுள்ளன. சிற்சில இடங் களில் உலகியற் பொருள்களின் வரையறைகளைப் புலப் படச் செய்திருக்கும் அழகு பாராட்டத்தக்கது. அண்ட கோளங்களின் இயல்புகளும், இயக்கம் முதலியனவும், திருவண்டப் பகுதியில் அமைந்திருக்கும் உண்மை, இக் காலத்துப் பௌதிக நூல் ஆராய்ச்சி வல்லார்க்குப் பெரிதும் வியப்பளிக்கும் நிலையில் உள்ளது. ஆண்டவன் இயல்புக்கு அடிகளால் கூறப்பட்ட, "தேனைப் பாலைக் கன்னலை" என்னும் உவமப் பொருள்கள், அடிகளின் திருப்பாட்டுக்களுக்கு ஒப்பாதல் அறிந்து இன்புறத்தக்கது.

இத்தகைய அருமருந்தன்ன திருவாசகத்தை, யான் சிறு பருவம் தொட்டே சிறப்பு முறையில் பயின்று வந்த தோடு, பற்பல முறையாக ஆராய்ந்து கண்ட உண்மை களை, அறிஞர் அவைக் களங்களில் சொற்பொழிவாகவும் நிகழ்த்தியதுண்டு. அஃதறிந்த தமிழன்பர்கள், என் சிறுமை

உணர்ந்தும், அன்பு காரணமாக என்னை அதற்கு உரை எழுதும்படி தூண்டி வந்தனர். கலையறிவும், அநுபவ உணர்வும் நிரம்பப் பெற்ற பெரியவர்கள் மேற்கொள்ளத் தக்க பணியை, அத்துணைத் தகுதியில்லாத சிறியேன் மேற்கொண்டதற்குக் காரணம், எனக்கு ஆற்றல் உண்டென்று நினைந்த அன்பர்களின் கட்டளையை மறுக்க இயலாமையும், என் அவாவுமேயாம். என் சிற்றறிவுக்கு எட்டியவரை திருவருட்டுணை கொண்டு ஒருவாறு எழுதத் தொடங்கிய திருச்சதக உரை சற்று விரிவாக அமைந்தமையால், இதனைத் தனியே வெளியிடலானேன்.

இத் திருச்சதக உரையை விரைவில் வெளியிடத் தூண்டித் துணைபுரிந்தவர்கள், அறிவு, அன்பு முதலிய நற்குணங்களும், கடவுள் வழிபாடு, ஒழுக்க முதலிய நற்செயல்களும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற என் இனிய நண்பர், ஆ. தெற்கூர், திருவாளர், கருமுத்து. தியாகராசச் செட்டியார் அவர்கள் ஆவர். இவர்கள், நல்லூழ் வயத்தாலும், தம் முயற்சியாலும் மதுரை, கோயம்புத்தூர், சேலம், புதுக்கோட்டை முதலிய நகரங்களில் நூற்றல், நெய்தல் தொழில்களுக்கு உரிய பெரிய எந்திர சாலைகளை அமைத்து, பல ஏழை மக்கள் பிழைத்தற்கு வழியுண்டாக்கியதோடு, அத்தொழிலால் தாமும் பெருஞ் செல்வம் படைத்தவர்கள்; இளம் பருவத்தே இலங்கையில், தமிழ்ப் புலமை மிக்க சிற்கைலாச பிள்ளையவர்களிடம் குறிஞ்சிப் பாட்டு, சிலப்பதிகாரம் என்னும் நூல்களைப் பயின்றவர்கள்; தமிழ் இலக்கியச் சுவையில் ஈடுபாடும், அதன் வளர்ச்சியிற் பேரார்வமும் உடையவர்கள்; திருவாசகத்தையும் திருக்குறளையும் தம் கண் போற் போற்றி வருபவர்கள்; சிறு பருவந்தொட்டு என்பாற் பிறழாத அன்பும் மதிப்பும் உடையவர்கள். இவர்கள் தாம் பிறந்த வூரில் ஒரு கல்வி நிலையம் நிறுவியுள்ளார்; மேலும் தம் வாழ்க்கைக்கு நல்லிடனாக அமைத்துக் கொண்ட மதுரை மாநகரில் தமிழ்ப் பல்கலைக் கழகம் காணும் வேட்கை மிக்கு முயன்று வருகின்றார்கள். அம் முயற்சியின் பயனையும், இன்னும் இவர்கள் எண்ணியிருக்கும் அறங்களின் பயனையும் தமிழ் நாடு விரைவில் எய்தும் என்பது உறுதியே. இத்தகைய பெருமை வாய்ந்த திரு. தியாகராசர் அவர்கள், திருச்சதக உரையை வெளியிடுதற்கு வேண்டிய பொருளுதவி புரிந்து ஆதரித்ததற்கு, யான் பெரிதும் நன்றியறிவுடையேன். இவர்கள், “இன்னமும் ஆலவாயெம் இறையவன்

அருளினாலே, பன்னரு நலங்கள் குன்றாப் பாக்கியம்'' உடையவர்களாக நீடு வாழ்க.

இத் திருச்சதக உரையை இராமச்சந்திரபுரத்துள்ள தம் மதராஸ் ரிப்பன் அச்சகத்தில், குறிப்பிட்டபடி விரைவாகவும், அழகாகவும் அச்சிட்டு உதவியவர்கள், விசுவநாதபுரம், திருவாளர், ஸ்ரீமான். நா. குமரப்ப செட்டியாரவர்கள் ஆவர். அச்சு வேலை நிமித்தம் யான் அந்நகரில் தங்கியிருக்குங்கால், அவர்கள் எனக்கு அன்புடன் செய்த உதவிகள் பல. அந் நன்றியை என்றும் நினைவு கூர்வேன்.

இவ்வுரையை யான் எழுதி வருங்கால், என்னுடன் இருந்து, திருத்தமாகப் படி யெழுதி அன்புடன் உதவி செய்தவர், மகிபாலன்பட்டி மங்கள விநாயகர் வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர், திரு. S. ஸ்ரீநிவாச ஐயங்கார் அவர்கள் ஆவர். அச்சுப் பிழை நேராமல் திருத்தி உதவியவர், சென்னை லயோலாக் கல்லூரித் தமிழ்ப் புலவராக இருந்த திரு. கு. மதுரை முதலியாரவர்கள் ஆவர். இவர்களுக்கும் என் நன்றியறிவைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

அறிவிற் சிறியேன் ஆகிய என்னை, இப் பெரும் பணியில் ஈடுபடச்செய்து, நிறைவேற்றியருளிய ஆண்டவன் திருவருளையும், திருப்பாட்டுக்களின் சொற்பொருள் உணர்ச்சியில் முட்டுப்பாடு நேர்ந்துழி யெல்லாம் என் நினைவில் தோன்றி, ஒருவாறு தெளிவித்தருளிய அடிகளின் அருட்பெருக்கையும் நினைந்து நினைந்து இன்புறும் கடப்பாடுடையேன்.

அன்புருவ மான அருள்வாத வூரிறைவன்
இன்புருவ மாகநமக் கீந்தருளும் — நன்புலஞ்சேர்
வாசகம்எங் கேயான் வரையும் உரையெங்கே
ஆசகற்றிக் கொள்ளல் அறன்.

மகிபாலன்பட்டி
25—9—1947

மு. கதிரேசன்

குறிப்பு :—திருவாசக வுண்மை என்பது, மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய திருப் பெருந் துறைப் புராணத்துள்ளதென சை. சி. சமாஜப் பதிப்பு ஒன்றிற் குறிப்பிட்டது கொண்டு, உரைத் தொடக்கத்தில் (பக்கம் 4) அவ்வாறே எழுதப்பட்டது. பின் பார்த்ததில், அஃது அதன்கண் இல்லை; மற்றொரு பழைய திருப்பெருந்துறைப் புராணத்துள்ளதென அறியப்பெறுகின்றது.

## பாட்டு முதற் குறிப்பு அகராதி.

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

# திருவாசகம்

## உரைத் தொடக்கம்

*அருளுரு வாய யானை முகத்தெம்*
*பெருமுதற் கடவுளின் திருவடி போற்றுதும்*
*வாதவூ ரடிகள் மலர்வாய்த் தோன்றிய*
*திருவா சகமெனுந் தேனின்,*
*இன்சுவை உள்குணர்ந்து இன்புறற் பொருட்டே.*

**திருவாசகம்** என்பது அழகிய தெய்வத்தன்மை வாய்ந்த சொற்களால் ஆகிய செய்யுள் நூல் என்னும் பொருளை யுடையதாகும். இது, திருவென்னும் அடையடுத்த வாசகம் என்னும் முதற் கருவியின் பெயர், அதன் காரிய மாகிய செய்யுட்கு ஆயினமையின், கருவி ஆகுபெயராம் என்ப. சிவஞான முனிவரர் பிறர் கொள்கையை மறுக் குங்கால் ஆகுபெயர் என்பதை உடன்பட்டுப் பின் "உண்மையான் நோக்குவார்க்கு அன்மொழித்தொகை யாகுமன்றி, ஆகு பெயராகாமை யுணர்க" எனவுங் கூறி யுள்ளார். திரு என்பது தெய்வத்தன்மை, அழகு என்னும் பொருளுடையதாகும். "திரு கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம் என்றது அழகு" என்று பேராசிரியர் உரை கூறினாராயினும், ஈண்டுத் தெய்வத் தன்மை என்று கொள்ளுதல் சிறப்புடைத்தாம். **வாசகம்**—சொல். இத் திருவாசகத் திருப்பாட்டுக்கள், தெய்வ நலங் கனிந்த சொற்களாலும் சொற்றொடர்களாலும் அமைந்தவை; இனிமை எளிமை ஆழமுடைமை யென்னுங் குணங்கள் தம்பால் அமையப் பெற்றவை; மெய்யன்புடன் ஓதுவார் கேட்பார் உணர்வார் எல்லோரையும் மிக்க பேரின்பத்தில் திளைப்பித்துப் பரவசப்படுத்தும் இயல்பின; அநுபவ உண்மைகளைத் தெளிவுண்டாம்படி விளக்குவன. இன்னும்

இத் திருவாசகத்தின் அருமை பெருமைகள் அளப்பரியனவாம். இதனைப்பற்றித் தனித்து ஓர் உரைநடை நூல் எழுத எண்ணியிருக்கின்றோம் ஆதலின், ஈண்டு இம்மட்டில் அமைகின்றோம்.

## திருச்சதகம்

**திருச்சதகம்** என்பது தெய்வத் தன்மை வாய்ந்த நூறு திருப்பாட்டுக்களைத் தன் அகத்துக் கொண்ட ஒரு பகுதி என்னும் பொருளதாம். சதம் என்னும் வட சொற்கு நூறு என்பது பொருள். அந் நூறு எண்களையுடைய திருப் பாட்டுக்களைத் தன்னகத்துக் கொண்டது என்னும் பொருளில், ஓர் இடைச்சொற் புணர்ந்து, சதகம் என்றாயிற்று. ஒரு பாட்டின் ஈற்றில் உள்ள சொற்றொடர், சொல், எழுத்து என்னும் இவற்றுள் ஒன்றை அடுத்த பாட்டின் முதலாகக் கொண்டு பாடுதல் அந்தாதித் தொடர் என்னப்படும். இவ் வந்தாதித் தொடராகவே இந் நூறு திருப்பாட்டுக்களும் அருளிச் செய்யப்பட்டன. "மெய்தான் அரும்பி" என முதல் திருப்பாட்டின் முதலடி தொடங்கப்பட்டு, "மெய்யர் மெய்யனே" என நூறாம் திருப்பாட்டின் இறுதி முடிக்கப்பட்டமை அறிக.

## பத்தி வைராக்கிய விசித்திரம்

**பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் இத் தொடர் இத் திருச்சதகம் முழுதும் நுதலிய பொருளைப் பற்றியதாகும். இங்ஙனமே [1] பதிகந்தோறும் அவ்வப் பதிகத்தின் திரண்ட கருத்துக்களையும் கூர்ந்து ஆராய்ந்து பண்டைப் பெரியார் ஒருவர் தலைப்புக் குறிப்பிட்டுள்ளார். இத் தொடர், பத்தி வைராக்கியங்களின் வியக்கத்தக்க பல்வேறு தன்மை யென்னும் பொருளுடையதாகும். பத்தி—இறைவனைக் குறித்து மெய்யடியார் உள்ளத்தில் நிகழும் பேரன்பு. வைராக்கியம்—பற்று அறுதி. விசித்திரம்—

1. சிவபுராண முதலிய நான்கு திருப்பாட்டுக்களையும், திருச்சதகம் நீத்தல் விண்ணப்ப முதலிய பத்துக்கு மேற்பட்ட பல திருப்பாட்டுக்களையுடைய பகுதிகளையும் தனித் தனியே பதிகம் என்று கூறுதல் முன்னையோர் வழக்கு.

வியக்கத் தக்க பல்வேறு தன்மை. ஆளுடைய அடிகள் திருவாசகத்தின் முதல் திருப்பாட்டில் சிவ பெருமானது அநாதி முறைமையான பழமையையும், இரண்டாம் திருப் பாட்டில் அப் பெருமானது திருவருட் புகழ்ச்சி முறைமை யையும், மூன்றும் திருப்பாட்டில் அண்டங்கள் எல்லாம் அணுவாக, அணுக்களெல்லாம் அண்டங்களாகப் பெரி தாய்ச் சிறிதாய் நிற்கும் இயல்பையும் அருளிச் செய் துள்ளார். இம் மூன்று திருப்பாட்டுக்களாலும் இறைவன் இயல்புகளை விளக்கிக் கூறிப் பின் நான்காம் திருப் பாட்டில், உயிர்கள் வினைக்கு ஈடாக மாயையி னின்றும் உடல் முதலியன பெற்றுப் பிறக்குமாறும், பிறவும் உணர்த்தி யருளினர். அதன்பின் அங்ஙனம் தோன்றிய உயிர்கள் தம் இயல்பையும், தம்மையுடைய இறைவன் இயல்பையும், தம்மைப் பிணித்திருக்கும் கட்டின் இயல்பை யும் நூல் முகமாகவும், ஞானாசிரியன் உபதேச முகமாக வும் தெளிந்து, ஆண்டவன் திருவருட் பேற்றிற்கு ஆளாதலை விரும்பி அதற்குச் சாதனமாகிய மெய்யன்பை யும், பற்றுஅறுதியையும் மேற்கொள்ளல் வேண்டும் என்பதை, இத்திருச்சதகத்தில் அருளிச் செய்வார் ஆயினர். ஆண்டவனை அடைதற்குரிய நெறிகள் பலவற்றுள்ளும் சிறந்தது அன்பு நெறியாகும். [1] "முத்தி நெறியறியாத மூர்க்கரொடு முயல்வேனைப் பத்தி நெறி யறிவித்து" என்று கூறியிருத்தலின், அந் நெறியையே அடிகள் சிறந்த தாகக்கொண்டு கடைப்பிடித்துள்ளார் என்பது தெளி வாம். ஆண்டவனைக் குறித்து அடியார் மேற்கொள்ளும் மெய்யன்பே ஈண்டுப் பத்தியென்று கூறப்படும். ஆண்ட வனிடத்துப் பத்தியுண்டாகுமாயின், இவ்வுலக வாழ்க்கை யில் உள்ள பற்றுக்களுக்கு ஒழிவுண்டாம். உடல் முதலிய வற்றின் நிலையாமை யுணர்ந்து அவற்றைப்பற்றி உண்டாய அவாக்களைக் களைதற்கும், இறைவன் திருவடி கூடுதற்கும் மெய்யன்பே சிறந்த சாதனமாகும். அன்பின் இயல்பு பல திறப்படும். அன்பினால் விளையும் செயல்கள் விதிமுறை பற்றியும், விதி முறையைக் கடந்தும் காணப்படுவனவாம்.

[1] திருவாசகம், அச்சோ, செ. 1.

கண்ணப்ப நாயனர் வரலாறே அதற்குச் சான்ருகும். பற்றறுதியை வைராக்கியமென்று கூறுவர். உலகப் பற்ருெழிவும் பலதிறப்படும். செல்வம் இருந்து நீங்கினமை, உற்ருர் பெற்ருர் முதலியோரால் வெறுக்கப்படுதல் முதலிய காரணங்களாலும், உலகியற் பொருள்களின் நிலையாமை யுணர்ச்சி முதலியவற்ருலும் பற்றறுதியுண்டாம் என்ப. இவ் வியல்புகளைக் குறித்தே வியக்கத் தக்க பல்வேறு தன்மை என்னும் பொருள்படப் பத்தி வைராக்கிய விசித்திரம் என்ருயிற் றென்பது. இத் திருச் சதகம் பத்துப் பத்துத் திருப்பாட்டுக்களை யுடைய பத்துப் பகுதிகளைத் தன்னுட் கொண்டது. இப் பகுதிகள் பதிகம் என்று கூறப்பட்டில வாயினும், தெய்வத்தைப் பற்றிப் பெரும்பாலும் பத்துப் பாட்டுக்களாகப் பாடப்படும் பகுதியைப் பதிகம் என்று கூறும் வழக்கு உண்மையான் பதிகம் என்றே ஈண்டு எடுத்து ஆளலானேம். இப் பத்துப் பதிகங்களிலும் பத்தி வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருள் விரவியுள்ளதாயினும், ஒவ்வொரு பதிகத்திலும் மெய்யுணர்தல் முதலியனவாகப் பதிகம் நுதலிய பொருள்களும் தனித்தனியாக வுள்ளன. அவற்றை அவ்வப் பதிகத்தின் தலைப்பிற் காணலாம்.

மகா வித்துவான் மீனட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய திருப்பெருந்துறைப் புராணத்தில் காணப்படுவனவாகக் குறிக்கப்பட்டுள்ள திருவாசக வுண்மையில், இத் திருச் சதகம் நுதலிய பொருளைப் பற்றிச் "சத்திய ஞானந்தரு தேசிகர் மோகம் சதகமாம்" என்று கூறப்பட்டுள்ளது. சிவபெருமான் திருப்பெருந்துறையிற் குருந்த மரத்து நீழலில் ஞானசிரியனக எழுந்தருளித் தமக்கு ஞானேபதேசம் செய்து மறைந்த பொழுது, அடிகள் அப்பெருமானது பிரிவாற்ருத நிலையில் இஃது அருளிச் செய்யப்பட்டது ஆதலின், 'உண்மை ஞானமாகிய மெய்யுணர்வைத் தமக்குக் கருணையுடன் அருளிய ஞானசிரியன்பால் உள்ள வரம்பிகந்த காதல் என்னும் கருப்பொருளையுடையது, இத் திருச்சதகம்' என்று கூறியதும் பொருத்தமே.

## 1. மெய்யுணர்தல்

**மெய்யுணர்தல்** என்பது பொய்ப் பொருளாகிய உடல் முதலியவற்றின் நிலையாமை கண்டு நீங்கி, மெய்ப் பொருளாகிய கடவுளை அநுபவ வாயிலாக உணர்தல் என்னும் பொருளுடையதாகும். இனி இறை உயிர் கட்டு என்னும் பொருள்களின் இயல்பை விபரீத ஐயங்களான் அன்றி உண்மையான் உணர்தல் எனினும் ஆம். பொய்யில் புலவர், திருக்குறளில் துறவற இயலில் வீடு பயக்கும் உணர்வாகிய ஞானத்தை, நிலையாமை துறவு மெய்யுணர்தல் அவாவறுத்தல் என்னும் நான்கு அதிகாரத்துள் அடக்கிக் கூறியுள்ளார். அவற்றுள் மூன்றுவதாகிய மெய்யுணர்தல் என்பதற்குப் "பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களான் அன்றி, உண்மையான் உணர்தல்; இதனை வட நூலார் தத்துவ ஞான மென்ப" என்று பரிமேலழகர் உரை கூறினர். இறைவன் திருப்புகழ்களைப் பலபடக் கூறித் தம் வேண்டுகோளைப் புலப்படுத்து முகமாக அடிகள் இப் பதிகத் திருப்பாட்டுக்களிற் புலப்படுக்கப் பட்ட பொருள் இதுவாம் என்பது. உலகம் யாக்கை இளமை செல்வம் முதலியவற்றின் நிலையாமையைப் பேச்சு அளவின் அன்றி உண்மையின் உணர்தல் வேண்டும். இவ் வுணர்ச்சி முதிர முதிர, அழிவின்றி என்றும் நிலையுதலையுடைய பொருள் யாதாகும் என்னும் ஆராய்ச்சியில் தலைப்படல் கூடும். இவ் வாராய்ச்சிக்குச் சிவாகமங்களையும், ஆகம முடிபுகளாகிய சைவ சித்தாந்த நூல்களையும் கருவியாகக் கொண்டு நேர்மையான முறையில் அவற்றின் பொருள்களை அறிதல் நன்றும். அங்ஙனம் அறிந்த பெரியவர்களோடு அடுத்தடுத்துப் பழகித் தெளிதலும் இன்றியமையாதது. இம் முறையில் ஒழுகின் மெய்ப் பொருளாகிய கடவுளுண்மையைப் பற்றிய தெளிவுண்டாம் என்பது. அடிகள் இவ்வாறு ஒழுகி உணர்ந்தவர் என்பதை,

[1]" பற்பல பொருளா யுள்ள பாசமும் அதனை மேவி
உற்பவ பேதமான உடம்புயி ரொடுங்கு மாறும்
அற்புத புத்தி முத்தி யளித்தரு ளாலே மேலாம்
தற்பர னடாத்து மாறும் உணர்ந்தனர் சைவ நூலில்"

என்று வரலாற்று நூலாசிரியர் கூறியமையானும் அறியலாம். அடிகள் அமைச்சராய் அரசியல் அதிகாரம் செல்வம் முதலிய இம்மைக்குரிய வெல்லாம் நிரம்பப் பெற்றவராயினும், சமயத் துறையில் சிறு பருவ முதலே தலைப்பட் டிருந்தமையின், பொய்ப்பொருள் கடிந்து மெய்ப்பொருள் தெளிதற்குரிய ஞானமும், மெய்ப்பொரு ளாகிய ஆண்டவனிடத்துப் பேரன்பும் உடையராய்க் [2] "கூத்தினர் தன்மை வேறு கோலம் வே றுருமாபோல்" அகத்தே கடவுளுணர்ச்சியும் புறத்தே உலகியற் கடமையும் உடையராயினர் என்பது. அகமும் புறமும் வேறு படல் ஒழுக்க நெறிக்குப் பொருந்துமா எனின், உலகியலில் அது கருதத் தக்கதன்றி ஞானம் கைவரப் பெற்றாரைக் குறித்து நினைக்கத் தக்க தன்றாகலின் ஈண்டுப் பொருந்து மென்க. அடிகள் அருளிச் செய்த திருப்பாட்டுக்களின் முகமாகக் கண்ட மெய்யுணர்தல் என்னும் இஃது, இத் திருச்சதகத்தின் உட் பகுதிகளாகிய பதிகம் பத்தனுள் முதற் பதிகம் நுதலிய பொருளாகும். புகழ் மாலையாகிய இப் பதிகத் திருப்பாட்டுக்களில் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பதிகம் நுதலிய பொருளும் சதகம் நுதலிய பொருளும் புலனுதலை உய்த்துணர்ந்து கொள்ளல் வேண்டும். பதிகம் நுதலிய பொருள் ஒவ்வொரு திருப் பாட்டின் இறுதியிலும், சதகம் நுதலிய பொருள் முதல் திருப்பாட்டு இறுதித் திருப்பாட்டுக்களின் இறுதிகளிலும், இடை யிடையேயும் காட்டப்படும்.

1 திருவாதவூரடிகள் புராணம், மந்திரிச் சருக்கம், செ. 19
2 திருவா, மந்திரி, செ. 21

## உரை முறை

இனி ஒவ்வொரு திருப்பாட்டிற்கும் **கருத்துரைத்தல், கண்ணழித்தல், பொழிப்புத் திரட்டல், அகலங் கூறல்** என்னும் நான்கு வகையாகக் கொண்டு உரை விளக்கம் செய்யப்படும். அவற்றுள் கருத்துரைத்தலாவது, திருப்பாட்டை அடுத்து அதன் திரண்ட கருத்தையும் முன்னைத் திருப்பாட்டோடு உள்ள இயைபையும் சுருக்கிக் கூறுதலாகும். கண்ணழித்தல் என்பது, பதப்பொருள் சொல்லுதல். பொழிப்புத் திரட்டல் என்பது, மூல பாடத்தின் பதங்களை விட்டு அவற்றிற்குச் சொல்லிய பொருள்களைத் திரட்டிக் காட்டுதல். இவ் விரண்டு வகையும் பதப்பொருள் கூறு முகமாக அமையும் ஆதலின், விரிவஞ்சிப் பொழிப்புத் திரட்டுதலைத் தனியே கூறினோம் அல்லேம். அகலங் கூறலாவது, திருப்பாட்டின் பொருளைத் தூய்மை செய்தற்கு வினு விடை உள்ளுறுத்தும், ஆற்றன் முதலியவற்றாலும் குறிப்பாலும் சொற்களின் அமைந்து கிடக்கும் பொருள் நயங்களை விளக்கியும், இன்றியமையாத இடங்களில் மேற்கோள் காட்டியும் விளக்கிக் கூறுதலாகும். இம் மூன்றும் முறையே கருத்துரை, பதவுரை, விளக்கவுரை என உரிய இடங்களில் எடுத்தாளப்படும்.

உ

# திருச்சதகம்

**கட்டளைக் கலித்துறை**

**திருச்சிற்றம்பலம்**

1. மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்
   துன்விரை யார்கழற்கென்
   கைதான் தலைவைத்துக் கண்ணீர்
   ததும்பி வெதும்பியுள்ளம்
   பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
   சயசய போற்றியென்னுங்
   கைதான் நெகிழ விடேனுடை
   யாயென்னைக் கண்டுகொள்ளே.

**கருத்துரை:** பத்தி வைராக்கியங்களில் மன மொழி மெய்கள் மூன்றும் ஈடுபடல் வேண்டும். இறைவனை மெய்ப்பொருளென உணர்ந்து மனத்தால் நினைந்தும், மொழியாற் பாராட்டியும், மெய்யால் வணங்கியும் அன்பு செய்தல் பத்தியாம். உலக வாழ்க்கையைப் பொய்யென உணர்ந்து, அம் முக்கரணங்களாலும் வெறுத்து விடல் வைராக்கியமாகும். ஆகவே, ஆளுடைய அடிகள் முதலிற் பத்தி நிலையைப் புலப்படுத்துவாராய்த் தம் மன மொழி மெய்கள் ஆகிய முக்கரணங்களும் இறைவன் வயப்பட்ட செய்தியை இம் முதல் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

**பதவுரை:** என் மெய்தான் அரும்பி—என் உடல் புளகித்து, விதிர் விதிர்த்து—மிக நடுங்கி, உன் விரையார் கழற்கு—நின் மணம் பொருந்திய திருவடி மலரைக் குறித்து, கை தான் தலை வைத்து—கைகளைத் தலை மேற் குவித்து, கண் நீர் ததும்பி—கண்களில் நீர் நிரம்பி வழிந்து,

உள்ளம் வெதும்பிப் பொய்தான் தவிர்ந்து— மனம் வெதும்பிப் பொய்மை நீங்கப் பெற்று, உன்னைப் போற்றி சய சய போற்றி என்னும்—நினக்கு வணக்கம் வெல்க வெல்க வணக்கம் என்று கூறும், கை தான் நெகிழ விடேன் —ஒழுக்கத்தைத் தளரவிடேன், உடையாய்—எல்லாம் உடைய ஆண்டவனே, என்னைக் கண்டு கொள்—எளியே னாகிய என் இயல்பைக் கண்டு அடிமையாக ஏற்றுக் கொள்வாயாக என்பது.

**விளக்கவுரை:** அரும்புதல்—முகிழ்த்தல்; மயிர் சிலிர்த்தல். விதிர் விதிர்த்தல்—மிக நடுங்குதல். தமக்கு இனிய தலைவனை நினைந்த துணையானே உண்டாம் அன்பு மேலீட்டால் மயிர் சிலிர்த்தலும் நடுங்குதலும் அடிகளுக்கு நிகழ்ந்தன வென்பது. அன்பிற்கு இடனாகிய பொருளை நினைந்த அளவில் இன்ப வுணர்ச்சி யுண்டாதலும், அதன் சத்துவமாக உடம்பில் மயிர் சிலிர்த்தலும், அந் நினைவின் முதிர்ச்சியில் நடுக்கம் உண்டாதலும் இயல்பாதலின், "மெய்தானரும்பி விதிர் விதிர்த்து" என்றார். அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகிய மெய்ப்பாடுகளுள் நடுக்கமும் ஒன்றாகும். [1] அஃது அன்பும் அச்சமும் காரணமாக நிகழும் என்ப. ஈண்டு அன்பு காரணமாகும். இம் மெய்ப்பாடுகள் காமம் பற்றியும் நிகழுமாதலின், அதனை விலக்குதற்கு, "உன் விரையார் கழற்கு" என்றார். விரை யென்னும் அடையால் திருவடி மலர் என்பது பெற்றாம். திருக்கோவையில், [2] "வெறியார் கழல்" என்று கூறப் பட்ட இடத்து, "இறைவன் திருவடிகள் எல்லாப் பொருள் களையும் கடந்து நின்றன வாயினும், அன்பர்க்கு அணிய வாய், அவரிட்ட நறுமலரான் வெறி கமழும் என்பது போதர, 'வெறியார் கழல்' என்றார்" என்று பேராசிரியர் கூறியதற் கேற்பத் திருவடிகளுக்கு ஏற்றிக் கூறு தலுமாம். கண்ணீர் ததும்புதல், உள்ளம் உருகிய நிலையில் நிகழ்வதாகலின், பின் வரும் உள்ளத்தை ஒட்டிக் கூறப் பட்டது. வெதும்பல்—உருகுதல் என்னும் பொருட்டு.

1. தொல், பொருள், மெய்ப். சூ. 12, உரை. 2. திருக்கோவை, செ. 256.

பொய்மை—மாயா காரியமாகிய பொய்ப் பொருளை மெய்யென்றுணரும் மயக்க வுணர்வு. இதனை, [1]“பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும் மருள்” என்பர் திருவள்ளுவர். இது நீங்கினலன்றிச் சிவக் காட்சி யெய் தல் அரிதாகலின், “பொய் தவிர்ந்து” என்றார். ‘போற்றி’ ஈண்டு வணக்கத்தைக் குறிக்கும். இனி வணக்கம் கூறுதல் நாவளவின் இருத்தல் ஆகாதென்பார், “பொய் தவிர்ந்து” என்றாரெனினுமாம். “சய சய” வென்பது வெல்க வெல்க என்று வாழ்த்தியபடியாம். இறைவன் வெற்றிக்கு வாழ்த் தாக அங்ஙனங் கூறியது, அடிகள் மேற்கொண்ட சிவ நெறியின் வெற்றி குறித்தாம். [2] “வாழ்த்துவதும் வான வர்கள் தாம்வாழ்வான்” என்பதும் ஈண்டு நினைக்கத் தக்கது. இறைவனைக் குறித்து வாழ்த்துதல் வணங்குதல் என்னும் இரண்டனுள்ளும் வணக்கமே அடியார்க்குச் சிறந்த தென்பது தோன்ற, “சய சய” என்பதன் முன்னும் பின்னும் வணக்கப் பொருள் குறிக்கும் போற்றி கூறப்பட்டது. கை—ஒழுக்கம். [3]“கையொன் றறிகல் லாய்” என்ற இடத்து, கை யென்பது இப் பொருட்டாதல் அறிக. நெகிழ விடுதல்—சிறிது தளர்த்தல். இத்துணையும் மனம் மொழி மெய்கள் இறைவன் வயப்பட்டமை கூறிய படியாம். “உள்ளம் வெதும்பி” “பொய் தவிர்ந்து” என்ற மையால் மனமும், “போற்றி சய சய போற்றி” என்றமை யால் மொழியும், மெய்யரும்புதல் முதல் கண்ணீர் ததும்பு தல் ஈறாக உள்ள செயல்களால் மெய்யும் இறைவன் வயப் பட்டன என்பது கருத்து.

அடிகள் தம் ஒழுக்கத்தின் சோர்வின்மையை உயிர்க் குயிராக விளங்கும் இறைவன் அறிய மேற்கொண்டமை தோன்ற, “என்னைக்கண்டு” எனவும், முக்கரணமும் இறைவன் வயப்பட்ட இந்நிலையே ஆட்கொள்ளுதற் கேற்றதென்பார், “கண்டுகொள்” எனவும் அருளிச் செய்தனர். “கண்டுகொள்ளல்” என்பது உலக வழக்கில் ஒரு சொன்னீர்மைத்தாய், பெரியோன் ஒருவனைச்

---

1. திருக்குறள் 351. 2. திருவாசகம் திருச்சதகம், செ 16.
3. கலித்தொகை, செ. 95

சிறியவன் காண்டலில் வழங்கப்படுவது .இங்கே அடிகள் ஆண்டவனை நோக்கிக் கூறிய தாகலின், அங்ஙனங் கோடல், ஆண்டான் அடிமைகளின் பெருமைக்கு இழுக்காமென்க. இத் திருச்சதகத்தின் முதல் திருப் பாட்டால் அடிகள் தம் இயல்பு கூறினாராயினும், அடி களின் அன்பு வடிவத்தை நம்மனோர் நெஞ்சக்கிழியின் ஓவியமாகப் பொறித்து நினைவு கூர்தற்கு இத்திருப்பாட்டு மிகவும் பொருந்தியதென்பது அறிந்து இன்புறத்தக்கது. வடமொழியார் இத்தகைய திருப்பாட்டுக்களைத் தியான சுலோகம் என்ப. அடிகளின் மனம் மொழி மெய்கள் இறை வயப்பட்ட நிலையைக் குறிக்கும் இத் திருப்பாடற் கருத்தே இத் திருச்சதகத்தின் இறுதித்திருப்பாட்டிலும் தெளிவாக்கப்பட்டிருத்தல் அறியத்தக்கது.

தான் நான்கும் அசைகள். ஈண்டுள்ள வினையெச் சங்களுள், அரும்பி, விதிர் விதிர்த்து, ததும்பி, வெதும்பி என்பன சினை வினைகள்; ஏனைய முதல் வினைகள். சினை வினைகள் எல்லாம், [1] "அம்முக் கிளவியுஞ் சினைவினை தோன்றிற், சினையொடு முடியா முதலொடு முடியினும், வினையோ ரனைய வென்மனார் புலவர்" என்னும் விதிப்படி "என்னும்" என்ற முதல் வினையைக் கொண்டு முடிந் தன. உன்னை என்பதில் நான்கனுருபில் இரண்டாவது மயங்கிற்று.

இதன்கண், மெய் அரும்புதல் முதலியவாகக் கூறப் பட்ட கரணங்களின் செயல்களால் பத்தியும், "பொய் தவிர்ந்து" என்றதனால் வைராக்கியமும் பெறப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும், பொய் தவிர்ந்து முக்கரணமும் ஆண்டவனைப் பற்றி நிகழ்தலே மெய்யொழுக்கமாகும் என்னும் உண்மை பெறப்படுதலின், **மெய்யுணர்தலாகிய** பதிகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

---

1. தொல், சொல், சூ. 231.

2. கொள்ளேன் புரந்தரன் மாலயன்
வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல்
லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே
யிருக்கப் பெறின்இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்
லாதெங்கள் உத்தமனே.

க-ரை: அடிகள் தம் மனம் மொழி மெய்கள் இறைவன் வயப்பட்ட செய்தியை முதல் திருப்பாட்டில் வெளிப்படுத்தி, அக்கரணங்கள் பிறர் வயப்படா என்பதை இத் திருப்பாட்டில் புலப்படுத்து அருளுகின்றார்.

ப-ரை: எங்கள் உத்தமனே இறைவா—அடியேமாகிய எங்கள் தலைவனே இறைவனே, புரந்தரன் மால் அயன் வாழ்வும் கொள்ளேன்—இந்திரன் திருமால் பிரமன் என்னும் இவர் தம் வாழ்க்கையையும் ஏற்றுக் கொள்ளேன், குடி கெடினும் — குடிப்பிறப்பிற்குரிய பெருமை கெட நேரினும், நினது அடியாரொடு அல்லால் நள்ளேன் — உன்னுடைய அடியாரோடல்லாமல் பிறரோடு நட்புக் கொள்ளேன், திருவருளாலே இருக்கப் பெறின்—நின் திருவருளாலே இருக்க நேரின், நரகம் புகினும் எள்ளேன்—நரகத்தின் கண்ணே செல்லினும் அதனை இகழ்ந்து பேசேன், உன்னையல்லாது பிற தெய்வம் உள்ளேன்—உன்னை அல்லாமல் வேறு தேவர்களை மனத்தாலும் நினையேன், என்பது.

வி-ரை: திருமால் பிரமன் வாழ்க்கைகளினும் இந்திரன் வாழ்வு இன்ப நுகர்ச்சிக்குச் சிறந்ததாகலின் அது முற்கூறப்பட்டது. புரந்தரன் முதலியோர் தம் வாழ்க்கை நலங்களை வலிந்து தர முற்பட்டாலும் விரும்பேன் என்பது தோன்றக், "கொள்ளேன்" என்றார். [1] "கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்,

1. புறநானூறு, செ. 204, அடி 3.

கொள்ளேனென்றல் அதனினும் உயர்ந்தன்று" என்று உலகியல் பற்றிக் கூறிய புறப்பாட்டின் கருத்தும் ஈண்டு நினைக்கத்தக்கது. குடி — ஆகுபெயர். குடிப் பிறப்புப் பெருமை கெட நேருங்கால், தாங்குவோர் யாவராயினும் அவரை நட்புக்கோடல் அப் பயன் கருதித் தகுமாயினும், அங்ஙனம் நட்புக் கொள்ளப்பட்டார் நின் அடியரல்ல ராயின், அவர் நட்புத் திருவருட்கு விலக்காக நின்று குடிப்பிறப்புக்கு வரும் கேட்டினும் மிக்க கேடு விளைக்கும் என்பது கருதிக், "குடிகெடினும் நள்ளேன்" என்றார். அடியார் உறவு அக் குடிப் பெருமையினும் சிறந்த பேறு அளிப்பதாகலின், அவ் வுறவையே வேண்டுவேன் என்பதை வலியுறுத்தற் பொருட்டு, "அடியாரொடல்லால் நள்ளேன்" என எதிர்மறை முகத்தாற் கூறினார். திரு வருட் பேறுடையார் நரகம் புகுதல் எக் காலத்தும் இன் றென்பது தோன்ற, "புகினும்" என்றார். உம்மை, புகுதலின்மையை விளக்கி நின்றது. ஓரோவழிப் புக நேரினும், ஆண்டிருத்தல் திருவருட்கு உடன்பாடாயின் அவ் விருப்பையும் இகழ்ந்து கூறேன் என்றார், உயர்வு இழிபு நோக்காது யாங்குறினும் இறையருளில் தலைப் படுதல் ஒன்றையே குறிக்கோளாக உடைமையின். "திருவருளாலே" என்புழி ஏகாரம் தேற்றப் பொருளது; வேறு நலம் பயக்கும் காரணம் யாதாயினும் இழி வாகக் கருதுவேன் என்பது தோன்ற நின்றமையின் பிரிநிலை யெனலுமாம். "எங்கள்" என்றது மற்றையடி யாரையும் உள்ளிட்டு.

பிற தேவர்களுக்கு இல்லாத பரம்பொருள் தன்மை சிவ பெருமானுக்கு உண்மை கருதி, "உத்தமனே" "இறைவா" எனவும், புரந்தரன் முதலியோர்க்கு அத் தன்மை இன்மை கருதி, அன்னாரைப் "பிற தெய்வம்" எனவும் கூறினர். உத்தமன் என்றதனால் தலைமைத் தன்மையும், இறைவன் என்றதனால் எங்கும் நிறைந்த முழுமுதல் தன்மையும் ஆகிய பரம்பொருட்டன்மை பெறப்படும். தெய்வம் என்றது சாமானிய தேவரைக் குறிக்கும். பிறரெல்லாம்

விரும்பும் விண்ணுலக வாழ்க்கையும் மண்ணுலக வாழ்க்கையும் எத்துணைச் சிறந்தன வாயினும், அவற்றை வேண்டேன் என்பார், முறையே "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு" எனவும், "குடிகெடினும் நள்ளேன் நினதடியாரொடல்லால்" எனவும், பிறர் விரும்பாத கீழுலக வாழ்க்கை வேண்டாத தொன்றாயினும், ஆண்டிருத்தல் திருவருட்கு உடன்பாடாயின் வேண்டுவேன் என்பார், "நரகம் புகினும் எள்ளேன்" எனவும் கூறினர். அடியாரொடு கொள்ளும் நட்புத் திருவருட் பேற்றிற்கு ஏதுவாகலின், அது மண்ணுலக வாழ்க்கையைக் குறித்ததாகாமை உணர்க. அடிகள் 'சிவபிரானையன்றி வேறு தேவரைப் பரம்பொருளாகச் சிறிதும் நினைந்திலேன்' என்பார், "உள்ளேன் பிற தெய்வம்" என்றார். 1 "மற்றோர் தெய்வங் கனவிலும் நினையாது" என்று பிறிதோரிடத்துக் கூறியதுங் காண்க.

உள்ளுதல் மனத்தின் செயலாதலின், "உள்ளேன்" என்றதனால் மனமும், இகழ்ந்து கூறுதல் வாக்கின் செயலாதலின், "எள்ளேன்" என்றதனால் மொழியும், வாழ்க்கை நலம் பொறி நுகர்ச்சியாலும், நட்புக் கோடல் புணர்ச்சி பழகுதலாலும் ஆவன ஆதலின், "கொள்ளேன்" "நள்ளேன்" என்றமையால் மெய்யும் ஆகிய முக்கரணங்களும் பிறர் வயப்பட்டில என்பது அறிக. வாழ்வும் என்புழிச் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

இதன்கண், "நினதடியா ரொடல்லால் நள்ளேன்" என்றதனால் பத்தியும், "கொள்ளேன்" "உள்ளேன்" என்பனவற்றால் வைராக்கியமும் பெறப்படுதலின், "**பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும், "உன்னையல்லாது பிற தெய்வம் உள்ளேன்" என்றதனால் **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

---

1. திருவாசகம், போற்றித் திரு அகவல், அடி 74.

3. உத்தமன் அத்தன் உடையான்
அடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மால்இவன்
என்ன மனநினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட
ஊரூர் திரிந்துஎவரும்
தத்தம் மனத்தன பேசஎஞ்
ஞான்றுகொல் சாவதுவே.

**க-ரை:** தம் மனம் முதலியன பிறர் வயப்படாமல் சிவ பிரான் ஒருவனையே பற்றி நிற்கும் என முன்னைத் திருப் பாட்டிற் கூறிய அடிகள், அங்ஙனம் நிகழும் தம் நினைவு சொற் செயல்கள் உலகத்தவர்க்கு மாறுபாடாகத் தோன் றினும், அந்நிலை மகிழ்ந்து ஏற்கத்தக்கது என்பதை இத் திருப்பாட்டிற் கூறுகின்றார்.

**ப-ரை:** உத்தமன் அத்தன் உடையான் — தலையாய வனும் தந்தையும் உடையானும் ஆகிய இறைவனுடைய, அடியே நினைந்து உருகி — திருவடிகளையே இடையறாது எண்ணி உள்ளம் உருகி, இவன் மால் என்ன — இவன் மயக்க முற்றான் எனப் பிறர் கருதும்படி, மத்த மனத்தொடு — களிப்பேறிய நெஞ்சத்தோடு, ஊர் ஊர் திரிந்து — பல ஊர்களிலும் போக்கு வரவு செய்து, மன நினைவில் ஒத்தன ஒத்தன சொல்லிட — என் உள்ளக் கருத்திற் பொருந்தின பொருந்தின செய்திகளை யான் பேச, எவரும்—இந் நிலை யைக் கண்டார் எல்லோரும், தம் தம் மனத்தன பேச — தங்கள் தங்கள் உள்ளத்தில் தோன்றிய எண்ணங்களை வெளிப்படுத்திச் சொல்ல, சாவது எஞ்ஞான்று — இவ் வுலக வாழ்க்கையினின்றும் ஒழிவடைவது எப்பொழுது? என்பது.

**வி-ரை:** நினைந்து உருகி என்னத் திரிந்து சொல்லிடப் பேசச் சாதல் எஞ்ஞான்று என முடிக்க. எகரங்கள் இரண்டனுள் முன்னது பிரிநிலையும், பின்னது ஈற்றசையு மாம். கொல் அசை நிலை.

உலகத்து அறிவுடைப் பொருள்களை நோக்க, இறைவன் ஆண்டான் எனவும் அவை அடிமை எனவும், அறிவில் பொருள்களை நோக்க, அவன் உடையான் எனவும் அவை உடைமை எனவுங் கூறுப. இம் முறையில் அறிவுடைப் பொருள்களை ஆளும் இயல்புடைமையால் ஆண்டான் என்பது போதர உத்தமன் எனவும், அறிவில் பொருள்களை உடைமையாகக் கொள்ளும் இயல்பினன் என்பது போதர உடையான் எனவும் கூறினர். ஓர் அரசன் புதல்வன் வேடர் சூழலிற் பட்டுத் தன் இயல்பை அறியாமல் வளர்ந்தானாக, நல்லூழ் வயத்தால், "நீ வேட்டுவன் மகனல்லை; உண்மையில் என் புதல்வனாவாய்" என அறிவித்து, அவ்வரசன் அப் புதல்வற்குத் தன் அரசுரிமைச் செல்வத்தை நல்குதல் போல, அடிகள் ஐம்புலமாகிய வேடர் சூழலிற் பட்டுத் தம் இயல்பு அறியாமல் இருந்த நிலையில், கட்டறுக்கும் பருவம் உற்றமையால், "நீ புலனுகர் இன்பம் பெறுதற்கு உரியை அல்லை; உண்மையில் பேரின்பம் நுகர்தற்குரிய என் புதல்வனாவாய்" என மெய்யுணர்வால் அறிவித்து, இறைவன் தன் பேரின்பப் பெருஞ் செல்வத்தை அருளிக் காத்தமை தோன்ற, "அத்தன்" என்றார். ஆண்டவன் திருவருளை நினைதற்கு அவன் திருவடியே அன்றி வேறு பற்றுக்கோடு இன்மையால், "அடியே நினைந்து" எனவும், அந்நினைவின் முதிர்ச்சி தோன்ற, "உருகி" எனவும் கூறினர்.

அடிகள் தம் புறச் செயலைக் கண்ட பிறர், உண்மையுணராமல் பித்துப் பிடித்து மயங்கினர் என்று கருதும்படி, பல ஊர்களிலும் சிவதரிசன நிமித்தம் போக்கு வரவு செய்து, சிவானந்தத் தேறலை மிகுதியாக உண்டு, அக் களிப்பினால் உலகியலை மறந்து, தம் உள்ளக் கருத்திற்குப் பொருந்தின பொருந்தினவாகிய மெய்யன்பு மயமான சொற்களைத் தாம் பேச வேண்டும் என்பார், "மாலிவன் என்ன மத்த மனத்தொடு ஊரூர் திரிந்து மன நினைவில் ஒத்தன ஒத்தன சொல்லிட" எனவும், அடிகள் அங்ஙனம் உலகியலை நோக்காமல், இறையருள் வயப்பட்டுத் தம்

அநுபவத்திற் கண்ட உண்மைகளை வெளிப்படுத்துக் கூறும் மொழிகளைக் கேட்பார் எல்லோரும் தத்தம் உள்ளங்களில் நல்லனவாகவும் தீயனவாகவும் தோன்றிய கருத்துக்களை வெளிப்படுத்துக் கூறினும் கூறுக என்பார், "எவரும் தத்தம் மனத்தன பேச" எனவும் கூறினர். அடிகள் அருட் செயலைக் கண்டாருள் ஒரு சாரார், அவர்தம் மெய்யன்பின் இயல்பை உய்த்துணர்ந்து, அவ் வுணர்ச்சியால் தம் உள்ளத்துத் தோன்றிய நிகழ்ச்சிகளை வெளிப்படுத்துப் பாராட்டிப் புகழ்ந்து கூறுவர் என்பதும், பிறிதொரு சாரார், உண்மை யுணராமல், புறச்செயலைக் கண்டு, அக் காட்சி காரணமாகத் தம் உள்ளத்துத் தோன்றிய நிகழ்ச்சிகளை வெளிப்படுத்து இகழ்ந்து கூறுவர் என்பதும், "எவரும் தத்தம் மனத்தன பேச" என்னுந் தொடரிற் குறிப்பிற் புலனாதலறிக. புகழ்ந்து கூறுதலையும் இகழ்ந்து கூறுதலையும் குறித்து மனத்தன வெனப் பன்மையாற் கூறினர் என்பது. இங்ஙனம் தம்மைப் புகழ்வாரும் இகழ்வாரும் முறையே நல்வினை தீவினைகளை ஏன்றுகொள்ள, அதன் முகமாகத் தமக்கு வினையொழிவு உண்டாக வேண்டுமென்பது அடிகள் கருத்தன்று. [1] "கழிவில் கருணையைக் காட்டிக் கடிய வினையகற்றி" என்றபடி, ஆண்டவன் அருளினால் வினை ஒழிதல் வேண்டும் என்பதே குறிக்கோள். ஆயினும் ஞானநிலை எய்துதற்குரிய தகுதி யுடைய பெரியோன்பால் அமைந்து கிடக்கும் சஞ்சித கன்மமாகிய நல்வினை தீவினைகள், முறையே அப் பெரியோனைப் புகழ்வார் பாலும் இகழ்வார் பாலும் அடைய, அவற்கு அவ்வினை யொழிவுண்டாம் என்பது அறிவியல் நூலிற் கண்டதாகலின், அம் முறையாலும் அடிகளின் உண்மை அன்பைக் கண்டு புகழ்ந்து கூறுவார், சஞ்சித கன்மத்துள் நல்வினைப் பகுதியையும், புறச்செயலைக் கண்டு எள்ளிக் கூறுவார் தீவினைப் பகுதியையும் ஏன்றுகொள்ள, வினையொழிவுண்டாம் என்பதும் ஈண்டுக் கருதத் தக்கது. சாதல்—ஈண்டுக்

1. திருவாசகம், திருப்பாண்டிப் பதிகம், செ. 8.

கட்டறுத்து உலக வாழ்வினின்றும் ஒழிவு பெறுதலைக் குறிக்கும். அடிகள், [1]"சகம் பேயென்று தம்மைச் சிரிப்ப, நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை, பூணதுவாகக்" கொண்டு, உலக வாழ்க்கையினின்றும் ஒழிவு பெறுதல் எப்பொழுது வாய்க்குமோ என்பார், "என்ஞான்று கொல் சாவதுவே" என்றார்.

இத் திருப்பாட்டில், "ஒத்தன ஒத்தன சொல்லிட" என்பதும், "தத்தம் மனத்தன பேச" என்பதும் ஆகிய இரண்டனையும் பிறர் கூற்றுக்களாகக் கொண்டு, முறையே உள்ளூராரும் அயலூராரும் அடிகளைக் கண்டு கூறியனவாகப் பலரும் உரை கூறியுள்ளார். உள்ளூரார் அயலூரார் கூற்றுக்களை நினைந்து அடிகள் கூறினாரென்ற தில் ஒரு பொருட் சிறப்பின்மையையும், பின்னர் "எவரும் தத்த மனத்தன பேச" என்றதனால், முன்னர் "ஒத்தன ஒத்தன சொல்லிட" என்பது அடிகள் கூற்றென்பது தானே பெறப்படுதலையும் அவர் உணர்ந்திலர். அதனால் அஃது உரையன்றென்பது தெளிக.

இதன்கண், உலகத்தவர் புகழ்தலினும் இகழ்தலினும் விருப்பு வெறுப்புக் கொள்ளாமல், திருவருள் ஒன்றிலே தோய்ந்து நிற்றல் மெய்யுணர்வின் பயனும் என்பது பெறப்படுதலின், **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

4. சாவமுன் னாள்தக்கன் வேள்வித்
தகர்தின்று நஞ்சம்அஞ்சி
ஆவஎந் தாயென் றவிதா
இடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிரானொடும்
எண்ணிவிண் ணாண்டுமண்மேல்
தேவரென் றேஇறு மாந்தென்ன
பாவந் திரிதவரே.

---

1. திருவாசகம், போற்றித் திருவகவல், அடி 68.

க-ரை: தம் மனம் முதலியன பிறர் வயப்படாமல் சிவ பிரானையே பற்றி நிற்கும் என முன்னர்க் கூறிய அடிகள், அங்ஙனம் பிற தேவர் வயப்படாமைக்குத் தாம் அறிந்த காரணத்தை இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

ப-ரை: முன் நாள் தக்கன் வேள்வித் தகர் தின்று —முன் ஒரு காலத்தில் தக்கன் என்பான் இயற்றிய வேள்வியில் அவியாகப் பெய்த ஆட்டுக் கடாவின் இறைச்சியைத் தின்றும், நஞ்சம் சாவ அஞ்சி—திருப் பாற் கடலில் எழுந்த பெரு நஞ்சைக் கண்டு சாதற்கு அஞ்சியும், எந்தாய் ஆ! அ! என்று அவிதா இடும் நம்மவர் அவரே—எங்கள் தந்தையே ஆ! ஆ! என் செய்வேம்! என்று கதறித் துன்ப முறையீடு செய்யும் நம்மனோராகிய அத் தேவர்களே, எம்பிரானொடு மூவர் என்று எண்ணி—எம்பெருமானாகிய சிவ பரம்பொரு ளொடு தம்மையும் சேர்த்து மூவராவோம் என்று நினைத்து, விண் ஆண்டு—விண்ணுலகத்தில் ஒரு கூறு ஆட்சி புரிந்து, மண்மேல் தேவர் என்று இறுமாந்து திரிதவர்—நிலவுலகத்தில் யாம் முதற் கடவுள் ஆவேம் என்று செருக்கித் திரிவர், என்ன பாவம்—இஃதென்ன தீவினைப் பயன் இருந்தவாறு! என்பது.

வி-ரை: தின்றும் அஞ்சியும் என்று, இடும் நம்மவர் எனவும், எண்ணி ஆண்டு என்று இறுமாந்து திரிதவர் எனவும் முடிக்க. தின்றும் அஞ்சியும் என்புழி எண்ணும்மைகள் தொக்கு நின்றன. 'அவரே' 'தேவ ரென்றே' என்பவற்றில் உள்ள ஏகாரங்கள், முறையே பிரிநிலையும் தேற்றமுமாம். திரிதருவர் என்றது ரகர வுகரம் கெட்டு, "திரிதவர்" என்றாயிற்று. தக்கன் சாவ வேள்வித் தகர் தின்றும் என இயைத்து, 'சாவ' என்பதைக் காரியப் பொருட்டாக்கலும் ஒன்று. தக்கன் என்பான் வேள்வித் தலைவனாகிய சிவபிரானை வெறுத்து, மற்றைத் தேவர்களை அழைத்து வேள்வி இயற்ற, அவ்வேள்வியிற் கிடைத்த

அவியுணவை அன்னுர் உண்டதே அவன் அழிவிற்குக் காரணம் ஆயிற்றென்பதாம். அவியுணவு ஏற்குந் தகுதி தமக்கு இன்று என்பதை உணராமல், ஊன் சுவையில் ஈடுபட்டு, அவ்வாட்டு இறைச்சியை உண்டனர் என்பது போதர, அவியேற்றென்னுது, " தகர் தின்று " எனவும், அங்ஙனம் தின்றற்கு முற்படும் இயல்பினர் நஞ்சத்தைக் கண்டுழிப் பின்னிட்டு நடுங்கினரென்பது தோன்ற, " நஞ்சம் அஞ்சி " எனவும் கூறினர். தகர் ஊன் தின்று என்னுது, " தகர் தின் " றென்றது, [1] " யாட்டினின் பாலென மூலமுமாம் " என்முற்போல, அவ்விறைச்சி யுண்டலின் வேட்கை மிகுதி குறித்து நின்றது. தக்கன் சிவபிரானை வெறுத்து, அவி தர அழைக்குங்கால், " அப் பெருமான் நம் தந்தையாவரே; அவரை வெறுத்த இடத் தில் நாம் சென்று களித்தல் ஆகாதே " என்று எண்ணுமல் சென்று உண்ட தீச்செயலைக் கண்டு, வீரபத்திரர் ஒறுத்த ஞான்று, அத்துன்பம் பொருது வருந்தினரென்பதும், அமுதம் பெறக் கடல் கடைந்துழி, நஞ்சு தோன்றிற்ருக, அதற்கு அஞ்சி, அந்நஞ்சினுல் தமக்கு ஏதம் விளையாவாறு விரைந்து வெளிப்பட்டுக் காத்தருள வேண்டும் என்று கதறி முறையிட்டனர் என்பதும் போதர, "எந்தாய் ஆ அ என்று அவிதா இடும் " எனவும், அங்ஙனம் முறை யிட்டவர், பாசக் கட்டுடைய மக்களாகிய நம்மை ஒத்தவர் என்பதுவிளங்க, " நம்மவர் அவரே " எனவும் கூறப்பட்டன.

ஆவா என்பது ஆவ எனக் குறைந்து நின்றது. " அவரே " என்பதில் உள்ள ஏகாரம் பக்கட்டன்மையரே அன்றிப் பிறரல்லர் என்பதைத் தெளிவித்தலால் தேற்றப் பொருட்டாம். " அவிதா " என்பது கேடு நேர்ந்துழிக் கூறப்படும் முறையீட்டுச் சொல். [2] " விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும், உண்ணுத நஞ்சுண்டு

---

1. ஆவின் பாலோ எனக் கருதினர்க்கு, உண்மை உணர்த்தி விலக்க, ஆட்டுபபால் என்றனராம், அது கேட்டவர் ஆட்டுப்பால் ஒன்ரோ, அதன் மூல மும் ஆகும் என்றனராம். மூலம், ஆட்டு உடல் இறைச்சியைக் குறிப்பதாகும். பிட்சாடனர் நவமணி மாலை, செ. 4. 2. சிலப்பதிகாரம், 12, வேட்டுவ வரி;

இருந்தருள் செய்குவாய்'' என்று கொற்றவையைப் பரவு முகமாகச் சிவபெருமான் பெருமை கூறப்பட்டது ஈண்டு நினைக்கத்தக்கது. பிரமன் முதலிய தேவர்கள் எல்லாம் மும்மலம் உடைய சகல வருக்கத்தினராதலின், மக்கள் தன்மையராகக் கருதப்பட்டு, "நம்மவரவரே" எனப்பட்டனர்.

வேள்வியிற் பெற்ற ஆட்டிறைச்சியை உண்டற்கு முற்பட்ட தேவர்கள், நஞ்சம் வெளிப்பட்ட பொழுது அதனை அடக்கும் ஆற்றல் இல்லாமையோடு, அதற்கு அஞ்சித் தமக்குக் கேடு நேராவாறு சிவபிரானைக் குறித்து, "எங்கள் தந்தையே காத்தருள்க" என முறையிட்டனர் என்னும் இதனால், அன்னார் தலைமைப் பேற்றிற்கு உரியரல்லர் என்பது வெளிப்படையாகும்.

இவ்வுண்மை யறிந்தும், பிரமன் திருமால் உருத்திரன் என்னும் முறையில் சிவபிரானை உருத்திரனாக எண்ணி, அவனோடு தம்மையும் ஒத்த நிலையில் வைத்து எண்ணுதல் அவர்தம் செருக்கைப் புலப்படுத்துவதாகும். இவ்வரிசை யில் வைத்து எண்ணப்படும் உருத்திரன், அயன் மாலொடுங் கூடக் குண தத்துவத்தின வைகிப் பிரகிருதி புவனந்தம் சங்கரிக்கும் குணிருத்திரனாவான். சுத்த மாயாபுவனந்தம் சங்கரிக்கும் சங்கார காரணனே பரமசிவனாவான். இதனை, "இவ் வேறுபாடுணராது மகாருத்திரனாகிய பரமசிவனைக் குணிருத்திரனாக வைத்தெண்ணுவோரை நோக்கி, 'நம்மவர வரே மூவரென்றே எம்பிரானொடும் எண்ணி விண்ணுண்டு மண்மேல், தேவரென்றே யிறுமாந்து என்ன பாவந் திரித வரே' என வாதவூரடிகள் இரங்கிக் கூறிய திருவாக்கும் அறிக" என்னும் [1] சிவஞான மாபாடியத்தானும் உணர்க. [2] "தேவரில் ஒருவன் என்பர் திருவுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்றதோரார்" என்று சிவஞான சித்தியும், [3] "தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும்பொழில் கள் பயந்துகாத் தழிக்கு மற்றை, மூவர்கோ னாய்நின்ற

1 சிவஞானமாபாடியம், முதற்சூத்திர உரை. 2. சிவஞான சித்தி, சுபக்கம், சூ. 1, செ. 49. 3. திருவாசகம், திருச்சதகம். செ, 30.

முதல்வன் '' என்று பிறிதோரிடத்து அடிகளும் கூறிய வாற்ருனும் பரமசிவன் மூவர்க்குந் தலைவன் என்பது தெளிவாதல் உணர்க.

படைத்து அளித்து அழித்தற்குரிய மூவராலும் விண் ணுலகில் ஒவ்வொரு பகுதி ஆட்சி செய்யப்படுதலின், '' விண்ணுண்டு '' என்று கூறப்பட்டது. அவ்வாட்சியைத் தொழில் நிலையமாகக் கொள்ளாமல், அதுபற்றி மண் ணுலகில் தாமே பரம்பொருளெனக் கருதிச் செருக்கித் திரிதல் அறியாமையின்பாற் படும் என்பது தோன்ற, ''மண்மேல் தேவரென்றே இறுமாந்து திரிதவரே'' என்று கூறப்பட்டது. 'தேவர்' என்பது ஈண்டு ஒருமைப் பொருட்டு. இதனைத் [1] '' தேவர் என்றது ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி. 'மண்மேற்றேவரென்றே இறு மாந்து' என்ருர் பிறரும் '' என்று நச்சினார்க்கினியர் கூறுதலானும் அறிக. நஞ்சுண்டு காத்த அருட்செயலைக் கண்டு வைத்தும், தம்மைப் பரம்பொருளாக எண்ணி இறுமாந்து திரியும் தேவர் நிலைமை இரங்கத்தக்க தென்பார், '' என்ன பாவம் '' என்று கூறினர்.

இதன்கண், சிவ பெருமானை மூவருள் ஒருவன் என்பது பொருந்தாது; அம்மூவரையும் இயக்கி ஆளும் தலைவன் என உணர்தல் வேண்டும் என்றது மெய்யுணர்த லாதலின், **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனுதல் அறிக.

5. தவமே புரிந்திலன் தண்மலர்
   இட்டுமுட் டாதிறைஞ்சேன்
அவமே பிறந்த அருவினை
   யேன்உனக் கன்பருள்ளாஞ்
சிவமே பெறுந்திரு எய்திற்றி
   லேன்நின் திருவடிக்காம்
பவமே அருளுகண் டாய்அடி
   யேற்கெம் பரம்பரனே.

---

1. சீவக சிந்தாமணி, செ. 1513 உரை.

**க-ரை:** சிவ பெருமான் அல்லாதார் பரம்பொருளாகார் என முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், பரம்பொருள் பரமசிவனே யென்பதை உணர்ந்தும், அப்பெருமானை யடைதற்குரிய சரியை முதலிய தவத்தை மேற்கொள்ளாமைக்கு இரங்கி, இனியேனும் அத்தவஞ் செய்தற்குரிய பிறப்பு வேண்டுமென்று இறைவனை நோக்கி இத்திருப்பாட்டிற் கூறுகின்றார்.

**ப-ரை:** எம் பரம்பரனே—எங்கள் மேலான பரம்பொருளே, உனக்கு அன்பர் உள் ஆம்—உன்பால் மெய்யன்பு மிக்க பெரியார் அகத்துள் உண்டாம், சிவமே பெறும் திரு எய்திற்றிலேன்—வீட்டின்பத்தையே பெறுதற்கு ஏதுவாகிய சிவஞானச் செல்வத்தை அடையப் பெற்றேன் அல்லேன், தவம் புரிந்திலன்—தவத்தையும் செய்தேன் அல்லேன், நின் திருவடிக்குத் தண் மலர் முட்டாது இட்டு இறைஞ்சேன்—நின்னுடைய திருவடிகளுக்குக் குளிர்ந்த நறு மலர்களைக் குறைவற இட்டு வணங்கேன், அவமே பிறந்த அருவினையேன்—ஆதலின் பயனின்றிப் பிறந்த கடத்தற்கரிய தீவினையுடையேன் ஆயினேன், நின் திருவடிக்கு ஆம் பவமே அடியேற்கு அருளு-ஆதலின் இனி நின் திருவடியை அடைதற்குரிய பிறப்பையே அடியேனாகிய எனக்கு அருளிக்காத்தல் வேண்டும், என்பது.

**வி-ரை:** அன்பர் உள்ளாம் திரு, சிவமே பெறுந்திரு என இயைக்க. திரு ஈண்டுச் சிவஞானத்தை யுணர்த்தும்; அது சிவத்தைப் பெறுதற்கு வாயிலாதலின். சிவம்—என்றும் அழியாத பேரின்பம். ஞானம் மெய்யன்பின் விளைவாதலின், "அன்பர் உள்ளாந்திரு" எனவும், அது பயப்பது வீட்டின்பம் ஆதலின், "சிவமே பெறுந்திரு" எனவும் கூறப்பட்டன. ஈண்டு ஏகாரம் தேற்றப்பொருட்டு. தவம் ஈண்டுக் கிரியையையும் யோகத்தையும் குறிக்கும். அகத்தும் புறத்தும் வழிபடுதலாகிய கிரியையும், மூச்சுக் காற்றை அடக்கி, மனத்தை அசைவற நிறுத்தி, உயிர் பரத்துடன் ஒன்றுதல் என்னும் அக வழிபாடாகிய யோகமும்

தட்ப வெப்பங்கள் முதலியவற்றால் உடற்கு உறும் துன்பத்தைப் பொறுத்துச் செய்யத்தக்கனவாதலின், தவம் என்று கூறப்பட்டன. சிவஞான போதம் எட்டாஞ் சூத்திர வுரையில், தவம் என்பது சரியை கிரியா யோகங் களை உணர்த்தும் என்ப. "ஈண்டுத் தவம் எனப்பட்டன பிறவல்ல வென்பார், சரியை கிரியா யோகங்களை எனக் கிளந்துரைத்தார்" என்பது சிவஞான முனிவர் உரை. சரியை முதலிய மூன்றனையும் தவம் என்னுஞ் சொல் உணர்த்துமாயினும், ஈண்டுத், "தண்மல ரிட்டிறைஞ் சேன்" எனச் சரியை வேறாகக் கூறப்பட்டமையால், தவம் என்பது கிரியையையும் யோகத்தையும் உணர்த்துவ தாகும். மேலும், 1 "சரியை கிரியா யோகங்களை" என்னும் மெய் கண்டார் திருவாக்கிற்கு உரை கண்ட சிவஞான முனிவர், "கிரியா யோகங்கள் என்னும் உம்மைத்தொகை வடநூன் முடிபு; கிரியா யோகம் இரண்டற்கும் தீக்கை ஒன்றென்பது தோன்ற, அவ் விரண்டனையும் தொகுத் தோதிச் சரியையைத் தமிழுக் குரிய வீற்றான் வேறு வைத் தார்" என்று கூறினர். இதனால் விசேட தீக்கை ஒன்றே கிரியை யோகங்களை மேற் கோடற் குரிய தகுதியளிக்கும் என்பது புலனும். இந் நயம் பற்றித் தவம் என்னுஞ் சொல்லால் கிரியையையும் யோகத்தையும் கோடல் பொருந்தும் என்பதுணர்க. தவமே என்புழி, ஏகாரம் தேற்றப் பொருட்டு. மலரிட்டு என்பது உபலக்கணமாக நின்று, வழிபாட்டிற்குரிய ஏனைய உபகரணங்களையும் உணர்த்தும். "முட்டா" தென்பதும் உபகரணப் பொருள் களின் குறைவின்மையை வலியுறுத்துவதாகும். மலர் இட்டு இறைஞ்சுதற் குரியது திருவடியாதலின், அஃது ஈண்டுங் கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது.

இறைவனை அடைதற்குச் சைவாகமங்களிற் கூறப் பட்ட நெறி நான்காகும். அவை, சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. இவை ஒன்றற் கொன்று சாதனமும் சாத்தியமுமாக, இறுதியாகிய ஞானத்தால் வீடடைதல்

1. சிவஞான போதச் சிற்றுரை, சூ. 8. அதிகரணம் 1.

கூடும். 1 "விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும், அரும்புமலர் காய் கனி போல் ஆகும்" என்பர் தாயுமானர். ஞானம் வீடு பயக்கும் உணர்வாதலின், வீட்டிற்கு வாயிலாகிய அதனைப் பெறுதல் இன்றியமையாததாகும். அது பெறுதற்கு அரிதாயிற்றென்பார், "சிவமே பெறுந்திரு எய்திற்றிலேன்" எனவும், அதற்குச் சாதனங்களாகவுள்ள யோக நெறி, கிரியை நெறியாகிய இவற்றையும் அடைந்திலேன் என்பார், "தவமே புரிந்திலன்" எனவும், அவ்வெல்லாவற்றிற்கும் முதற்படியாகவுள்ள சரியையிலேனும் தலைப்பட்டேனோவெனின், அதுவும் இன்றென்பார், "தண்மலரிட்டு முட்டாதிறைஞ்சேன்" எனவும் கூறினர். சிறந்த இந் நால்வகை நெறியினும் தலைப்படாமையால் இப் பிறப்புப் பயனற்ற தென்பார், "அவமே பிறந்த" எனவும், இவ் அவப் பிறப்பிற்குக் காரணம், கடத்தற்கரிய என் தீவினை என்பார், "அரு வினையேன்" எனவும் கூறினர். இதுகாறும் பிறப்பறுப்பதற்குரிய நெறி கைவரப் பெற்றிலேன்; ஆதலால் மேலும் பிறப்புண்டாதல் ஒருதலை; இனிக் கிடைக்கும் பிறப்பாவது நின் திருவடியடைதற்குரிய நெறி நிற்றற்கே யன்றி வேறுபடாவாறு அருளல் வேண்டும் என்பார், "நின் திருவடிக்கு ஆம் பவமே அருளு" எனத் தேற்றப் பொருள் தோன்றக் கூறி வேண்டினர். ஈண்டு ஏகாரம் தேற்றப் பொருளது. கண்டாய் என்பது முன்னிலை அசை. பிறப்பு வேண்டத் தக்கதன்றெனினும், சிவ நெறி நின்று, இறை வழிபாட்டில் தலைப்படக் கிடைக்குமாயின், பெரிதும் வேண்டிப் பெறத் தக்க தென்பதை,

2 "குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தம் உடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே"

என்னும் பெரியார் திருவாக்காலுந் தெளிக.

---

1. தாயுமானவர் பராபரக் கண்ணி, 157.
2. திருநாவுக்கரசர் தேவாரம், கோயில் திரு விருத்தம் 4.

இதன்கண் சரியை முதலியவைகளே சிவபெருமானை அடைதற்குரிய நன்னெறிகளாம் என்று கூறியிருத்தலின், **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாய வாறு அறிக.

6. பரந்துபல் லாய்மலர் இட்டுமுட்
 டாதடி யேயிறைஞ்சி
இரந்தவெல் லாமெமக் கேபெற
 லாம்என்னும் அன்பருள்ளம்
கரந்துநில் லாக்கள்வ னேநின்றன்
 வார்கழற் கன்பெனக்கு
நிரந்தர மாவரு ளாய்நின்னை
 யேத்த முழுவதுமே.

**க-ரை :** தவஞ் செய்தற் குரிய பிறப்பு வேண்டும் என்று முன்னைத் திருப்பாட்டில் கூறிய அடிகள், அப்பிறப்புக் கிடைப்பினும், இறைவனிடத்து இடையறாத மெய்யன்பு சிறப்பாக வேண்டும் என்பதை இத்திருப் பாட்டில் அருளிச் செய்கின்றார்.

**ப-ரை :** பரந்து – சிவ தலங்கள் தோறும் திரிந்து, ஆய் பல் மலர் முட்டாது இட்டு—ஆராய்ந் தெடுக்கப்பட்ட பல வாகிய மலர்களைக் குறைவுபடாது பெய்து, அடியிறைஞ்சி— திருவடியை வணங்கி, இரந்த எல்லாம் எமக்குப் பெறலாம் என்னும் – வேண்டிய எல்லாம் எமக்குப் பெறுதல் கூடும் என்று கருதுகின்ற, அன்பர் உள்ளம் கரந்து நில்லாக் கள்வனே – மெய்யன்பர்களுடைய உள்ளத்தில் மறைந்து நில்லாத கள்வனே, நின் வார்கழற்கு அன்பு – நின்னுடைய நெடிய கழலணிந்த திருவடிக்கண் உண்டாம் மெய்யன்பை, முழுவதும் நின்னை ஏத்த – முற்றும் நின்னையே வாழ்த்தும் வண்ணம், நிரந்தரமா—இடையறாது நிகழுமாறு, எனக்கு அருளாய் – எனக்கு அருள் புரிவாயாக என்பது.

**வி-ரை :** ஆராய்ந் தெடுத்தல் – விலக்கியன ஒழித்து விதித்தன தெரிந்தெடுத்தல். அடியிறைஞ்சுதற்கு ஏனைய உபகரணங்களினும் மலர் சிறந்ததாகலின் அது கூறப் பட்டது. உபலக்கணத்தாற் பிறவுங் கொள்க. கருவியும்

பயனும் அடங்க, "எல்லாம்" என்றார். கருவியாவது, ஆண்டவன் திருவடி அடைதற்குரிய ஞானம், பத்தி முதலிய சாதனங்கள். பயன், திருவடி நீழலில் இயைந்து நுகரும் பேரின்பம். ஆண்டவன் திருவடியை மெய்யன் போடு வணங்கினால், யாம் இரப்பன வெல்லாம் பெறலாம் என்று கருதும் அன்பர் என்றமையால், இறைவன் வழி பாட்டில் நம்பிக்கையும் கடைப்பிடியும் இன்றியமையா தன என்பது புலனாகும். உயிர் அறிவில் ஒற்றித்து நின்றும், அவ்வறிவால் அறிதற்கு அரிய நிலையில் மறைந்திருத்தலின், இறைவனைக் கள்வன் என்றார். [1] "என் உள்ளங் கவர் கள்வன்," [2] "உள்ளத்தே நிற்றியேனும் உயிர்ப்புளே வருதியேனும், கள்ளத்தே நிற்றியம்மா எங்ஙனம் காணு மாறே" என்னும் தமிழ் மறைகளும்,

> [3] "அருந்தவர் காட்சியுள் திருந்த வொளித்தும்
> ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
> பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
> ஒளிக்கும் சோரன்"

என்று அடிகள் பிறண்டுக் கூறுதலும் ஈண்டு நினைக்கத் தக்கன. அடியிறைஞ்சி இரந்த வெல்லாம் பெறல் கூடும் என்னும் மெய்யன்பர் உள்ளத்திற் கரந்து நில்லாமல் வெளிப்பட்டு நிற்பவன் என்றமையால், அடியிறைஞ்சா மல் எல்லாவற்றையும் பெறலாம் என்று துணியும் பொய்யன்பர் உள்ளத்தில் வெளிப்படாமல் கரந்து நிற்ப வன் என்பது போதரும். **கீழ் மக்கள் உள்ளம், அறம் பாவம் என்னும் மூலப் பொருள்களினும், அவற்றின் பயனாகிய இன்ப துன் பங்களினும் செல்லுங்கால், அறம் ஆகிய மூலத்தைவிட்டு அதன் பய னையும், துன்பம் ஆகிய பயனை விட்டு அதன் மூலத்தையும் விரும்புதல் இயல்பு.** ஆதலின் அம் முறையில் அடி இறைஞ்சுதலாகிய மூலத்தை விட்டு, எல்லாம் பெறுதலாகிய பயன் எய்துதல் அரிதெனக் கருதி, மேற் கூறிய பயன் இரண்டனுள்

---

1. திருஞான. தேவாரம் திருப்பிரமபுரம், 1. 2. திருநாவு. தேவாரம் தனித்திரு நேரிசை "கள்ளத்தான்." 3. திருவாசகம், திருவண்டப்பகுதி, அடி 128.

சாத்தியமாகிய பேரின்பத்தை விட்டுச் சாதனங்களாகிய பலவற்றுள் மெய்யன்பு ஒன்றையேனும் தரல் வேண்டும் என்பார், "நின்கழற்கு...அன்பு எனக்கு அருளாய்" எனவும், அவ்அன்பு தானும் ஒருகால் தோன்றி ஒருகால் மறையும் இயல்பினதாக இன்றி, இடையறாது நிகழ்வதாக இருக்கவேண்டும் என்பார், "நிரந்தரமா" எனவும், அவ் அன்பின் ஒரு கூறு உலகப் பொருள்களிடத்தும், மற்றொரு கூறு கடவுளிடத்தும் நிகழாமல், முழுவதும் கடவுளை ஏத்துதற்கே பயன்பட வேண்டும் என்பார், "நின்னையேத்த முழுவதுமே" எனவும் அருளிச் செய்வாராயினர். கழற்கு என ஏழாம் வேற்றுமையுருபில் நான்காவது மயங்கிற்று.

அடிகள் இறைவன் அடியிறைஞ்சுதலாகிய பேறு தமக்கு இன்றென்பதை, "தவமே புரிந்திலன் தண்மலரிட்டு முட்டாதிறைஞ்சேன்" என்றதனால் புலப்படுத்தமை யறிக. அகத்தும் புறத்தும் வழிபாட்டையன்றி வேறொன்றையும் அறியாத அடிகள் இங்ஙனம் கூறியது, உலகியலைத் தம் மேலாக்கிப் பணிவு புலப்படுத்தற்கென்க. இங்ஙனம் கூறப்பட்ட பிற இடங்களிலும் இதுவே கருத்தாகக் கொள்க.

இதன்கண், "அன்பர் உள்ளம் கரந்து நில்லாக் கள்வன்" என இறை நிலை இத்தகையதென்பதும், அப்பெருமான் அருளைப் பெறுதற்கு உரிய சிறந்த சாதனம் இடையறாத மெய்யன்பு என்பதும் பெறப்படுதலின், "**மெய்யுணர்தல்**" என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்றுதல் அறிக.

7. முழுவதும் கண்டவ னைப்படைத்
   தான்முடி சாய்த்துமுன்னாள்
செழுமலர் கொண்டெங்குந் தேடஅப்
   பாலன்இப் பால்எம்பிரான்
கழுதொடு காட்டிடை நாடகம்
   ஆடிக் கதியிலியாய்
உழுவையின் தோலுடுத் துன்மத்த
   மேல்கொண் டுழிதருமே.

**க·ரை:** இறைவனிடத்து மெய்யன்பு சிறப்பாக வேண்டும் என முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், அம் மெய்யன்பினால் அன்றி ஆற்றல் முதலிய பிற சாதனங்களால் தேவராயினும் இறைவனை அணுக இயலாது என்பதை இத் திருப்பாட்டில் அருளிச்செய்கின்றார்.

**ப·ரை:** முன் நாள்—முன் ஒரு காலத்தில், முழுவதுங் கண்டவனைப் படைத்தான்—உலகமுழுதும் படைத்த பிரமனைத் தன் உந்தித் தாமரையினின்றும் தோற்றுவித்த திருமால், செழுமலர் கொண்டு — அலர்ந்த தாமரை மலரையொத்த திருவடிகளைக் காணவேண்டும் என்னும் உறுதியை உள்ளத்தே கொண்டு, முடி சாய்த்து எங்குந் தேட—தலையைச் சாய்த்து யாண்டுந்தேட, அப் பாலன் எம்பிரான் — காணப்படாவாறு அப்பாற் பட்டவனாகிய எங்கள் சிவபெருமான், இப்பால் — இவ்விடத்தில், கழுதொடு காட்டிடை நாடகம் ஆடி — பேய்க்கணங்களோடு கூடிச் சுடு காட்டிற் கூத்தாடி, கதியிலியாய்—புகலிடம் இல்லாதவனாய், உழுவையின் தோலுடுத்து—புலித் தோலை ஆடையாக வுடுத்து, உன் மத்தம் மேல் கொண்டு உழிதரும் — மிக்க களிப்பை மேற்கொண்டு அலைந்து திரிவன். (இஃதென்ன வியப்பு) என்பது.

**வி—ரை:** முழுவதுங் கண்டவன் எனப் பிரமன் பெருமை கூறியது, அவன் தந்தையாகிய திருமால் பெருமை தோன்றற்கு. காண்டல் இலக்கணைச் சொல்லாய் நின்று ஆக்குதலை உணர்த்தும். முற்றும் ஆக்கினான் என்பதற்கேற்ப உலக முழுவதும் எனச் செயப்படு பொருள் வருவித்துரைக்கப்பட்டது. செழுமலர், ஆகுபெயராய் நின்று சிவபெருமான் திருவடியை உணர்த்தும், தேடப்பட்டது அதுவாகலின். [1] "சொற்கழிவு பாதமலர்" என்பர் பின்னும். கொண்டு—குறிக்கொண்டு. திருமால் பன்றியுருக் கொண்டு நிலங்கிளைத்துச் சிவபிரான் திருவடியைத் தேடிய வரலாறு இங்கே புலனாதலறிக. "எங்குந் தேட" என்றது, இறைவன் திருவடி மலரைக் காண்டற்கு நிலத்தை அகழ்ந்து

1. திருவாசகம், திருவெம்பாவை, செ. 10.

அரிதின் முயன்றதைப் புலப்படுக்கும். "பிரமனைப் படைத்தவன்" எனத் திருமாலுக்குக் கூறிய அடையால், பிரமன் தேடியதும் பெறப்படும். பன்றிஉருக் கொண்டு மருப்பினால் நிலங் கிளைத்தமை தோன்ற, "முடிசாய்த்து" என்றார். திருமால் தலை சாய்த்து அடியைத் தேடினன் எனவே, பிரமன் அன்னப் பறவையாகப் பறந்து, தலை நிமிர்ந்து சென்று இறைவன் முடியைத் தேடினன் என்பதும் பெறப்படும். பிரமன் தேடியதற் கேற்ப, "செழுமலர்" என்பதை ஆகு பெயராகக் கொண்டு, கொன்றைமாலை யணிந்த இறைவன் திருமுடி எனக் கொள்க; [1]"போதார் புனைமுடி" என்பர் பின்னும். அடி முடி தேடிய வரலாற்றில், அடி தேடிய திருமால் செய்தியை வெளிப்படையாகக் கூறவே, முடி தேடிய பிரமன் செய்தியும் குறிப்பாகப் புலப்படுத்தபடியாம். தந்தையின் இயலாமையைக் கூறியதனாலே, மைந்தன் இயலாமை எளிதில் அறியத்தக்கதென்பது கருத்து. மேலும், தேடியவன் தேவரில் வலியனாகிய திருமால். அவனால் தேடப்பட்டது அன்பர்க்கு எளிய திருவடியாகும். அடி தேடல் முறைமையும் ஆகும். அங்ஙனம் தலை சாய்த்துத் தேடியும், அத் திருவடி காண்டற் கரிதாயிற்றெனின், அத் திருமாலினும் வலியில் தாழ்ந்த பிரமன் முறையின்றி, எவர்க்கும் அரிய முடியைத் தலை நிமிர்ந்து தேடியறிந்திலன் என்பது வெளிப்படக் கூற வேண்டாமையும் உணர்க. தேடிய இருவர் செயலையும் கடந்து நின்றது தோன்ற, "அப் பாலன்" என்றார். [2]"பாதாளம் ஏழினுங் கீழ் . சொற்கழிவு பாதமலர், போதார் புனை முடியும் எல்லாப் பொருண்முடிவே" என்று அடிகள் பிறண்டுக் கூறியதும் ஈண்டு நினைக்கத்தக்கது. ஈண்டு, "சொற்கழிவு, பொருள் முடிவு" என முறையே அடி முடிகளின் எல்லை கூறியது கொண்டு, சொற் கடந்து நின்ற நிலையே திருமாலால் அறிய முடியவில்லை யெனின், பொருண் முடிவாகிய நிலையை அவன் புதல்வனாகிய பிரமன் எங்ஙனம் அறியக் கூடும் என்பது எளிதில் உணரத்தக்க தொன்றாகலின், குறிப்பிற் புலப்படுத்தமை ஈண்டும் வலியுறுதல் காண்க.

1, 2, திருவாசகம் திருவெம்பாவை, செ. 10.

திருமால் முதலிய வானோர்க்கரிய மருந்தாக வுள்ளான், அன்பர் ஆகிய ஏனோர்க்கு எளிய இறைவன் ஆதலைப் புலப் படுக்க, "எம்பிரான்" என்றார்.

திருமால், பிரமன் முதலிய தேவர்க்கும் அறிவரிய பெருமான், கண்டார் நகையாடுதற்குரிய நிலையில் இவ் விடத்தில் எளியனாய்த் திரிதல் வியப்பளிப்பதாகும் எனப் பின்னிரண்டடிகளினும் மருட்கைச் சுவை தோன்றக் கூறுகின்றார். அங்ஙனம் கூறிய சொற்களில், பழித்தல் போலப் புகழ்தற் பொருள் புலனாதல் அறிக. கழுது, இழிந்த பிறப்பாகிய பேயை உணர்த்துமாயினும், ஈண்டு இறைவன் கூடியாடுதற்கேற்ப, மாயா காரியமாகிய உடல் ஒழிந்து, ஞான வடிவமாக விளங்கும் சிவகணங்களை உணர்த்துவ தாகும். காரைக்காலம்மையார் இவ்வுலக வாழ்க்கையிற் பற்றொழிந்து இறைவனை வேண்டிப் பெற்றது இப்பேய் வடிவேயாம். [1] "ஆங்கு நின்தாள்கள் போற்றும் பேய்வடி வடியேனுக்குப், பாங்குற வேண்டும் என்றார்" என்னும் இதனால், இறைவன் பக்கலில் நின்று இடை யறாது பாராட்டி வணங்கும் பேறு சிவ கணங்களாகிய பேய்களுக்கு உண்டென்பதும் புலப்படும். இத்தகைய பேய் வடிவத்தின் பெருமையைச் சேக்கிழார், [2]"வானமும் மண்ணும் எல்லாம் வணங்கு பேய்வடிவம்" என்பர். அம்மையார் தம் திருவாக்கால், [3]"மற்றொருகண் நெற்றி மேல் வைத்தான்றன் பேயாய — நற்கணத்தில் ஒன்றாய நாம்" எனவும், [4] "காரைக்காற்பேய் செப்பிய செந் தமிழ்," [5] "காரைக்கால் பேய் தன் பாடல்" எனவும் தம்மைப் பேய் என்று கூறிக் கொள்வதில் பெருமை யுண் டெனக் கருதியதும் ஈண்டு நினைக்கத்தக்கது. எல்லாப் பற்றுக்களையும் ஒழித்து, இறைவன் ஒருவனையே குறிக் கொண்டு, இடையறாது பணி செய்தொழுகும் பேய்களின் ஆடல் இறைவன் அருட் கூத்திற்கு இயைந்த தாகலின்,

---

1. பெரிய புரா. காரைக். செய் 49. 2. பெரிய புரா. காரைக். செய். 50. 3. அற்புதத் திருவந்தாதி, செ. 86 4. மூத்த திருப்பதிகம், 11. 5. மூத்த திருப்பதிகம், 11.

"கழுதொடு...நாடகமாடி" என்றார். "பேயோடாடி" என்னும் பெயரும் இது பற்றியதே. காடு—மகா சங்கார காலத்தில் உலகம் முதலிய எல்லாம் ஒடுங்கிய இடமாகும். எல்லாம் அழிந்தொடுங்கிய இடமாதல் பற்றி இதனைச் சுடலை என்று கூறுவர். இவ்வுண்மையை,

1 "கடல்விடம் நுகர்ந்த தொல்லைக் கடவுள்பின் அழிக்குங் காலை
உடல்உயிர் அகிலம் யாவும் ஒடுங்கிய இடம தன்றே
சுடலைய தாகும் அந்தச் சுடலைகாண் அனைய சோதி
நடநவில் கின்ற எல்லை நாடருந் தகைமைத் தஃதே"எனவும்,

2 "அங்கது மன்றி எந்தை அகிலமும் முடித்த ஞான்றின்
எங்கும்வெள் ளிடைய தாகி சுமமாம்"

எனவும் இப் பெருஞ்சுடலையின் உண்மை நிலையைக் குறித்து, அஃதறியாத மாக்கட்கு மெய்யுணர்வுடைய ததீசி முனிவர் கூறிய விடையாலும் தெளியலாம். "நாடகம்" என்பது ஈண்டு எல்லாம் ஒடுங்கிய பேரூழிக் காலத்தில் இளைப்பாறிக் கிடக்கும் உயிர்களை மீண்டும் வினைக்கு ஒத்தவாறு, படைப்பு முதலிய தொழிற்படுத் தற்குச் செய்யும் அருள் இயக்கமாகும். இதனைச் சூக்கும ஐந்தொழில் எனவுங் கூறுப. 3 "சூக்குமமாகிய ஐந்தொழி லாவன, சங்கரித்த பின்னர், மேற் செய்யக் கடவன வாகிய தூல ஐந்தொழிற்கு யோக்கியமாம்படி கேவலத் தின்கண் நிகழ்த்துவனவாம்."

4 "தோற்றந் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்பது இவ்வுண்மையைப் புலப்படுத்துவதாகும். இனி உயிர்த் தொகுதிகளை மும்மலக் கட்டொழித்துத் தம் திரு வருளில் இயைத்துப் பேரின்பத்துள் தலைப்படுத்தும் உண்மையையும், இவ்வருள் நடம் புலப்படுத்தும் என்ப. இதனை,

1. கந்தபுரா. ததீசி உத். செ. 362. 2. கந்த புரா. ததீசி உத். செ. 363. 3. சிவஞான மாபாடியம், சூ. 2, அதிகரணம் 1, உரை, 4. உண்மை விளக்கம், செய். 35.

> 1 "மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலம்
> சாய அமுக்கியருள் தானெடுத்து—நேயத்தால்
> ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
> தானெந்தை யார்பரதந் தான்"

என்னும் இதனாலறிக. 'கதியிலி' என்பது பிறப்பில்லாதவன் என்னும் பொருளது. 2"பிறவாயாக்கைப் பெரியோன்" என்றார் பிறரும். புலித்தோலுடுத்தல், தமக்கு ஊறு விளைக்கக் கருதித் தாருக வனத்து முனிவரால் உய்க்கப்பட்ட புலியைக் கொன்று, அதன் தோலையுடுத்தார் என்னும் புராண கதையை உட்கொண்டு கூறியது. தம்பால் அன்பில்லாதாரை மறக்கருணையால் ஒறுத்தல் இதனாற் புலனும். உன்மத்தம்—அளவின் மிக்க களிப்பு. இஃது இறைவன் இன்ப வடிவினன் என்பதைக் குறிக்கும். உழிதரல்—யாண்டும் உளனாதல். இஃது இறைவன் வியாபக உண்மையைப் புலப்படுக்கும்.

இத்திருப்பாட்டின் பின் இரண்டடிகளாலும், எல்லாம் ஒடுங்கிய பின் எஞ்சி நின்று, உயிர்களை மீண்டும் படைப்பு முதலிய தொழில்களுட்படுத்தல், தான் பிறவா நிலையுடையனாதல், தன்னை அடையார்க்கும் அடைந்தார்க்கும், முறையே தெறலும் அளியும் புரிதல் முதலிய அருட் செயல்களின் உண்மை யியல்பு புலனாதல் அறிக.

இதன்கண், மெய்யன்பு இன்றிப் பிற ஆற்றல்களால் இறைவனைக் காண்டல் இயலாதென்பது பெறப்படுதலின், **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்றல் அறிக.

> 8. உழிதரு காலும் கனலும்
> புனலொடு மண்ணும்விண்ணும்
> இழிதரு காலம்எக் காலம்
> வருவது வந்ததற்பின்

---

1. உண்மை விளக்கம், செய். 36. 2. சிலப்பதி. இந்திர விழா, அடி 169.

உழிதரு காலத்த உன்னடி
யேன்செய்த வல்வினையைக்
கழிதரு காலமு மாயவை
காத்தெம்மைக் காப்பவனே.

**க-ரை:** மெய்யன்பினால் அன்றி, ஆற்றல் முதலிய வற்றால் இறைவனை எய்துதல் இயலாது என முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், மெய்யன்பு வாயிலாக எய்தும் இன்பநிலை தானும் வினையொழிவில் எய்தத் தக்க தாகலின், என் வல்வினையொழிவு எக்காலம் நேருமோ என இத் திருப்பாட்டில் இரங்கிக் கூறுகின்றார்.

**ப-ரை:** உழிதரு காலும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும்—உலவுகின்ற காற்றும் தீயும் நீரும் நிலனும் விசும்பும் ஆகிய இவ்வைம் பெரும் பூதங்களும், இழிதரு காலம் வந்ததற் பின்னும்—ஒன்றனுள் ஒன்றாக முறையே ஒடுங்குகின்ற காலம் வந்த பின்னரும், உழிதரு கால் அத்த—அருட் கூத்து இயற்றுந் திருவடிகளையுடைய தந்தையே, உன் அடியேன் செய்த வல்வினையைக் கழி தரு காலமும் ஆய்—நின் அடிமையாகிய யான் செய்த வலிய வினைகளைக் கழிக்கின்ற கால தத்துவமும் ஆகி, அவை காத்து—அவ் வினைகள் மீண்டும் என்னைப் பற்றாமல் தடுத்து, எம்மைக் காப்பவனே—என்னையும் என்னைப் போன்ற ஏழை அடியாரையும் காப்பாற்றுகின்ற பெரு மானே, உழி தரு காலும்......... இழிதரு காலம்—உலவு கின்ற காற்றும் தீயும் நீரும் நிலனும் விசும்பும் ஆகிய இவ்வைம் பெரும் பூதங்களும் ஒடுங்குகின்ற காலம், வருவது எக்காலம்—வருதல் எப்பொழுது? என்பது.

**வி-ரை:** காற்றுக்கு உழிதரல் கூறியதனால், தீ முதலிய வற்றிற்கும் சுடுதல் முதலிய குணங்கள் கூறப்பட்ட படியாம். பிரமனது முதற் படைப்பு நீர் என மறை கூறுதலின், புனலொடு என ஈண்டு ஒடு உருபு உயர்வு

குறித்து நின்றது. [1] "ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே" என்பது விதி. மக்களுக்குச் சிறந்த உணவாக வும், ஏனைய உணவுப் பொருள்களை உண்டாக்குவதாக வும் உள்ளது நீராதலின், ஏனைய பூதங்களினும் நீர் முதற் படைப்பாகக் கூறப்பட்ட தென்பது விளங்கும். இவ் வுண்மை கருதியே திருக்குறட் பாயிரத்திலும் கடவுள் வாழ்த்தை யடுத்து வான்சிறப்புக் கூறப்பட்டது. விண், செய்யுள்நோக்கி இறுதியிற் கூறப்பட்டதாயினும், தோற்ற முறை பற்றி முதலிற் கொள்ளவேண்டும். [2] "பரம் பொரு ளினின்றும் ஆகாயந் தோன்றி, அதனினின்றும் காற்றுத் தோன்றி, அதனினின்றும் தீத்தோன்றி, அதனினின்றும் நீர் தோன்றி, அதனினின்றும் நிலந் தோன்றிற்று என்று வேதத்துள்ளும் கூறப்பட்டது" என்பர் பரிமேலழகர். ஐந்து குணங்களையும் உடைய நிலம் மிகவும் பருப்பொரு ளாய் நம்மனோர்க்கு ஆதாரமாக இருத்தலின் அதனையும், அதனோடு தோற்ற முதலாதல் பற்றி விண்ணையும் இயைத்து, "மண்ணும் விண்ணும்" என்றார். [3] "மண்டிணிந்த நிலனும், நிலனேந்திய விசும்பும், விசும்பு தைவரு வளியும், வளித் தலைஇய தீயும், தீ முரணிய நீரும் என்றாங்கு, ஐம்பெரும் பூதத்தியற்கை" என்னும் புறநானூற்றுச் செய்யுளில் நிலனேந்திய விசும்பென்று கூறியதும் இக்கருத்துப் பற்றி. இனி, ஒடுக்க முறையும் புலப்பட, விண்ணை இறுதியிற் கூறினர் எனினும் ஆம். இழிதரல்—இறங்குதல்; ஒடுங்குதற் பொருட்டு. இழிதரு காலம், எல்லாம் ஒடுங்கிய பேரூழிக் காலம். அக்காலத்தின் பின்னும் இறைவனுடைய ஐந் தொழில் திருக்கூத்து, [4] சூக்கும நிலையில் நடைபெறும் என்பது புலப்பட, "உழிதருகால் அத்த" என்றார்.

அடிகள் தம் பிறப்பிற்கு ஏதுவாகத் தம்பால் அமைந்து கிடக்கும் வினை எளிதில் கழிக்கத் தக்கதன்றெனவும், தாம் முயலும் தவத்தின் ஆற்றலையும் கடந்து நிற்கும் வலியுடைய

---

1. தொல். சொல். சூத். 91. 2. பரிபாடல் 2, அடி 5 முதல் உரை. 3. புறநானூறு, செ. 2. 4. திருச்சதகத் திருப்பாட்டு 7, உரை பார்க்க.

தெனவும் கண்டு, அதனை, "வல்வினை" என்றார். அங்ஙனமா யினும், அவ்வல்வினைக்கு முதலாகிய யான் நின் அடிமை என்பதைத் திருவுள்ளம் பற்ற வேண்டும் என்பார், "உன் அடியேன் செய்த வல்வினை" என்றார். கடத்தற்கரிய வல் வினைகளாதலின், அவற்றை ஒழிப்பது என்னளவில் அமை யாது; யான் செய்யும் தவ முயற்சி முதலிய சாதனங்கள் எல்லாம் அவ்வினை யொழிவு பெறுதற்கு ஏதுவாகிய நின் அருளைப் பெறச் செய்தற்குரிய ஆற்றலுடையனவும் அல்ல; ஆதலின், எல்லாம் ஒடுங்குதற்குரிய மகா சங்கார காலமாகிய பேரூழியில், உயிர்கள் இளைப்பாறுதற் பொருட்டு நின் அருளால் காரண மாயையில் [1] ஒடுங்கிய வழி, அவ்வுயிர்த் தொகுதிகளின் எஞ்சிய வினைகளும் [2] சூக்குமமாய்க் காரண மாயையின் ஒடுங்கக்கூடும், ஆதலின், அந் நிலையில் என் வல்வினையும் என்னைவிட்டுக் கழிய வேண்டும் எனவும், அங்ஙனம் கழிதற்கு நீயே பேரூழிக் கால தத்துவமாகவும் நின்று உதவி புரிய வேண்டு மெனவும் வேண்டுவார், "வல்வினையைக் கழிதரு காலமு மாய்" என்றார். ஆன்ம தத்துவம் அனைத்தையும் தன்னுள் அடக்கி நிற்பது பேரூழியாகிய கால தத்துவம் ஆதலின், அம் முறையில் இறைவனை, "காலமுமாய்" எனக் குறிப்பிட்டார். [3] "ஞாலமே விசும்பே யிவை வந்துபோம், காலமே" என அடிகள் பிறண்டுக் கூறியதும் காண்க. பேரூழிக் காலத்து, உயிர்களின் எஞ்சிய வினைப் பகுதிகள் காரணமாயையின் ஒடுங்கிக் கிடப்பினும், மீண்டும் படைப் புத் தொடங்குங்கால், அவ்வினைகளே அவ்வுயிர்களுக்குத் தநு கரண புவன போகங்களின் ஏதுவாக [4]முளைக்கும்

1. "ஒடுக்கம்இளைப் பொழித்தல்மற்றைத் தோற்றம்மல பாகம்வர" சிவப்பிரகாசம், செய். 18. 2. "இங்ஙனம் கூறிப்போந்த வாற்றாற் பெறப்பட்ட வினை ஈட்டப்படுங் கால், மந்திர முதலிய அத்துவாக்களிடமாக, முறையானே மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றான் ஈட்டப்பட்டுத் தூல கன்மமாய் ஆகாமிய மெனப் பெயர் பெறும். பின்னர்ப் பக்குவம் ஆங்காறும் சூக்கும கன்மமாய்ப் புத்தி தத்துவத்திலிடமாக மாயையிற் கிடக்கும்" (சிவஞான பாடியம், சூ. 2, அதிகா. 2, உரை). 3. திருவாசகம், திருச்சதகம், 43. 4. "இவ்வினை புத்தி தத்துவத்தைப் பற்றி நின்று, சங்கார காலத்தில் புத்தி தத்துவம் மாயையின் ஒடுங்கியவழி, அம்மாயை பற்றுக் கோடாக நின்று, புனருற்பவத்தில் தநுகரண முதலியவற்றிற் கேதுவாய் வருமெனக் கொள்க" (சிவஞான பாடியம், சூ. 2, அதிகரணம் 2, உரை).

ஆதலின், அம்முறையில் என் வல்வினைகளும் மீண்டும் என்னைப்பற்றிப் பிறப்பிற் செலுத்தக் கூடும்; அக்காலத் திலாவது நின்னடிமை என்பதைத் திருவுளங் கொண்டு, அவ்வினைகள் என்னைப் பற்ருவண்ணம் அவற்றைத் தடுத்து என்னைக் காக்கும் பேரருள் உடையவன் நீயே என்பார், "அவை காத்தெம்மைக் காப்பவனே" என்ருர். ஈண்டுக் காத்து என்பது வாராமல் தடுத்து என்னும் பொருட்டு; [illegible] காப்பான்" என் [illegible] இளங்காப்பான் [illegible] பெரி [illegible] பல வெப்பத்தால் [illegible] இருக்க [illegible] அது மற்றை அன்பரையும் [illegible] வேண்டும் என்னும் கருணையால் அடிகள் [illegible] காப்பவனே என்னது, "எம்மைக் காப்பவனே" என்று உளப்படுத்துக் கூறினர். இத்துணையும் கூறியவை விளி களாம்.

இனி, "உழிதருகா லும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும் இழிதரு காலம்" என்னுந் தொடரை இரட்டித்து உரைத்துக்கொண்டு, அக்காலம் வருவது எப்பொழுது? என முடிக்க வேண்டும். ஐம்பெரும் பூதங் களும் ஒடுங்கிய பின்னும் அருட் கூத்தியற்றும் எந்தையே எனவும், நின்னடியேன் செய்த வல்வினையைக் கழிக் கின்ற கால தத்துவமுமாய் நின்று, அவ்வினைகள் மீண்டும் என்னைப் பற்ருமல் தடுத்துக் காப்பவனே எனவும், இறைவனை விளித்த அடிகள், தம் வல்வினை ஒழிவிற்குரிய [illegible] காலம் ஆதுமாயின், அஃது அணிமை [illegible]; அஃது வருங்காறும் வல்வினை வயப்பட்டுப் பிறந்திறந்து உழல நேருமே என்று அஞ்சி யிரங்குவாராய், அப்பேரூழிக் காலம் வருவது என்றுகொலோ என்பார், "இழிதருகாலம் எக்காலம் வருவது" என்ருர். வந்ததற் பின்னும் என்புழி, எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. காலதத்துவம், பிரகிருதி மாயா காரியங்கள் எல்லாவற்றை யும் தன்னுள் அடக்கிக் கலை, வித்தை, அராகம் ஆகிய வித்தியா தத்துவங்களுள் ஒரு பகுதியையும் வியாபித்து

1. திருக்குறள் 301.

நிற்பதொன்றாகலானும், மகா பிரளய நிலையில் எல்லாப் பொருளும், தேவர் முதலிய எல்லோரும் ஒடுங்க, எஞ்சி நிற்கும் பரமபதியாகிய சிவபிரான் அருள் நடத்திற்கு இடனாக நிற்றலானும், அக் காலதத்துவம், தம் வல்வினை ஒழிவிற்கு ஏதுவாம் என்னும் உறுதியுடைய அடிகள், வினைக் கட்டறுத்தற்குரிய முதன்மை இறைவன் பாலதாக வும், அக்காலமும் அதற்குத் துணையாதல் பற்றித் தம் வல் வினையைக் கழித்தற்கு இறைவன் கருத்தனாதலே யன்றித் துணையாக வுள்ள காலமு மாவன் என்னுங் கருத் தால், "கழிதரு காலமுமாய்" என்றார். ஈண்டுள்ள உம் மையும் எச்சப் பொருளதாம்.

இதன்கண், மா பெரும் பூதங்கள் எல்லாம் ஒடுங்கிய பேரூழிக் காலத்தும், அழிவில் பொருளாக நின்று அருட் கூத்தியற்றுவோன் இறைவன் ஒருவனே யென்பதும், உயிர்களின் வினை யொழிவிற்கு அப் பெருமானைக் கால தத்துவமாகக் கொண்டு வழிபடல் வேண்டு மென்பதும் கூறப்பட்டிருத்தலின், **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

9. பவனெம் பிரான்பனி மாமதிக்
 கண்ணிவிண் ணோர்பெருமான்
சிவனெம் பிரானென்னை ஆண்டுகொண்
 டானென் சிறுமைகண்டும்
அவனெம் பிரானென்ன நானடி
 யேனென்ன இப்பரிசே
புவனெம் பிரான்தெரி யும்பரி
 சாவ தியம்புகவே.

**க-ரை:** முன்னைத் திருப் பாட்டில் தம் வல் வினை யொழிவு எக்காலம் நேருங்கொலோ வென இரங்கிய அடிகள், அதற்குப் பரிகாரமாகத் தம் சிறுமை கண்டும், இறைவன் ஆட்கொண்ட பெருமை பாராட்டத் தக்க தென இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

ஆதலின், அம்முறையில் என் வல் வினைகளும் மீண்டும் என்னைப்பற்றிப் பிறப்பிற் செலுத்தக் கூடும்; அக்காலத் திலாவது நின்னடிமை என்பதைத் திருவுளங் கொண்டு, அவ்வினைகள் என்னைப் பற்ருவண்ணம் அவற்றைத் தடுத்து என்னைக் காக்கும் பேரருள் உடையவன் நீயே என்பார், "அவை காத்தெம்மைக் காப்பவனே" என்ருர். ஈண்டுக் காத்து என்பது வாராமல் தடுத்து என்னும் பொருட்டு; 1 "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்" என் புழிப்போல. மல வெப்பத்தால் தாம் படுந் துயரம் பெரி தெனக் கண்டு, அது மற்றை அன்பரையும் பற்ருதிருக்க வேண்டும் என்னும் கருணையால் அடிகள் என்னைக் காப்பவனே என்ளுது, "எம்மைக் காப்பவனே" என்று உளப்படுத்துக் கூறினர். இத்துணையும் கூறியவை விளி களாம்.

இனி, "ஊழிதருகாலும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும் இழிதரு காலம்" என்னுந் தொடரை இரட்டித்து உரைத்துக்கொண்டு, அக்காலம் வருவது எப்பொழுது? என முடிக்க வேண்டும். ஐம்பெரும் பூதங் களும் ஒடுங்கிய பின்னும் அருட் கூத்தியற்றும் எந்தையே எனவும், நின்னடியேன் செய்த வல்வினையைக் கழிக் கின்ற கால தத்துவமுமாய் நின்று, அவ்வினைகள் மீண்டும் என்னைப் பற்ருமல் தடுத்துக் காப்பவனே எனவும், இறைவனை விளித்த அடிகள், தம் வல்வினை ஒழிவிற்குரிய காலம் மகா சங்காரகாலம் ஆகுமாயின், அஃது அணிமை யில் நேராதே; அது வருங்காறும் வல்வினை வயப்பட்டுப் பிறந்திறந்து உழல நேருமே என்று அஞ்சி யிரங்குவாராய், அப்பேரூழிக் காலம் வருவது என்றுகொலோ என்பார், "இழிதருகாலம் எக்காலம் வருவது" என்ருர். வந்ததற் பின்னும் என்புழி, எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. காலதத்துவம், பிரகிருதி மாயா காரியங்கள் எல்லாவற்றை யும் தன்னுள் அடக்கிக் கலை, வித்தை, அராகம் ஆகிய வித்தியா தத்துவங்களுள் ஒரு பகுதியையும் வியாபித்து

1. திருக்குறள் 301.

நிற்பதொன்ருகலானும், மகா பிரளய நிலையில் எல்லாப் பொருளும், தேவர் முதலிய எல்லோரும் ஒடுங்க, எஞ்சி நிற்கும் பரமபதியாகிய சிவபிரான் அருள் நடத்திற்கு இடனுகை நிற்றலானும், அக் காலதத்துவம், தம் வல்வினை ஒழிவிற்கு ஏதுவாம் என்னும் உறுதியுடைய அடிகள், வினைக் கட்டறுத்தற்குரிய முதன்மை இறைவன் பாலதாக வும், அக்காலமும் அதற்குத் துணையாதல் பற்றித் தம் வல் வினையைக் கழித்தற்கு இறைவன் கருத்தனுதலே யன்றித் துணையாக வுள்ள காலமு மாவன் என்னுங் கருத் தால், "கழிதரு காலமுமாய்" என்ருர். ஈண்டுள்ள உம் மையும் எச்சப் பொருளதாம்.

இதன்கண், மா பெரும் பூதங்கள் எல்லாம் ஒடுங்கிய பேரூழிக் காலத்தும், அழிவில் பொருளாக நின்று அருட் கூத்தியற்றுவோன் இறைவன் ஒருவனே யென்பதும், உயிர்களின் வினை யொழிவிற்கு அப் பெருமானைக் கால தத்துவமாகக் கொண்டு வழிபடல் வேண்டு மென்பதும் கூறப்பட்டிருத்தலின், **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனுதல் அறிக.

9. பவன்எம் பிரான்பனி மாமதிக்
 கண்ணிவிண் ணோர்பெருமான்
சிவன்எம் பிரான்என்னை ஆண்டுகொண்
 டான்என் சிறுமைகண்டும்
அவன்எம் பிரான்என்ன நானடி
 யேன்என்ன இப்பரிசே
புவன்எம் பிரான்தெரி யும்பரி
 சாவ தியம்புகவே.

**க-ரை:** முன்னைத் திருப் பாட்டில் தம் வல் வினை யொழிவு எக்காலம் நேருங்கொலோ வென இரங்கிய அடிகள், அதற்குப் பரிகாரமாகத் தம் சிறுமை கண்டும், இறைவன் ஆட்கொண்ட பெருமை பாராட்டத் தக்க தென இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்ருர்.

**ப-ரை:** பவன் எம்பிரான்—உலகத் தோற்றத்திற்குக் காரணனும் எம்பெருமானும், பனி மாமதிக் கண்ணி விண்ணோர் பெருமான்—குளிர்ச்சியும் பெருமையும் வாய்ந்த பிறைத்திங்களை முடிமாலையாக வுடைய தேவர் முதல்வனும், சிவன் எம்பிரான்—இன்ப வடிவினனும் ஆகிய எங்கள் தலைவன், என் சிறுமை கண்டும்—எனது சிறிய தன்மையை அறிந்து வைத்தும், என்னை ஆண்டு கொண்டான்—என்னை அடிமையாக ஏற்றுக் கொண்டான், அவன் எம்பிரான் என்ன—அத்தகைய பெரியோன் ஆண்டான் ஆகவும், நான் அடியேன் என்ன—சிறியேனாகிய யான் அடியேன் ஆகவும் உள்ள, இப்பரிசே—இவ்வாண்டான் அடிமைத் தொடர்பின் இயல்பே, எம்பிரான்—அவ் வெம்பெருமான் பெருமையை, தெரியும் பரிசாவது புவனம் இயம்புக—அறிந்து கொள்ளும் விதமாதலை இவ் வுலகம் பாராட்டிக் கூறக்கடவது என்பது.

**வி-ரை:** பவன் என்பதற்கு—உலகத் தோற்றத்திற்கு நிலைக்களனாகவுள்ள காரணமானவன் என்பது பொருள்; அழிவில்லாதவன் என்பதுமாம். உலக காரணனாதல் பரம்பொருட்குச் சிறந்த இலக்கணமாகு மென்றும், அது சிவபிரானுக்கே உள்ளதென்றும், மறை யாகமங்கள் கூறும். யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடைய அத்தகைய பெருமான், யாவர்க்குங் கீழாம் அடியேங்கட்கும் தலைவனயினன் என்பது போதர, "பவன் எம்பிரான்" என்றார். சிறியேமாகிய எங்களுக்குத் தலைவனானது அவன் பெருமைக்குத் தக்கதன்றெனின், அதற்கு மாற்றமாக மக்களுட் சிறியேமாகிய எமக்கு மாத்திரம் அன்று; தேவர் எல்லோர்க்கும் தலைவனவன் என்பதையும் புலப்படுக்க, "விண்ணோர் பெருமான்" என்றார். இங்ஙனம் பிரித்துரைக்க வேண்டிய தென்னை? மக்கள் தேவர் அனைவருக்கும் பெருமான் என்று கூறுதலே யமையும் எனின், அரிய பொருளைப் பெற்றான் ஒருவன் அஃது உண்மையிற் பொதுவாயினும், தன் அவா மிகுதியால் தனக்குச் சிறந்ததாகும் என்று கோடல் இயல்பாதலின், அம் முறையில்,

"எம்பிரான்" என முன்னர்க் கூறிப் பின்னர் அக்கூற்றால் அப் பெருமான் பெருமைக்கு இழுக்கு நேராவண்ணம் தேவர் தலைவன் என்றுங் கூறினர்.

விண்ணோர் பெருமான் ஆதலை விளக்குதற்கு, "மதிக் கண்ணி" என்னும் அடை புணர்க்கப்பட்டது. மதிக்கு நேர்ந்த இடுக்கணை விலக்க, அதனைச் சடையில் அணிந்து காத்தருளினன் என்பது புராண கதை. அம் மதி, இறைவன் சடையை அடைந்தமையால், தன் இயற்கைத் தன்மை யாகிய குளிர்ச்சிக் குணமும் பெருமையும் உடையதாயிற்று என்பது புலனாக, "பனி மாமதி" எனவும், அடைக்கலமாக அடைந்தாரை ஏற்றுக் காக்கும் அருளாளன் இறைவன் என்பதை எல்லோரும் விளக்கமாக உணர்ந்து கோடற் பொருட்டு, அப் பிறைமதி அவற்குச் சடையில் அணிந்து கொள்ளும் மாலையாயிற்று என்பார், "மதிக் கண்ணி" எனவும் கூறினர்.

இனி, உலக காரணனாதல் ஒன்றானே யாவர்க்கும் தலைவனாகலாம்; அத் தலைவனை அடைந்தால் எய்தும் பயன்யாதாம் என்பார்க்கு, அவன் மங்கலகரமான பேரின்பத்தை, அடைந்தார்க்கு அளிக்கும் இன்ப வடிவினன் என்பது புலனாக, "சிவன் எம்பிரான்" என்றார். ஈண்டு எம்பிரான் என்றது, சிறுமை கண்டும் விலக்காமல் ஆண்டு கொண்ட பேரருள் உடைமை குறித்தாம். உலகியல் தலைவர், அடிமையின் சிறுமையை உள்ளவாறு அறிந்து கொள்ளும் ஆற்றலுடையராதல் அரிது. அறிந்து கொண்டால், உடனே அவ்வடிமையை விலக்கவுஞ் செய்வர். கடவுட்டலைவனாகிய இப்பெருமான் அதற்கு மாறாக, உயிர்க்குயிராக நின்று, எல்லாம் அறியும் ஆற்றல் உடையவன் ஆதலின், அடிமையின் சிறுமையை எளிதில் அறிந்து கொள்ளும் இயல்பினன் என்பதும், அறிந்த பின்னும் விலக்காமல் ஆட்கொள்ளும் அருளுடையவன் என்பதும் புலனாக, "என் சிறுமை கண்டும் ஆண்டு கொண்டான்" என்று கூறினர். "அவன்" என்பது பண்டறி சுட்டாகப் பெருமை குறித்து நின்றது. ஈண்டுப் பிரான்

என்றது, ஆண்டான் என்னும் பொருட்டு. "நான்" என்றது ஈண்டு அப் பெரியோன் தகுதிக்கேற்ற அடிமை யாளன் அல்லன் என்பதைக் குறிப்பிற் புலப்படுத்து நின்றது. "இப்பரிசு" என்பதிலுள்ள சுட்டு, எத்துணையும் பெரியோனாகிய அவன், எத்துணையும் சிறியேனாகிய என்னை ஆட்கொண்ட இத் தன்மை என ஏற்றத்தாழ்வின் இயல்பைச் சுட்டி நின்றது.

"புவன் எம்பிரான்" என்புழிப் புவனம் என்பது அம்முக் கெட்டு, உலகம் என்னும் பொருளதாய், இயம்பு தற்கு வினை முதலாகிய மக்களை உணர்த்தி நின்றது. அம்முக் கெடுதல், [1] "ஞானால் மருவிடுங் கிரியை யெல்லாம்," [2] "பெற்றோன்றுயர்த்த பெருமான்" என்றாற் போல்வனவற்றுள்ளுங் காண்க. அவ் வெம்பெருமான் பெருங் கருணையாளன் ஆதலை உலகம் எவ்வாறு அறிந்து கொள்ள இயலும் என்பார்க்கு, "இப்பரிசே எம்பிரான் தெரியும் பரிசாவது" என்றார். எம்பிரான் என்றதில் இரண்டனுருபு விகாரத்தால் தொக்கது. அடிகள் தம் சிறுமை கண்டும், பெருமான் தம்மை ஆண்டு கொண்ட வியத்தகும் இத்தன்மையே அப்பெருமான் பெருமையை உலகம் அறிந்து கொள்ளும் விதமாம் என்று கருதினர் என்பது கருத்து. இந் நிகழ்ச்சி இங்ஙனம் அறிந்து கொண்ட அளவின் அமையாது, மக்களால் நெஞ்சார வாயாரப் பாராட்டிக் கூறும் இயல்பினது என்பார், "உலகம் இயம்புக" என்றார். இனி, "புவனெம்பிரான்" என்புழி, "புவன்" என்பது வேள்வித் தீயை உணர்த்தும் என்று எசுர் வேதம் கூறும். ஆதலின், அங்கி வடிவாக நின்று, வேள்வியுணவை யேற்று அருள் புரிபவன் எனவும், ஒளி வடிவினன் எனவும் பொருள் கோடலுமாம். அங்ஙனங் கொள்ளுங்கால், "இயம்புக" என்பதற்கேற்ப, உலகம் என்னும் எழுவாயை வருவித்துரைத்தல் வேண்டும். சைவ சித்தாந்தத்தில், ஆண்டான் அடிமைத் திறம் சிறந்து விளங்குதலும், அடிகள்

1. சிவஞான சித்தி, சூ. 1, செ. 62.
2. திருஞானசம்பந்தர் தேவாரம், திருப்பாடல் 11.

அம் முறையைத் தம் திருவாக்கால் அடிக்கடி பாராட்டிக் கூறுதலும் ஈண்டு நினைக்கத் தக்கன. தாம் நல்லதெனக் கண்டு கடைப்பிடித்தொழுகும் இவ்வாண்டான் அடிமைத் திறத்தை, உலகமும் தம்மைச் சான்றாகக் கண்டு, பாராட்டி, அம் முறையில் ஒழுகி நலம் பெறவேண்டும் என்பது அடிகளின் உட்கோளாகும்.

இதன்கண், எல்லாம் வல்ல இறைவன் உயிர்களை ஆட்கொள்ளும் முறைமையும், அத்தகைய ஆண்டான் அடிமைத்திறமே சிவநெறியில் சிறந்து விளங்கும் என்னும் உண்மையும் பெறப்படுதலின், **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் முதலிய பொருள் புலனாதல் அறிக.

10. புகவே தகேன்உனக் கன்பருள்
 யானென்பொல் லாமணியே
 தகவே யெனையுனக் காட்கொண்ட
 தன்மையெப் புன்மையரை
 மிகவே உயர்த்திவிண் ணோரைப்
 பணித்திஅண் ணாஅமுதே
 நகவே தகும்எம் பிரான்என்னை
 நீசெய்த நாடகமே.

**க-ரை:** தம்மை ஆட்கொண்ட இறைவனது பெருமை பாராட்டத் தக்கது என முன்னைத் திருப்பாட்டில் வியந்து கூறிய அடிகள், அப் பெருமான் பெருமைக்குத் தகாத நிலையில் தம்மை ஆட்கொண்டது குறித்து, மீண்டும் இத் திருப்பாட்டில் வியந்து இன்புறுகின்றார்.

**ப-ரை:** என் பொல்லா மணியே — துளையிடப்படாத என் அரிய இரத்தினமே, யான் உனக்கு அன்பருள் புகவே தகேன்—யான் நின் அன்பர் கூட்டத்தில் புகுதற்கே தகுதியில்லாதவன், என்னை ஆட்கொண்ட தன்மை உனக்குத் தகவே—அங்ஙனம் இருந்தும் சிறியேனாகிய என்னை ஆளாகக் கொண்டது நின் பெருமைக்குத் தகுதியாகுமா? எப் புன்மையரை மிக உயர்த்தி—எத்தகைய இழிந்தோரையும் மிக உயரச் செய்கின்றாய், விண்ணோரைப் பணித்தி—

உயர்ந்தவர்களாகிய தேவர்களைத் தாழச் செய்கின்றாய், அண்ணா அமுதே எம்பிரான் — தந்தையே, அமிழ்தம் போன்றவனே, எங்கள் தலைவனே, நீ செய்த நாடகம் என்னை — நீ இங்ஙனம் இயல்பிற்கு மாறாகச் செய்த திருக் கூத்து இருந்தவாறு என்னை? நகவே தகும் — இது நகை யாடுதற்கே தக்கதாகும் என்பது.

**வி—ரை:** பொள்ளல் — துளையிடல், பொள்ளாமணி பொல்லாமணி என மரீஇயிற்று. துளையிடப்படல், ஏனைய மணிகளினும் கோத்தணிதற்குரிய முத்துப் பவழங்க ளுக்கே சிறந்ததாகும். ஆயினும், இனம்பற்றி மாணிக்க முதலிய மணிகளையும் கொள்ளலாம். அங்ஙனங் கொள் ளுங்கால், ஈண்டுப் பொள்ளல் என்பது உபலக்கணத்தால் சாணை தீர்தல், கோணங் கூரிதாக்கல் முதலிய செயல்களை யும் உணர்த்தும். உலகிற் சிறந்த மணி, கருவிகளால் மாசு நீங்கி, ஒளி கால்வதாகும். பரமபதியாகிய இறைவன் அங் ஙனமின்றி இயல்பாகவே பாசங்களினீங்கிப் பேரொளிப் பிழம்பாக விளங்குவோன் என்பது புலப்பட, "பொல்லா மணியே" என்றார். இத்துணை அரிய இரத்தினம் தமக்கு எளிதிற் கிடைத்ததே என்னும் ஆராமையால், "என் பொல்லா மணியே" என்றார். உனக்கன்பர் என்புழி, நான்கனுருபு ஏழாவதன் பொருட்டு. உனக்கு இனிய அன்பர் எனினுமாம். மெய்யன்பர் குழாத்துள் எவ்வாற் றானும் புகுதற்கு உரிய தகுதி என்பால் இன்றென்பார், "புகவே தகேன்" என்றார். ஏகாரம் தேற்றப் பொருட்டு. அன்பர் கூட்டத்துள் அணுகவும் தகுதியில்லாத சிறியேனை அன்பருள் ஒருவனாக ஏற்று ஆட்கொண்டது நின் பெரு மைக்குப் பொருத்தமாகுமா என்பார், "தகவே எனை உனக்கு ஆட்கொண்ட தன்மை" என்றார். 'தகவே' என்புழி ஏகாரம் வினாப் பொருளில் வந்து, தகவன்று என் னும் எதிர்மறைப் பொருளை உணர்த்திற்று.

எப்புன்மையரையும் என்புழி, இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. [1] "பூமேலயனொடு மாலும் புகலரி

1. திருவாசகம், திருக்கோத்தும்பி, செ. 20.

தென்று, எமாறி நிற்க அடியேன் இறுமாக்க'' என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியபடி, சிறிதும் தகுதி யில்லாத தம்மை இறைவன் ஆட்கொண்டதனையும், உயர்ந்த தேவர் முதலியோர்க்கு அறிவரிய நிலையிலுள்ள தையும் நினைந்து, "எப்புன்மையரை மிகவே உயர்த்தி விண்ணோரைப் பணித்தி'' என்றார். இழிந்தாரை உயர்த்தலும், உயர்ந்தாரைத் தாழ்த்தலும், முறை மாறிய செயல் ஆதலின், இது நகையாடற்கு உரியதென்பார், "நகவே தகும்'' என்றார். "விண்ணோரை'' என்பதற்கு ஏற்பப் புன்மையரை என்னாது, "எப்புன்மையரையும்'' என்றது, இழிந்தார் எத்துணைக் கீழ் நிலையுடையர் ஆயினும், அன்னாரை உயர்த்துதலே ஆண்டவன் திருவுள்ளமாம் என்பதைப் புலப்படுத்தும். "பணித்தி'' என்பதற்கேற்ப "உயர்த்தி'' என்று கூறுதலே அமையும். அங்ஙனம் கூறாமல், "மிகவே உயர்த்தி'' என்றார்; உயர்ந்தோரைத் தாழ்த்தும் அளவினும் இழிந்தோரை உயர்த்தும் அளவு மிகுதி என்பது கருதி.

இனி உட்கோள் வருமாறு:— சிறியோரை உயர்த்தல் என்பது, சிவ போதமாகிய முனைப்பு ஒரு சிறிதுமின்றி, எல்லாம் ஆண்டவன் அருட்செயலெனக் கண்டு, அடங்கி ஒழுகும் அன்பர்க்கு, அருள் சுரந்து தன் திருவடி நீழல் இன்பத்தை நல்கிப் பெருமைப் படுத்தல் ஆகும். "புன்மை யர்'' என்பது இறைவனது அளத்தற்கரிய பெருமையை நோக்கி, அடியவர்தம் சிறுமை கருதிக் கூறியது. "விண் ணோரைப் பணித்தல்'' என்பது, தேவரிற் பதவி உயர்ந் தார் சிலர் தமக்குள்ள ஓரளவு அதிகாரத்தைக் கருதாமல் தாமே எல்லாம் வல்ல தலைவராவோம் எனக் கருதிச் செருக்குற்ற நிலையில் அச் செருக்கொழிய அவரை அடக்கி யாளுதலைப் புலப்படுத்தும். புன்மையர் என்றது இழிந் தோரை யாதலின், அதற்கேற்ப உயர்ந்தோரென்னாது, "விண்ணோர்'' என்றதனால் தாமே பரம்பொருளென்று செருக்குற்றவர் தேவரில் ஒரு சாரார் என்பது புலனும். இவ்வுட்கோளுக் கேற்ப, நகவே தகும் என்பதற்கு,

இறைவனது இவ்வருட் செயல் நினைந்து மகிழத்தக்கது எனப் பொருள் கொள்ளல் வேண்டும். நகுதல்—மகிழ்தல். [1] "மெய்வேல் பறியா நகும்" என்புழி இப் பொருட் டாதல் அறிக. "அண்ணா அமுதே" என்பன நிரனிறை யாக நின்று, சிறியோரை உயர்த்துங்கால் இறைவன் அவர்க்குத் தந்தை நிலையினின்று தன் பேரின்பப் பெருஞ் செல்வத்தை அருளிக் காப்பவன் என்பதையும், விண் ணோரைத் தாழ்த்துங்கால் அவரை அமிழ்தம் உண்பித்துத் தான் நஞ்சுண்டு செருக்கடக்கினன் என்பதையும் குறிப்பிற் புலப்படுப்பன. இனி, "அண்ணா அமுதே" என்பதற்குப் பெறுதற்கரிய அமிழ்தம் போன்றவனே எனலுமாம். அண்ணுதல் ஈண்டு அணுகுதற் பொருட்டு. மண்ணில் வாழும் மக்களை விண்ணிற் காட்டுதலும், விண்ணில் வாழுந் தேவரை மண்ணிற் காட்டுதலும் நாடகத்தில் நிகழ்வன. ஆதலின், நீ செய்த நாடகம் என்னை? என்றார். "என்னை நீ செய்த நாடகமே" என் பதற்கு, என் பொருட்டு நீ செய்த கூத்து எனலுமாம்.

இதன்கண், "என் பொல்லா மணியே" என்றதனால் பத்தியும், "புகவே தகேனுனக் கன்பருள்யான்" என்றதனால், புகுதற்குரிய தகுதி பெறுமைக்கு ஏது வாக வுள்ளது பொய்யுலக வாழ்க்கைப்பற்று என்பது பெறப்படுதலின், வைராக்கியமும் குறிக்கப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும், இழிந்தார் உயர்தற்கும், உயர்ந்தார் இழிதற்கும், முறையே இறையருளின் உண்மை இன்மைகள் ஏதுவாம் என்னும் மெய்ம்மை பெறப்படுதலின், **மெய்யுணர்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும் புலனாயவாறு அறிக.

---

1. திருக்குறள் 774.

## 2. அறிவுறுத்தல்

உடல் முதலிய மாயா காரியப் பொருள்களின் நிலையாமை உணர்ந்து, அவற்றினின்றும் நீங்கி, என்றும் நிலையுதலுடைய மெய்ப்பொருள் உணர்ச்சியில் தலைப்பட்ட அடிகள், அவ் வுணர்ச்சி வாயிலாக ஆண்டவன் திருவருளை வேண்டி, அதற்குரிய சாதனங்களை மேற்கோடற்குத் துணைபுரிய வேண்டிய மனம், அச் சாதனங்களை விட்டு, அவற்றிற்கு எதிர்மறையான உலகியற் செயல்களிற் சேறலைக் கண்டு, அந் நெஞ்சிற்கு அறிவுறுத்துவான் தொடங்குகின்றார். ஓர் இல்லறத்தான் தான் மேற்கொண்ட அறத்திற்குத் துணை நின்று உதவி புரிய வேண்டிய தன் மனைவி, உரிய உதவியைச் செய்யாமையோடு மாறாகவும் நடப்பாளாயின், அவளைக் குறிப்பால் அறிவுறுத்து முகமாகத் தக்கார் ஒருவரை முன்னிலைப் படுத்துத் தான் பெற வேண்டிய பேறுகளை இழந்திருப்பதற்கு இரங்கிக் கூறுதலும், அவ் விரக்கக் குறிப்புணர்ந்தும், அவள் நன்னிலைப்பட்டிலள் ஆயின், அவளை முன்னிலைப் படுத்து இடித்துக் கூறுதலும் உலகியலிற் கண்டனவாதலின், அம் முறையில் அடிகள் திருவருட் பேற்றிற்குத் துணை நின்று உதவி புரியவேண்டிய தம் மனம், அவ் வுதவியைச் செய்யாமையோடு தடையாகவும் சேறலைக் குறித்து வருந்தி, அம் மனம் உணருமாறு ஆண்டவனை முன்னிலைப் படுத்து, அப் பேற்றின் இன்றியமையாமையையும், அது பெறுதற்குரிய சாதனங்களைப் பெருமை பற்றியும் இப் பதிகத்தின் முதல் எட்டுத் திருப்பாட்டுக்களில் இரங்கிக்கூறி, அக் குறிப்புணர்ந்தும் நன்னிலைப்படாத அம் மனத்தை, பின்னர் முன்னிலைப் படுத்து, ஒன்பது பத்தாம் திருப்பாட்டுக்களில் இடித்துரைத் துள்ளார். இன் சொற்களால் குறிப்பிற் புலப்படக் கூறுதலை விரித்தும், கடுஞ் சொற்களால் வெளிப்படக் கூறுதலைச் சுருக்கியும் கூறுதல் பெரியோர் இயல்பு. ஆதலின், அம் முறையில் அவற்றை முறையே எட்டுத் திருப்பாட்டுக்களாலும், இரண்டு திருப்பாட்டுக்களாலும் வெளிப்படுத்துள்ளார்.

*தரவு கொச்சகக் கலிப்பா*

11. நாடகத்தால் உன்னடியார்
போல்நடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான்
மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே
இடையறா அன்புனக்கென்
ஊடகத்தே நின்றுருகத்
தந்தருளெம் உடையானே.

**க-ரை :** இதன் முன்னைப் பதிகத்தின் இறுதித் திருப்பாட்டில் ஆண்டவன் பெருமைக்குத் தகாத நிலையில் தம்மை ஆட்கொண்டமை குறித்து வியந்து கூறிய அடிகள், யான் மெய்யன்பின்றி அன்புடையவனைப் போல நடித்து, உண்மையான வீட்டின்பத்தை அடைய முந்துகின்றேன் ; அதற்குக் காரணம் என்பால் தகுதியின்மை கண்டும் என்னை ஆட்கொண்டமையே. ஆதலின் போலி அன்பை மெய்யன்பாக்கித் தந்தருளல் வேண்டுமென்று இப்பதிகத்தின் தொடக்கத் திருப்பாட்டில் வேண்டுகின்றார்.

**ப-ரை :** ஆடகச் சீர் மணிக்குன்றே—பொன் நிலத்தில் சிறந்து திகழும் மாணிக்க மலையே, எம் உடையானே, எம்மை அடிமையாக்வுடைய பெருமானே, நாடகத்தால் உன் அடியார்போல் நான் நடித்து — கூத்தில் நின் அடியவர் உருக்கொண்டு நடிப்பவரைப்போல யான் இவ்வுலகத்தில் நடித்து, நடுவே வீடு அகத்துப் புகுந்திடுவான் — இடையே வீட்டு நிலையிற் புகுதற்கு, மிகப் பெரிதும் விரைகின்றேன் — அளவின் மிக்க விரைவுடன் முந்துகின்றேன், உனக்கு இடையறா அன்பு—நின்னிடத்தில் இடையறவில்லாமல் நிகழும் மெய்யன்பு, என் அகத்து ஊடு நின்று உருக — என் உள்ளத்தின் நடுவே நிலைபெற்று அவ்வுள்ளம் உருகும்படி, தந்தருள்—அடியேனுக்கு உதவியருள்வாயாக என்பதாம்.

**வி-ரை :** ஆடகச் சீர் மணிக்குன்று, . இல்பொருள் உவமை. இறைவன் ஐம்பெரும் பூதங்களும் தத்தம் நிலை யழிந்து சலிக்கும் பேரூழிக் காலத்தும், அதனால் சலிப்பறி யாத் தன்மையன் ஆதலான், அப்பெருமானை மலைபோல் வான் எனக் கூறுதல் மரபு. அத்தன்மையோடு செம்மை சான்ற பேரொளிப் பிழம்பாகவும் உள்ளான் என்பது தோன்ற, "மணிக்குன்றே" என்றார் [1] "மாசற்ற மணிக் குன்றே" என்பர் பின்னும். மணி—மாணிக்கம். [2] "கற்ற வர் விழுங்கும் கற்பகக் கனியைக் கரையிலாக் கருணைமா கடலை, மற்றவர் அறியா மாணிக்க மலையை" என்பர் திருவிசைப்பா ஆசிரியர். கற்றவர் விழுங்குதற்குரிய சிற்றுருவமுள்ள கற்பகப் பொற்கனியாக விளங்கும் பெருமான் கருணைக் கடலாதலின், கல்லாதவர் மாட்டுப் பேரருளுடையனாய், மாணிக்க மலையாகவும் உள்ளா னென்றும், அந்நிலையிலும் அவர் அறிந்திலரென்று கூறிய நயம் ஈண்டு நினைக்கத் தக்கது. பொன்னிலம் ஆதாரமாக இருத்தல், மணிக்குன்றின் ஒளி சிறந்து விளங்குதற்கு ஏது வாகலான், "ஆடகச் சீர் மணிக்குன்றே" என்றார். மெய் யுணர் வுடையார் உள்ளக் கமலம் பொன்னிலமாகவும், அதன்கட் பேரொளிப் பிழம்பாக விளங்கும் இறைவன் நிலை மாணிக்க மலையாகவும் கருதியது உட்கோளென்க. தூய வுணர்வுடையார் உள்ளத்து விளங்கும் அளக்லாகா அளவும் பெருமையும் உடைய அப்பெருமான், கருணையால் என்னைப் போன்ற சிறியோரையும் ஆட் கொள்ளும் இயல் பினன் என்பது தோன்ற, "எம் உடையானே" என்று அருளினர்.

சிவனடியார் வேடம் பூண்டு, கூத்தில் அவிநயிக்கின்ற வனைப்போல் உண்மை யன்பின்றி, வேட மாத்திரம் உடை யேன் என்பார், "நாடகத்தால் உன் அடியார் போல் நடித்து" என்றார். நாடகத்தின்கண் என ஏழாவதில் மூன்றாவது மயங்கிற்று. [3] "நான் தனக்கன்பின்மை நானுந்

1. திருவாசகம், திருச்சதகம் 24.
2. சேந்தனார் திருவிசைப்பா, திருவீழிமிழலை, செ. 2.
3. திருவாசகம், திருக்கோத்தும்பி, செ. 13.

தானு மறிவோம்" என்று அடிகள் பிறண்டுக் கூறிய ஆறும் காண்க. அன்புருவமாகிய அடிகள் இங்ஙனங் கூறியது, உலகியலைத் தம்மாட்டு ஏறிட்டெனக் கொள்க. பல இடங்களிலும் இங்ஙனம் கூறுதற்கும் இதுவே கருத்தென்க. நாடகத்தில் இந்திரனாக நடிக்கும் ஒருவன், நடிக்கின்ற தன் திறமைக்குரிய பயனை விரும்புவானேயன்றி, இந்திரனுக்குரிய போகங்களை விரும்புதலில்லை; விரும்பினும் அப் பயனை எய்தான். இஃது உலகியலிற் கண்டது. ஈண்டு அடிகள் இவ் வுலகியலை உட்கொண்டு, ஆண்டவனே, யான் மெய்யன்புடைய சிவனடியார் உருக்கொண்டு உலகை வஞ்சிக்க நடிக்கின்றேன்; அந் நடிப்புத் திறமைக்கு மக்களிடத்தினின்றும் பெறத்தக்க பயனை விரும்பாமல், மெய்யன்பர் பெறத்தக்க வீட்டின்பத்தில் தலைப்பட முற்படுகின்றேன் என்பார், "வீடகத்தே புகுந்திடுவான்...........விரைகின்றேன்" என்றார். வேடம் பூண்டு நடிப்பவனும், நடித்தல் தொழில் முற்றுப் பெற்ற பின், பயனைப் பெற விரும்புதல் முறை. அங்ஙனமின்றி, யான் மேற்கொண்ட நடிப்பும் முற்றுப் பெறாமல், நடைபெற்றுக் கொண்டிருக்கும் இடையிலே, அதனாற் பெற இயலாத வீட்டு நிலையைப் பெற விழைகின்றேன் என்பார், "நடுவே" என்றார். இனி, "வீடகத்து நடு" எனக் கொண்டு, ஒரு வீட்டினுள் ஒதுக்கிடமும் பெறுதற்கு உரிமையில்லாத ஒருவன் அதன் நடு இடத்தில் இருக்க விழைதல் போல, உரிமை படைத்த எல்லா வுயிர்களும் வேற்றுமை யின்றிக் கலந்து இன்புறுதற்குரிய முத்தி நிலையிலும் சிறிதும் தகுதியில்லாத நான் அறியாமையாற் சிறப்பிடம் பெற விரும்புகின்றேன் எனக் கோடலுமாம்.

சாதனங்களை முறையே மேற்கொண்டார்க்கு, இறையருளால் வீட்டு நிலை தானே எய்தும் இயல்பினதாகவும், யான் பொய்மையாக நடித்து, அதனை வலிந்து பெற முயல்கின்றேன் என்பார், "புகுந்திடுவான்" எனவும், சிறந்ததொரு பயனைப் பெறுதற்குத் தகுதியில்லாததோடு, எதிர்மறையாகவுமுள்ள நடிப்பை மேற்கொண்டமையால்,

காலந் தாழ்ப்பின், அந்நடிப்பின் பொய்மை வெளிப்பட்டு விடும் என்னும் கருத்தால், "விரைகின்றேன்" எனவும், அவ்விரைவும் அளவிகந்த நிலையில் உளதென்பது தோன்ற, "மிகப் பெரிதும்" எனவும் கூறினர்.

அடிகள் கடைப்பிடித்தொழுகிய நெறி, அன்பு நெறியாதலின், அழிவில் இன்பப் பேற்றிற்கு வாயிலாகவுள்ள அம்மெய்யன்பையே யாண்டும் இறைவன்பால் வேண்டுவார். உரிய சாதனத்தை மேற்கோடலே நம் கடமை; அதற்குப் பயன் செய்தல் ஆண்டவன் திருவுள்ளத்தைப் பொறுத்தது என்னும் உண்மையைக் கடைப்பிடித்து, ஈண்டும் அம்மெய்யன்பையே வேண்டினர். அதுவும் இடையறவு படாமலும், எக்காரணத்தாலும் பிறிதொன்றைப் பற்றாமல் நின்னையே குறிக்கொண்டும், சலிப்பின்றி நிலை பெற்று நிகழவேண்டும் என்பார், "இடையறா அன்புனக் கென்னுடகத்தே நின்று" என்றார். உன்கண் என ஏழாவதில் உனக்கு என நான்காவது மயங்கிற்று. அவ் அன்பினால் பெறத்தக்க முடிந்த பயன் வீட்டின்பம் ஆயினும், அடிகள், "கூடுமன்பினிற் கும்பிடலேயன்றி, வீடும் வேண்டா விறல்" உடையராதலின், அவ்வின்பத்தை வேண்டாது, கல்லினும் வலிய நெஞ்சம் உருகுதற்கு வேண்டுமென்பார், "நின்றுருகத் தந்தருள்" என்றார். ஒரு சாதனத்தால் பிறிதொரு சாதனத்தையே பெற விழைதல் அடிமைத்திறத்தின் இயல்பாகும். ஆதலின், உள்ளம் உருகுதலையே அன்பின் பயனாகப் புலப்படுத்தார். "அன்பு நின்றுருக" என்புழி, உருகுதல் நெஞ்சத்தின் செயலாயினும், உள்ளமும் அன்பும், முறையே இடமும் இடத்து நிகழ் பொருளுமாகிய ஒற்றுமை உடைமையால் அன்பின் செயலாகக் கூறப்பட்டது. [1] "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" என்பதற்குச் சேனாவரையர் கொள்கைப்படி, செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சம் வினைமுதல் வினைகொள்ளாது, பிறிதின் வினை கொண்டதெனினுமாம். அன்றி, நிற்ப என்பது நின்றெனத் திரிந்து நின்றதெனினும் அமையும்.

---

1. தொல், சொல், சூத். 457.

இனிப் பொய் வேடத்தால் நடிப்போரை மெய்யன்பர் உணர்ந்து, இறையருளை வேண்டிப் பொய்மை மெய்மையாகவேண்டுமென நினைவாராயின், அன்னார் நினைவாற்றல் அங்ஙனமே செய்விக்கும் என்பது முன்னை வரலாறுகளிற் காணப்படுவதொன்று. மாசு நீங்கிய தூய உள்ளமுடைய பெரியார் பாவனை, போலியை மெய்மையாக்கும் என்னும் உண்மை, அறிவியல் நூல்களிலும் தெளிவுறுத்தப் படுவதாகும். பிரமோத்தர காண்டத்தில், சீமந்தனி என்னும் சைவச் செல்வியார் பாவனையால், மண மக்களாகப் போலி வேடம் பூண்டு சென்ற உடன்பிறந்த ஆண் மக்கள் இருவரும் உண்மையான மண மக்களான தும், வீர சைவ அடியார் குழுவில் சேர்ந்துண்ணும் நிமித்தம், [1] கள்ள வேடம் புனைந்து சென்ற கள்வரெல்லாம் வசவண்ணர் நினைவு வலிமையால் களங்கமறும் உள்ளமோடு மெய்யடியாராகியதும் இதற்குச் சான்றுவனவாம். இம் முறையில் அடிகள், நாடகத்தால் சிவனடியார் போல நடித்தமையை மெய்யன்பர் கண்டு, அவர் நினைவாற்றலால் அந் நடிப்பை மெய்மையாக்கவும் கூடுமே; அங்ஙனம் மெய்மையாக்குதற்குரிய மெய்யன்பர் நினைவாற்றல் தம் மாட்டுப் பதிந்து பயன் விளைக்கும் அளவும் பொறாது, இடைக்காலத்தே வீட்டு நிலை பெறுதற்கு விழைகின்றேன் என்பார், "நான் நடுவே வீடகத்தே புகுந்திடுவான் விரைகின்றேன்" என்றார் எனினுமாம். ஈண்டு, "நடு" என்பது காலத்தையும், முற் கூறிய கருத்திற்கு, "நடு" என்பது இடத்தையும் குறிக்கும்.

"ஆடகச்சீர் மணிக்குன்றே" என்பதற்குப் பொன்னோடியைந்த அழகிய மாணிக்க மலையே என்று கோடலுமாம். இனி, மணியை நீல மணி எனக் கொண்டு, நீலமணியை ஒரு பாலுடைய ஆடகக் குன்று போல்வாய்

1. வெள்ளவேணிப் பெருந்தகைக்கு யாம்செய்யடிமை மெய்யாகிற்
கள்ளவேடம் புனைந்திருந்த கள்வரெல்லாம் களங்கமறும்
உள்ளமோடு மெய்யடியா ராகவுள்ளத் துள்ளுமருள்
வள்ளலாகும் வசவேசன் மலர்த்தாள் தலையால் வணங்குவோம்.
(பிரபுலிங்க லீலை, துதிகதி, செய். 6.)

என விரித்து, உமையொருகூறனே என்று கோடலுமாம். ஈண்டு, இறைவனை அம்மையப்பனாக விளித்தது மெய்யன்பு அருளுதற்குரிய கருணையாளன் என்பதைப் புலப்படுத் தற்கு என்க.

இதன்கண், மெய்யன்புப் பேற்றிற்கு உறுதுணையாக நிற்கவேண்டிய மனம், அங்ஙனம் நில்லாமையோடு, பொய்மையாக நடிப்பதற்கும் தூண்டுதல் குறித்து வருந்து முகமாக இறைவனை முன்னிலைப்படுத்து, அந் நெஞ்சிற்குக் குறிப்பால் அறிவுறுத்தமை புலனாதலின், அறிவுறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருளும், "இடையறா அன் புனக்கென்னூடகத்தே நின்றுருகத் தந்தருள்" என்னும் தொடரால் பத்தி பெறப்படுதலின், **பத்தி விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் தோன்றியவாறறிக.

12. யானேதும் பிறப்பஞ்சேன்
இறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன்
மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயும் மலர்க்கொன்றைச்
சிவனேயெம் பெருமான்எம்
மானேயுன் அருள்பெறுநாள்
என்றென்றே வருந்துவனே.

**க-ரை:** ஆண்டவன் அடியாரைக் குறித்து மேற் கொள்வது அருளும், அடியார் அவ்வருளைப் பெறுதற்கு மேற்கொள்வது அன்பும் ஆகும். இவ் வுண்மையை, 1 "அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம், புல்லார் புரள விடல்" என்று உலகியலில் வைத்துத் திரு வள்ளுவர் கூறியதனாலும், "2 யாஅமிரப்பவை, பொரு ளும் பொன்னும் போகமுமல்ல, நின்பால் அருளும் அன்பும் அறனு மூன்றும்" என்னும் பரிபாடலானும்,

1. திருக்குறள் 755. 2. பரிபாடல் 5, அடி 78, 80.

"எமக்கு வீடு பயக்கும் நின்னருளும், அதனை யுண்டாக்க நின்னிடத்து யாம் செய்யும் அன்பும், அவ்விரண்டானும் வரும் அறமும் ஆகிய இம் மூன்றுமே" யென்னும் அதனுரைப் பகுதியானும் உணரலாம். இம்முறையில் அடிகள் இதன் முன்னைத் திருப்பாட்டில் இறைவனிடத்து இடையறாத மெய்யன்பை வேண்டி, அதற்குப் பயன் அப் பெருமான் திருவருட்பேறு ஒன்றே எனத் துணிந்து, அதனை இத் திருப்பாட்டில் வற்புறுத்து வேண்டுகின்றார்.

**ப-ரை:** யான் பிறப்பு ஏதும் அஞ்சேன்—யான் பிறப் பிற்கு ஒரு சிறிதும் அஞ்சுவேன் அல்லேன், இறப்பத னுக்கு என் கடவேன்—இறத்தற்கு என் செய்ய வல்லேன், பெறில் வானேயும் வேண்டேன்—எளிதிற் பெறக் கிடப் பது விண்ணுலகமே ஆயினும் விரும்பேன், மண் ஆள் வான் மதித்தும் இரேன்—நிலவுலகத்தை ஆளுதற்கு நெஞ் சத்தால் நினைந்தும் இரேன், தேன் ஏயும் மலர்க்கொன் றைச் சிவனே-தேன் பொருந்திய கொன்றை மலர்மாலையை யுடைய சிவபெருமானே, எம் பெருமான்—எங்கள் தலைவனே, எம்மானே—எங்கள் தந்தையே, உன் அருள் பெறும் நாள் என்று என்று வருந்துவன்— நினது திருவருளைப் பெறுதற்குரிய நன்னாள் எப்பொழுது வாய்க் கும் என்று நினைந்து வருந்துகின்றேன் என்பதாம்.

**வி-ரை:** பிறப்பு இறப்பு இரண்டனுள்ளும், பிறத்தலைத் தவ முதலிய சாதனங்களால் ஒழித்தல் கூடும். வீட்டு நிலையிற் பிறவி யொழிவுண்டாம் என்பது அறிவியல் நூலிற் காணப்படுவது. ஆதலின், இறந்தவன் வினை யெச்சமுடையனுயிற் பிறத்தலும், அஃதிலனுயிற் பிறவா மையும் உடையவனுமென்பது புலனும். பிறந்தவன் இறத்தல் எவ்வாற்றானும் தவிர்க்க ஒண்ணாததொன்று. இவ் வுண்மையை, [1] "இறப்பெனு மெய்ம்மையை இம்மை யாவர்க்கும், மறப்பெனும் அதனின்மேற் கேடு மற்றுண்டோ" என்னும் கம்பர் கூற்றானும், "உடலுடை யார்க்கு இறப்பு இயற்கை" என்று காளிதாச மகா கவி

1. கம்ப ராமாயணம், அயோத். மந்திர. செ. 21.

விளக்கியவாற்றானும் அறிக. [1]“பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும் புதுவதன்று” என்பது, பற்றற்று எய்தும் வீடு பேறு மிக அரிய தொன்றாகலின், அதனை விட்டு, வினையெச்ச முடையாரே உலகத்துப் பெரும்பாலர் என்னும் உண்மை கருதி, அன்னாரைக் குறிக்கொண்டு கூறியதாகும். ஆகவே, பிறப்பு நேரின், இறப்பும் உறுதியாதலானும், அவ்விருவகைத் துன்பமும் பிறப்பு ஒன்றானே யுண்டாதலானும், அவ் விரண்டனுள்ளும் பிறப்பே பெரிதும் அஞ்சத்தக்கதென்பது போதரும். இறப்பில் வினையெச்ச முளதாயின், அவ்வுயிர்க்கு மீண்டு பிறத்தலும், அஃதிலதாயின் பிறவாமையும் உண்டாம். ஆதலின், பிறப்பிற்கு அஞ்சும் அத்துணை இறப்பிற்கு அஞ்ச வேண்டியதின்று என்பது விளக்கமாம். இவ் வுண்மையை உளங்கொண்டே, அடிகள் பெரிதும் அஞ்சத் தக்கதாகிய பிறப்பிற்கே அஞ்சமாட்டேன் எனின், அத்துணை அஞ்சத்தகாதது ஆகிய இறப்பைப்பற்றி யான் செய்யக்கடவது யாதுளது என்பார், “இறப்பதனுக்கு என் கடவேன்” என்றார். இத்தொடர் இறத்தலைக் குறித்து யான் செய்யத்தக்கது யாதுளது? அஃதொரு பொருளன்று என்னும் பொருளதாம். இஃது இப் பொருட்டாதலை, [2]“வளையார் பசியின் வருந்தார் பிணியின் மதனன் அம்புக்கு, இளையார் தனங்கண்டிரங்கி நில்லாரிப் பிறப்பினில் வந்து, அளையார் **நரகினுக்கு என் கடவார்**” என்னும் பட்டினத்து அடிகள் திருவாக்கினும் காண்க. “நரகினுக்கு என் கடவார்” என்பது, நரகத்தைக் குறித்து அவர் செய்யக்கடவது யாது? ஒன்றுமின்று; அது குறித்து அஞ்ச மாட்டார் என்பதே கருத்தாதலறிக. இங்ஙனமின்றி, “இறப்பதனுக் கென்கடவேன்” என் பதற்கு, இறத்தற்கே அஞ்சுகின்றேன் என்று பொருள் கூறின், அஃது, [3]“பிறப்பினோ டிறப்பு மஞ்சேன்” என் னும் அடிகள் கருத்தோடு முரணுதலான், பொருத்த மின்று என்பது உணர்க.

1. சிலப்பதிகாரம், காதை 30, அடி 139-140. 2 திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, செ. 21. 3. திருவாசகம், அச்சப்பத்து, செ. 5.

" வானேயும் பெறில் வேண்டேன் " என்பதில், ஏயும் என்பது, ஆயினும் என்னும் பொருட்டு; [1] "கணமேயுங் காத்தலரிது" என்புழிக் கணப்பொழுதாயினும் என்று பரிமேலழகர் எழுதிய உரையானும் உணர்க. இனி, ஏயும் என்புழி, உம்மையைப் பிரித்து, வானே பெறினும் என இயைத்துப் பொருள் கோடலும் பொருந்தும். ஈண்டு, ஏகாரம் உயர்வு சிறப்பையும், உம்மை பெறுதற்கு அருமையையும் உணர்த்தும்.

இனி, முதல் இரண்டடிகளிலும் உள்ள வினைமுற்றுக்கள் நான்கு ஆகும். முதலிரண்டனையும் பின்னிரண்டனோடு எதிர் நிரல் நிறையாக இயைத்துப் பொருள் நயங்காண்டல் இன்பம் பயப்பதாகும். " பிறப்பு அஞ்சேன் " என்பதனால் பிறந்து உலகாளும் அரசுரிமை பெற்றுப் போகந் துய்க்கலாம் என்னும் வேட்கைக் குறிக்கோள் உண்மை குறிப்பாற் பெறப்படும் ஆதலின், அதனை விலக்குதற்கு, " மண்ணாள்வான் மதித்து மிரேன் " எனவும், இறப்பதற்கும் அஞ்சேன் என்றதனால், [2] " இறப்பன் இறந்தா லிருவிசும் பேறுவன் " என்றபடி, இப்பிறப்பை யொழித்து, இறந்து, விண்ணுலகு எய்தி இன்புறலாம் என்னும் வேட்கைக் குறிக்கோள் குறிப்பாற் பெறப்படுமாதலின், அதனை விலக்குதற்கு, " வானேயும் பெறில் வேண்டேன்" எனவும் அருளிச் செய்யப்பட்டன. ஈண்டுப் பிறத்தலும். இறத்தலும் மனித உடம்பைச் சுட்டிக் கூறப்பட்டனவாகக் கொள்ளல் வேண்டும். மனித வுடம்பின் ஒழிவு, தேவ வுடம்பு பெறுதலைக் குறிக் கோளாகப் புலப்படுத்தும் என்க. மண்ணுலக ஆட்சியினும் விண்ணுலகின்பம் சிறந்ததாகும் ஆதலின், " வானேயும் பெறில் வேண்டேன் " எனவும், " மண்ணாள்வான் மதித்துமிரேன் " எனவுங் கூறப்பட்டன. வேண்டாமை, விரும்பாமையையும், மதியாமை, ஒரு பொருளாக நினையாமையையும் உணர்த்துதல் ஈண்டுக் கருதத்தக்கது.

1. திருக்குறள் 29. 2. திருநாவுக்கரசர் தேவாரம், " துறக்கப்படாத."

கொன்றை மலர் இறைவனுக்குச் சிறந்த அடையாளப் பூவாகும். "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த், தாரன் மாலையன் மலேந்த கண்ணியன்" என்னும் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலானும், "தார் ஓர் விசேடமாக இடுவது; மாலை அழகுக்கு இடுவது; கண்ணி போர்ப்பூ" என வரும் அதன் உரைக் குறிப்பானும் உணர்க. உலகத்துத் தலைவராகிய அரசர்க்கு அடையாளப் பூ, போர்ப் பூ முதலியன வெவ்வேறாகும். கடவுட்டலைவனாகிய இறைவனுக்கு, அவ் வடையாளப் பூ முதலிய வெல்லாம் திருக்கொன்றைப் பூவேயாகும். இவ்வுண்மை குறித்தே, "தேனேயு மலர்க்கொன்றைச் சிவனே" யெனக் கொன்றை மலர் அப் பெருமானுக்குச் சிறப்புரிமை யுடையதென்று புலப்படுத்துவாராயினர். சிவன், எம்பெருமான், எம்மான் என்னும் இம் மூன்றும், முறையே அழிவில்லாத இன்ப வடிவினன், சிறந்த தலைவன், தந்தை யென்னும் பொருளனவாம். இன்ப வடிவினன் சிறந்த தலைவனாக இருப்பின், அவ்வின்பம் தலையாய பேரின்பமாகும் ஆதலின், சிவனே எம்பெருமான் என்றும், அப் பேரின்பப் பெருஞ் செல்வத்தை மக்களுக்கு உரிமையாக்குபவன் தந்தையாதலின், எம்மான் என்றுங் கூறியருளினர். எம்மான் என்பது தந்தை யென்னும் பொருளது. இதனை, [1] "எம்மான் எம்மனை யென்றனக் கெட்டினைச் சார்வாகார்" என்பதனாலும் அறிக. வேண்டாமையையே வேண்டும் சிவஞானிகளால் வேண்டப்படுவது திருவருட் பேறு ஒன்றேயாகும். ஆதலானும், அப்பேறும் உடலோடு கூடியிருக்கும் நாளில் வாய்க்குமாயின், அவ்வுடல் ஒழிவில் திருவருளில் தோய்ந்து இன்புறுதல் கூடுமென்னும் உறுதிப் பாடுடைமையானும், "அருள் பெறு நாள் என்றென்றே வருந்துவன்" என்று கூறினர். எல்லாரானும் அஞ்சத்தக்க பிறப்பு இறப்புக்களுக்கும் அஞ்சேன்; மண்ணுலக விண்ணுலக ஆட்சிகளுக்கும் முயலேன். ஆனல், நின் திருவருட் பேற்றிற்குரிய

1. சுந்தரர் தேவாரம்.

நன்னுள் வாய்ப்பது கருதியே கவல்கின்றேன் என்பார், "வருந்துவனே" என்று கூறினர். அருட் பேற்றிற்கு வருந்துவன் என்றது, அதற்குரிய காலங் கருதியது, எடுத்த உடம்பு கால வரையறைக்கு உட்பட்டது குறித்தாம்.

இதன்கண், மண்ணுலக ஆட்சியும் விண்ணுலக இன்பமும் பெறுதற்கு விரும்பும் மனத்தின் செயலை வெறுத்து, அந் நெறியிற் செல்லேன் என இறைவனை முன்னிலைப் படுத்துக் கூறு முகமாக, அந் நெஞ்சிற்குக் குறிப்பால் அறிவுறுத்தமை புலனுதலின், **அறிவுறுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், **வைராக்கிய விசித்திரமாகிய** சதகம் நுதலிய பொருளும் புலனுதல் அறிக.

13. வருந்துவன்நின் மலர்ப்பாதம்
அவைகாண்பான் நாயடியேன்
இருந்துநல மலர்புனையேன்
ஏத்தேன்நாத் தழும்பேறப்
பொருந்தியபொற் சிலைகுனித்தாய்
அருளமுதம் புரியாயேல்
வருந்துவன்அத் தமியேன்மற்
றென்னேநான் ஆமாறே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டிற் குறிப்பிட்ட திருவருட்பேற்றிற்கு உரிய அன்புச் செயல்கள் தம்பால் இல்லாமை காரணமாக அருளமுதம் பெறுதல் அரிதாகுமாயின், யான் எவ்வாறு உய்தல் கூடுமென அடிகள் இத் திருப்பாட்டில் வருந்திக் கூறுகின்றார்.

**ப-ரை:** பொருந்திய பொன் சிலை குனித்தாய்—பொருத்தமாகிய மேரு மலையை வில்லாக வளைத்தவனே, நாய் அடியேன்—நாய் போன்ற சிறுமையுடைய அடியேன், நின் மலர்ப்பாதம் அவை காண்பான்—நின்னுடைய தாமரை மலர்போன்ற திருவடிகளாகிய அவற்றைக்

காணுதற் பொருட்டு, வருந்துவன்—வருந்தி முயல்கின்றேன், இருந்தும்— கை, நா முதலிய உடல் உறுப்புக்கள் எல்லாவற்றோடும் கூடியிருந்தும், நல மலர் புனையேன்—நல்ல மலர்களைத் தொடுத்து நினக்கு அணியேன், நாத்தழும்பு ஏற ஏத்தேன்—நாவில் தழும்புண்டாம்படி நின் புகழைப் பாராட்டேன், அருளமுதம் புரியாயேல்—நின் கருணையாகிய அமுதத்தை அடியேனுக்கு வழங்கவில்லையாயின், அத்தமியேன்—அத்தகைய கதியற்றவனாகிய யான், வருந்துவன்—மேன்மேலும் வருத்தம் எய்துவேன், நான் ஆம் ஆறு என்னே—பின்னர் யான் உய்யுமாறு எங்ஙனம்? என்பது.

**வி-ரை:** கடவுள் தன்மையின் அரிய ஆற்றல் புலப்படுத்தற்கு மேருவை வில்லாக வளைத்த புராண கதை அடிகளால் மேற் கொள்ளப்பட்டது. பொன்-ஆகுபெயர். பொன் மலையை வில்லாக வளைக்கும் அரிய செயல் பரம்பொருளாகிய சிவபெருமான் ஒருவற்கே பொருந்தியதாகும்; ஏனையோர்க்கு இயலாத தொன்று என்பதைப் புலப்படுத்துவான், "பொருந்திய பொற் சிலை குனித்தாய்" என்றார். மலையை வில்லாகவளைத்தல் இயலாததொன்று என எண்ணி, [1]"இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்" என்பதற்கு, "இமய மலையிடத்துப் பிறந்த மூங்கிலாகிய வில்லை வளைத்த இறைவன்" என்பர் நச்சினார்க்கினியர். மக்கள் ஆற்றலை நோக்க, இங்ஙனம் கோடல் பொருந்துமாயினும், எல்லாம் வல்ல ஆண்டவன் பேராற்றற்கு மூங்கிலை வளைத்தல் சிறந்த செயலாகாதென்பது எளிதில் உணரத் தக்கது. [2]"கூத்தனிவ் வானுங் குவலயமும் எல்லோமுங், காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியபடி, உலகப் படைப்பு முதலிய தொழில்களை இறைவற்கு விளையாட்டாக அமையுமாயின், மலையை வில்லாக வளைத்தல் எங்ஙனம் இயலாததாகும்? அக் கலிப்பாவிலேயே கயிலையை

1. கலித்தொகை, செ. 38. 2. திருவெம்பாவை 13.

இராவணன் பெயர்த்த கதைப் பகுதி யுள்ளது. அதற்கு உரையாளர் வேறுபடக் கூறிற்றிலர்.

நாய் இழி பிறப்புடையதாயினும் நன்றி மறவாமைக் குணத்திற் சிறந்ததாகும்; அது போலத் தம் சிறுமை நிலை யினும் இறைவன் தமக்கருளிய பேருதவியை நினைந் துருகும் இயல்பு தமக்குண்டு என்பதைப் புலப்படுத்து வார், "நாயடியேன்" என்றார். [1]"அண்ணல்தா னுரைப் பக் கேட்டே யடுகளிற் றெருத்தி னிட்ட, வண்ணப்பூந் தவிசு தன்னை ஞமலிமே லிட்ட தொக்கும்" என்புழி, "வேறோர் ஊர்தி கூறாது ஞமலியைக் கூறினான்; அவன் அயிராது தருதற்கு" என்று நச்சினார்க் கினியர் கூறிய உரைக் குறிப்பு ஈண்டுக் கருதத்தக்கது. அகரம் சேய்மை யிலுள்ள பொருளைச் சுட்டு மாதலின், திருவடிகள் அகக் கண்ணாலும் காணமுடியாத சேய்மையில் உளவென்பதைக் குறிப்பிற் புலப்படுத்தலான், அடிகள் இறைவனுடைய திருவடிகளைக் காண வருந்துதற்குக் குறிப்பேதுவாக வுள்ளது அவையென்னுஞ் சுட்டு.

[2]"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சுந், தாழ்த்தச் சென்னியும்" இறைவனால் தரப்பட்டும், அவற்றைக் கொண்டு உரிய பணிகளைச் செய்திலேன் என இரங்குவார், "இருந்துநல மலர்புனையேன் ஏத்தேன்நாத் தழும்பேற" என்றார். [3]"ஆரூரா வென்றென்றே யலறாநில்லே" என் புழி, அலறுதல் உரக்கக் கூவியழைத்தலாதலின், அங்ஙனஞ் செய்திலேன் என்பார், "நாத்தழும் பேற ஏத்தேன்" என்றார். மனமொழி மெய்யாகிய மூன்றனுள், எளிதிற் பணி செயற்குரிய மொழியும் மெய்யுமே தம் பணிகளைச் செய்யவில்லையாயின், அரிதிற் செயற்பாலதாகிய உள்ளப் பணியைப் பற்றிக் கூறவேண்டாவெனக் கருதி, அது குறித்து யாதும் கூறிற்றிலர். மன மொழி மெய்கள் இறைவன் வழிப்பாட்டிற் பொருந்தாமையால், இறை வனது அருளமுதம் பெறுதல் இயலாதொழியுமே என்றும்,

1. சீவக சிந்தாமணி, செ. 202. 2. திருநாவுக்கரசர் தேவாரம்.
3. திருநாவுக்கரசர் தேவாரம், "நிலைபெறுமாறு."

அருளமுதம் பெறவில்லையாயின், யான் என்ன செய்வேன் என்றும் வருத்தம் தோன்ற, " அருளமுதம் புரியாயேல் வருந்துவன் " என்றார். இத் திருப்பாட்டின் முதலடியிற் கூறிய வருத்தம் சாதனமாகிய இறைவழிபாடு செய்யவியலாமை குறித்தும், நான்காம் அடியிற் கூறிய வருத்தம் சாத்தியமாகிய அருளமுதம் பெறுமை குறித்தும் உண்டாயின என்பது உய்த்துணரத் தக்கது. அறம், பாவம் என்பவற்றையும், அவற்றின் பயன்களாகிய இன்ப துன்பங்களையும் மேற்கொள்ள நினையுங்கால், அறமாகிய மூலத்தைவிட்டு, அதன் பயனாகிய இன்பத்தை விழைதலும், பாவமாகிய மூலத்தைச் செய்து, அதன் பயனாகிய துன்பத்தை வெறுத்தலும் மக்களுட் சிறியோர் இயல்பு என்ப. இம் முறையே, "இருந்து நலமலர் புனையேன் ஏத்தேனாத் தழும்பேற" என அறமாகிய மூலத்தைவிட்டு, அருளமுதம் பெற விழைகின்றேன்; என் சிறுமை யென்னே யென இரங்குவார், " வருந்துவன் " என்றார்.

" அத்தமியேன் " என்புழிச் சுட்டு, மலர் புனையாமையும், நாத்தழும்பேற ஏத்தாமையும் ஆகிய அந் நிலைமையை உணர்த்தும். இறை வழிபாட்டிற்குரிய உறுப்புக்களோடு கூடியிருந்தும் அவ்வழிபாட்டில் தலைப்படாமையால், உறுதுணையின்றி வெறுவியனாய்த் தனியனாயினேன் என்பார், " அத்தமியேன் " என்றார். மற்று—அசை நிலை. உலகப் பொருள்கள் எத்துணை யிருப்பினும், இறைவனது அருளமுதம் பெறவில்லையானால், உயிர் உய்தற்கு வழியில்லையே என்று இரங்குவார், " நான் ஆமாறு என்னே " என்றார். ஆமாறு என்புழி, ஆதல், உய்தல் என்னும் பொருட்டு.

இதன்கண், இறைவன் திருவடிக்கண் மலர் புனைதல், நாத்தழும் பேற ஏத்துதல் முதலிய சாதனங்களில் தலைப் படாத் நெஞ்சின் இயல்பு குறித்து வருந்தி, இறைவனை முன்னிலைப் படுத்துக் கூறு முகமாக, அந்நெஞ்சிற்குக் குறிப்பான் அறிவுறுத்தமை பெறப்படுதலின், **அறிவுறுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்றியவாறறிக.

14. ஆமாறுன் திருவடிக்கே
அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன்
புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில்
தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே.

க-ரை: திருவருட் பேற்றிற்குரிய சாதனம் தம்பால் இல்லாமை குறித்து முன்னைத் திருப்பாட்டில் வருந்திக் கூறிய அடிகள், இத் திருப்பாட்டில், கட்டறுத்து உய்தி பெறுதற்குரிய அச்சாதனம், மன மொழி மெய்களை இறை வழிபாட்டிற்கு உரிமையாக்குதல் ஆகவும், அங்ஙன மின்றி, அவற்றை உண்டு உடுத்து உறங்கும் உலக வாழ் விற்கு உரிமைப்படுத்திப் பயனின்றி இறத்தற்கு விரையும் என் அறியாமை யிருந்தவாறு என்னே யென மீண்டும் இரங்குகின்றார்.

ப-ரை: புத்தேளிர் கோமான்—கடவுளர் தலைவனாகிய சிவபெருமானே, உன் திருவடிக்கே ஆமாறு—நின் திரு வடிக்குத் தொண்டனும் வண்ணம், அகம் குழையேன்-நெஞ்சங் கனிந்திலேன், அன்பு உருகேன்—அன்பினால் உருகுதலும் இல்லேன், பூமாலை புனைந்து ஏத்தேன்—மலர் மாலையை அணிந்து வாழ்த்திலேன், புகழ்ந்து உரையேன்-நின் புகழ்களைப் பாராட்டிப் பேசேன், நின் திருக்கோயில் தூகேன்-நின் திருக்கோயில்களை அலகிடேன், மெழுகேன்-மெழுகுதல் செய்யேன், கூத்தாடேன்—உவகை மிகுதி யாற் கூத்தாடுதல் செய்யேன், சதுராலே சார்வான்—என் ஆற்றலாலே நின்னையடைதற்கு, விரைகின்றேன்—முந்து கின்றேன், (அது) சாமாறே—அங்ஙனம் விரைகின்றது பயனின்றிச் சாதற் பொருட்டேயாம் என்பது.

வி-ரை : "யாங்கள் எல்லோரும் பசுக்கள்; நீ யொருவனே பசுபதி யென்று உடன்பட்டனர் தேவர்கள்" என்னும் மறைமொழிப்படி, கடவுளர் தலைவன் சிவபிரான் ஒருவனே யாவன் ஆதலின், "புத்தேளிர் கோமான்" என்றார். "திரு" என்பது செல்வத்தைக் குறிக்கும்; ஆதலால், ஈண்டு, ஞானச்செல்வத்தை, அடைந்தார்க்கு அளிக்கும் இறைவன் அடி திருவடியெனப்பட்டது. திருவடிக்கேயாதல்—அடித்தொண்டனாதல். உலகத்துப் பொருள்களுள் எதற்கும் அடிமையாகாமல், இறைவன் திருவடிக்கே யடிமையாதல் உட்கோளாதலின், ஏகாரம் தேற்றப் பொருளது. சிவத்தொண்டில் ஈடுபடுதற்கு, மன மொழி மெய்கள் மூன்றும் இறைவன் வயப்படல் வேண்டும். உள்ளம் இல்வழி, மொழியும் செயலும் பயன் விளையா ஆதலின், முதலில் உள்ளத்தின் தூய செயலைப் புலப்படுத்தத் தொடங்கி, "அகங்குழையேன் அன்புருகேன்" என்றார். குழைதல்—இளகுதல்; உள்ளம் உருகுதற்கு முதலில் குழைதல் வேண்டும். அக்குழைவு, கல்லைப்போன்ற வன்னெஞ்சம், இறைவனை இடையறாது நினைவு கூர்தலால் நிகழ்வது. அதன்மேல், இறைவன் ஒருவனே பற்றுக்கோடு என்னும் உறுதிப் பாட்டால் உண்டாகும் அன்பு காரணமாக அவ்வுள்ளம் உருகும். உருகிய அவ்வுள்ளத்தில் இறைவன் விளங்குவான் என்பது பெரியோர்கள் கண்ட அனுபவம். இதனை [1]"உரமென்னும் பொருளானை உருகில் உள்ளுறைவானை" என்பதனாலும், [2]"உள்ளம் உள்கலந் தேத்தவல் லார்க் கலால், கள்ள முள்ள வழிக்கசி வானலன்" என்பதனாலும் உணர்க. உள்ளத்தின் செயல்களாகிய குழைதலும் உருகுதலும் இன்றியமையாத சாதனங்களாகவும், அவற்றை அடைந்திலேன் என்று இரங்குவார், "அகங் குழையேன்," "அன்புருகேன்" என்றார்.

ஏத்துதல், வாழ்த்துதல். ஏத்துதற்கு முன்னர்ப் பூமாலை புனைதல் இறை வழிபாட்டு முறையாதலின்,

1. சுந்தரர் தேவாரம். 2. திருநாவு. திருவான்மியூர்த் தேவாரம் 4.

"பூமாலை புனைந்தேத்தேன்" என்றார். புகழ்ந்து உரைத்தல், இறைவன் பெருமைகளைப் பலவாறு பாராட்டிக் கூறல். வாழ்த்துதல்—தம் குறையைப் பரிகரிக்க நினைந்து வாழ்த்துருவத்தில் இறைவனைத் துதித்தல். 1 "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்" என்பதும் கருதத்தக்கது. புகழ்தல் இறைவனுடைய திருவிளையாடல்களை இனிய பாட்டு வடிவிலும் உரை வடிவிலும் வைத்துப்பாராட்டுதல். ஆகவே, வாழ்த்துதலும் புகழ்ந்துரைத்தலும் மொழிப் பணியாதலால், அவற்றையும் மேற்கொண்டிலேன் என்பார், "ஏத்தேன் புகழ்ந்துரையேன்" என்றார்.

தூகல்—திருவலகிடுதல். நாடோறும் திருக்கோயிலுக்குச் சென்று, திருவலகிடுதல், மெழுகுதல் முதலியன செய்தல் உடற்பணிகளாம். எளிமையிற் செய்யத்தக்க அப்பணிகளையும் செய்திலேன் எனவும், இம் முக்கரணங்களாலும் வழிபாடியற்றி, அதன் பயனாக இன்பத்தில் திளைத்துப் பரவசமாக நின்று கூத்தாடலுஞ் செய்திலேன் எனவும் இரங்குவார், "தூகேன் மெழுகேன் கூத்தாடேன்" என்றார். முக்கரணங்களாலும் நிகழ்வன, முறையே இரண்டிரண்டு செயல்களாக, அகங் குழைதல் அன்புருகுதல், ஏத்தல் புகழ்ந்துரைத்தல், தூகல் மெழுகுதல் என்னும் இவை கூறப்பட்டன. இச்செயல்களின் முதிர்ச்சியில் நிகழ்வது பரவசமாக நின்று இயற்றும் இன்ப ஆடலாகும். கூத்தாடல், உடலின் செயல் எனினும், இன்பக் களிப்பின் விளைவாதலின், கரணங்கள் மூன்றும் இறை வயப்பட்டபின் நிகழ்வதாகுமென்பது கருதத்தக்கது. சரியை வழிபாடாகிய அலகிடுதல் மெழுகுதல் ஆகிய உடற்பணிகளும், ஏத்துதல் புகழ்ந்துரைத்தல் ஆகிய மொழிப்பணிகளும்; இவற்றின் முதிர்ச்சியில் நிகழும் இன்பக் கூத்தும், தொண்டர்க்கு இன்றியமையாதன என்பதை, 2 "நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா, நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப், புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித், தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி" என்னும் அப்பர் திருவாக்கானும் உணர்க.

1. திருவாசகம், திருச்சதகம், செ. 16. 2 திருநாவுக்கரசர் திருத்தாண்டகம்.

யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையானாகிய இறைவன் முன்னிலையில், யாவர்க்கும் கீழாம் அடிமையாக நின்று, தொண்டு செய்து அடைதற்பாலதாகிய அவ்விறையருளை, அத்தொண்டுகளை மேற்கொள்ளாமல் ஆன்மாத் தன் ஆற்றலால் அடையலாம் என்று எண்ணுதல் தவறுடைத்து என்பதைப் புலப்படுத்த, "சதுராலே சார்வான் விரைகின்றேன்" என்றார். சதுர்—ஆற்றல். சார்வானே என்பதிலுள்ள ஏகாரம் ஈற்றசை. சதுராலே என்புழி, ஏகாரம் தேற்றம். இறையருளைப் பெறுதற்குரிய தொண்டுகளை மேற்கொள்ளாமல், உயிர் தன் ஆற்றலால் அதனைப் பெறக் கருதுதல், பயனின்றிச் சாதற்கு முந்துவதாகும் என்பது கருதி, "சாமாறே" என்று கூறினர். விரைகின்றேன் என்னும் வினைமுற்றுச் சார்வான் என்னும் எச்சத்திற்கு முடிவாகும்.

இனி, உன் திருவடிக்கே குழையேன், உருகேன் என்றதனாலும், ஏத்தேன் புகழ்ந்துரையேன் என்றதனாலும், திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன் என்றதனாலும் முறையே குறிப்பாற் பெறக்கிடப்பன, என் மனைவி, மக்கள் முதலியோர் பொருட்டு அகங் குழைதலும் உருகுதலும், பொருட்பயன் கருதித் தகுதியில்லாத மனிதரை ஏத்தலும் புகழ்ந் துரைத்தலும், அநித்திய வாழ்க்கைக் குரிய என் இல்லத்தை அலகிடுதலும் மெழுகுதலும், இன்னோரன்ன உலக வாழ்க்கை நலத்தில் ஈடுபட்டுக் களித்துக் கூத்தாடலும் செய்கின்றேன் என்பனவாம். அந்தோ! இச் செயல்கள் எல்லாம் ஊனடைந்த உடம்பின் பிறவி, தானடைந்த உறுதியைச் சாராமல் பயனின்றிச் சாதற்கு உரியனவாமே என்று இரங்குவார், "சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே" என்றார்.

இதன்கண், முக்கரணங்களாலும் நிகழும் செயல்களுக்கு மூலமாகவுள்ளது நெஞ்சம் ஆதலான், அந் நெஞ்சம் இறைவயப்படாமல், அழிதன் மாலையவாய உலகத்துப் பொருள்களின்பால் விரைகின்றதே என்று வருந்தி,

இறைவனை முன்னிலைப் படுத்து, அந் நெஞ்சிற்குக் குறிப்பான் அறிவுறுத்தவாறு பெறப்படுதலின், அறிவுறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

15. வானாகி மண்ணாகி
வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி
உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென்
றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை
யென்சொல்லி வாழ்த்துவனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் தம் மனமொழி மெய்களை இறை வழிபாட்டிற் பயன்படுத்தாமைக்கு இரங்கிய அடிகள், அக் கரணம் மூன்றனுள், மனத்தாலும் மொழியாலும் இறைவன் பெருமையை நினைந்து வாழ்த்துதற்கு, அப் பெருமான், மாற்ற மனங்கழிய நின்ற மறையோனாதலால், அவற்றிற்கு எட்டாமை குறித்து, எவ்வாறு நினைந்து, என் சொல்லி வாழ்த்துவேன் என்று இத் திருப் பாட்டில் இரங்கிக் கூறுகின்றார்.

ப-ரை: வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி — விண், மண், காற்று, தீ என்னும் இப் பூதங்களாகியும், ஊனாகி உயிராகி — உடலும் உயிருமாகியும், உண்மையும் ஆய் இன்மையும் ஆய் — உள்பொருளாகியும் இல்பொருளாகியும், கோன் ஆகி — எப்பொருட்கும் தலைவனாகியும், அவரவரை — உலகத்துள்ள மக்கள் எல்லோரையும், யான் எனது என்று கூத்து ஆட்டுவான் ஆகி — யான் என்றும் எனது என்றும் சொல்லிக் கூத்தாடும்படி செய்பவனாகியும், நின்றாயை—நிற்கின்ற நின்னைக் குறித்து, என் சொல்லி வாழ்த்துவன்—யாது கூறி வாழ்த்தக்கடவேன்? என்பது.

வி-ரை: ஐம்பெரும் பூதங்களும், ஞாயிறு திங்களும், உயிரும் ஆகிய எட்டும் இறைவனுக்கு உடல் என்பர். இதனை, [1] "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய்

1. திருநாவுக்கரசர் திருத்தாண்டகம்.

எறியுங் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி" என்னும் நின்ற திருத் தாண்டகத்தாலும் அறியலாம். இஃது, இவ்வெண் வகைப் பொருள்களும் அல்லாமல் உலகம் என்பது ஒன்றில்லை யாதலின், எல்லாமாய் நிற்கும் இறைவனது வியாபக நிலையைக் கூறியபடியாம். இந் நிலையையே அடிகள் இத் திருப்பாட்டின் முதற்கண் புலப்படுத்துவாராயினர். "வான்" என்னுஞ் சொல் ஆகாயத்தையும், மேகம் என் னும் பொருளுடையதாய் ஆகு பெயராய் நின்று நீரையும் உணர்த்தும். ஒளி என்பது தீயையும், ஞாயிறு திங்களையும் உணர்த்தும். தீ முதலிய மூன்றனையும் தனித்தனியே கூறாமல் ஒருங்கு புலப்படுத்தற்கே ஒளி யென்னும் ஒரு சொல்லாற் கூறியருளினர்; அவை யெல்லாம் ஒளி யுடைமை பற்றி என்க. முதற்கண் வானாகி யென்று தொடங்கியது, தோற்ற முறைபற்றி. நீரையும் அச் சொல் லாற் பெற வைத்தது, [1] பிரமனுடைய படைப்புப் பொருள் களுள் முதற்கட் படைக்கப்பட்ட தென்னும் சிறப்பு நோக்கி என்க. செய்யுள் முறை நோக்கி மண் முதலிய பூதங்கள் பிறழ வைக்கப்பட்டன. உயிர், உடலைப்பற்றி நிற்கும் நிலையிலே இயமானன் எனப்படும். இவ்வுண்மை குறித்தே, "ஊனாகி உயிராகி" என்றார். ஊன், ஆகு பெய ரால் உடலை உணர்த்தும். ஆகவே, இறைவன் மேற் குறிப் பிட்ட எண்வகைப் பொருள்களையும் தனக்கு உடலாகக் கொண்டு விளங்குபவன் என்பது புலப்படுத்தவாறும்.

மெய்யன்புடையார் அகக் காட்சிக்குப் புலப்படுத லின் உள் பொருளாகவும், அவ் வன்பிலார்க்கு எவ்வாற் றானும் புலப்படாமையின் இல்பொருளாகவும் விளங்கு வன் என்பது தோன்ற, "உண்மையுமாய் இன்மையுமாய்" என்றார். இதனைப் பிறிதோரிடத்தும் அடிகள், [2] "அன் பர்க்கு மெய்யானை அல்லாதார்க்கு அல்லாத வேதியனை" எனக் கூறுவர். [3] "சோதியனே துன்னிருளே" என்பதும்

1. திருச்சதகம் 8 ஆம் பாட்டு உரை பார்க்க. 2. திருவாசகம், திருவம் மானை, செ. 13. 3. திருவாசகம், சிவ புராணம், அடி 72.

இக் கருத்தைப் புலப்படுப்பதாகும். இனி, பாச ஞான பசு ஞானங்களால் அறியப்படாமையும், பதி ஞானம் ஒன்றுனே அறியப்படுதலும் இறைவனுக்குச் சிறப்பிலக்கணம் என்பவாதலின், அவ் வுண்மை தோன்ற, "உண்மையுமாய் இன்மையுமாய்" என்ருர் எனினுமாம். வான் முதலிய பூதங்களும் உயிரும் ஆகிய அறிவில் பொருளும், அறிவுடைப் பொருளுங் கலந்த உலக உருவமாக விளங்குவோன் இறைவன் என்ருல், அவ் வுலகத்தை இயக்கும் பேராற்றல் படைத்த தனி முதல் வேருெரு பொருளாக இருக்குங்கொலோ என்னும் ஐயத்தை ஒழித்து, இவ்வுலகப் பொருட்குத் தலைவனுக இருப்பவனும் அப் பெருமானே என்பதை வலியுறுத்தற்கு, "கோனுகி" என்ருர்.

யான் என்பதை அகங்காரம் எனவும், எனது என்பதை மமகாரம் எனவும் வடநூலார் வழங்குவர். இவை முறையே அகப்பற்றும் புறப்பற்றும் ஆகும். எல்லாப் பற்றுக்களும் இவ் விரண்டனுள் அடங்கும். இவ்விருவகைப் பற்றுக்களும் அற்ற நிலையே வீட்டின்ப நிலையாகும். இதனை, 1 "ஆவியாக்கை யான் எனது என்று யாது மின்றி அறுதலே" என்னும் அடிகள் திருவாக்கானும் உணரலாம். இவ் அகப் புறப் பற்றுக்களில் ஈடுபட்டே உலகத்து உயிர்களெல்லாம் உழல்கின்றன என்பது பெரியோர் அனுபவத்திற் கண்டது. எல்லா வுயிர்களும் இப்பற்றுக்களையுடையனவாயினும், மக்கள்பாலே விளக்கமாகக் காணப்படுதலின், "யான் எனது என்று அவரவரை" என்ருர். நூற்கேள்வியானும் ஞானசிரியன் உபதேசத்தானும் இப்பற்றுக்களின் இயல்பை அறிந்து, அவற்றினின்றும் விடுதி பெறுதற்குத் தகுதியுடையார் மக்கட் பிறப்பினராகலின், சிறப்பாக, "அவரவரை" என்று உயர்திணைமேல் வைத்துக் கூறியது பொருத்த முடையதே. யான் எனது என்னும் இவ்விருவகைப் பற்றுக்களாலும் உயிர் ஆரவாரித்துக் களிக்கும் இயல்புடைமை நோக்கி, அந்நிலையைக் கூத்தாடல் எனவும், இறைவன், படைத்தல் முதலிய

1. திருவாசகம், பிரார்த்தனைப் பத்து, செ. 5.

ஐம்பெருந்தொழில்களுள் ஒன்றாகிய மறைத்தற்றொழிலால் உயிர்களோடு உடனாகி நின்று, வினைப்பயன்களை நுகர்விக்கின்றான் என்பது சைவ நூல் துணிபாகலின், "கூத்தாட்டு வானாகி" எனவும் கூறினர். யானே செய்பவன் எனக் களித்தாடும் அகக்கூத்தும், எல்லாம் எனது எனக் களித்தாடும் புறக் கூத்தும் ஆகிய அறியாமையால் நிகழும் இருவகைக் கூத்தும் உயிருக்கு உள்ளன என்பதும், அங்ஙனம் ஆட்டுவிப்பவன் இறைவன் என்பதும் போந்தவாறுணர்க. [1] "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்பதும் ஈண்டுக் கருதத் தக்கது. இங்ஙனம் ஆட்டுவித்தற்குக் காரணம் உயிர்களின் வினை ஒழிவு குறித்து இறைவனுக்கு உண்டாகிய அருட்குணமே யாகும்.

நின்றாய், முன்னிலை வினைப் பெயர். பரம் பொருளாகிய சிவ பெருமானுக்கும் உலகத்திற்கும் உள்ள இயைபைப்பற்றி, [2] "எட்டுத்திசை தானாய் வேறாயுடன் ஆனான் இடம் வீழிம்மிழலையே" எனத் தேவாரத் திருமறையும், [3] "உலகெலாமாகி வேறாயுடனுமாய்" எனச் சைவ நூலும் கூறும். முதல்வன் உலகத்தோடு கலந்திருத்தலின் உலகெலாமாகி எனவும், அவ்வுலகத்திற்குரிய விகாரங்கள் தன்னைப் பற்றாவாறு இருத்தலின் வேறாய் எனவும், உயிர்க்குயிராக நின்று வினைப்பயன் நுகர்ச்சியில் தலைப்படுதலால் உடனாகி எனவும் கூறப்பட்டனன். இம் மூன்று நிலைகளையும் இத் திருப்பாட்டுத் தெளிவுறுத்து நிற்றல் உய்த்துணரத் தக்கது.

வானாகி என்பது முதல் உயிராகி என்பத [illegible] கூறப்பட்ட செய்திகளால், "உலகெலாமாகி" என்பதும் "உண்மையுமாய் இன்மையுமாய்க் கோனாகி" என்பவற்றால், "வேறாய்" என்பதும், "அவரவரைக் கூத்தாட்டு வானாகி" என்றதனால், "உடனுமாய்" என்பதும் புலப்படுத்தவாறு அறிக.

1. திருநாவுக்கரசர் தேவாரம். 2. திருஞானசம்பந்தர் தேவாரம், திருவீழிமிழலை 2. 3. சிவஞானசித்தி. சுபக். சூ. 2, செ. 1.

இங்ஙனம் வான் முதலிய பூதங்களாகவும் உயிர்களாகவும் தலைவனாகவும் விளங்குகின்ற இறைவனுடைய நிலைகளுள், எந் நிலையை எவ்வாறு எடுத்துக் கூறி வாழ்த்துவேன் என்பார், "என்சொல்லி வாழ்த்துவனே" என்றார். இறைவனுடைய ஒரு சில குணங்களைப் பாராட்டினால், மற்றவை கூறப் படாமை, குன்றக் கூறல் ஆக முடியுமென்பதும், எல்லாவற்றையும் எடுத்துக் கூறற்கு மாற்ற மனங்கழிய நின்றவனாகலின் இயலாத தொன்றாகும் என்பதும் கருத்து.

இதன்கண், வாழ்த்த வாயும், நினைக்க மட நெஞ்சும் தந்த இறைவனை வாழ்த்துதற்கு அவன் குணங்கள் மாற்ற மனங்கழிய நிற்கும் இயல்பினவாகலான், இயலாதவென அமைதி பெற முயலும் நெஞ்சத்தின் இயல்பை வெறுத்து, இறைவனை முன்னிலைப் படுத்துக் கூறு முகமாக, இயன்றாங்கு வாழ்த்துவதே கடமை என்பதைக் குறிப்பிற் புலப் பட வைத்து நெஞ்சிற்கு அறிவுறுத்தமை பெறப்படுதலின், **அறிவுறுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனுமாறு அறிக.

16. வாழ்த்துவதும் வானவர்கள்
 தாம்வாழ்வான் மனம்நின்பால்
 தாழ்த்துவதுந் தாம்உயர்ந்து
 தம்மையெல்லாந் தொழவேண்டிச்
 சூழ்த்துமது கரமுரலுந்
 தாரோயை நாயடியேன்
 பாழ்த்தபிறப் பறுத்திடுவான்
 யானும்உன்னைப் பரவுவனே.

**க-ரை:** இறைவனுடைய பலதிறப்பட்ட குணங்கள் எல்லாவற்றையும் முற்ற எடுத்துக் கூறி வாழ்த்துதல் இயலாத தொன்றென முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், அங்ஙனமாயினும், இயன்றாங்கு வாழ்த்துதல் கடமை யென்றும், அதுவும் தேவ போக முதலியவற்றைக் கருதாமல், பிறப்பறுத்தலையே கருதியதாக இருத்தல்

வேண்டும் என்றும், தம் விருப்பம் அதுவே என்றும் இத் திருப்பாட்டில் தம் உண்மைக் கருத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்ருர்.

ப-ரை: மது கரம் சூழ்ந்து முரலும் தாரோயை—வண்டுகள் மொய்த்து ஒலிக்கும் கொன்றை மாலையையுடைய நின்னை, வானவர்கள் வாழ்த்துவது தாம் வாழ்வான்—தேவர்கள் வாழ்த்துதல் தாம் நெடுங்காலம் இன்பமாக வாழுதற் பொருட்டே, மனம் நின் பால் தாழ்த்துவது—நெஞ்சத்தை நின்னிடத்துப் பணிவித்தல், தாம் உயர்ந்து எல்லாம் தம்மைத் தொழ வேண்டி—தாம் பெருமையடைய எல்லாவுயிர்களும் தம்மைப் பணிய வேண்டியே, நாயடியேன் யானும்—நாய் போன்ற சிறுமையுடைய அடிமையாகிய யானும், பாழ்த்த பிறப்பு அறுத்திடுவான்—பயனற்ற பிறப்பை அறவே நீக்குதற் பொருட்டு, உன்னைப் பரவுவன்—நின்னை வாழ்த்துவேன் என்பது.

வி-ரை: உம்மைகள் இரண்டும் இசை நிறை. சூழ்ந்து என்பது எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. வண்டுகள் சூழ்ந்து ஆரவாரித்தல் மலரிலுள்ள தேனை நுகர்ந்து இன்புறுதற் பொருட்டே. இக் குறிப்பு வானவர் குறிக்கோளுக்கும் இயைந்திருத்தல் அறிக. பெரும்பாலும் புண்ணியப் பயனையே நுகரும் தேவர்கள், அப் பயன் நுகர்ச்சியில் பெரிதும் ஈடுபட்டுப் பிறப்பு இறப்புத் துன்பத்தை மறந்து, மேன் மேலும் தம் வாழ்க்கை இன்பம் மிகுதற் பொருட்டே இறைவழிபாடு செய்யும் இயல்பினர் என்பதைப் புலப்படுத்த, "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்" என்ருர். இறை வழிபாடு செய்வார் எப் பயன் குறித்துச் செய்கின்றனரோ, அப் பயனை அவர்க்கு இறைவன் அருளிச் செய்வன் என்பது துணிபாதலின், தாம் வாழ விரும்பி இறைவனை வாழ்த்துதல் தம் வாழ்க்கை இன்பத்தை மிகுவிக்கும் என்பது தெளிவாம். தம் நெஞ்சத்தைப் பணியச் செய்தல், எல்லா உயிர்களும்

தம்மைப் பணிய, அதனால் தாம் உயர்வு அடைய வேண்டியே என்பது கருத்து. உயர என்பது உயர்ந்து எனத் திரிந்து நின்றது. [1]"வானின் றுலகம் வழங்கி வருதலான்" என்புழி, நிற்ப என்பது நின்று எனத் திரிந்து நின்றது போலக் கொள்க. இறைவனை மெய்யன்போடு வாழ்த்து வாரும் வணங்குவாரும் தேவர் முதலிய எல்லோராலும் வாழ்த்தப்பட்டும் வணங்கப்பட்டும் பெருமையடைவர் என்பதனை, [2] "தொழப்படுந் தேவர் தொழப்படுவானைத் தொழுத பின்னை, தொழப்படுந் தேவர் தம்மால் தொழுவிக்கும் தம் தொண்டரையே" என்னும் திருவாக்கானும் உணர்க.

பிறப்பு இறப்பு அற்ற நிலையே அழிவில்லாத இன்ப நிலையாதலின், அப் பேறே உயிர்க்கு உண்மைப் பயனாகும். அஃதல்லாதனவெல்லாம் வினைப் பயன்களாக நின்று மேன் மேலும் வினை யீட்டத்திற்கு ஏதுவாம் ஆதலின், அப் பயன்களைத் துய்ப்பதற்குக் கருவியாகவுள்ள பிறப்பு, பயன் அற்றதெனக் கொண்டு, "பாழ்த்த பிறப்பு" என்றார். பிறப்பு அறுத்தல்—பிறவிக்கு ஏதுவாகிய வினையை வேரறக் களைதல். வினையெச்சம் சிறிதிருப்பினும், ஆலம் வித்துப் போலப் பிறப்பு இறப்புக் கிளைத் தெழும் ஆதலின் இவ்வாறு கூறப்பட்டது. [3] "பாச வேரறுக்கும் பழம்பொருள்" என்பது அடிகள் திருவாக்கு. யானும் என்புழி உம்மை எச்சப்பொருளது.

வாழ்த்துதல் முதலிய வழிபாட்டுச் செயல்கள், பயன் கருதிச் செய்யப்படுவனவும், பயன் கருதாமல் செய்யப் படுவனவும் என இருவகைப்படும். இவற்றுள் தேவர்கள் வழிபாடு பெரும்பாலும் போகம் முதலிய பயன் கருதிச் செய்யப்படுவனவாம். இவ் வுண்மையைப் புராண இதிகாச முதலியவற்றிற் பரக்கக் காணலாம். அடிகள் வழிபாடு உலகப் பயனைக் குறித்ததன்று; அப் பயனுக்குக் கருவியாகவுள்ள பிறப்பை அறுத்தலையே குறித்ததாகும்.

---

1. திருக்குறள் 11. 2. திருநாவுக்கரசர் திருவிருத்தம் "முழுத்தழன் மேனி." 3. திருவாசகம், பிடித்த பத்து, செ. 7.

[1] "பந்தம் வீடு தரும் பரமன்" என்றபடி பந்தத்திற்கு ஏதுவாகிய உலக வாழ்க்கையையும், வீட்டிற்கு ஏதுவாகிய பிறப்பு அறுத்தலையும் தருதற்குரிய இறைவனிடத்து அடிகள் பிறப்பு அறுத்தலைக் குறித்து வேண்டியது பொருத்தமே. தேவர்களுடைய வாழ்த்தும் வணக்கமும் அவர்தம் உயர்வைக் குறித்தனவாம் என்று தாழ்த்துக் கூறியது எற்றிற்கெனின், "பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானும் உன்னைப் பரவுவன்" என்னும் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு, மனிதப் பிறப்பை ஒழித்துத் தேவப் பிறப்பை அருளி, துறக்க இன்பத்தைத் துய்க்கவெனக் கட்டளையிடின், தேவ போகத்தில் மயங்கி, மேன் மேலும் அவ்வின்பத்தையே விழைந்து,மீண்டும் பிறப்பு இறப்பில் சுழலக் கூடுமென்று அஞ்சியே,அடிகள் அவ் விண்ணவர் இயல்பை எடுத்துக் கூறி, அவ் வாழ்க்கையில் தமக்கு விருப்பமின்மையைக் குறிப்பிற் புலப்படுத்துவாராயினர். [2]"கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு" என்றும், [3] "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி இன்பமும்" என்றும் முன்னும் பின்னுமுள்ள அடிகள் திருவாக்குக்களும் இதனை வலியுறுத்துவனவாம்.

இதன்கண், இறைவனை இயன்றாங்கு வாழ்த்துங்காலும், மேன்மேலும் போக விழைவிற் செல்லும் தேவர்களின் இயல்பை மேற்கொளக் கருதும் நெஞ்சத்தின் இயல்பைத் தகாதென்று வெறுத்து, இறைவனை முன்னிலைப் படுத்துக் கூறுமுகமாக, அந் நெஞ்சிற்கு அறிவுறுத்தமை பெறப் படுதலின், **அறிவுறுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்றிய வாறறிக.

---

1. பெரிய புராணம், தடுத்தாட்கொண்ட புராணம், 154.
2 திருவாசகம், திருச்சதகம் 2. 3. திருவாசகம், திருச்சதகம், 72.

17. பரவுவார் இமையோர்கள்
பாடுவன நால்வேதங்
குரவுவார் குழல்மடவாள்
கூறுடையா ளொருபாகம்
விரவுவார் மெய்யன்பின்
அடியார்கள் மேன்மேலுன்
அரவுவார் கழலிணைகள்
காண்பாரோ அரியானே.

க-ரை: இறைவனை இயன்றாங்கு வாழ்த்துதல் தம் கடமையாகும் என் முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், அங்ஙனம் வாழ்த்துதல் முதலிய செயல்களாலும், பிறப்பறுத்தற்கு வாயிலாக உள்ள இறைவன் திருவடிக் காட்சி பெறுதற்கு அரியதாகுங் கொலோ வென ஐயுற்று, அவ் அருமைப் பாட்டை நினைந்து வியந்து இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

ப-ரை: அரியானே—காண்டற்கு அரியவனே, இமையோர்கள் பரவுவார்—தேவர்கள் முன்னிலைப் படுத்து வாழ்த்துவர், நால்வேதம் பாடுவன—நான்கு மறைகளும் பாராட்டிப் புகழ்வன, குரவுவார் குழல் மடவாள்—குரா மலரை அணிந்த கூந்தலையுடைய இறைவி, ஒரு பாகம் கூறு உடையாள்—நின் திருமேனியின் ஒரு கூற்றைத் தனக்குக் கூறாக உடையள், மெய்யன்பின் அடியார்கள் விரவுவார்—உண்மையான அன்பினையுடைய அடியவர்கள் நின்னொடு கலந்து இன்புறுவர், உன் அரவுவார் கழல் இணைகள் மேன் மேலும் காண்பாரோ—அவரெல்லாம் ஒலிக்கின்ற நெடிய வீரக் கழல்களையுடைய நின் திருவடிகளை மேன் மேலுங் காண்பார் கொலோ? என்பது.

வி-ரை: மன மொழி மெய்களான் இயைந்து இறைவனைக் காண்டல் ஞான நிலையில் பக்குவ முதிர்ந்தோர்க்கும் ஒரோருகாற் கூடுமேயன்றி இடையறாது நிகழ்தலின்று. ஆதலின், அத்தகையோரும் மேன்மேலும் இடையறாது கண்டு இன்புறுதற்கு அரியன் என்பார்

"அரியானே" என்றார். [1] "உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" என்னும் திருச்சிற்றம்பலக் கோவைச் செய்யுட் பகுதியும், அதற்கு, "ஒருகால் தன்னை யுணர்ந்தவர்கட்குப் பின் உணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் ஒடுங்குதலான் மீட்டு உணர்வரியோன்" என்னும் பேராசிரியர் உரையும். இத்னை வலியுறுத்து நிற்கும். இத் திருப்பாட்டின் திரண்ட கருத்திற்கேற்ப, "அரியானே" என்னும் சொற்கு இவ்வாறு பொருள் கோடல் பொருத்தமாதல் அறிக.

இறைவனை முன்னிலைப் படுத்துப் பாராட்டுதலைப் பரவுதல் எனவும், படர்க்கையில் வைத்துப் பாராட்டுதலைப் புகழ்தல் எனவும் இயல் நூலார் கூறுவர். "[2] பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்" என்னும் தொல்காப்பியச் சூத்திர உரையில், "புகழ்தல் படர்க்கைக் கண்ணும் பரவல் முன்னிலைக் கண்ணும் வரும்" என்பர் இளம்பூரணர். ஆதலின், தேவர்கள் எல்லோரும் முன்னிலைப் படுத்து இறைவனைப் பாராட்டுவர் என்பதைப் புலப்படுத்த, "பரவுவார் இமையோர்கள்" என்றார். மறைகள் எல்லாம் இனிய பண்ணுடன் இறைவன் புகழைப் படர்க்கையில் வைத்துப் பாராட்டும் என்பார், "பாடுவன நால்வேதம்" என்றார். இனிப் புகழ்தான் உரையும் பாட்டுமென இருவகைப்படும் ஆதலின், இமையவர்கள் உரையாற் பாராட்டுவர் எனவும், மறைகள் பாட்டுக்களாற் பாராட்டுவன எனவும் கொள்ளுதலும் பொருந்தும்.

குரவு—குராமலர். இது பாலைக்குரியது. அதற்குத் தெய்வம் கொற்றவை என்னும் சிவ சத்தியாகும். ஆதலின், உமையம்மையார்க்குக் குராமலர் கூறப்பட்டது. கொற்றவை சிவ சத்தியாதலை, [3] "கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து, மங்கை யுருவாய் மறையேத்தவே நிற்பாய்" என்னும் சிலப்பதிகாரத்தாலும்

1. திருக்கோவை, செய்யுள் 9. 2. தொல். பொருள், சூ. 80.
3. சிலப்பதிகாரம், வேட்டுவ வரி.

அறியலாம். குராமலராற் குறிக்கப்பட்ட பாலைக்கு உரிப்பொருள் பிரிதலாகும். இது மக்களைப் பற்றியது. கடவுளர் தலைவனுகிய இறைவற்கும் இறைவிக்கும் மக்கள் ஒழுகலாற்றை ஏறிடலாகாது என்பது புலப் படுக்க, "கூறுடையா ளொருபாகம்" எனப் பாகம் பிரி யாமை கூறப்பட்டது. இறைவனோடு உள்ளங் கலத்தற்கு உண்மையான அன்பு வேண்டும் என்பதும், அம் மெய் யன்பினாலே சிவத்தொண்டு நிலை பெறுவதாகும் என் பதும் புலப்படுக்க, "மெய்யன்பின் அடியார்" என்றார். [1] "கண்ட இவையல்லேன் நான் என்றகன்று காணக் கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த, தொண்டி னொடும் உளத்தவன்றான் நின்ற கலப்பாலே சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி" என்னும் சைவ நூற்கருத்தும் ஈண்டு நோக்கத் தக்கது. விரவுதல்—கலத் தல்; உள்ளங்கலத்தலைக் குறிக்கும். இனி, அடியார்கள் மெய்யன்பினால் விரவுவார் எனக்கொண்டு, கலத்தற்கு மெய்யன்பை ஏது வாக்கலும் ஒன்று.

தேவரும், மறைகளும், இறைவியும், அடியாரும் மன மொழி மெய் மூன்றானும் வழிபட்டு இறைவனைக் கண்டனரெனினும், சிறப்பு முறை பற்றி, மொழியால் இயைந்து கண்டவர் தேவராவர்; மறைகளும் அன்ன. திருமேனியில் இயைந்து கூறுகொண்டு கண்ட பெருமை இறைவிக்குரியது. உள்ளத்தாற் கலந்து கண்டவர் மெய் யன்பின் அடியார்கள். திருமேனியில் இயைதல் இறை விக்கே யன்றி அடியார்க்கும் ஓரளவில் உண்டு. கண்ணப்ப நாயனரது கண் ஒன்று இறைவன் கண்ணில் இயைந்தது இதற்குச் சான்றாகும். ஆயினும், எல்லா உறுப்புக்களாலும் இறைவன் திருமேனியில் கூறு கொண்டு இயைந்த சிறப்பு அம்மைக்கே உரியதாகும். இது கருதியே, திருமேனி இயைபிற்குத் தேவர், மக்கள் முதலியோருள் யாரையும் கூறாது, உமையம்மையாரை

1. சிவஞான சித்தி, சுபக்கம், செ. 298.

எடுத்துக் கூறினர். மேலும், மக்கள் உடல் ஊனுடலா தலின், அதன்கண் இறைவன் திருமேனி இயைதல் எவ்வாற்ருனும் பொருந்தாததொன்று. இறைவன் அருள் திருமேனிக்கு ஊனுடல் வேறென்பதும், அது கலத் தற்கு உரியதன்று என்பதும் கருதியே, "1 ஊனர் உடல் புகுந்தான் உயிர் கலந்தான்" என்று கூறினர் அடிகள். புகுதல், கலத்தல் என்னும் இரண்டற்கும் வேற்றுமை பெரிதென்பது அறிந்தது. ஓர் இல்லினுட் புகுந்தான் என்று கூறலாமே யொழியக் கலந்தான் என்று கூறுதல் பொருந்தாதென்பது எளிதில் அறியத்தக்கது. மேலும், கண்ணப்ப நாயனர் கண்ணொளி இறைவன் கண்ணொளியில் இயைந்தது மேற்கூறியதற்கு முரணுகாது. என்னை? அறிவுருவம் ஆகிய உயிர், இறைவன் திருவடி நீழலில் ஒடுங்குங்கால், அவ்வுயிர்க்கு ஆ தா ர மா க அமைந்த உடற் கூறுகள் எல்லாம் அவ்வம் மகாபூதங் களில் ஒடுங்கும் என்றும், கண்ணொளி சூரிய மண்டலத்தை அடையும் என்றும் மறைமுடிவிற் கூறப்பட்ட உண்மைக்கு ஏற்பக் கண்ணப்பர் கண்ணொளி, இறைவன் வலக்கண் ணுகிய சூரிய மண்டலத்தைச் சார்ந்தது என்னும் உண்மை புலப்பட அமைந்தது அந் நிகழ்ச்சியாதலின் என்க.

மொழியாற் பரவிய தேவரும், திருமேனியிற் கூறு கொண்ட அம்மையும், உள்ளத்தாற் கலந்த அடியாரும், முறையே, பரவுதல், கூறு கோடல், விரவுதல் என்னும் அவ்வளவில் இயைந்து இன்புற்றனரேயன்றி, மேன் மேலும் இடையருது இறைவன் திருவடிகளைக் காணும் நிலையில் இல்லை என்பது தோன்ற, "கழலிணைகள் காண் பாரோ" என்ருர். இறைவன் திருவடியைக் கண்ட அளவிலே, அக் காட்சி யொழிந்து இன்புற்று இயை தலினும், அக் காட்சி இடையருது நிகழ்தல் மிக்க இன்பம் பயப்பதாகும் என்பது அடிகள் உட்கோளாகும். இதனை,

---

1. திருவாசகம், உயிருண்ணிப்பத்து 2.

> [1] "கண்ணார்நுதலோய் கழலிணைகள்
> கண்டேன் கண்கள் களிகூர
> எண்ணா திரவும் பகலும்நான்
> அவையே யெண்ணும் அதுவல்லால்
> மண்மேல் யாக்கை விடுமாறும்
> வந்துன் கழற்கே புகுமாறும்
> அண்ணா எண்ணக் கடவேனோ
> அடிமை சால அழகுடைத்தே"

என்று அடிகள் பிறிதோரிடத்திற் கூறிய திருப்பாட்டு வலியுறுத்தல் அறிக. [2] "கூடும் அன்பினிற் கும்பிடலே யன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" என்னும் உண்மையடியார் பெருமையும் ஈண்டுக் கருதத்தக்கது. புட்பதந்தர் என்னும் வடமொழிக் கவிஞர் இடையறாத சிவ வழிபாட்டில் ஈடுபட்டு, அப் பெருமையைப் புலப்படுக்கும் முகமாகச் சிவபெருமானை முன்னிலைப்படுத்துக் கூறிய ஒரு சுலோகத்தின் மொழிபெயர்ப்புப் பின் வருவது:— "முப்புரப் பகைவ, முன்னர்க் கிடைத்த எப் பிறப்பினும் ஒரு கணப்பொழுதிலும் நின்னை வணங்கினேன் அல்லேன் என்னும் இவ் உண்மை, எனது இவ் வுடல் தோற்றத்தால் அனுமித்து அறியப்பட்டது. இப்பொழுது யான் வணங் கினமையின், வீடு பெறும் நிலையினன் ஆயினேன். ஆதலால் எதிர் காலத்திலும் உடலின்மையால் வணக்கஞ் செய்ய இயலாதவனாகின்றேன்; இறைவ, சென்ற காலத்தும் எதிர்காலத்தும் வணக்கம் செய்யாமையாகிய இக் குற்றங் கள் இரண்டனையும் பொறுத்து அருளல் வேண்டும்" என்பது. இதனால், வீடு பேற்றின்பத்திலும் அதற்குச் சாதனமாகிய திருவடிக் காட்சியையே மெய்யன்பர் வேண்டி நிற்கும் உண்மை புலனாதல் அறிக. இக் குறிக் கோளை உட்கொண்டே, "மேன் மேலுன்......கழலிணைகள் காண்பாரோ" என்று அருளிச்செய்தனர் அடிகள். கழல்களுக்கு நெடுமை கூறியது, "[3] பாதாளம் ஏழினுங் கீழ்ச் சொற்கழிவு பாதமலர்" என்றபடி, திருவடிகளின்

1. திருவாசகம், குழைத்த பத்து 9. 2. பெரிய புராணம், திருக்கூட்டச் சிறப்பு 8. 3. திருவாசகம், திருவெம்பாவை 10.

நெடுமை குறித்து என்க. ஒலித்தற் குறிப்பு, மடிமை யுற்றிருப்பாரை விழிப்பித்து நினை வூட்டற்காம். காண் பர்ரோ என்புழி ஓகாரம் ஐயப்பொருட்டு.

இத் திருப்பாட்டிற்குப் பலரும் இக் கருத்து உண் ராமல் உரை கூறியதோடு, "காண்பாரோ" என்னும் சொல்லைக் "காண்பு—ஆரோ" எனப் பிரித்து இடர்ப் படுவாராயினர். அடிகள் மனம் குழைந்து அமிழ்த ஒழுக்குப்போலப் பாடி அருளிய இன்னோரன்ன திருப் பாட்டுக்களில், இங்ஙனம் சொற் சிதைத்துப் பொருள் காண்டல் பொருந்தாதென்பது அறிக.

இதன்கண், இறைவனை மன மொழி மெய்கள் இயைந்து இன்புறுதலினும், அதற்குச் சாதனமான திருவடிக் காட்சி இடையறாது நிகழ்தல் சிறந்ததாகும் என்னும் உண்மை வலியுறல் வேண்டி, இறைவனை முன்னிலைப்படுத்து, நெஞ்சிற்கு அறிவுறுத்தமை பெறப் படுதலின், அறிவுறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாயவாறு அறிக.

18. அரியானே யாவர்க்கும்
அம்பரவா அம்பலத்தெம்
பெரியானே சிறியேனை
ஆட்கொண்ட செய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன்
வியந்தலறேன் நயந்துருகேன்
தரியேன்நான் ஆமாறென்
சாவேன்நான் சாவேனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் இறைவன் திருவடிக் காட்சி பெறுதற்கு அரியது ஆகுங்கொலோ என ஐயுற்று வியந்து கூறிய அடிகள், பிறர்க்கு அரிய அத் திருவடிச் சார்பு, தம்மை ஆட்கொள்ளுதற்கு எளிதாகக் கிடைத்தும், அத் திருவடிக்கண் மன மொழி மெய்கள் ஈடுபடாமை குறித்து இத் திருப்பாட்டில் இரங்குகின்றார்.

ப-ரை: யாவர்க்கும் அரியானே — அமரர் முனிவர் முதலிய எல்லோர்க்கும் காண்டற்கு அரியவனே, அம்பரவா — நுண்ணிய ஞான வெளியில் விளங்குகின்றவனே, அம்பலத்து எம் பெரியானே — பெருவெளியாகிய பொதுவில் நின்று அருட் கூத்தியற்றும் எங்கள் பெரியோனே, சிறியேனை ஆட்கொண்ட பெய்கழல் கீழ்—அறிவாற்றல்களால் சிறுமையுடைய அடியேனைத் தொண்டனாகக் கொண்ட நின் திருவடிக்கண்ணே, விரை ஆர்ந்த மலர் தூவேன்—மணம் நிறைந்த மலர்களை இட்டு வழிபாடு செய்யேன், வியந்து அலறேன்—வியப்புற்று உரத்த குரலில் கூவிக் கதறேன், நயந்து உருகேன் — அன்பினால் ஈடுபட்டு உருகேன், நான் ஆம் ஆறு என்—யான் உய்யுமாறு எங்ஙனம்? தரியேன்—நினக்கு ஆளாய் வழியடிமை செய்யாமல் இந் நில வுலகத்தில் தங்கி வாழேன், நான் சாவேன் சாவேன் — யான் இறந்து படுவேன், இறந்து படுவேன் என்பது.

வி-ரை: இறைவன் மெய்ஞ்ஞானத்தாலன்றித் தேவர், முனிவர் முதலியோராலும் காண்டற்கு அரியன் என்பார், "அரியானே யாவர்க்கும்" என்றார். [1] "பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார், யாராலுங் காண்டற் கரியான் எமக்கெளிய, பேராளன்" என்னும் அடிகள் திருவாக்கும், [2] "சார்வருந் தவங்கள் செய்து முனிவரும் அமரர்தாமும், கார்வரை யடவி சார்ந்துங் காணுதற் கரியான்" என்னும் பெரிய புராணச் செய்யுளும் இதனை வலியுறுத்தும். அம்பரம்—ஆகாயம். ஈண்டு, நுண்ணிய ஞான வெளியைக் குறிக்கும். இதனைச் சிதாகாசம் எனவும், தகராகாசம் எனவும், சூக்கும வெளியெனவுங் கூறுவர். ஞான யோகிகள் மிக்க தூய்மையுடைய தம் நெஞ்சத் தாமரையை அலர்வித்து, அதன் நடுவண் உள்ள நுண்ணிய வெளியாகிய தகராகாசத்தில், இறைவன் விளக்கத்தை அகக் கண்ணாற் கண்டு வழிபட்டு இன்புறுவர் என்னும் இவ்வுண்மை மறை முடிவிற் காணப்படுவது.

1. திருவாசகம், திருவம்மானை 2. 2. பெரியபுராணம், கண்ணப்பர், செ. 126.

இதனைத் தகர வித்தை என்று பெரியோர் கூறுவர். இக் காட்சி வழிபாடு ஞான யோகத்தின் முதிர்ந்த மெய்யன்பர்க்கன்றிப் பிறர்க்கு அரியதொன்றும். இத் தகராகாசத்தையே, [1] "சிற்பர வியோமமாகும் திருச்சிற்றம்பலம்" என்பர் சேக்கிழாரடிகள். சிற்பர வியோமம் என்பது ஞானப்பரவெளி என்னும் பொருளதாகும். இறைவன் இந் நுண்ணிய பரவெளியில் சூக்குமமாக விளங்கும் தன்னை எல்லோரும் கண்டு, கும்பிட்டு உய்ய வேண்டுமென்னுங் கருணை காரணமாக, அம்பலமாகிய பொதுப் பெரு வெளியில் நின்று, மேள தாளங்களுடன் அருட்கூத்தியற்றும் இயல்பைக் குறித்தே, "அம்பரவா அம்பலத்தெம் பெரியானே" என்றூர். யாவர்க்கும் காண்டற்கு அரிய நிலை சிதாகாசத்தில் விளங்குவதென்பதும், காண்டற்கு எளிய நிலை அம்பலப் பொதுவில் தோன்றுவதென்பதும் ஈண்டுப் பகுத்து உணரத்தக்கன. அம்பலத்தெம் பெரியானே என்றதனுல், அம்பலம் பெரிய பொது வெளி யென்பதும், தகராகாசமாகிய அம்பரம் நுண்ணிய சிறப்பு வெளி யென்பதும், இறைவன் ஈரிடத்தும் முறையே தூல சூக்கும நிலையில் விளங்குவான் என்பதும் புலப்படுத்தவாரும். "பெரியானே" என இறைவனை விளித்து, அதற்கு அடுத்துத் தம்மைச் "சிறியேனை" என்று குறிப்பிட்டது, பெருமைக்கு எல்லையாக இறைவனையும், சிறுமைக்கு எல்லையாகத் தம்மையும் குறிப்பிட்டபடியாம். [2]"யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான், யாவர்க்குங் கீழாம் அடியேனை" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதும் இங்கே கருதத்தக்கது. ஆட்கொள்ளல்—ஆளாகக் கொள்ளல். ஈண்டு ஆள் என்பது பணிபுரியும் அடிமை ஆளைக் குறிக்கும். [3] "மீளா அடிமையுமக்கே யாளாய்" என்புழிப்போலக் கொள்க. இறைவன் திருவடிக்குத் தொண்டு செய்யும் பேறே மெய்யன்பர்க்கு ஆட்படுந் தன்மையை அளிப்பதாகும். ஆதலின், அன்பரை ஆட்கொள்ளுதற்கு இறைவன் திருவடியே

1. பெரிய புராணம், தில்லை வாழந்தணர் புராணம், செ. 2.
2. திருவாசகம், திருவெண்பா 8. 3. சுந்தர மூர்த்திகள் தேவாரம்,

கருவியாதலும், ஒற்றுமை நயத்தால் வினை முதலாதலுங் கூடும். ஈண்டு, ஒற்றுமை நயமென்றது அவயவமும் அவயவியும் வேறாகாது இயைந்திருத்தல் பற்றியாம். கருவியாதலை, 1 "கண்ணார் கழல் காட்டி நாயேனை யாட்கொண்ட அண்ணாமலையான்" எனவும், 2 "ஒப்பிலாதன உவமனிலிறந்தன ஒண்மலர்த் திருப்பாதத்து, அப்பன் ஆண்டு" எனவும் போந்த திருவாக்குக்களானும், வினை முதலாதலை, 3 "போற்றியாம் உய்யவாட்கொண்டருளும் பொன் மலர்கள்" என்பதனுலும் அறியலாம். இறைவன் தன் திருவடியைக் காட்டி, அன்பரை ஆட்கொள்ளுவனுயி னும், ஆட்படும் அன்பர்க்குப் பற்றுக்கோடாக இருப்பது அத்திருவடியே ஆதலின், ஈண்டு, அதனை வினைமுதலாக்கி, "ஆட்கொண்ட பெய்கழல்" என்றார். பெய்கழல் என்றது கழல் அணியப்பட்ட திருவடியை உணர்த்தும். கீழ் என்பது ஏழாம் வேற்றுமை உருபாயினும், ஈண்டுக் கீழிடத்தை உணர்த்துவதாகும். திருவடித் தொண்டிற்கு அத் திருவடியின் கீழிடத்தைக் குறித்தது, ஆண்டவன் பெருமையும் அடியவர் சிறுமையும் புலப்படுத்தற்கென்க. ஈண்டுச் சிறுமை என்றது இறைவன் பெருமை கருதிப் போந்ததன்றி, உலகத்தவரைக் கருதிப் போந்தது அன்றென்பது. 4 "யாமார்க்கும் குடியல்லோம்" என்னும் திருவாக்கு ஈண்டு நினைக்கத்தக்கது.

மண முள்ளன இல்லன; விதிக்கப்பட்டன விலக்கப் பட்டன வென்று பகுத்தறியாமல், பல மலர்களையும் மிகுதியாக வாரியிறைத்தல், ஆடம்பர நிமித்தம் இறை வழி பாட்டில் தலைப்படுவார் இயல்பாகும். அங்ஙனமின்றி, நறுமண மிக்க மலர்கள் சில வாயினும், அவற்றை விதி முறையின் ஆராய்ந்தெடுத்து, மென்மையாகத் திருவடிக் கீழ்ப் பெய்தல் மெய்யன்புடையார் இயல்பாகும். இவ் வியல்பை மேற்கொண்டிலேன் என்பார், "விரையார்ந்த மலர் தூவேன்" என்றார். தூவுதல்—மென்மையாகப்

1. திருவாசகம், திருவம்மானை 10. 2. திருவாசகம், அதிசயப் பத்து 1. 3. திருவாசகம், திருவெம்பாவை, செ, 20. 4. திருவாசகம், திருச்சதகம் 30.

பெய்தல். "வியந்தலறேன்" என்புழி, வியப்புப் புதுமை பற்றி உண்டாயது. "[1] புதுமை பெருமை சிறுமை யாக்க மொடு, மதிமை சாலா மருட்கை நான்கே" என்புழி, மருட்கை புதுமை பற்றித் தோன்றும் என்பர் இயனூலார். மருட்கை என்பதற்குப் பொருள் வியப்பாகும். புதுமை, பண்டு ஒரு காலும் கண்டறியாத நிகழ்ச்சியாகும். ஈண்டு அந் நிகழ்ச்சி யாதெனின், எத்துணையும் பெரியோன் ஒருவன் எத்துணையும் சிறியான் ஒருவனை ஆட்கொண்ட தாகும். இறைவன் ஆட் கொள்ளுதற்கு அடிகள் மிகவும் தகுதியுடையவராயினும், அவர் தம்மைக் கருதியது அவ்வாறு. "எம்பெரியானே சிறியேனை யாட் கொண்ட பெய்கழல்" என்றது இவ் வுண்மையைப் புலப்படுத்தும். இறைவன் ஆட்கொள்ளுதற்குத் தகுதி மிகவுடைய மெய் யன்பராதல் வேண்டும். இது பண்டு தொட்டுள்ளது. ஆதலின், இப்பொழுது அத் தகுதி சிறிதும் இல்லாத தம்மை ஆட் கொண்டது பண்டு நிகழாத புதுமை எனக் கொண்டு, அப் புதுமை பற்றி,"வியந்து அலறேன்" என்றார். எதிர்பாராத நிலையில் ஒரு புதுமையைக் கண்டுழி, மெய்ம் மறந்து ஆரவாரித்தல் மக்கட்கு இயல்பு ஆதலின், அது செய்திலேன் என்பார், "அலறேன்" என்றார். "நயந்து உருகேன்" என்புழி, நயத்தல் அன்பு செய்தலாதலின், அன்பினாற் கரைந்து நெஞ்சம் உருகப் பெற்றிலேன் என்றார். தூவல், அலறுதல், உருகுதல் இம் மூன்று செயல்களும் முறையே மெய் மொழி மனம் ஆகிய முக் கரணங்களாலும் நிகழ்வனவாம். நறு மலர் கொடு தூவு தற்கு உடல் இடம் தரவில்லையானால், மொழிப் பணியாகிய வியந்தலறுதலைச் செய்யலாம்; அதற்கும் இயன்றிலதேல், நெஞ்சத் தளவில் நினைந்து உருகலாம் என, அருமை, எளிமை கருதி இவ்வாறு கூறப்பட்டன. ஆனால், உள்ளம் உருகுதலை நோக்க அலறுதலும், அதனை நோக்க மலர் தூவுதலும் எளிய செயல்களாகவும், இவ்வாறு கூறுதல் என்னையெனின்; பிறிதோர் உபகரணத்தைத் தேடுதலினும்,

1. தொல். பொருள், சூத். 255.

உரத்த குரலாற் கூவிக் கதறுதல் எளிதாதலும்; மனம் அமைதியுற்று உருகுதல் அதனினும் எளிதாதலும் கருதி யென்க. [1] "போதும் பெருவிடிற் பச்சிலையுண்டு புன லுண்டெங்கும், ஏதும் பெருவிடில் நெஞ்சுண்டன்றே" என்னும் பெரியோர் உரையும் இதனை வலியுறுத்துவ தாகும்.

பிறப்பு இறப்புக்களினின்றும் விடுதி பெறுதற்குரிய சாதனங்களை இழந்திருத்தலின், எவ்வாறு கட்டு அற்று உய்தி பெறுவேன் என்பார், "நான் ஆம் ஆறு என்" என்றார். ஆதல்—பாச ஒழிவு பெற்றுத் தூயனாதல். மன மொழி மெய்கள் இறை வழிபாட்டில் தலைப்பட்டு உய்தி பெறுதலே மெய்யன்பர்க்கு உடலோடு கூடிய வாழ்க் கையின் நோக்கமாகும். அந் நோக்கம் நிறைவேறாத நிலையில், அவ் வுடல் வாழ்க்கை வெறுக்கத் தக்கதாகலின், "தரியேன்" என்றார். [2] "தரிக்கிலேன் காய வாழ்க்கை" என்பதும் இக் கருத்துப் பற்றி எழுந்ததே. பாசப் பிணிப் பிற் பட்டு உழன்ற தம்மை, அதனின் நின்றும் விடுவித்துக் கருவி கரணங்களை நன்னிலைப்படுத்து ஆட் கொண்ட இறைவனது பேரருளை நினைந்து வழிபாடு செய்தலே கடமையாகவும், அதனை மேற்கொள்ளாத நிலையில் வாழ் தலினும் சாதலே நன்று என்பார், "நான் சாவேன்" என்றார். தரியேன் என்ற அளவிலே சாதல் பெறப்படு மாயினும், மீண்டும் சாவேன் என்றது, எதிர் மறையாலும் உடன் பாட்டாலும் கருத்து வலியுறுதற் பொருட்டாம். [3] "புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல், அறங் கூறும் ஆக்கந் தரும்" என்புழி, "பின் புறங்கூறிப் பொய்த் தல் ஒழிதலின் சாதல் ஆக்கந்தரும்" என்றாற்போல, இறை வழிபாட்டிற்குப் பயன்படாத உடல் ஒழிந்தால், பின்னைப் பிறப்பிலாவது அக் குற்றம் நீங்கி அவ் வழிபாட்டில் தலைப்படல் கூடும் என்பது கருத்து. பிற் பிறப்பினும் அது கை கூடவில்லையாயின், கை கூடுங்காறும் சாதலே

---

1. பட்டினத்துப் பிள்ளையார் திருக்கழுமல மும்மணிக்கோவை, செ. 12

2. திருவாசகம், திருச்சதகம் 61. 3. திருக்குறள் 183.

வேண்டும் என்பார், "சாவேன் நான் சாவேனே" என்று அடுக்கிக் கூறினர். இவ் வடுக்கு, விரைவு பற்றியதூஉம் ஆம்; என்னை? இறைவழிபாடு இல்லாத நிலையில் ஒரு கணப் பொழுதும் அவ் வுடல் வாழ்க்கை இருத்தலாகா தென்பது கருத்தாகலின்.

இதன்கண், அடிகள் தம் சிறுமை அறிந்தும், திருவடித் தொண்டனுக்கிய இறைவன் பேரருளை நினைந்து செய்ய வேண்டிய பணிகளைச் செய்தற்கு முற்படாத நிலைக்கு இரங்கி, இறைவனை முன்னிலைப் படுத்து, இந் நிலையினும் சாதலே நன்று என்று கூறு முகமாக நெஞ்சிற்கு அறிவுறுத்தமை பெறப்படுதலின், அறிவுறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாய வாறு அறிக.

19. வேனில்வேள் மலர்க்கணைக்கும்
வெண்ணகைச்செவ் வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும்
பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊனெலாம் நின்றுருகப்
புகுந்தாண்டான் இன்றுபோய்
வானுளான் காணாய்நீ
மாளாவாழ் கின்றாயே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் இறைவன் திருவடிக் கண் தம் மன மொழி மெய்கள் ஈடுபடாமைக்கு இரங்கிய அடிகள், அக் கரணம் மூன்றனுள்ளும், மனமே மக்கள் எய்தும் பேறுகள் எல்லாவற்றிற்கும் சிறந்த காரண மாதலான், அது வீட்டிற்கு ஏதுவாக இறைவனை நினைந்து உருகுதலைச் செய்யாமல், கட்டிற்கு ஏதுவாக மகளிரை நினைந்து உருகுதலைக் கண்டு, அம் மனத்தை வெறுத் துரைக்கு முகமாக, இத் திருப்பாட்டில் இறைவனது அருமைப்பாட்டை நினைந்து அடிகள் இரங்குகின்றார்.

ப-ரை: வேனில் வேள் மலர்க்கணைக்கும் — காமன் எய்யும் மலர் அம்பிற்கும், வெண் நகை செவ்வாய் கரிய பானல் ஆர் கண்ணியர்க்கும் — வெள்ளிய பற்களையும்

சிவந்த வாயையும் கரிய குவளை மலர் போன்ற கண்களையும் உடைய மகளிர் பொருட்டும், பதைத்து உருகும் பாழ்நெஞ்சே — பதைப்புற்றுக் கரையும் பயன் அற்ற நெஞ்சமே, ஊன் எல்லாம் உருக—உடல் உறுப்புக்கள் எல்லாம் உருகும்படி, புகுந்து நின்று ஆண்டான்—உட் புகுந்து நிலைத்து நின்று ஆண்ட எம்பெருமான், இன்று போய் வான் உள்ளான்—இப்பொழுது பெயர்ந்து சென்று நுண்ணிய பரவெளியில் உள்ளான், நீ காணாய் — நீ கண்டிலை? (கண்டும்) மாளா வாழ்கின்றாயே — கெட் டொழியாமல் இன்னும் வாழ்கின்றனையே என்பது.

வி-ரை: வேள் என்பது முருகனையும் உணர்த்தும் ஆகலின், அவனை விலக்கி ஈண்டுக் காமனை உணர்த்துதற்கு வேனில் என்னும் அடை புணர்க்கப்பட்டது. காமன் மலர்க் கணை மிகுதியாகப் பெறுதற்கும், அவற்றைக் கொண்டு மக்களைக் காம நிலையில் தலைப்படுத்தற்கும் உரிய காலம் இளவேனில் ஆதலின், ஈண்டு, "வேனில்வேள்" எனப்பட்டான். வேள் கணை என்றது மலர்க்கணை என்றது, 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்றபடி, எய்பவன் ஆற்றல் புலப்படுத்தற்கு என்க. பவழம் போன்ற செவ்வாயில், முத்து நிரைத்தன்ன வெண்பற்களைக் குறிப்பிட்டது, புன் முறுவல் பூத்த முகம் என்றற்காம்.

பானல்—குவளை ; ஆகுபெயரால் மலரையுணர்த்திற்று. செங் குவளையும் உண்டு ஆதலின், கரிய என்பது இனம் விலக்கிய அடை மொழியாகும். ஆர்—உவமப் பொருட்டு. மகளிர் கண்களில் வெண்மை செம்மை முதலிய நிறங் களும் உளவேனும், கருமையே ஆடவரை மயலூட்டு தற்குச் சிறந்தது ஆகலான், "கரிய பானலார் கண்ணியர்" என்றார். 1 "நெஞ்சமு நிறையும் நீல நெடுங்கணாற் கவர்ந்த கள்வி" என்புழி, ஆடவர் உள்ளத்தைக் கவர்தற்குக் கருங் கண்ணே வலியுடையது என்று கூறியது காண்க. மயலுறுத்தற்குப் புன் முறுவல் பூத்த முகமும், இணக்கக்

1. சீவக சிந்தாமணி, செ. 1024.

குறிப்பைப் புலப்படுத்தற்குக் கருங் கண்ணும் கூறப்பட்டபடியாம். 1 "காதன்மை கண்ணுளே அடக்கிக் கண் எனும், தூதினுல் துணி பொருள் உணர்த்தி" என்பதும் இதனை வலியுறுத்தும். காமன் அம்புகளுள் நீல மலரும் ஒன்ருதலின், உவமேயப் பொருளாகிய கண்களே யன்றி, உவமையாகிய அம் மலரும் ஆடவர்க்கு மயல் விளைக்கும் இயல்பின என்பது தோன்ற, "கருங்கண்" என்ளுது "கரிய பானலார் கண்" என்று கூறப்பட்டது. வெண்மை, கருமை, செம்மை என்பன முரண் தொடையாக நின்று இன்புறுத்துவனவாம். கணைக்கும் கண்ணியர்க்கும் என் புழி, உம்மைகள் எண்ணுப் பொருளன. பதைத்தலையும் உருகுதலையும் நிரல் நிறையாக்கி, மலர்க்கணைக்குப் பதைத்து,கன்னியர்க்கு உருகும் நெஞ்சே எனக் கோடல் பொருட் சிறப்புடையதாகும். காமன் அம்பு பட்ட அளவில் துடித்தலும், அதன் முதிர்ச்சியில் மகளிரை நினைந்து உருகுதலும் நெஞ்சிற்கு இயல்பாதலின், இவ்வாறு கூறப்பட்டது. நெஞ்சிற்குப் பதைத்தலும் உருகுதலும் ஆண்டவனை முன்னிட்டு நிகழின் நன்ரும். அந் நிலையில் அவை அன்புச் செயல்களாக நின்று, இறை யருளிற் கலப்பித்துப் பேரின்பத்தில் தலைப்படுத்துவனவாகும். 2 "வேட்ட நெஞ்சாய்ப், பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ் மேலாகப் பதைத்துருகும் அவர்" என அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதும் ஈண்டு நினைக்கத் தக்கது. இறைவன் பொருட்டு மேற்கொள்ளத் தக்க பதைத்தலையும் உருகுதலையும் இழிந்த காமங் கருதி மேற்கோடல் மிக்க தீங்கு பயக்குமாதலின், அந் நெறியிற் செல்லும் நெஞ்சத்தை வெறுத்து, "பாழ் நெஞ்சே" என்ருர்.

"ஊனெலாம்" என்புழி, எல்லாம் என்பதனுல், என்பு, நரம்பு முதலிய வன்மை மென்மைப் பகுதிகள் அனைத்தையும் கொள்ளல் வேண்டும். மெய்யன்பர்க்கு உள்ளொளி பெருக, ஊன் உருகுமென்பது அடிகள் அநுபவத்திற் கண்டது. 3 "ஊனினை உருக்கி உள் ஒளி

1. சீவக சிந்தாமணி, செ. 1485. 2. திருவாசகம், திருச்சதகம் 21. 3. திருவாசகம், பிடித்த பத்து 6.

பெருக்கி" என்னும் திருவாக்கையும் நோக்குக. ஊனுருகி உடல் மெலிதல் இழிந்த காமத்தானன்றித் தவத்தால் நிகழுமாயின், அது சிறந்த தொன்றாகும். "விரதந் தனில் இளைத்த மேனி", 1 "என்பெழுந்து இயங்கும் யாக்கையர்" என்பனவற்றால் இவ்வுண்மை தெளியலாம். புகுந்து நின்று ஆண்டான் என்புழி, புகுதல் ஓரிடத் தினின்றும் பிறிதோரிடத்தில் நுழைதலாகும். எங்கும் நிறைந்த பொருளாகிய இறைவனுக்குப் புடை பெயர்ச்சி கூறுதல் எங்ஙனம் பொருந்தும் எனிற் கூறுவேன். சீவபோதம் முனைத்திருக்குங்கால் சிவபோதம்புலப்படாமை யும், சிவபோதம் மேற்பட்டிருக்குங்கால் சீவபோதம், விளக் கின்முன் இருள் போல ஆற்றல் கெட்டு ஒழிதலும் பெரியோர் அனுபவத்திற் கண்டவை. 2 "என்னுள் உழிதர்வேனை, எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுளே கரக்கும்" எனவும், 3 "என்னறிவை உள்ளடக்கி என் போல் வருமௌனி, தன்னறிவுக்குள்ளே நான் சாருநாள் எந்நாளோ" எனவும் போந்த அனுபவ மொழிகள் இவ் வுண்மையைத் தெளிவிப்பனவாம். இங்ஙனம் உயி ரறிவு முனைத்திருக்குங்கால், ஆண்டுப் புலப்படாமல் இருந்த இறைவனது வியாபக நிலை பண்டைத் தவத்தால் விளக்கம் உற, அந்நிலை கருதியே இறைவன் வெளி யிடத்திருந்து உட்புகுந்ததாகக் கூறியருளினர். இவ் வுண்மையை, 4 "என் மனமே ஒன்றிப்புக்கனன் போந்த சுவடில்லையே" என்னும் பெரியார் திருமொழி புலப் படுத்தி நிற்றல் அறிக. ஈண்டு, அடிச் சுவடு தோன்றா வாறு புக்கனன் என்பது மேற் குறிப்பிட்ட கருத்தைப் புலப்படுத்துவதாகும். "உருகப் புகுந்தாண்டான்" என் புழி, உருக என்னும் செயவென் எச்சம் காரியப் பொருட்டு. அருவருக்கத் தக்க ஊனுடம்புள் புகுந் தாண்டான் என்றது, இறைவனது பேரருள் உடைமை யைப் புலப்படுத்தற்கு என்க. உட்புகுந்த அந் நிலை,

1. திருமுருகாற்றுப்படை, அடி 130. 2. அப்பர் தேவாரம், "எம்பிரானென்றதே." 3. தாயுமானர், எந்நாட்கண்ணி. 4. அப்பர் தேவாரம், கோயில் திருவிருத்தம், "கன்மனவீர்."

பற்றிக் கொள்ளுதற்கு எளிதாக இருந்தும், நெஞ்சம் அது செய்யாமல் தவறிவிட்டது என்பது குறிப்பு. அருளுடைமையால் அன்று எளிதிற் புகுந்தாண்ட இறைவன், இன்று தம்மை விட்டு, மனத்திற்கு எட்டாத நுண்ணிய பரவெளியில் மறைந்து விட்டானே என்று இரங்குவார், "இன்று போய் வானுளான்" என்றார். வான்—சிற்பர வியோமமாகும். "இன்று போய் வானு ளான்" என்றது, அடிகளை இறைவன் இன்னும் சின்னாள் இருத்தியென உருக்கரந்த நிலையில் இரங்கிக் கூறியதாம். இறைவன் உருக் கரந்ததை நீ அறிந்திலேயோ (அறிந் துளாய்) என்பார், "காணாய் நீ" என்றார். இப் பொருட்டாதல் ஓசை வேற்றுமையாற் காண்க. இதனை வடநூலார் காகு என்பர். காணாய் என்பது முன்னிலை அசையுமாம். மாளாமல் என்பது ஈறு கெட்டு மாளா என நின்றது. பேரருளுடைமையால் ஊனுடல் உருகப் புகுந் தாண்ட இறைவனது பேருதவியை நினைந்து, பதைத்து உருகாமலும், கைவிட்டகன்று பரவெளியில் புகுந்ததைக் கண்டு வைத்தும், இறவாமலும் இருக்கும் நெஞ்சத்தின் கொடுமையை நினைந்து, அஃது இறவாமல் இருத்தற்கு வருந்தி, "மாளா வாழ்கின்றாயே" என்றார். மனமாட்சி வினை விளைவு இன்மைக்கு ஏதுவாம் என்பதும் இங்கே கருதத்தக்கது. இன்னுயிர்க் கணவனை இழந்த கற் புடையாள் உடன் இறத்தல், அல்லது வருத்த மேற்கொடு கைம்மை நோன்பியற்றல் அன்றி, வாழ்க்கை நலத்தை விரும்பமாட்டாள். அதுபோல, இறைவனைப் பிரிந்த நிலையில், நெஞ்சம் கெட்டொழிதல் அல்லது வருந்தி வாடியிருத்தல் வேண்டுமேயன்றி வாழ்வில் தலைப்படல் கூடாததாகவும், அதற்கு மாறாகத் தம் நெஞ்சம் வாழ்க்கை நலத்தில் சேறலை வெறுத்து, "வாழ்கின்றாயே" என்று இரங்கிக் கூறினர்.

இப் பதிகத்து ஏழு திருப்பாட்டுக்களிலும், தம் நெஞ் சத்தின் மாறுபட்ட நிலையை வெறுத்து, இறைவனை முன்னிலைப் படுத்துக் கூறுமுகமாக, நெஞ்சிற்குப்

பலவாறு குறிப்பால் அறிவுறுத்தும் எட்டாவது திருப் பாட்டில், நெஞ்சின் கொடுமை பொறுது, "சாவேன் நான் சாவேன்" என்று இறுதியுரை கூறியும், அது தன்னிலைப் படாமை கண்டு வருந்தி, இத் திருப்பாட்டில், அந்நெஞ்சையே முன்னிலைப் படுத்து, அதன் இழிவை எடுத்துரைத்து அறிவுறுத்தமையின், அறிவுறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் வெளிப்பட்டு நிற்றல் அறிக.

20. வாழ்கின்றாய் வாழாத
நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றாய் ஆழாமற்
காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச்
சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக்
கடலாய வெள்ளத்தே.

கூ-ரை: முன்னைத் திருப்பாட்டில் இறைவனை நினைந்து உருகாமல் உலக வாழ்க்கையில் ஈடுபட்டு உருகும் தம் மனத்தை வெறுத்து உரைத்த அடிகள், இத் திருப்பாட்டில் இறைவனது அருமைப் பாட்டையும் பேருதவியையும் அறியாமல் துன்பக் கடலுள் மூழ்கிக் கிடக்கும் அந்நெஞ் சத்தை இடித்துரைக்கும் முகமாக, அப்பெருமான் சார் பின்மையால் நேரும் தீங்கை எடுத்துக்கூறி இரங்கு கின்றார்.

ப-ரை: வாழாத நெஞ்சமே--பேரின்ப வாழ்க்கையில் தலைப்படாத நெஞ்சமே, வாழ்கின்றாய்—கெடாமல் இருக் கின்றாய், வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய்—வலிய தீவினையின் வயப்பட்டு அதனுள்ளே அழுந்துகின்றாய், ஆழாமற் காப்பானை ஏத்தாது—அங்ஙனம் அழுந்தாமற் காப்பாற்றும் பெருமானைப் புகழ்ந்து பாராட்டாமல், உனக்குக் கேடு சூழ்கின்றாய்—உனக்கு நீயே கேடு தேடிக்கொள்ளக் கருதுகின்றாய், பல் காலும் சொல்கின்றேன்—உனக்குப் பல முறையும் இடித்துக்கூறி வருகின்றேன், அங்ஙனங்

கூறியும், அவலக் கடலாய வெள்ளத்து—துன்பம் ஆகிய கடற்பெருக்கில், நீ வீழ்கின்றாய்—நீ வீழ்ந்து மூழ்கு கின்றாய் என்பது.

வி-ரை: உயிர் என்றும் அழிவில்லாத பேரின்ப வாழ்க்கையில் தலைப்பட்டு உய்தற்கும், விரைவில் அழிந் தொழியும் இயல்பினதாகிய சிற்றின்பத்தில் அழுந்திக் கெடுதற்கும் நெஞ்சமே கருவியாகும். இதனை, முறையே, [1] "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே" எனவும், [2] "உழுத சால்வழி யேயுழு வான்பொருட், டிழுதை நெஞ்சமி தென்படு கின்றதே" எனவும் கூறிய அனுபவ வுரைகள் தெளிவிப்பனவாம். இத்தகைய நெஞ்சம் தாம் கருதும் வாழ்க்கைக்குப் பயன்படாமை குறித்து, அதனை, "வாழாத நெஞ்சமே" என விளித்து, நன்மை செய்யாமை யோடு அமையாது, தீமை செய்தற்கும் முற்படுதல் குறித்து, நீ இறவாமல் இருக்கின்றாயே என்பது தோன்ற, "வாழ்கின்றாய்" என இரங்கிக் கூறினார்.

நெஞ்சம் கெட்டொழியாமல் இருத்தலாலே வலிய வினைக்கட்பட்டு, அதன்கண் அழுந்த நேர்ந்ததென்பது கருத்து. வல்வினை மெல்வினை என வினைகளை இருதிறப் படுத்துரைப்பர். அறம் பாவம் என்னும் இரண்டன் கண்ணும் வன்மை மென்மையுள வெனினும், ஈண்டு வல் வினை யென்றது கொடிய தீவினையை. ஆற்றல் மிக்க தீவினை பயன் செய்யுங்கால் எதனாலும் தடைப்படுத்த இயலாததாகும். [3] "வல்வினை வளைத்த கோலை மன்னவன், செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது" என்புழி, வலிய வினையின் விளைவைப் பாண்டியன் உயிர் கொடுத்துத் தடைப்படுத்தினான் என்று இளங்கோவடிகள் திறம்படக் கூறியதனால், உடலினின்றும் உயிரைப் பிரிக்கும் அத்துணை யாற்றல் வல்வினைக்கு உண்டென்பதை அறியலாம். செயலில் துன்பத்திற்கு மூலமாகிய தீவினையையும்,

1. திருஞான சம்பந்தர் தேவாரம், திருவலஞ்சுழி 1.
2. அப்பர் தேவாரம், தனித் திருக்குறுந்தொகை "எழுதுபாவைநல்லார்"
3. சிலப்பதிகாரம், 25, 98.

நுகர்ச்சியில் நல்வினைப்பயனாகிய இன்பத்தையும் விழைதல் உலகத்து இழிந்த மக்கள் இயல்பு. அவர்க்குக் கொடிய தீவினையைச் செய்வதில் விருப்பம் உண்டாதற்குக் காரணம், அப்பொழுது பின்வரும் பயனை நினையாமல் அவ்வினையால் அன்னார் மனம் உவகையடைதலே யாகும். வினை விளைவாகிய பயனை மெய்யென உணர்ந்தவர்க்கே தீவினையில் அச்சம் உண்டாகும். அவ்வுண்மை யுணராதார்க்கு அச்சம் இன்றாதலோடு உவகையும் உண்டாமென்பது . உலகியலிற் கண்டது. பயனாகிய பெருந் துன்பத்தைச் சிறிதும் கருதாமல், மெல்வினையையும் உவர்த்து, வல்வினையை மேற்கொண்டு, அதன் கண்ணும் அழுந்துதல் என்ன அறியாமை என்பார், “ வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய் ” என்றார். பண்டைப் பிறப்புக்களின் தொடர்ச்சியால் ஆற்றல் பெற்றுத் தன்னுள் அழுத்தும் அவ்வினையினின்றும் எவ்வாறு கரையேற இயலுமெனின், “ [1]இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின், வருபவக் கடலில் வீழ் மாக்கள் ஏறிட, அருளுமெய் அஞ்செழுத்து” என்னும் சேக்கிழார் அருண்மொழிப்படி, ஆண்டவனை நினைவுகூர்தல் ஆகிய தவத்தில் தலைப்பட்டால் உய்தி பெறலாம். அங்ஙனம் கரையேற்றி ஆளுதற்குரிய இறைவனை நினைந்து முறையிட்டிலை என்பார், “ ஆழாமற் காப்பானை ஏத்தாது” என்றார். ஏத்தாமையே கேடு தேடிக் கொண்டதாக முடியும் என்பது கருத்து. செய்யத் தகாதனைச் செய்தலும், செய்யத்தக்கதைச் செய்யாமல் விடுதலும் கேட்டிற்குக் காரணம் ஆகும். இங்கே, “வல்வினைப்பட் டாழ்தல்” தகாதனைச் செய்தலும், “ காப்பானை ஏத்தாமை ” தக்கதைச் செய்யாமல் விடுதலும் ஆகும். ஆதலின், இரண்டு வகையானும் கேடு தேடிக்கொண்டனை என்பார், “ சூழ்கின்றாய் கேடுனக்கு ” என்றார்.

உனக்கு என்பதை இடைநிலை விளக்காகக் கொண்டு, “ உனக்குச் சொல்கின்றேன் ” எனக் கூட்டுக. கொடிய தீவினை, பயன் விளைக்குங்கால் கொடுந் துன்பமாக

1. பெரிய புராணம், திருநாவுக்கரசர் புராணம், செ. 129.

முடியும் ஆதலின்; 'வல்வினைக்குள் அழுந்தற்க' என்று பலமுறை இடித்துரைத்தும் நன்னெறிப்பட்டிலையே என்று இரங்குவார், "உனக்குச் சொல்கின்றேன் பல்காலும்" என்றார். 1 "இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன், கெடுப்பா ரிலானுங் கெடும்" என்னும் நீதி மொழியைக் கடைப்பிடித்து, இடித்துரைத்தலின்றிக் கேடு அடைய விடுதல் அறம் அன்றெனக் கொண்டு, ஒரு முறை இரு முறை யின்றிப் பல முறையுஞ் சொல்கின்றேன் என்பார், "பல் காலும்" என்றார். இடித்துரைப்பார் ஓரளவிற் கூறியும், கேட்பார் அதனை யேற்றுக்கொள்ளவில்லை யானால், அவ்வளவில் விட்டு ஒழிதல் இயல்பு. அங்ஙனம் ஒழியாது இன்னும் சொல்லி வருகின்றேன் என்பது தோன்ற, "சொல்லினேன்" என்று இறந்த காலத்தாற் கூறாது, "சொல்கின்றேன்" என நிகழ்காலத்தாற் கூறினர். அங்ஙனம் கூறியும் கேளாமல் வல்வினைப்பட்டு அழுந்துவதால் விளையும் பயன் இன்னவென்பதை நான்காம் அடியிற் கூறுகின்றார்.

வினை வலியதாகலின், அதற் கேற்பப் பயனை அவலக் கடல் வெள்ளமாகக் கூறினர். வல்வினை மூலமும், அவலம் அதன் பயனும் ஆகும். கடல் பெருகிக் கரை புரண்டு ஓடும் நிலையில் அதனைக் கடல் வெள்ளம் என்று கூறலாம். ஆழமாயினும், நிலையான நீரில் வீழ்வார் ஒரோவழி உய்தல் கூடும். அந் நீர் பெருக்கெடுத்து ஓடும் நிலையில் வீழ்வார் உய்தலரிது. இவ் வுண்மை கருதியே, வல்வினைப் பயனாகிய துன்பம் ஆற்றொணாதது எனக்கொண்டு, "அவலக் கடலாய வெள்ளம்" என்றார். "வல்வினைப் பட்டு" என்பதற்கேற்ப, "அவலக் கடலாய வெள்ளத்தே" எனவும், "ஆழ்கின்றாய்" என்பதற்கேற்ப, "வீழ்கின்றாய்" எனவும் கூறியது, கருதி இன்புறத் தக்கது. செயல் முன்னரும் பயன் பின்னரும் நிகழ்தல் இயல்பு. இங்கே செயல் வலியதாகலின், அது நிகழும் பொழுதே பயனும் உடன் நிகழ்தல் குறித்து, "வீழ்வாய்" என்னாது,

1. திருக்குறள் 448.

வீழ்கின்றாய்" என்றார். ஒரு வினையைச் செய்தவனிருக்க, அவனை விட்டு, அதன் பயன் மற்றொருவனை அடையாதாதலின், வல்வினைக் கண் அழுந்திய நீயே அதன் பயனையும் நுகர்தற்குரியை என்பது தெளிவுறுத்தற்கு, "வீழ்கின்றாய்" என்னும் முன்னிலை வினையாற் பெறத் தக்க எழுவாயை வெளிப்படுத்து, "வீழ்கின்றாய் நீ" என்று கூறியருளினர்.

இதன்கண், நெஞ்சை நோக்கி, 'பலகாலும் இடித்துரைத்தும் கேளாமல் கொடிய தீவினைச் செயலில் தலைப்படுகிறாய்; இது பெருந்துன்பக் கடலில் மூழ்குதற்கு ஏதுவாம்' என்று அறிவுறுத்தமை வெளிப்படக் கிடத்தலின், **அறிவுறுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய்", "சூழ்கின்றாய் கேடுனக்கு" என்பனவற்றால் வைராக்கியமும், ஆழாமற் காப்பானை ஏத்தல் வேண்டும் என்றதனால் பத்தியும் பெறப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாயவாறு அறிக.

# 3. சுட்டறுத்தல்

இத் திருச்சதகத்தின் முதற் பதிகத்தில் பொய்ப் பொருள் கடிந்து, மெய்ப்பொருளாகிய கடவுள் உணர்ச்சியில் தலைப்படுதலைக் குறித்தும், இரண்டாம் பதிகத்தில் அதற்குத் துணை புரிய வேண்டிய மனம் நன்னெறிப் படாமை கண்டு, அதனை இடித்துரைத்து அறிவுறுத்தமை பற்றியும் தெளிவுறுத்தப்பட்டன. இங்ஙனம் அறிவுறுத்தப் பட்ட நெஞ்சம் உள்ளுறக் கருதியும், பொறி வாயிலாக வெளிப்பட்டும் அறியும் சுட்டறிவினால் இறைவனைக் காண்டற்கு முயன்றதாக, அம் முயற்சி ஓரளவிற்குச் சாதன மாகுமே யன்றிக் கருதிய பயனைச் செய்ய மாட்டா தெனவும், சுட்டறிவினால் அறியப்படும் பொருள் எல்லாம் சுட்டுப் பொருள்களாகிய நிலையில் பொருள்களாம் எனவும், எங்கும் நிறை பொருளாகிய இறைவனை அறிதற்கு அச் சுட்டறிவு கருவியாகாது எனவும் உணர்ந்து, அச் **சுட்டறிவை யொழித்தல்** பற்றி இப் பதிகத்தில் கூறுகின்றார். சுட்டறிவு என்பது, இது குடம், இஃது ஆடையென்று கண்டப் பொருளைப் பொறி முதலிய கருவிகளுடன் கூடி நின்று அறியும் அளவையறிவாகும். இதனை ஆன்ம போத மென்றுங் கூறுவர். இவ்வறிவால் அறியப்படுவனவெல் லாம் அழியும் இயல்பினவாகும். இவ் வுண்மையை, "[1] ஈண்டு அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்து" என மெய் கண்டாரும், அதன் விளக்கமாக, "சுட்டறிவினால் அறியப்பட்ட சுட்டுப் பொருள் எல்லாம் அசத்து" என மாதவச் சிவஞான முனிவரும் கூறியவாற்றால் தெளிய லாம். அகண்டப் பொருளாகிய இறைவன், பொறி முதலிய கருவிகளோடு கூடாத மெய்யுணர்வினால் அறியப்படுபவன் ஆவான். இம் மெய்யுணர்வைப் பரஞானம், தத்துவ ஞானம், பதி ஞானம், அநுபவ வுணர்வு எனப் பெரியோர் கூறுவர். இறைவனை அறிதல் மெய்யுணர்வினால் அன்றிச்

1. சிவஞான போதம், 6 ஆம் சூத்திரம், முதல் அதிகரணம்.

சுட்டறிவினால் இயலாதென்பதை, [1] "அனைத்துலகுமாய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா" என்னும் அடிகள் திருவாக்கானும் உணரலாம். கருவிகளோடு கூடி யறியும் சுட்டறிவாகிய உலகியலறிவிற்கும், அவற்றின் நீங்கிச் சுட்டிறந்தறியும் மெய்யுணர்விற்கும் உள்ள வேறுபாடு கருதியே, திருக்குறள் ஆசிரியர், முன்னதை,'அறிவுடைமை' என்னும் பெயரால் பொருட்பாலில் அரசியற் பகுதியிலும், பின்னதை, 'மெய்யுணர்தல்' என்னும் பெயரால் அறத்துப் பாலில் துறவறப் பகுதியிலும் இரண்டு அதிகாரங்களாக அமைத்துள்ளார். இறைவனது அகண்ட வடிவம் சுட்டறிவிற்கு அறியப்படாததெனினும், சாதனத் தொடக்கத்தில் அப் பெருமானது திருவுருவைக் கண்டப் பொருளாகக் கொண்டு நினைவுறல் வேண்டும். ஆதலின், அதுபற்றி இறைவனது பெருமைக்கு இழுக்கு நேராது என்பது கருதத்தக்கது. நினைபவன் தகுதி குறித்து அவ்வுருவத்திலும் இறைவன் விளக்கம் உள்ளது என்பது பெரியோர் அநுபவத்திற் கண்டது. திருவுருவத்திற் பதிந்த நினைவு முதிர முதிர, நினையும் கருவியாகிய மனம் இறந்தொழியும் என்பதையும், அந் நிலையில் இறைவனது நிறைவு நிலை மெய்யுணர்விற்கு விளக்கமாம் என்பதையும், [2] "உணர்ந்தார்க் குணர்வரியோன்" என்னும் திருக்கோவைச் செய்யுட் பகுதியும்; அதற்கு, "ஒரு கால் தன்னையுணர்ந்தவர்கட்குப் பின் உணர்தற்குக் கருவியாகிய சித்த விருத்தியும் ஒடுங்குதலான், மீட்டு உணர்வரியோன்" என்று கூறிய பேராசிரியர் உரைப் பகுதியும் தெளிவுறுத்துவனவாம். இவ்வுண்மை குறித்தே, முதலில் நெஞ்சை அறிவுறுத்துத் திருவுருவில் பதியச் செய்து, அதன் முதிர்ச்சியில் அச் சுட்டறிவை யொழித்தல் இப் பதிகம் நுதலிய பொருள் என வகுக்கப்பட்டதென்க.

---

1. திருவாசகம், திருச்சதகம் 76. 2. திருக்கோவை, செ. 9.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

21. வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ்மேல் ஆகப்
பதைத்துருகும் அவர் நிற்க என்னை யாண்டாய்க்
குள்ளந்தாள் நின்றுச்சி யளவும் நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாங் கண்ணாய் அண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
கண்ணிணையும் மரமாந்தீ வினையி னேற்கே.

**க-உரை:** இரண்டாம் பதிகத்தின் இறுதித் திருப்பாட்டில் நெஞ்சத்தின் மாறுபட்ட நிலையை எடுத்துக் காட்டி அறிவுறுத்த அடிகள், அது தகாத நிலையிற் சேறலைக் கண்டு வைத்தும், பெருங்கருணையால் இறைவன் தம்மை ஆட்கொண்ட பேருதவியைக் குறித்து, அந் நெஞ்சம் மேற்கொள்ளவேண்டிய கடமையையும், அதன் விளைவையும் இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

**ப-உரை:** வெள்ளம் தாழ் விரிசடையாய்—கங்கை நீர்ப் பெருக்குத் தங்கிய விரிந்த சடையினையுடையாய், விடையாய்—ஊர்தியாகிய எருதினையுடையாய், விண்ணோர் பெருமானே—அமரர் தலைவனே, எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்—என்று கூறக்கேட்ட அளவிலே வேட்கை மிக்க நெஞ்சம் உடையராய், பள்ளம் தாழ் உறுபுனலின்—பள்ளத்தில் வீழும் மிக்க நீரைப் போல, கீழ் மேலாகப் பதைத்து உருகும் அவர் நிற்க—கீழ் மேலாம்படி துடிதுடித்து உருகும் மெய்யன்பராகிய அவர்கள் ஒரு புறம் நிற்க, என்னை ஆண்டாய்க்கு—சிறியேனை ஆளாகக் கொண்ட நின் பொருட்டு, உள்ளந்தாள் நின்று—உள்ளங் கால் தொடங்கி, உச்சி அளவும்—உச்சம் தலைவரையும், நெஞ்சாய் உருகாது—மனம் தானாய் நின்று உருகுதலைச் செய்திலது, உடம்பு எல்லாம்—உடல் முற்றும், கண்ணாய் வெள்ளம் பாயாது—கண்ணாகி நீர்ப்பெருக்குப் பாய்ந்திலது,

அண்ணா — என் தந்தையே, தீவினையினேற்கு — தீவினையுடையேனாகிய எனக்கு, நெஞ்சம் கல்ஆம்—அங்ஙனம் உருகாத நெஞ்சம் கல்லாகும், கண் இணையும் மரம் ஆம்— அங்ஙனம் வெள்ளம் பாயாத கண்களிரண்டும் மரம் ஆகும், என் செய்வேன்? என்பது.

**வி-ரை:** வெள்ளம் என்பது பெருக்கு எடுத்து வழியும் கங்கை நீரைக் குறிக்கும். நிலம் தாங்கலாற்ருத அளவு விரைந்து வழிந்த கங்கைப் பெருக்கை இறைவன் தன் சடையின் ஒரு கூற்றில் அடக்கி அருளினன் என்னும் புராண கதையை உட்கொண்டு கூறியது. சடை முழுதையும் திரட்டி அணையாக்கித் தடுத்தான் அல்லன்; அதனை விரித்து ஒரு சிறு பகுதியில் அடக்கினன் என்பது தோன்ற, "வெள்ளந்தாழ் விரிசடையாய்" என்ருர். இஃது அப் பெருமானது பேராற்றலைப் புலப்படுத்தும்.

விடையை அறத்தின் வடிவம் என்ப. அதனை ஊர்தியாகக் கொண்டது, அறத்தைப் பாதுகாத்து நடத்தும் தலைவன் என்பதைப் புலப்படுக்கும். இறைவன் உலகத்திற்கு ஆதாரமாகியும், ஆதேயமாகியும் நின்று பாதுகாப்பவன் என்பதை, "சடையாய்", "விடையாய்" என்பன குறிப்பாக அறிவுறுப்பனவாம். எங்ஙனமெனிற் கூறுவோம். ஆதாரம் தாங்குதலும், ஆதேயம் தாங்கப்படுதலும் ஆதலின், இறைவன் தன் சடையில் கங்கைப் பெருக்கைத் தாங்கியும், விடையை ஊர்ந்து, அதனல் தாங்கப்பட்டும் இருத்தலின் என்க. திங்களைச் சடையிற் சூடிப் பாதுகாத்த புராண கதையும் இவ்வுண்மையைத் தெளிவிப்பதாகும். [1] "தோடுடைய செவியன்விடையேறியோர் தூவெண்மதி சூடி" என்னும் தேவாரத்தில் அம்மையின் திருச் செவியைக் குறித்துத் "தோடுடைய செவியன்" என்றதனல் படைத்தலையும், "விடையேறி", "மதிசூடி" என்பவற்ருல் காத்தலையும், "சுடலைப் பொடி பூசி" என்றதனல் அழித்தலையும், "உள்ளங்கவர்

1. திருஞான சம்பந்தர் தேவாரம்.

கள்வன் '' என்றதனால் மறைத்தலையும், "அருள் செய்த" என்றதனால் அருளலையும் குறிப்பிட்டு, இறைவன் ஐந்தொழிற்கும் தலைவன் என்பதைப் பெறவைத்தார் திருஞான சம்பந்த சுவாமிகள். அம் முறையில், ஏனைய தொழில்களுக்கு எல்லாம் ஒவ்வொன்று கூறிக் காத்தல் தொழிற்கு, "விடையேறி," "மதிசூடி" என்னும் இரண்டு நிகழ்ச்சி கூறியது இவ்வுண்மை குறித்தே என்பது தெளிவாம். இங்ஙனம் ஆதாரமாகி யும் ஆதேயமாகியும் நின்று காப்பவன் முழுமுதலாகிய தலைவன் என்பது தோன்ற, "விண்ணோர் பெருமானே" என்றார். அமரர் தலைவன் என்பதனாலே மக்கள் முதலியோர்க்கும் தலைவன் என்பது எளிதிற் பெறப்படும். 1 "விண்ணோர் முழுமுதல் பாதாளத்தார் வித்து" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதும் காண்க. இங்ஙனம், சடையாய், விடையாய், பெருமானே என்று மெய்யன் பர்கள் அணிமையில் நின்று இறைவனை விளித்தனராக, அச் சொற்களைக் கேட்ட அளவிலே, நெஞ்சம் வேட்கை மிக்கு, வயம் அழிந்தது என்பார், "எனக் கேட்டு வேட்ட நெஞ்சாய்" என்றார். கற்பு மிக்க காதலி யொருத்தி, தன் தலைவன் பெயர் கேட்ட அளவில் தன் வயம் அழிதல் தலையன்பும், கண்ட அளவில் வயம் அழிதல் இடையன்பும், ஊற்றின்பத்தில் வயம் அழிதல் கடையன்பும் ஆம் என்பர். அதுபோல, ஈண்டு, இறைவன் பெயர் கேட்ட அளவில் நெஞ்சம் வேட்கை மிக்கதாயிற்று எனத் தலையன்பு உண்மை கூறப்பட்டது. 2 "முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்" என்பதும் இக் கருத்துப் பற்றியதே. "வேட்ட நெஞ்சாய்" என்புழி, ஆக்கம் இறைவன் பெயர் கேட்டற்கு முன் உள்ள தன்மை மாறித் தன்வயம் இழந்து, வேட்கை மீதூர நின்ற நிலையை உணர்த்துவ தாகும். நெஞ்சு—ஈண்டு அதனை உடையார்க்கு ஆயிற்று.

"பள்ளந்தாழ் உறுபுனல்," விரைவான செலவிற்கும் கீழ் மேலாதற்கும் உவமையாம். பள்ளத்தை நோக்கி

1. திருவாசகம், திருத்தெள்ளேணம், 19. 2. திருநாவுக்கரசர் தேவாரம்.

விரைந்து செல்லும் நீர் மிகுதியாக இருக்குமானால், வீழ்ந்த இடத்தினின்றும் மேலே கிளம்புதல் இயற்கை. புனல் மிகுதி தோன்ற, "உறுபுனல்" எனப்பட்டது. ஈண்டு, நீர் வீழ்ச்சியைப்போல இறைவன் பெயர் கேட்ட அளவில் நெஞ்சம் தன்வயம் இழந்து, துடித்துக் கரைந்தது என்பார், "பதைத்துருகும்" என்றார். காம நிலையில் பதைத்துருகுதலை ஒழித்தற்கே, "எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப் பதைத்துருகுமவர்" என்றார். மெய்யன்பினால் நெஞ்சங்கரையும் உண்மை அடியார் வேண்டி நிற்க, அப்பெரியாரைவிட்டுக் காமன் அம்பிற்கும் மகளிர்க்கும் பதைத்துருகும் சிறியேனை ஆட்கொண்டருளிய கருணையை என் என்பேன் என்பார், "என்னையாண்டாய்க்கு" என்றார். குவ்வுருபு பொருட்டுப் பொருளது.

இத்துணைப் பேரருளுடன் ஆட்கொண்ட நின்னைக் குறித்து, உடம்பின் உட்பகுதி முழுதும் நெஞ்சம் ஆகி உருகுதல் வேண்டும்; அங்ஙனம் உருகப் பெற்றிலேன் என்பார், "உள்ளந்தாள் நின்றுச்சியளவும் நெஞ்சாயுருகாது" என்றார். நினைத்தற்கருவியாகிய மனத்திற்கு நெஞ்சம் இடனாதல்பற்றி மனத்தை நெஞ்சம் என்று கூறுதல் தமிழ் வழக்கு. அஃது உடம்பினுள் ஒரு பகுதியாகும். இறைவனது பேரருள் உதவி குறித்து உருகுதற்கு மனம் உடம்பின் ஒரு சிறு கூற்றை இடனாகக் கொள்ளுதல் போதியதாகாதென்று கருதியும், நெஞ்சிடத்தின் உட்பகுதியே மனத்திற்கு இடனாதல் குறித்தும், "உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாய்" என்றார். மேட்டு நிலத்தில் நின்றும் பள்ளத்திற் பாயும் நீர் போற் கீழ் மேலாக என்றதற்கேற்ப, "உச்சியினின்றும் உள்ளந்தாள் அளவும்" என்னாது, "உள்ளந்தாணின்றுச்சியளவும்" என்றார். நெஞ்சம் உருகுங்கால், புறத்தேயுள்ள கண்களினின்றும் கண்ணீர் பெருகுவதாகும். இதனை, [1] "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ்" என்பதனாலும் அறியலாம். [2] "அழுதாலுன்னைப் பெறலாமே" என்பதும்

1. திருக்குறள் 71. 2. திருவாசகம், திருச்சதகம் 90.

அடிகள் திருவாக்கு. இது கருதியே, [1] " அழுதடியடைந்த அன்பன் " என்று பின்னுள்ளோர் அடிகளைக் குறிப்பிடுவாராயினர். அங்ஙனம் உருகிக் கண்ணீர் வடிதற்கு முகத்திலுள்ள இரண்டு கண்கள் போதா; உடல் முழுதும் கண்களாதல் வேண்டும் என்பார், " உடம்பெல்லாம் கண்ணாய் வெள்ளம் பாயாது " என்றார். ஆல் இரண்டும் அசைகள். " உடம்பெல்லாம் " என்பதற்கு உடம்பின் புறம் எல்லாம் என்று பொருள் கொள்ளல் வேண்டும். என்னை? நீர் ஒழுக்கும் கண்கள் முகத்தின் உள்ளனவாதலின்.

உருக்கத்தாற் பெருகுங் கண்ணீரின் மிகுதி தோன்ற, " வெள்ளம் " என்றார். இனி, அங்ஙனம் உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாகாவிட்டாலும், உள்ள நெஞ்சந்தானும் சிறிதும் குழைந்திலதே என்பது குறித்து வருந்தி, " நெஞ்சம் கல்லாம் " என்றார். இரும்பு முதலிய உலோகங்களாகக் கூறின், தீயின் மிகுதியான சூட்டினால் உருகக்கூடும். ஆதலின், எவ்வாற்றானும் நெகிழாத கல்லாகக் கூறினர். உடம்பெல்லாம் கண்ணாகாவிட்டாலும், உள்ள கண்கள் தாமும் சிறிதும் கசிந்திலவே என்பது குறித்து வருந்தி, " கண்ணிணையு மரமாம் " என்றார். மரத்தின் கணுக்களுக்கு கண் என்னும் பெயருண்மையாலும், அதற்கு ஒன்றை நினைந்து நீர் வடிக்கும் அறிவின்மையானும், அதனோடு ஒப்பித்து, "மரமாம் " என்றார். [2] " மரக்கணேனையும் வந்திடப் பணியாய் " என்று பிறிதோரிடத்து அடிகளும், [3] " மரக்கண்ணோ மண்ணாள்வார் கண் " எனப் பிறரும் கூறியிருத்தலும் காண்க. நெஞ்சம் அன்பினால் உருகாமலும், அதன் விளைவாகக் கண்கள் நீர் கசியாமலும் இருத்தற்குக் காரணம் என் தீவினையே என்பார், உடம்பொடு புணர்த்து, "தீவினையினேற்கே " என்றார்.

---

1. பரஞ்சோதி, திருவிளையாடல் கடவுள் வாழ்த்து.
2. திருவாசகம், செத்திலாப்பத்து 9.
3. முத்தொள்ளாயிரச் செய்யுள்.

இதன்கண், ஏகதேசமாகச் சுட்டியுணர முயலும் நெஞ்சத்தை யொறுத்து, உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாயுருகுதல் வேண்டுமெனக் கூறி, அதனால் அங்ஙனம் நெஞ்சம் உருகிக் கரைந்த நிலையிலே இறைவன் காட்சி மெய்யுணர்விற்குப் புலனாமென்பது பெறப்பட வைத்தமையான், **சுட்டறுத்தல்** என்னும் பதிக நுதலிய பொருளும், நெஞ்சாயுருகாதெனவும், கண்ணுாய் வெள்ளம் பாயாதெனவும் கூறியதனால் பத்தியும், "நெஞ்சம் கல்லாம் கண்ணிணையு மரமாம் தீவினையினேற்கு" என்றதனால், வைராக்கியமும் பெறப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் தோன்றியவாறு அறிக.

22. வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன்நான் என்றுன்னை அறிவித் தென்னை
ஆட்கொண்டெம் பிரான்ஆனாய்க் கிரும்பின் பாவை
அனையநான் பாடேன்நின் றாடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே முறையோநான் ஆன வாறு
முடிவறியேன் முதலந்தம் ஆயி னானே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் தம் நெஞ்சம் தனக்குரிய கடமையை மேற்கொண்டு தமக்கு உதவி புரியாமைக்கு இரங்கிய அடிகள், அங்ஙனம் கடமையை மேற்கொள்ளாமையோடு தம் வழியின் அன்றி வினை வழிச் சென்று, தம்மையும் ஈர்த்து, அவ்வினையிலே உழல்வித்ததாக, அந்நிலையில் வலியவந்து ஆட்கொண்ட இறைவனது பேரருளை நினைந்து, தாம் மேற்கொள்ள வேண்டிய கடமைகளைச் செய்யாமை குறித்து இத் திருப்பாட்டில் இரங்குகின்றார்.

**ப-ரை:** முனைவனே — கடவுளே, முதல் அந்தம் ஆயினானே — தோற்றத்திற்கும் இறுதிக்கும் காரணம் ஆயினவனே, வினையிலே கிடந்தேனை—வினைப்பகுதியிலே கிடந்து உழலும் அடியேன்பால், புகுந்து நின்று—புகுந்து

நிலையுதல் பெற்று, போது—வருக, நான் வினைக்கேடன் என்பாய் போல—யான் வினையை ஒழிப்பவன் என்று கூறுவாய் போல, இனையன் நான் என்று உன்னை அறிவித்து—இத்தன்மையை உடையவன் யான் என்று நின்னை எனக்கு அறிவித்து, ஆட்கொண்டு—என்னை அடிமையாகக் கொண்டு, எம்பிரான் ஆனாய்க்கு — எங்கள் தலைவனாகிய நின் பொருட்டு, இரும்பின் பாவை அனைய நான்—இரும்பினால் ஆக்கப்பட்ட பாவையை ஒத்த யான், பாடேன்நின்று ஆடேன் — பாடுதலைச் செய்யேன், நின்று ஆடுதலைச்செய்யேன், அந்தோ—, அலறிடேன் உலறிடேன் ஆவிசோரேன் — கதறுகின்றிலேன் வற்றுகின்றிலேன் உயிர்ப்புச் சோர்கின்றிலேன், நான் ஆனவாறு முறையோ—யான் இங்ஙனம் ஆகியது முறையாகுமா, முடிவு அறியேன் — இஃது எவ்வாறு முடியும் என்பதையும் அறிந்திலேன் என்பது.

வி-ரை: முனைவன் என்பது இயல்பாகவே பாசங்களின் நீங்கிய முற்றறிவுடைய இறைவனைக் குறிக்கும். [1] "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" என்பர் தொல்காப்பியனார். உலகத் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் காரணன் சிவபெருமான் என்று மறை முடிவுகள் கூறுதலின், "முதல் அந்தம் ஆயினனே" என்றார். ஆதல்—காரணன் ஆதல். இனி, அந்தம் முதலாயினனே எனக்கொண்டு, அந்தத்தைச் செய்யும் முதற்பொருளானவனே என்று கோடலுமாம். உலகம் ஒடுங்குதற்கு ஏதுவாய் நின்ற தன்னிடத்தில் நின்றே மீளத் தோன்றுதலின், அழித்தலைச் செய்யும் மகா சங்கார காரணனாகிய இறைவனே முதற்பொருள் ஆவான் என்னும் பொருள் தோன்ற, [2] "ஒடுங்கி மலத்துளதாம் அந்தமாதி" என்று சிவஞான போதம் கூறுதல் அறிக. வினை, ஈட்டப்படுவதும், சேர்க்கப்படுவதும், நுகரப்படுவதும் என முத்திறப்படும். ஓர் உழவன் அத்தொழின் முயற்சியால் நெற்பயிரை ஓம்பி, விளைவித்துக் கொணர்தல்

1. தொல். மரபியல், சூத். 94. 2. சிவஞானபோதம், சூத். 1.

ஈட்டப்படுவதும், கொண்டுவந்த நெல்லைக் களஞ்சியத்தில் சேர்த்துவைத்தல் சேர்க்கப்படுவதும், பின் அதனை உணவாக்கி உண்டல் நுகரப்படுவதும் ஆதல் போல, வினையும் ஆம் என்பது. ஓர் உயிர் பிறவியில் தலைப்படல் தொடங்கி வீட்டு நிலை எய்துங்காறும் வினைத் தொடர்பிலே கிடப்பதாகும். இங்ஙனம் மாறி மாறி ஈட்டன் முதலியவற்றைச் செய்துகொண்டே பிறந்து இறந்து உழலுதலின், "வினையிலே கிடந்தேனை" என்றார். [1] "அறம் பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டி" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதுங் காண்க. "கிடந்தேனை" என்புழி, இரண்டாம் உருபை ஏழாம் வேற்றுமை மயக்கமாகக் கொள்க.

இத் திருப்பாட்டின் இரண்டாம் அடியில், "என்னையாட்கொண்டெம்பிரான் ஆனாய்" என்று கூறுதலாலும், ஆட்கொள்ளுதல், [2] "கட்டறுத்தெனையாண்டு" என்றபடி வினைத்தொடரின் நின்றும் விடுவித்தே செய்யத்தக்கது ஆதலாலும், வினையிலே கிடத்தல் ஆட்கொண்டதற்கு முன்னுள்ள நிகழ்ச்சி எனக்கொண்டு, "கிடந்தேனை" என இறந்த காலத்தாற் கூறினர். புகுந்து நிற்றலைப்பற்றி, [3] "ஊனெலாம் நின்றுருகப் புகுந்தாண்டான்" என்புழி, விளக்கிக் கூறப்பட்டது. வினையிலே பிணிப்புண்டு, அறிவு விளக்கமின்றிக் கிடந்த என்னுட் புகுந்து நின்றவன், வினையினீங்கி விளங்கிய அறிவனுவான் என்பது குறிப்பிற் பெறப்படும் ஒரு நயம். மேலும், "வினையிலே கிடந்தேனை" எனத் தம்மையும், "புகுந்து நின்று" என இறைவனையும் கூறியதில், கிடத்தல் பொருட்படுத்தாமல் இருந்ததையும், நிற்றல் பொருட்படுத்து நின்றமையையும் புலப்படுத்தும் பிறிதொரு நயமாகும். இவற்றானும் இறைவன் அடிகள் பால் வைத்த பேரருளின் திறம் புலனாதல் அறிக. புகுந்த இடம் தூயதாயின், நிற்றல் கூடும். ஈண்டுப் புகுந்தது ஊனார் உடல் ஆதலின், நிற்றற்குத் தகுதியில்லாததாகவும்,

1. திருவாசகம், சிவபுராணம், அடி 52. 2. திருவாசகம், திருச்சதகம் 40.
3. திருவாசகம், திருச்சதகம் 19.

அதனுள் நின்று ஆண்டான் என, இறையருட் சிறப்பை மேலும் புலப்படுத்த, "புகுந்து நின்று" என்றார். புகுந்து நின்ற இடம் ஊனுடலாயினும், தூய உடம்பினன் ஆகிய இறைவன் புகுந்தமையால், அது சிறந்த திருக்கோயில் ஆகுமென்பது. இதனை, [1] "வினைபடு முடல்நீ புகுந்து நின்றமையால் விளங்கிய விமான்மாயினதே" என்னும் திருவிசைப்பாவானும் அறிக. இங்ஙனம் இறைவன் புகுந்து நின்றதும், வினைப்பிணிப்பால் அவனை இன்னான் என அறியாமல் வாய்வாளா இருந்தேனாக, அப்பெருமானே என்னை வருக என அழைத்தான் என்பார், "போது" என்று அருளினன் எனக் கூறினர். ஓர் இல்லத்திற்கு ஒரு பெரியவர் வந்தால், அவர் முன்னர் அறியப்படாதவர் ஆயினும், இல்லமுடையார் அவரை வரவேற்று, "வருக" என்று கூறி, இருக்கையளித்து உபசரித்தல் உலகியலிற் கண்டது. அதற்கு மாறாக, உட்புகுந்த பெருமானே வாய்வாளா இருந்த தம்மை வருக என அழைத்தான் என அவ்விறைவன் பேரருளை ஈண்டும் புலப்படுத்தமை அறிக.

புதியராக வந்தார் ஒருவரை இன்னார் என அறிமுகப் படுத்தற்கு, அறியப்பட்ட மூன்றாமவராகப் பிறரொருவர் வேண்டும். இஃது உலகியலிற் கண்டது. ஈண்டு, உட் புகுந்த ஏக நாயகனை அடிகளுக்கு அறிமுகப்படுத்த யாரும் இல்லாமையால், அப்பெருமானே தம்மை இன்னான் என அறிவிக்க வேண்டியதாயிற்று. [2] "அறிவானுந்தானே அறிவிப்பான் தானே" என்னும் அம்மை திருவாக்கும் அறிக. அறிவித்தது எவ்வாறு எனின், "இனையன் நான்" என்பதாம். இனையன் என்பதற்கு இத் தன்மையுடையேன் என்பது பொருள். அத் தன்மைதான் யாதெனில், 'வினைக்கேடனாதல்' என்பதாம். தன்மையின் விளக்கம் இதுவாகும். வினையிலே கிடப்பவனுக்கு உபகரிப்பவன், அப் பிணிப்பை ஒழிப்பவனாக இருக்கவேண்டும். ஆதலின்,

1. திருவிசைப்பா, கருவூர்த்தேவர், திருமுகத்தலை, செ. 6.

2. காரைக்கால் அம்மை, அற்புதத் திருவந்தாதி 20.

இறைவன் தன்னை அறிவிக்குங்கால் தன்னுடைய பலவகைப் பட்ட பெருமைகளில் கன்ம நாசம் பண்ணும் ஒன்றை மாத்திரம் வெளிப்படுத்தி, "வினைக்கேடன்" என்றனும். வினையிலே பிணிப்புண்டு உழலும் என்னை விடுவித்ததற்கு, என்னுட் புகுந்து நின்று, வருக என என்னை அருகில் அழைத்து, 'நான் வினையை ஒழிப்பவன்' என்று எனக்குத் தெரிவிப்பாய் போல, இத் தன்மையன் என்று உன்னை எனக்கு அறிவித்து என்னை ஆட்கொண்டாய் என்பார் இங்ஙனம் கூறினர். "நான் வினைக்கேடன்," "நான் இனையன்" என ஈரிடத்தும் எழுவாயாகிய நான் என்பதை இறைவன் வெளிப்படக் கூறியதாகக் கொண்டு கூறியது, [1]"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய், நுண்பொருள் காண்ப தறிவு" என்னும் பொருளுரைப்படி மறை பாடும் வாயனாகிய இறைவன் தமக்கு விளங்க உரைக்க வேண்டுமென்னும் கருணையினால் என்பது அடிகள் கருத்து. உலகத்தில் ஆற்றல் மிக்கான் ஒருவன் தன் அரிய செயலைப் பயனால் வெளிப்படுத்துவானே யன்றித் தன் நாவினால் வெளிப்பட உரைப்பான் அல்லன். [2]"வாளினாற் பேசலன்றி வாயினாற் பேசல் தேற்றேன்" என ஒரு வீரன் உரையாகச் சிந்தாமணி யாசிரியர் கூறியதுங் காண்க. அம் முறையில் இறைவன் தன் பெருமையைத் தானே கூறாது ஒழியின், வினைப் பிணிப்பிற் கிடப்போர் அறிதல் அருமையெனக் கருதியும், ஒரளவிற்குக் குறிப்பாகக் கூறியே அருள் செய்ய வேண்டுமெனக் கொண்டும், அடிகளுக்கு அவ்வமயம் பயன்படு முறையில் தன் இயல்பைக் குறிப்பிற் புலப்படுத்து, இத் தன்மையன் என்று அறிவித்தல் இன்றியமையாத தாயிற்றும். இவ்வுண்மையை அநுபவத்திற்கண்ட அடிகள், "நான் வினைக்கேடன்" என்று உன்னை அறிவித்து, எம்பிரான் ஆனாய் என்னாது வினைக்கேடன் என்பாய் போல, இனையன் நான் என்றுன்னை யறிவித் தெம்பிரான் ஆனாய்" என்று அருளிச் செய்தனர். "என்பாய் போல" என்றதனால் வெளிப்படக் கூறாமல் குறிப்பிற் புலப்படுத்தான் என்பது தெளிவாம்.

1. திருக்குறள் 424. 2. சீவக சிந்தாமணி, செ. 257.

இத் துணையும் கூறிய அடிகள் அநுபவ நிலையும்,

1 "வெள்ளநீர்ச் சடைய னார்தாம் வினவுவார் போல வந்தென்
உள்ளமே புகுந்து நின்றார்க் குறங்குநான் புடைகள் போந்து
கள்ளரோ புகுந்தீ ரென்னக் கலந்துதான் நோக்கி நக்கு
வெள்ளரோ மென்று நின்றார் விளங்கிளம் பிறைய னாரே"

என்று அருளிய அப்பர் அநுபவ நிலையும் பல்லாற்றானும் ஒன்றுபட்டிருத்தல் அறிந்து இன்புறத்தக்கது. இவ் விருவருடைய அநுபவ நிலைகளும் ஒன்றுபட்டிருக்கும் இயல்பை இத் திருப்பாட்டின் சொற்பொரு ளாராய்ச்சியால் ஒருவாறு தெளிவிக்கலாம். ஆயினும், ஈண்டு விரித்தல் மிகையெனக்கருதி மேற்கொண்டிலேம். இனி, இங்ஙனம் வினைச் சூழலிற் பட்டுழலும் என்னுட் புகுந்து நின்றாய், வினையொழிவு செய்பவனைப் போல, இத் தன்மையன் என உன்னை எனக்கு அறிவித்த அளவிலாவது, நின்னை எங்கள் தலைவன் என்றறிந்து ஆட்பட வேண்டியது கடமையாகவும், அங்ஙனம் செய்திலேனாக, அக் குற்றத்தையும் பொறுத்து, நீயே வலிய ஆளாகக்கொண்டு, எம் தலைவனாயினாய் என்பார். "என்னை யாட்கொண்டு எம்பிரான் ஆனாய்க்கு" என்றார். குவ்வுருபு பொருட்டுப் பொருளது.

இத்தகைய பேருதவியாளனாகிய இறைவன் பொருட்டு அடிகள் தாம் மேற் கொள்ளவேண்டிய கடமைகளைச் செய்யாமை குறித்துப் பின் வருமாறு இரங்குகின்றார்: இறைவனுக்கு ஆட்படும் பேறு கிடைத்தற்கு அரியது; இஃது எளிதிற் கிடைக்கப் பெற்றமை குறித்து ஆனந்த பரவசத்தால் ஆடல் பாடல் முதலிய செயல்களில் தலைப்படுதல் இன்றியமையாததாகவும், அங்ஙனம் செய்யாமைக்குக் காரணம், யான் இரும்பினாற் செய்யப்பட்ட பாவையை ஒத்திருத்தல் என்பார், "இரும்பின் பாவை யனைய நான்" என்றார். தோற்பாவை, மரப்பாவைகளாயின், பிறரால் இயக்கப்பட்டுக் கூத்தாடல் முதலிய செய்யக் காணலாம். 2 "தோற்பாவைக் கூத்தும் தொல்லை மரப் பாவை இயக்கமும்" என்பது சிவஞான சித்தி. இருப்புப்

1. திருநாவுக்கரசர் தேவாரம். 2. சிவஞான சித்தி, சுபக்கம் சூ. 4, செ. 24.

பாவை திண்ணிதாகலின், இயக்கப்பட்டு ஆடல் முதலியன செய்ததாக நிகழ்ச்சியின்று. இவ்வுண்மை கருதியே தோற் பாவை மரப் பாவைகளைக் கூருமல், "இரும்பின் பாவை ஒப்புக் கூறப்பட்டது. எதிர்பாராத பேறு கிடைத்த அளவில், உள்ளம் உருகிப் பரவசமான நிலையில் ஒருவற்கு நிகழும் செயல்களுள், முதலிற் பாடுதலும், அதன் பின் எழுந்து நின்று ஆடுதலும், அதன்மேல் கதறுதலும், அதன் பின்னர் நாப்புலர்ந்து உடல் வற்றுதலும், அதன் முதிர்ச்சி யில் ஆவி சோர்ந்து மூர்ச்சித்தலும் முறையே நிகழ்வன வாம். இவ் அநுபவம் புலப்படவே, "பாடேன் நின்று ஆடேன் அந்தோ அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்" என்று அருளிச் செய்தனர். பாடுங்கால் இருந்தும் நின்றும் பாடலாம். ஆடுங்கால் நின்றே ஆடல் வேண்டும் ஆதலின், "நின்று ஆடேன்" என்ருர். பாடுதல் ஆடுதல் என்னும் இவ்விரண்டு செயல்களுக்கும் பின்னர் நிகழும் அலறுதன் முதலியன முறுகிய செயல்க ளாதலின், இடையில், "அந்தோ" என இரங்கற் குறிப்புத் தோன்றக் கூறப்பட்டது. அலறுதல் — ஆடல் பாடல் களுக்குரிய சித்த விருத்தியும் சுருங்கிய நிலையில் நிகழ்வ தாகும். உலறுதல் — உடல் வற்றுதல். [1] "வற்றியாரும் நின் மலரடி காணுமன்ன" என்பது அடிகள் திருவாக்கு. ஆவி சோர்தல்—மூர்ச்சித்தல். இங்ஙனம் என் கடமையி னின்றும் வழுவுதல் முறையாகாதே! என் செய்வல்! என வருந்திக் கூறுவார்,"முறையோ நான் ஆனவாறு" என்ருர். இனி, "முறையோ நான் ஆனவாறு" என்பதற்கு யான் இங்ஙனம் என் கடமையினின்றும் வழுவுதல் என்னை ஆட் கொண்டருளிய நினக்கு முறையாகுமா? என்பது கருத் தாகக் கொள்ளலுமாம். [2] "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்பதைப் புறக்கணித்துவிட்ட இந் நிலையில், முடிவு என்னுமோ அறிந்திலேன் என்பார், "முடிவு அறி யேன்" எனவும் கூறினர். முடிவு — கடமையினின்றும் வழுவுதலால் விளையும் பயன்.

1. திருவாசகம், செத்திலாப்பத்து, 2.
2. திருநாவுக்கரசர் தேவாரம் "நங்கடம்பனை"

இதன்கண், "முனைவனே முதலந்தமாயினானே" எனச் சுட்டறிவிற்குப் புலப்படாத இறைவன் இலக்கணம் தோன்ற வைத்தமையானும், முதல் இரண்டடிகளானும் சிவ போதத்தை ஒடுக்கிச் சிவபோதம் மேலிட்டு விளங்கிய உண்மை பெறப்பட வைத்தமையானும், "கட்டறுத்தல்" என்னும் பதிகம் நுதலிய பொருள் குறிப்பிற் புலனாதலும், "பாடேன் நின்றாடேன்" என்பன முதலிய வற்றால் சதகம் நுதலிய "பத்தி விசித்திரம்" என்னும் பொருள் வெளிப்பட்டு நிற்றலும் காண்க.

23. ஆயநான் மறையவனும் நீயே யாதல்
அறிந்தியான் யாவரினுங் கடைய னாய
நாயினேன் ஆதலையும் நோக்கிக் கண்டு
நாதனே நானுனக்கோர் அன்பன் என்பேன்
ஆயினேன் ஆதலால் ஆண்டு கொண்டாய்
அடியார்தாம் இல்லையே அன்றி மற்றோர்
பேயனேன் இதுதான்நின் பெருமை யன்றே
யெம்பெருமான் என்சொல்லிப் பேசு கேனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் தம்மை வலிந்து ஆட்கொண்டு அருளிய இறைவனது பேருதவியை நினைந்து, தம் கடமைகளைச் செய்யாமைக்கு இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில் அங்ஙனம் இறைவன் வலிய வந்து தம்மை ஆட்கொண்டதற்குக் காரணம், அப்பெருமானது மிகவும் உயர்ந்த தன்மையையும், தமது மிகவும் இழிந்த தன்மையையும் அறிந்துவைத்தும் "யான் நின் அன்பன்" என்று நாவளவிற் சொல்லியதே யாமெனவும், அத்துணை யெளிமையில் ஆட்கொண்ட ஆண்டவன் பெருமையை எவ்வாறு புகழ்ந்து பாராட்டுவேன் எனவும், அடிகள் வியப்புறுகின்றார்.

ப-ரை: நாதனே—கடவுளே, நீயே ஆய நான் மறை யவன் ஆதல் (நோக்கி) அறிந்தும்—நீயே யாவர்க்கும் தலைவனாய அந்தணன் ஆதலை ஆராய்ந்து அறிந்தும்,

யானே யாவரினும் கடையன் ஆய நாயினேன் ஆதலே நோக்கிக் கண்டும்—யானே யாவர்க்கும் கடையவனாய நாயின் தன்மையுடையேன் ஆதலே ஆராய்ந்து கண்டு வைத்தும், நான் உனக்கு ஓர் அன்பன் என்பேன் ஆயினேன்—யான் நினக்கு ஓர் அன்பன் என்று சொல்லுவேனாயினேன், ஆதலால் ஆண்டு கொண்டாய்—அதுவே காரணமாகக் கொண்டு என்னை ஆளாகக் கொண்டாய், பேயனேன் அன்றி மற்றோர் அடியார் தாம் இல்லையே—பேயின் தன்மையுடையேனாகிய என்னையன்றி நீ ஆட்கொள்ளுதற்கு வேறு ஓர் அடியார் இல்லையா? இது நின் பெருமை அன்றே—இச் செயல் நினது பெருந்தன்மையைக் குறிப்பதன்றோ? எம்பெருமான் என் சொல்லிப் பேசுகேன்—எங்கள் தலைவனாகிய நின்னை எவ்வாறு புகழ்ந்து பாராட்டக்கடவேன் என்பது.

**வி-ரை:** வட மொழியில் நாத என்னும் பகுதி, ஐசுவரியம் என்னும் பொருளதாகலின், "நாதன்" என்பது ஈச்சுரத் தன்மையுடைய கடவுளை உணர்த்துவதாகும். நீயே என்புழி, ஏகாரம் தேற்றப் பொருட்டு. பின்னர், "யாவரினுங் கடையன்" என அடிகள் தம்மைக் கூறிக் கொண்டதற்கியைய, "யாவர்க்கும் தலைவன்" என்னும் மறுதலைச் சொற்கள் வருவித்துரைக்கப்பட்டன. [1] "உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார், கடையரே கல்லா தவர்" என்புழிக் கற்றார் தலையாயினார் என முடித்து, "கடையரென்றதனான் அதன் மறுதலைப் பெயர் வருவிக்கப்பட்டது" என்று அதன் விளக்கமாகப் பரிமேலழகர் கூறியிருத்தலும் அறிக. மறையவனும் என்புழி, உம்மையைப் பிரித்து, அறிந்து என்பதனோடு கூட்டுக. நான்மறையவன் என்றது, நான்கு மறைகளுக்கும் வினை முதலாகவும், அம் மறைகளின் முடிபொருளாகவும் உள்ளவன் என்னும் பொருட்டு. இதனாலே இறைவன் அமரருள் அந்தணன் என்று கூறப்பட்டான். "யாழ்கெழு மணிமிடற்று அந்தணன்"

1. திருக்குறள் 395.

என அகநானூற்றுக் கடவுள் வாழ்த்திற் கூறியிருத்தலும் காண்க. இறைவன் யாவர்க்கும் தலைவனுய அந்தணன் ஆதலை, மறையாகமங்களின் ஆராய்ச்சியால் அறியலா மென்பது தோன்ற, "நோக்கி அறிந்தும்" என்றார். பின்னுள்ள நோக்கி என்னும் எச்சத்தை ஈண்டும் கூட்டுக. சிவபிரானின் உயர்ந்தாருமில்லை, தம்மின் இழிந்தாருமில்லை என்பது தோன்ற, அடிகள் தம்மை "யாவரினுங் கடையன்" என்றும், அவ் இழிவுதானும் எத்தன்மைத்து என்பார்க்கு, "நாயினேன்" என்றும் கூறினர். நாயின் தன்மை, பல விடங்களிலும் பயனின்றி அலைந்து திரிதலால் இழிக்கப்படும் இயல்பாகும். இதனை அப்பர் தம் பாடல் ஒன்றில், [1]"பாட்டில் நாய்போல நின்று பற்றதாம் பாவந்தன்னை, மீட்டினேன்" என்று அருளிச் செய்தனர். பாடு என்பது உழைப்பு என்னும் பொருள தாகலின், வறிதே உழைத்துத் திரியும் நாய்போல என்பது கருத்து. இங்ஙனம் நாயின் தன்மையைத் தம்மேல் ஏறிட்டு அடிகள் பல விடத்தும் கூறுதல் அறியலாம். ஆதலையும் என்புழி, உம்மையையும் பிரித்து, "கண்டு" என்பதனோடு கூட்டுக. தமது புன் புலால் யாக்கையை, [2]"ஈவார்ந்து ஈ மொய்த்து அழுக்கொடு திரியும் சிறு குடில்" எனவும், தம் அறிவும் செயலும் மிகச் சிறியன எனவும், காட்சியளவையில் எளிதின் ஆராய்ந்து காணலா மென்பது தோன்ற, "நோக்கிக் கண்டும்" என்றார். இறைவன் தலைவனுதலை அறிவு கருவியாக அறிய வேண்டுதலின், "அறிந்தும்" எனவும், தாம் கடைய னுதலைக் கண்கூடாகக் காணலாமென்பது தோன்ற, "கண்டும்" எனவும் கூறினர்.

எல்லா வகையானும் பெரியான் ஒருவன்பால் அன்பு செய்து, அவன் அருட்கு ஆளாதல் வேண்டுமாயின், அப் பெரியான் விரும்பத்தக்க தகுதி ஓரளவாவது இருத்தல்வேண்டும். அது சிறிதும் இல்லாத கடையேனுகிய

1. திருநாவுக்கரசர் தேவாரம், "மாட்டினேன் மனத்தை"
2. திருவாசகம், ஆசைப்பத்து 3.

யான், நின் உயர்வையும் என் இழிவையும் அறிந்து வைத்தும், என் அவாவினால் யான் உனக்கு அன்பனாவேன் என்று சொல்லளவிற் கூறத் தொடங்கினேன் என்பார், "நானுனக்கோர் அன்பனென்பே னாயினேன்" என்றார். "என்பேனாயினேன்" என்றதனால், அன்பனாதற்குரிய செயல்களில் தலைப்படாமல் சொல்லளவிற் கூறியது என்பது பெறப்படும். [1]"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாஞ், சொல்லிய வண்ணஞ் செயல்" என்னும் பொருளுரைப்படி, எளிமை பற்றிச் சொல்லினேனாக, அச் சொல்லையே ஏதுவாகக் கொண்டு, என்னை ஆட் கொண்டு அருளினை யென்பார், "ஆதலால் ஆண்டு கொண்டாய்" என்றார். அடிகள் தாம் சொல்லளவிற் கூறத் தொடங்கியதை ஏற்று, ஆண்டவன் செயலளவிற் காட்டினான் என்னும் அருமைப் பாட்டைப் புலப் படுக்கவே, "என்பேனாயினேன்" எனவும், "ஆண்டு கொண்டாய்" எனவும் அருளிச் செய்தனர். ஒருவாறு இறைவனுக்கு அடிமைப்பணி புரிதற்குத் தகுதியான ஆள் அமையாமையால், தாம் அன்பன் என்ற அளவில், தகுதி யொன்றையும் ஆராயாமல் தம்மை இறைவன் ஆட் படுத்துக் கொண்டனன் என்று அடிகள் கருதினரோ வெனின்; அங்ஙனங் கருதினார் அல்லர் என்பதை, "பேயனேன் அன்றி மற்றோர் அடியார் தாம் இல்லையே" என்பதனால் அறியலாம். பாவ கன்மத்தால் இழி பிறப் புடைய பேயைப் பணி கொண்டால் துன்புறுத்துமே யன்றி வேறு பயன் விளையாதென்னும் உண்மை கருதித் தம்மைப் பேயனேன் என்றார். [2]"புற்றுமாய் மரமாய்ப் புனல்காலே யுண்டியாய் அண்டவாணரும் பிறரும், வற்றியாரும் நின் மலரடி காணுமன்ன" என்றபடி, அரிய தவங்கிடந்து நினக்குப் பணி புரியும் அன்பராதற்கு அமரர் முனிவர் முதலியோர் எண்ணிறந்தோர் உளராக, அன்னாருள் ஒருவரேனும் அடியார் ஆதற்குத் தகுதி யுடையார் அல்லரோ என்பார், "பேயனேன் அன்றி

1. திருக்குறள் 664. 2. திருவாசகம், செத்திலாப்பத்து 2.

மற்றோர் அடியார் தாம் இல்லையே" என்றார். "இல்லையே" என்புழி, வினைப்பொருட்டாகிய ஏகாரம் எதிர்மறைப் பொருளை உணர்த்தி நின்றது.

பக்குவ முதிர்ந்த அடியார் எத்துணையோர் தவங்கிடப்ப, அன்னாரை விட்டு, ஒரு சிறிதும் தகுதியில்லாத என்னை, யான் அன்பன் என்று சொல்லத் தொடங்கிய அளவில் ஆட்கொண்டருளிய இவ்வருட்செயல் நின் பெருமைக் குணத்தைப் புலப்படுத்தி நிற்பதென்பார், "இதுதான் நின் பெருமை யன்றே" என்றார். பெருமை, செயற்கரிய செய்தலாகும். ஈண்டு, அருஞ் செயல் யாதெனின், பேயனைய தம்மைப் பிறப்பறுக்க ஆண்டது என்பது அடிகள் கருத்துப்போலும். இங்ஙனம் ஆட்கொண்டு பேருதவி புரிந்த எங்கள் தலைவனாகிய நின்னைக் குறித்து, மனமொழிகளுக்கு அடங்காத நின் பெருமைக் குணங்களை எவ்வாறு புகழ்ந்து பாராட்டக்கடவேன் என்பார், "எம்பெருமான் என் சொல்லிப் பேசுகேனே" என்றார். எம்பெருமானை என்புழி, இரண்டன் உருபு செய்யுள் விகாரத்தால் தொக்கது.

இதன் கண், இறைவன் யாவர்க்கும் தலைவனாகிய மறை முதல்வன் எனக் கூறியதும், "என்சொல்லிப் பேசுகேன்" என அப்பெருமான் இயல்பு, மனமொழி களால் வரையறுக்கப்படாததொன்று என்றதும், பதிகம் நுதலிய பொருளாகிய சுட்டறுத்தலைப் புலப்படுப்பனவாம்.

24. பேசிற்றும் ஈசனே யெந்தா யெந்தை
 பெருமானே யென்றென்றே பேசிப் பேசிப்
பூசிற்றுன் திருநீறே நிறையப் பூசிப்
 போற்றியெம் பெருமானே யென்று பின்று
நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
 ஆண்டானே அவாவெள்ளக் கள்வ னேனை
மாசற்ற மணிக்குன்றே யெந்தாய் அந்தோ
 என்னைநீ ஆட்கொண்ட வண்ணந் தானே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் இறைவனை நோக்கி, "யான் நின் அன்பன்" என்று சொல்லிய அளவில் என்னை ஆட்கொண்டு அருளிய நின் பெருமை இருந்தவாறு என்னே? என வியந்து கூறிய அடிகள், இத் திருப்பாட்டில் உரையளவில், "நான் நின் அன்பன்" என்றேனே அன்றி, உள்ளத்தளவில் வெள்ளத்தனைய அவாப் பெருக்கை யுடைய கள்வனுவேன் எனவும், அஃதறிந்தும், என்னை ஆட்கொண்ட வண்ணந்தான் என்னே எனவும் கூறி மேலும் வியப்புறுகின்றார்.

ப-ரை: மாசு அற்ற மணிக்குன்றே—குற்றம் அற்ற மாணிக்க மலையே, எந்தாய்—என் தந்தையே, தாம் பேசின் — தாம் பேசப்புகின், ஈசனே எந்தாய் எந்தை பெருமானே — பரமேச்சுரனே; எங்கள் தந்தையே; எங்கள் தந்தைக்கும் தலைவனே, என்று என்றே பேசிப் பேசி—என்றே பல்காலும் சொல்லியும், பூசின்—பூசப்புகின், எம்பெருமானே போற்றி என்று—எங்கள் தலைவனே காத்தருள்க என்று கூறி, திரு நீறே நிறையப்பூசி— திருநீற்றையே குறைவறப் பூசியும், பின்ற நேசத்தால்— பிறழாத மெய்யன்பினுல், பிறப்பு இறப்பைக் கடந்தார் தம்மை ஆண்டானே—பிறத்தலையும் இறத்தலையும் ஒழிந்த மெய்யன்பரை ஆட்கொண்டருளியவனே, அந்தோ—, அவா வெள்ளக் கள்வனேனை — வெள்ளத்தனைய அவாப் பெருக்கினையுடைய கள்வனுகிய என்னையும், நீ ஆட் கொண்ட வண்ணம் என்னை — நீ ஆட்கொண்டருளிய தன்மை என்னையோ? என்பது.

வி-ரை: மாசு—வேற்று ஒளியான் அன்றி விளங்காமை. உலகத்தில் இரத்தினக் குற்றங்களுள் யாதும் இன்றி ஒளி மிக்க எத்துணை உயர்ந்த மாணிக்கம் ஆயினும், ஞாயிற்றின் கதிர் முதலிய பிற ஒளிகளால் ஒளி காலுமேயன்றித் தானே ஒளி செய்யாமை அறிகின்றோம். செம்மேனி யெம்மானுகிய இறைவன் திருவுருவம் பேரொளிப் பிழம்பாக நின்று, மற்றை ஒளி மண்டிலங்களுக்கு ஒளி அளிப்பதன்றி, அம்மண்டிலங்களின் ஒளியைத்தான் பெறுவதன்று. இவ் வுண்மையை,

> 1 "நாயகன் கண்ண யப்பால் நாயகி புதைப்ப வெங்கும்
> பாயிரு ளாகி மூடப் பரிந்தவ னுக்கு நெற்றித்
> தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பிற்
> றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னார்"

என்னும் சிவஞான சித்தியின் விளக்கத்தானும் அறிக. இறைவனை மணிக்குன்றாகக் கூறியதன் கருத்து; 2 "ஆடகச் சீர் மணிக்குன்றே" என்புழி, விளக்கப்பட்டுள்ளது. ஆண்டுக் காண்க.

உலகத்திற்கெல்லாம் ஒளி விளக்கம் செய்யும் இறைவன் தமக்குச் செய்த பேருதவியை நினைந்து, அப் பெருமானைப் பொதுமையினின்றும் அன்பு மேலீட்டல் சிறப்பு முறையிற்கொண்டு, "எந்தாய்" என்றார். இனி, பிறப்பு இறப்பைக் கடந்தவர்களாகிய மெய்யன்பர்களின் இயல்பை விளக்குகின்றார். "தாம்" என்பது பிறப்பு இறப்பைக் கடந்த அடியாரைக் குறிக்கும். அடியார் பேசத்தொடங்கின், 'ஈசனே' என்பது முதலிய இறைவன் திருப்பெயர்களையும் பெருமைகளையுமே பேசுவர் அல்லது, வேறு ஒன்றையும் பேசார் என்பது உணர்ந்து, "பேசிற்றாம் ஈசனே எந்தா யெந்தை பெருமானே யென்றென்றே பேசிப்பேசி" என்றார். 3 பிறந்து மொழி பயின்றபின் எல்லாங் காதல், சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்" என்பது அம்மை திருவாக்கு. ஈசன் என்பது அமரர், மக்கள் முதலிய எல்லோர்க்கும் தலைவன் என்பதை உணர்த்தும். அங்ஙனம் பொதுவாகிய பெருந் தலைவனே தமக்குத் தந்தையாயினன் என்னும் உவகை மேம்பாட்டால், "எந்தாய்" என்று கூறப்பட்டது.

உலகத்தில் ஒருவனுக்குத் தந்தையாயினன் அவனை ஆட்கொள்ளும் தலைவனாகவும் இருக்கவேண்டும் என்னும் நியமம் இன்று. ஈண்டுத் தமக்குத் தந்தையாதலேயன்றித் தம் தந்தைக்கும் தலைவன் ஆயினன் என்பது தோன்ற, "எந்தை பெருமானே" என்று கூறப்பட்டது. "எந்தை

---
1 சிவஞான சித்தி, சூத். 1, செ. 52. 2. திருவாசகம் 10.
3. அற்புதத் திருவந்தாதி 1.

பெருமானே" என்புழி, நான்கன் உருபும் எச்சவும்மையும் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன. எந்தைக்கும் தலைவனே என்றது, வழிவழி அடிமையாகக்கொண்டு ஆள்பவன் என்பதைக் குறிப்பதாகும். [1] "மூதாதை மாதாளும் பாகத்தெந்தை" என்பதுவும் இக்கருத்துப் பற்றியதே. தந்தையின் செல்வத்திற்குப் புதல்வன் உரிமை உடையனாதல் போல், இறைவனது பேரானந்தப் பெருஞ் செல்வத்திற்கு அன்பர் உரிமை உடையராதல் பற்றி, இறைவன் தந்தையாகவும், அடிமையாகக்கொண்டு பணி புரிவித்துக்கொள்ளும் தலைவனைப்போல நன்னெறிப் படுத்துத் திருத்தொண்டில் ஈடுபடச் செய்தலின் பெருமான் ஆகவும், அரசனைப் போலிருந்து பொதுவாட்சி முகமாகப் பாதுகாத்தலின் ஈசனாகவும் மெய்யன்பர் பேசுவாராயினர் என்பது கருத்து. "என்றென்றே பேசி" என்றதனால், இங்ஙனம் இறைவனைப் பற்றியே பலகாலும் பேசுவார் என்பது பெறப்படும். ஏகாரம் தேற்றம். அன்பர்களின் மன மொழி மெய்கள் இறைவன்பால் ஈடுபடு முறையில் இது மொழியின் ஈடுபாடாகும்.

இனி, அன்பர் தம் உடலிற் பூசப்புகுவாராயின், திரு நீற்றையன்றி வேறு எதனையும் பூசார் என்பது தோன்ற, "திருநீறே" எனப்பட்டது. ஈண்டு, ஏகாரம் பிரிநிலைப் பொருட்டு. இதனால் திருநீறு அல்லாத நறுமணக் கலவைகள் எத்துணை உயர்ந்தவை ஆயினும் விரும்பார் என்பது போதரும். திருநீற்றைப் பூசுங்காலும், விருப்பம் இன்றிச் சிறிதளவு எடுத்து இடுவரோ எனின், அங்ஙனம் செய்யாது, பூசுதற்குரிய உடல் உறுப்பு முழுவதிலும் மிக்க மகிழ்ச்சியோடு பூசுவர் என்பது போதர, "நிறையப் பூசி" என்றார். ஈண்டுத் திருநீறு என்பது இனம்பற்றி உருத்திராக்கத்தையும் உணர்த்துவதாகும். ஆகவே, திரு நீறும் கண்மணியுமே, முறையே அன்பர்கள் பூசுதற்கும் புனைதற்கும் உரியனவாம் என்பது தெளிவாம்.

மீண்டும் எம்பெருமானே காத்தருள்க என்னும் பொருள் தோன்ற, "போற்றி யெம் பெருமானே"

---

1. திருவாசகம், திருச்சதகம் 30.

என்று மொழிப் பணியாகக் கூறியது, திருநீறு பூசுங்கால் செய்யும் வேண்டுகோளைப் புலப்படுத்துவதாகும். "எம் பெருமானே போற்றி" என்பதில், போற்றி என்பது வணக்கத்தைக் குறிப்பதாகக் கொண்டு, "சிவாய நம" என்னும் திருவைந்தெழுத்தின் விளக்கமாகக் கொள்ளுதலும் பொருந்தும். "சிவாய நம" என்பது சிவனுக்கு வணக்கம் என்னும் பொருள் உடையதாகும். அப்பொருளே, "எம்பெருமானே போற்றி" என்னும் தொடரிலும் புலப்படுதல் அறியலாம். இதனால் திருவைந்தெழுத்தை ஓதி, திருநீறு பூசல் வேண்டும் என்னும் விதிமுறை புலனாதலும் உணரத்தக்கது. போற்றி யெம் பெருமானே யென்று நிறையப் பூசி என முடிக்க.

பின்றுதல் – பிறழ்தல்; பிற்படுதலுமாம். ஆகவே, உண்மை அடியார்களின் அன்பு, பிறழ்ச்சி அடையாத நிலையில் உள்ளது; அல்லது எதற்கும் பிற்படாதது என்பதாம். எத்துணை இடையூறு நேரினும், இயல்பின் மாறுதல் அவ் அன்பிற்கு இன்று என்பதைப் புலப்படுக்க, "பின்றா நேசம்" எனப்பட்டது. இஃது உள்ளத்தின் ஈடுபாடு. பேசிப் பூசிப் பின்றாத நேசத்தால் என முடிக்க. இங்ஙனம் மனம், மொழி, மெய்களின் ஈடுபாட்டால் வீட்டு நிலைக்குத் தகுதியுடையராயினர் என்பது தோன்ற, "பிறப் பிறப்பைக் கடந்தார்" என்றார். இறைவன் ஆட்கொண்ட பின்னரே, பிறப்பு இறப்பைக் கடத்தல் கூடும். அங்ஙனம் ஆகவும், "பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை ஆண்டானே" என்பது எங்ஙனம் பொருந்தும் எனின், "அரசன் முடி சூடினன்" என்புழிப் போலப் பொருந்துமெனக் கொள்க. முடி சூடிய பின்னன்றே அரசன் ஆதல் வேண்டும். அரசன் ஆகிய பின் முடி சூடுதல் இன்று. இதனால் குடிப்பிறப்பு முதலியவற்றால் அரசன் ஆதற்குத் தகுதியுடையான் முடி சூடினன் என்பது கருத்தாகக் கொள்ளல் வேண்டும். அவ்வாறே, மன மொழி மெய்களின் தூய்மையால், பிறப்பு இறப்பைக் கடத்தற்குத் தகுதியுடையாரை ஆட்கொண்டருளினன்

என்பதே கொள்ளத்தக்கது. இறந்தவர் பிறத்தல் என்பது வீட்டு நிலையிற் செல்லாமையானும், பிறந்தவர் இறத்தல் என்பது உறுதியாதலானும், பிறப் பிறப்பை என்புழிப் பிறப்பு முற் கூறப்பட்டது. [1] "அவாவென்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்னும் பொருளுரைப்படி, பிறவிக்கு வித்தாகவுள்ள அவா, வெள்ளத்து அனையதாயின், அதனால் உண்டாம் பிறப்பு எல்லையற்றதாம் என்பது தெளிவாம். வெள்ளத் தனைய அவாப் பெருக்கினை உள்ளத்தடக்கி, அவாவற்ற வனைப்போல நடிக்கின்றேன் என்பார், "அவா வெள்ளக் கள்வனேனை" என்றார். அவாப் பெருக்குடையனாதலே குற்றமாம். அத்தகைய அவாவைக் கரந்து நடித்தல் அதனினும் பெரிய குற்றமாம் என்பது கருத்து. வெள்ளத் தனைய அவாவைக் கரத்தல், சொல்லாலும் செயலாலும் நிகழ்வது ஆதலின், மன மொழி மெய்களின் தூய்மை யின்மை பெறப்படும். முக்கரணங்களும் தூய்மை யுடையனவாய் நிகழப்பெற்ற தகுதியுடைய மெய் யன்பரை ஆட்கொள்ளும் இறைவன், அம் மூன்றும் தூய்மையில்லனவாய் நிகழப்பெற்ற தகுதியில்லாத தம்மை ஆட்கொண்டது என்னே எனக் காரணம் அறியாது வியப்புறுவார், "கள்வனேனை ஆட்கொண்ட வண்ணந் தான் என்னே" என்றார். "அந்தோ" என்பது வியப்பிற் பிறந்த இரக்கக் குறிப்பு. தான் இரண்டும் அசை நிலைகள். ஏகாரம் ஈற்றசை.

இதன்கண், "மாசற்ற மணிக்குன்றே" என்பதனால் எல்லா ஒளி மண்டிலங்களுக்கும் ஒளி உதவும் இறைவன் இயல்பு மெய்யுணர்வினால் அன்றிச் சுட்டறிவுக்குப் புல னாகாமை பெறப்படுதலின், "**சுட்டறுத்தல்**" என்னும் பதிகம் முதலிய பொருளும், மன மொழி மெய்களின் ஈடுபாடு குறிக்கப்பட்டமையால், **பக்தி விசித்திரம்** என்னும் சதகம் முதலிய பொருளும் புலப்படுக்கப்பட்டமை அறிக.

---

1. திருக்குறள் 361.

25. வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்றி
அனேகன்ஏகன் அணு அணுவில் இறந்தா யென்றங்
கெண்ணந்தான் தடுமாறி யிமையோர் கூட்டம்
எய்துமா றறியாத எந்தாய் உன்றன்
வண்ணந்தான் அதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்கள் அவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்
எம்பெருமான் என்சொல்லிச் சிந்திக் கேனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் தம் போலி அன்பை உணர்ந்தும், இறைவன் தம்மை ஆட்கொண்டருளிய வண்ணந்தான் என்னே என வியந்த அடிகள், இத் திருப்பாட்டில் அப் பெருமான் தன் வண்ணம் வடிவு முதலியவற்றைப் புண்ணியப் பயன் நுகர்ச்சியிலே தலைப்பட்டுள்ள இமையவரும் அறியாவாறு மயங்க வைத்து, அவாப் பெருக்கில் அமிழ்ந்திக் கிடக்கும் தமக்குக் காட்சியளித்து ஆட்கொண்ட அருட்டிறத்தை, எவ்வாறு நினைந்து பாராட்டுவேன் எனத் தம் ஆராமையைப் புலப்படுத்துகின்றார்.

ப-ரை: எம்பெருமான் — எங்கள் தலைவனே, இமையோர் கூட்டம்—அமரர் குழு, உன் வண்ணம் தான் சேயது அன்று — உன் நிறம் செம்மையானது அன்று, வெளிது அன்று — வெண்மையானது அன்று, அனேகன் ஏகன் அணு அணுவில் இறந்தாய் என்று — நீயே பல உயிரும் ஆவாய் தனி முதல்வன் ஆவாய் அணு வுருவம் ஆவாய் அணுவினுங் கடந்த நுண்ணியை யென்று இங்ஙனம் பலவாறு கூறி, அங்கு எண்ணம் தான் தடுமாறி—ஆண்டு நினைவு மயங்கி, எய்தும் ஆறு அறியாத எந்தாய் — நின்னை யடையும் நெறியினின்று அறியப்படாத என் தந்தையே, உன் தன் வண்ணங்காட்டி வடிவு காட்டி மலர்க்கழல்கள் அவை காட்டி—உன்னுடைய உண்மையான நிறத்தையும் திருவுருவத்தையும் தாமரை மலர் போன்ற திருவடிகளையும் உள்ளவாறு யான் காணுமாறு அருள் செய்து,

வழிஅற்றேனை — நெறி அறியாது மயங்கும் அடியேனை, திண்ணம் தான் பிறவாமல் காத்து ஆட்கொண்டாய் — உறுதியாக இனிப் பிறவி நேராமல் காப்பாற்றி ஆளாகக் கொண்டனை, என் சொல்லி சிந்திக்கேன் — அத்தகைய நின்னை எங்ஙனம் பாராட்டி நினைவு கூரக்கடவேன் என்பது.

விரை : பேரொளிப் பிழம்பாகவுள்ள இறைவன் திருமேனியின் வண்ணம், ஞான நாட்டம் பெற்றோர்க்கு அன்றி, இமையா நாட்டம் பெற்றோர்க்கும் காண்டற்கு அரிதாம் என்பார், "இமையோர் கூட்டம்" என்றார். கூட்டம் என்றதனால், ஒருவர் அறிந்தபடி மற்றொருவர் அறியாமல் பலரும் பலவகையாகக் கருதினர் என்பது புலனும். இறைவன் இயல்பை மறை முதலிய நூல்களான் ஆராய்ந்து அறியப் புகுந்த தேவர்கள், பருமையில் தொடங்கி நுண்மையில் செல்ல முற்பட்டு, முதலில் நிறம் இன்னது எனத் துணியத் தலைப்படுவாராயினர். "சேயதன்று" என்றதனால் வெண்மையாமென்பதும், "வெளிதன்று" என்றதனால் செம்மையாமென்பதும் போதரும். [1] "வெண்ணீறு சண்ணித்த மேனி" என்றபடி, திருமேனியிற் பூசப்பட்ட திருவெண்ணீறு குறித்து, "வண்ணந்தான் சேயதன்று" எனப்பட்டது. அன்மைச் சொல்லால் வெண்மை நிறம் என்று பெறப்பட வைத்தது, "செம்மேனியெம்மான்" என்று மறை நவின்றது பற்றியாம். மறையாகமங்களில், [2]"செம்மேனியெம்மான்," [3] "செந்தாமரை வண்ணன் தீவண்ணன் எம்மிறை" என்று கேட்கப்பட்டமையால், செம்மை நிறம் எனக்கருதி இருந்தார்க்கு, நீற்றுப்பூச்சினால் வெண்மை நிறம் கூறப் படுதல் பற்றி, "சேயதன்று" எனவும், அவ்வெண்மை, நீற்றுப்பூச்சாகிய செயற்கையாற் காணப்படுவதன்றி, இயற்கையிற் செம்மையாம் எனக்கொண்டு,"வெளிதன்று" எனவும் கருதுவாராயினர் என்பது.

1. திருநாவுக்கரசர் தேவாரம், "மெய்யெலாம் வெண்ணீறு."
2. " " "சிவனெனு நாமந்தமக்கே."
3. திருமந்திரம் 405.

பின்னர், நிறத்தைப்பற்றிய ஆராய்ச்சியை விட்டுத் தத்துவ ஆராய்ச்சியில் தலைப்பட்டு, "அநேகன், ஏகன்" என்பன முதலியவாகக் கருதுவாராயினராம். உயிர்கள் பலவாக இருத்தலின், அப்பல்லுயிர்களும் அவனேயாம் எனக்கொண்டு, "அநேகன்" ஆவான் என்று கருதினரென்பது. அங்ஙனங் கருதுங்கால், அப்பல்லுயிரும் வினைப் பகுதிகளுக்கு ஏற்பப் பிறந்து இறந்து இன்பத்துன்பங்களில் ஈடுபடுதலானும், இறைவனுக்கு அவை இன்மையானும், அநேகன் அல்லன், ஏகனேயாம் எனக் கருதினராம். ஏகன் என்றதனால், ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனி முதல்வன் என்பதும், அகண்ட வடிவினன் என்பதும் பெறப்படும். பருப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் பருப் பொருளாக வுள்ள அப் பெருமானே, நுண் பொருள்கள் எல்லாவற்றிற்கும் நுண்ணியனாகவும் உள்ளவன் என்று மறைகள் கூறுதலின், "அணு" எனவும், "அணுவில் இறந்தாய்" எனவும் கூறப்பட்டன. "[1]பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர்" என்று தமிழ் மறை கூறுதலும் அறிக. அளவின் மிக்க பருமையும், அளவின் மிக்க நுண்மையும் மக்களாற் காண்டற்கு அரியன என்பது பற்றி ஈண்டு, 'பார்த்தற் கரியவர்' என்று கூறப்பட்டது. இறைவன் பரியனாக இருக்குங்கால், அப் பருமை வடிவில் அடங்கிய அப் பெருமான் உயர் குணங்கள் எல்லாம், அணுவினுங் கடந்த அவனது நுண்ணிய வடிவினும் அடங்கி யிருக்கும் என்பதை, [2] "நுண்ணியை எனினும் நம்ப நின் பெருமை நுன்னிடை ஒடுங்க நீவந்தென், கண்ணினுண் மணியிற்கரந்தனை" என்னும் திருவிசைப்பாப் பாடற் பகுதியானும் உணரலாம். அங்கு — அவ்வாராய்ச்சியில்; மறை, ஆகமம் முதலிய நூல்களின் ஆராய்ச்சியிற் பல தலையாய உணர்வு ஏற்பட்டமையால், இறைவன் இயல்பு துணியப் பட்டிலது என்பார், "எண்ணந் தடுமாறி" என்றார்.

---

1. திருநாவுக்கரசர் தேவாரம்.
2 திருவிசைப்பா, கருவூர்த்தேவர் "பண்ணிய தழல்காய்,"

மாற்ற மனங் கழிய நின்றவன் ஆதலால் எண்ணந் தடுமாறுதல் இயல்பே. அநுபவ அறிவினால் அன்றி, நூலறிவு எத்துணை நுண்ணிதாயினும், அதனால் அறியப் படான் என்பதை, 1 "நூலே நுழைவரியான்" என்று அடிகளும், 2 "நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக" என்று அம்மையும் கூறியவாற்றான் அறியலாம். இமையவர்க்கு இங்ஙனம் உளத் தடுமாற்றம் ஏற்பட்டமையால், இறைவனை உள்ளவாறு அடைதற்கு உரிய நெறி நின்று அறிந்து கோடல் இயலாததாயிற்று என்பது கருதி, "எய்தும் ஆறறியாத எந்தாய்" என்றார். ஆறு அறியாத என்புழி, ஆற்றினின்றும் என ஐந்தனுருபை விரித்துக் கொள்ளல் வேண்டும். எய்தும் நெறியையும், அந் நெறி நின்று இறைவனையும் அறிந்திலரென்பது கருத்து. "அறியாத" என்னும் செயப்பாட்டுப் பெயரெச்ச வினை, "எந்தாய்" என்னும் செயப்படு பொருளைக் கொண்டு முடிந்தது. "உன்" என்பது இடைநிலை விளக்காக நின்று மேலுங் கூட்டப்பட்டது.

புண்ணியப் பயனையே நுகருந் தேவர்கள் நூலறிவு கொண்டு நுணுகி ஆராய்ந்தும், திருவருட் பேறின்மையால் நெறியறியாது மயங்கி நிற்ப, அவர்க்குக் காட்சிப்படாத வண்ண முதலியவற்றைத் தமக்குக் காட்டியருளிய முறையைக் குறிப்பிடுவாராய், "வண்ணம் அதுகாட்டி வடிவு காட்டி மலர்க்கழல்கள் அவை காட்டி" என்றார். ஈண்டு அது அவை என்பன பண்டறி சுட்டாக நின்று, நூல்களின் முகமாக முன்னர் அறியப்பட்டமையைக் குறிப்பனவாம். அது என்பதை வடிவோடும் இயைக்க. காட்டி என்றது அநுபவ அறிவிற் புலனாம்படி காட்சி அளித்து என்னும் பொருட்டு. ஒருவனைச் சேய்மையினின்று காணுங்கால், முதலில் அவன் வடிவும், அணுக அணுகப் பின்னர் அவன் உறுப்புக்களும், நிறமும் முறையே காணப்படுவனவாம். இது மக்கட் காட்சி.

1. திருவாசகம், திருத்தெள்ளேணம் 14.
2. காரைக்கால் அம்மையார், அற்புதத் திருவந்தாதி, செ. 33.

கடவுட் காட்சியில் இறைவன் ஒளி வடிவினன் ஆதலின். முதலில் நிறமும் ஒளியும், அணுக அணுகப் பின்னர் வடிவமும் திருவடிகளும் முறையே காணப்படுதல் இயல்பு ஆதலின், அம்முறையாற் காட்சிப்பட்டு அநுபவித்ததை, இங்ஙனம் அருளிச்செய்வாராயினர். இறைவன் ஞானாசிரியனாகக் குருந்த மரத்தடியில் எழுந்தருளி யிருக்குங்கால், அடிகள் முதலில் அப்பெருமான் திருமேனியின் நிறவொளியில் ஈடுபட்டு, அணுகிக் குரு வுருவத்தையும், பின்னர்த் தம் வணக்கத்திற்குரிய திருவடிகளையும் கண்டு இன்புற்ற அநுபவ உண்மையை இவ்வாறு புலப்படுத்துள்ளார் என்பது அறிக. தேவர்தாம் வண்ண முதலியவற்றை அநுபவ வுணர்விற் கண்டு துணிதற்கு நெறி அறியாமை தடையாயின், அத்தடையே எனக்கும் உளதாயிற்று என்பார், " வழியற்றேனை " என்றார். அங்ஙனம் நெறியறியாத என்னை மீண்டும் பிறவாமல் உறுதியாக ஆட்கொண்டு காப்பாற்றி அருளினை என்பார், " திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய் " என்றார். இறைவன் திருவடிக் காட்சி சிவ புண்ணியமாக நின்று, இந்திரன் முதலிய இறையவர் பதங்களை அருளுதலும் உண்டு. அந்நிலையிற் காத்தல், பிறவியைக் கொடுத்துக் காப்பாற்றியதாகும். இன்னோரன்ன பதங்களைப் பெற்றார் மீண்டும் பிறத்தல் கூடும். அங்ஙனம் இன்றித் தமக்கு எவ்வாற்றானும் பிறவாமற் காத்தது உறுதி என்பார், " திண்ணந்தான் " என்றார். ஆட்கொண்டு பிறவாமற் காத்தாய் என மாற்றிக் கொள்ளுதலும் ஆம்; ஆட்கொண்ட பின்னரே பிறவி யொழிக்கப்படுதலின். சிந்தித்துப் பேசுதல், மனம் தன் வயப்பட்டிருக்குங்கால் நிகழ்வது. ஈண்டுத் தகுதியில்லாத நிலையில் தம்மை ஆட்கொண்டதாக எண்ணி, அடிகள் உள்ளம் தன்வயம் இழந்ததாதலின், அந்நிலையில் அன்பு மேலீட்டால் மனத்தில் தட்டாமல் முதலிற் பேச்சு நிகழத் தலைப்பட்டனவாக, அப்பேச்சின் நின்றும் சிந்தனைக்குச் செல்வாராய், "என் சொல்லிச் சிந்திக்கேனே" என்றார். தான், ஏ என்பன அசைகள்.

இதன்கண், நூலாராய்ச்சியாற் சுட்டியுணர முற்பட்ட தேவர்க்கு, எண்ணந் தடுமாறி, அறியப்படாத இறைவன் வண்ண முதலியன, அடிகளின் மெய்யுணர்விற்கு அநுபவ நிலையிற் புலனாயின என்று கூறப்பட்டமையான், சுட்டறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்றுதல் காண்க.

26. சிந்தனைநின் தனக்காக்கி நாயினேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கியைம் புலன்கள்ஆர
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மால்அமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் இறைவன் தன் வண்ணம் வடிவு முதலியவற்றைத் தமக்குப் புலனும்படி காட்டிய அருள் திறத்தில் ஈடுபட்டுக் கூறிய அடிகள், இத் திருப்பாட்டில் தம் ஐம்புலன்களும் ஆரத்துய்க்கும் வண்ணம் தன்னையே வழங்கிய தனிப் பெருங் கருணையை வெளிப்பட அருளிச் செய்கின்றார்.

**ப-ரை:** வந்தனை ஆட்கொண்டு உள்ளே புகுந்த விச்சை—வலிய வந்து அடியேனை ஆளாகக் கொண்டு என் உள்ளே புகுந்தருளிய வித்தையினையுடைய, மால் அமுதப் பெருங்கடலே—யாவரானும் விரும்பத் தக்க அமிழ்தப் பெருங்கடலே, மலையே—, செந்தாமரைக்காடு அனைய மேனி—செம்மையாகிய தாமரை மலர் வனம் போன்ற திருமேனியை யுடைய, தனிச்சுடரே — ஒப்பற்ற ஒளி விளக்கே, நாயினேன் தன் சிந்தனை நின் தனக்கு ஆக்கி — நாயினேனுடைய நினைவெல்லாவற்றையும் உன் பொருட்டு நிகழ்வித்து, கண்ணிணை நின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி—என் இரு கண்களையும் நின் திருவடி மலர்களுக்கு உரிமையாக்கி, வந்தனையும் அம் மலர்க்கே ஆக்கி—வணக்கத்தையும் அத் திருவடி மலர்களுக்கே நிகழச் செய்து, வாக்கு உன் மணி வார்த்தைக்கு ஆக்கி,

வாயை உன்னைப் பற்றிய மணி மொழிகளுக்கு உரிமை யாக்கி, இரண்டும் இல் இத் தனியனேற்கு — நூலறிவும் அநுபவ உணர்வும் இல்லாத துணையற்ற இவ் வேழையே னுக்கு, ஐம்புலன்கள் ஆர உன்னைத் தந்தனை — ஐம்புலன் களும் நுகர்ந்து இன்புற உன்னையே தந்து அருளினாய் (நின் அருட்பெருக்கை என் என்பேன்) என்பது.

வி-ரை: வந்தனை புகுந்த என்புழி, வந்தனை யென்பது எச்சம் முற்றாக நின்று திரிந்த தென்னும் கருத்தால், 1 "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" என்னும் சூத்திர விதியில் அடக்கி, முற்றுத் திரிசொல் என்பர் சேனாவரையர். 2 "வினைமுற்றே வினையெச்சமாகலும்" என்று விதி கூறி, முற்று எச்சமாக நின்றது என்பர் நன்னூலார். இறைவன் ஞானாசிரியன் உருக்கொண்டு, வலிய வந்து தம்மை ஆட்கொண்டு அருளியதை நினைந்து, "வந்தனையாட்கொண்டு" என்றார். 3 "பந்தமறும் எல்லை யது பார்த்தினி திருந்தார்" என்பது வாதவூரடிகள் புராணம். கட்டறுத்து ஆட்கொண்ட பின்னரே அடி களின் உள்ளத்தே இறைவன் புகுந்தானும். உட்புகுந்த செய்தி, 4 "நாலே நுழைவறியான் நுண்ணியனாய் வந் தடியேன், பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தால்" என்பது முதலிய பல திருப்பாடல்களினும் காணலாம். புகுந்த தன் உண்மை மேலே விளக்கப்பட்டது. கடலா கவும் மலையாகவும் காடாகவும் ஒப்புக் கூறப்பட்ட இறைவன் தன் பருவுருவை நுண்ணி தாக்கித் தம்முட் புகுந்தது, ஒரு மாய வித்தை என்பார், "புகுந்த விச்சை" என்றார். விச்சை — வித்தை; வியக்கத் தக்க செயல்.

மால்—அவா. கண்டார்க்கு அச்சத்தை விளைவித்தல், கடைந்தெடுக்கும் உழைப்பிற்குத் தக நஞ்சத்துடன் சிறிது அமிழ்தத்தை யளித்தல், ஊழியின் இறுதியில் ஒடுங்கிச் சுருங்குதல், இவ்வெல்லாம் பௌதிகக் கடலுக்கு உள்ளன.

---

1. தொல். சொல். சூத்திரம் 457. 2. நன்னூல் சூத்திரம் 351.
3. வாதவூர் புராணம், திருப்பெருந்துறைச் சருக்கம், செ. 17.
4. திருவாசகம், திருத்தெள்ளேணம் 14.

இச் செயல்களுக்கு மாறாக, மெய்யன்பினால் கண்டார்க்கு மேன்மேலும் விருப்பத்தை விளைத்தல், முற்றும் அமிழ்த மயமாதல், எக் காலத்தும் சுருங்காமல் ஒரே படியாக நிறைந்திருத்தல் என்னும் இவ் இயல்புகள் இறைவனுக்கு உள்ளமையால், மால் அமுதப் பெருங் கடலே'' என்றார். கருணையை நீர்ப்பெருக்காகக் கொண்டு, அதற்கு இடனாதல் பற்றி, இறைவன் கடல் என்னப் பட்டான். [1] "பரங்கருணைத் தடங்கடலை'' என்பதும் ஈண்டு நினைக்கத்தக்கது. கடலுக்குச் சலித்தல் உண்மை யானும், இறைவன் சலிப்பறியாத் தன்மையன் ஆதலா னும், அவ் இயல்பை விளக்குதற்கு, "மலையே'' என்று கூறினார். இறைவனுடைய திருமுகம், கண், வாய், கை, கால் முதலிய உறுப்புக்களுக் கெல்லாம் செந்தாமரை மலர் ஒப்புக் கூறப்பட்டமையால், "செந்தாமரைக் காடனைய மேனி'' என்றார். கடல் நெய்தலையும், மலை குறிஞ்சியையும், தாமரை மருதத்தையும், காடு முல்லை யையும் உணர்த்தலின், காணப்படும் நானில வடிவமும் இறைவன் திருமேனியையே நினைவுறுத்தும் என்பது புலப்படுக்கப்பட்ட படியாம்.

> [2] "காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
> வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு — மாலையின்
> தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை மற்றவர்க்கு
> வீங்கிருளே போலு மிடறு''

என்புழி, கால வகைகள் இவ்வாறு நினைவுறுத்தும் என்று அம்மை அருளியது போலவெனக் கொள்க. முதல், கரு, உரி என்னும் மூவகைப் பொருள்களுள், முதற் பொருள் நிலமும் பொழுதும் ஆகும். ஆகவே ஈண்டு நில உருவமாக அடிகளும், ஆண்டுப் பொழுது வடிவமாக அம்மையும் கூறியது அறிந்து இன்புறத்தக்கது.

பிற பொருள்களை அநுபவித்தற்கு உதவியாத லோடு, தன்னையே அநுபவித்தற்கும் தருதல் பற்றி, "தனிச் சுடரே'' என்றார். ஒரு விளக்குப் பிறபொருளைக்

---

1. திருவாசகம், திருத்தெள்ளேணம் 15.
2. காரைக்கால் அம்மையார் அற்புதத் திருவந்தாதி 65.

காண்டற்கு உதவி புரியுமே யன்றித் தன்னைத் தொட்டாற் சுடும் என்பது ஈண்டும் நினைக்கத்தக்கது. இனித் தம் மன மொழி மெய்களாகிய முக்கரணங்களையும் இறைவன் தனக் குரிமையாக்கிக் கொண்ட செய்தியை அடிகள் அருளிச் செய்கின்றார். எண்ணம் இல் வழி நிகழும் செயலும் மொழியும் சிறந்த பயனை விளையாவாதலின், முதலில் நினைவு எல்லாம் தன்னைப்பற்றியே நிகழுமாறு உபகரித்ததைப் புலப்படுத்துவாராய், "சிந்தனை நின்தனக் காக்கி" என்றார். கண் முதலியவற்றைக் குறித்துக் கூறுங்கால், திருவடி, உறுப்பு முதலியவற்றிற்கு ஆக்கி என்று கூறியதுபோல், சிந்தனையை ஏகதேசப்படுத்தாமல் "நினக்கு" என முழுதையும் குறித்தது, இறைவன் திருவுருவத்தை மனம் இடையறாது தியானித்தல் வேண்டும் என்பதும், அந் நினைவின் நின்றே கண் முதலிய உறுப்புக் கள் திருவடி முதலியவற்றைப் பற்றி நிற்றல் வேண்டும் என்பதுங் கருதியாம். ஆக்குதற்கு வினை முதல் இறைவ னுவான். பின் வருவனவற்றிற்கும் ஈது ஒக்கும்.

அன்பர் செய்யும் வழிபாட்டிற்கு இரங்கி, அவர்க்கு இறைவனே தன்னை நினையத்தருதல் வேண்டுமென்பது சைவநூல் துணிபு. 1 "என்னை நினைந் தடிமை கொண் டென் இடர் கெடுத்துத், தன்னை நினையத் தருகின்றான்" என்னும் சைவாசிரியர் அநுபவ உரையானும் அறிக. உடற்பணிகளுள் சிறந்தன கண்களால் காண்டலும், கைகளால் தொழுது தலையால் வணங்கலுமாம். தொழுதல், வணங்குதல் இரண்டும் வந்தனை என்னும் சொல்லாற் பெறப்படும். காண்டல் வந்தனை என்னும் இரண்டனுள், முன்னதனைக் கருவியாற் பெற வைத்தார்; காட்சி "ஐம்புலன்களார" என்பதனாலும் பெறப்படுதலின். "ஐம்புலன்களார" என்பதனாற் பெறப்படுவதை ஈண்டுங் கூறியது ஒரு நயம் பற்றி. அஃது இன்னதென்பது பின்னர் கூறப்படும். இறைவன் திருவுருவம் முழுதும் காண்டற் குரியதாயினும், திருத்தொண்டில் ஈடுபட்டவர்க்குத்

1. பதினோராந்திருமுறை, விநாயகர் திருவிரட்டைமணி மாலை.

திருவடிக் காட்சியிலே கண்கள் ஈடுபடுதலும், வந்தனை அத் திருவடியைக் குறித்தே செய்யப்படுவ தென்பதும் முறையாகும். இம் மரபு வழாது இறைவன் உபகரித்த இயல்பை நினைந்து, "கண்ணிணை நின் திருப்பாதப் போதுக் காக்கி" எனவும், "வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி" எனவும் கூறியருளினர்.

வாயில் நின்றும் பேச்சு வெளிப்படுமாயின், அப்பேச்செல்லாம் இறைவனுடைய புகழ் வடிவமாகவே யாகும்படி உபகரித்ததைக் கருதி, "வாக்குன் மணி வார்த்தைக்காக்கி" என்றார். [1]"மாசில் மணியின் மணிவார்த்தை, பேசிப் பிறப்பறுத்தேன்" என்பதும் அடிகள் திருவாக்கு. வார்த்தை ஈண்டுப் புகழ்மொழி என்னும் பொருட்டு. பொருள் ஒளிமிக்க புகழ் மொழியாதலின், "மணிவார்த்தை" என்னப்பட்டது. மற்றைத் தேவர் மக்கள் முதலியோரைப்பற்றிய புகழுரைக ளெல்லாம் பொருள் இல்லாதன என்பதும், இறைவனைப் பற்றிய புகழுரைகளே பொருள் உடையன என்பதும், [2]"இறைவன் பொருள் சேர்புகழ்" என்னும் பொருளுரை யானும், "இறைமைக் குணங்கள் இலர் ஆயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழுரைகள் பொருள்சேரா வாகலின், அவை முற்றவு முடைய இறைவன் புகழே பொருள்சேர் புகழ் எனப்பட்டது" என்னும் பரிமேலழகர் உரையானும் உணரத்தக்கன. இறைவன் பொருள்சேர் புகழ் சிறந்த மாணிக்கத்தைப் போலப் பொருள் ஒளி மிக்கு, அடிகள் திருவாக்கினின்று வாசக வடிவமாக வெளிப்பட்டது குறித்தே, அடிகள் 'மாணிக்கவாசகர்' என்று அழைக்கப்பட்டனர்போலும்.

கன்மேந்திரியம் ஞானேந்திரியம் இரண்டிற்கும் இடனுகிய நா ஈண்டுக் கன்மேந்திரியமாகக்கொண்டு "வாக்கு" எனப்பட்டது. சிந்தனை முதல் வாக்குவரை கூறப்பட்ட செய்திகளில், இறைவன் திருவுருவத்தை

1. திருவாசகம், பண்டுாய நான்மறை 7. 2. திருக்குறள் 5.

நினைதலும், காண்டலும், தொழுது வணங்கலும், புகழ்ந்து பாராட்டலும் முறையே நிகழும் உண்மையும், அந்நிகழ்ச்சிகளால் கரணங்கள் மூன்றையும் இறைவன் தன்வயமாக்கிய செய்தியும் புலனாதல் அறிக. "இரண்டும் இல்" என்பதற்கு, நல்வினை தீவினை யில்லாத எனவும், இம்மை மறுமை இல்லாத எனவும் கூறுவாரும் உளர். அவையற்ற நிலை, வீடு பெறுதற்குரியதாதலின், அத்தகுதி தமக்குள்ளதென்று அடிகள் தம்மைப் பெருமைப்படுத்திக் கொள்ளும் இயல்பினர் அல்லர் என்பதையும், தகுதியில்லாத நிலையில் ஆண்டவன் தம்மை ஆட்கொண்டனன் என்பதே ஈண்டு அடிகள் கருத்தாதலையும் உணரின், அக்கருத்துப் பொருத்தமாகாதென்பது புலனும். ஆகவே, அடிகள், "[1]கற்றறியேன் கலைஞானங் கசிந்துருகே னாயிடினும்" என்று பல இடங்களிலும் நூலறிவும் அநுபவ வுணர்வும் இல்லாதவன் எனத் தம்மைக் கூறிக்கொள்ளுவராதலின், அவற்றையே இங்கே, "இரண்டு மில்" என்பதனாற் குறிப்பிட்டுள்ளார் எனக் கோடல் பொருத்தமாதல் அறிக. நூலறிவாகிய அபரஞானமும், அநுபவ உணர்வாகிய பரஞானமும் இல்லாத நிலையில், அருள்புரிந்த ஆண்டவன் அருள் திறமே ஈண்டு வியக்கத்தக்கதாயிற்று என்பது.

"தனியன்" என்பது திருவருட்பேற்றிற்குரிய சாதனத்துணை யற்றவன் என்னும் பொருட்டு. இறைவனது பேரின்பப் பெருஞ்செல்வத்தை நுகர்தற்கு வாயில் மெய்யுணர்வேயன்றிப் புலன்கள் ஆகா. புலன்களால் நுகரப்படுவனவெல்லாம் சடப்பொருள்களைப் பற்றினவே. இவ்வுண்மையை, [2]"பூண்ட ஐம்புலனிற் புலப்படா வின்பம் புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்க" என்னும் தம்பிரான் தோழர் அநுபவத்தாலும் அறியலாம். அங்ஙனமாகவும், இங்கே, "ஐம்புலன்களாரத் தந்தனை" யென்றது, இறைவன் தமக்கு எளிமையில் செய்த கருணையைக் குறித்தாம். ஆண்டவன் அருட்கடலில்

1. திருவாசகம், திருவேசறவு 5.
2. பெரியபுராணம், ஏயர்கோ. செ. 90.

மூழ்கினோர்க்கு, மெய்யுணர்விற்கு நேர்படும் சிவபோகம், இடையறாத புலனுகர்ச்சிக்கு எளிவரும் உண்மையைத் தில்லைக்கூத்தன் தரிசனத்தில் திருஞான சம்பந்தர் அநுபவத்தானும் உணரலாம். அவ்வநுபவ நிலையை, 1 "உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை யொழி வின்றி யுருவின்கண், அணையும் ஐம்பொறி யளவினும் எளிவர வருளினை யெனப்போற்றி" என்று பெரிய புராணம் தெளிவுறுத்தமை அறிக. ஐம்புலன்களும் நுகரு முறையை, 2 "தலையே நீ வணங்காய்" என்னும் தொடக்கத்துத் திருவங்க மாலையில் அப்பர் அருளிச் செய்தமையானும் அறியலாம். இனி, "ஐம்புலன்களார" என்பதற்கு, ஐம்புலன்களும் உண்முகமாக நின்று அநுபவிக்க என்று பொருள் கூறுதலுமாம். இறைவனை உள்ளக் கமலத்து எழுந்தருளுவித்துப் புறப்பொறி வாயிலாக அன்றி, அகமுகமாகக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிதல் ஆகிய அநுபவம் சிவயோகிகளுக்கு உண்டென்ப. அடிகளின் ஐம்பொறிகளும் நுகர, இறைவன் அருளிய பொருள் பிறிதொன்று அன்று; தன்னையே யென்பது குறித்து, "ஆரத்தந்தனை" என்றார். 3 "தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னை" எனப் பிறிதோரிடத்துக் கூறியதும் காண்க. ஆக்கியென்னும் செய்தென் எச்சங்கள் நான்கும் ஆர என்னும் செயவென் எச்சமும், தந்தனை யென்னும் முன்னிலை வினையைக் கொண்டு முடிந்தன.

இதன்கண், மனமொழி மெய்களைத் தன் வயப் படுமாறு செய்து, ஐம்புலன்களும் ஆரத் தன்னையே வழங்கினான் என்று கூறியமையால், இறைவன் சுட்டுணர் விற்குப் புலப்படும் இயல்பு பெறப்படுமாயினும், அம்முறை யிலும், உணர்வினோர் பெற வருஞ் சிவபோக மாதலின், புலன்களின் முகமாக மெய்யுணர்வை அருளியே நுகர் வித்தமை புலனாதலின், சுட்டறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்றுதல் அறிக.

1. திருஞானசம்பந்தர் புராணம், செ. 161. 2. திருநாவுக்கரசர் தேவாரம்.
3. திருவாசகம், கோயில் திருப்பதிகம் 10.

27. தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே.

க-ரை : மெய்யுணர்வினால் நுகரத்தக்க சிவ போகத்தைத் தம் ஐம்பொறி அளவின் எளிதிற் பெற அருளிய இறைவன் கருணைத் திறத்தை முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், அங்ஙனம் இறைவன் அருளுதற்குத் தாம் மேற்கொண்ட சாதனம் இன்னதென்பதையும், அதனை மேற்கொள்ளுங்கால் தம் இயல்பு இருந்தவாறு இங்ஙனம் என்பதையும் இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

ப-ரை : முனைவனே—கடவுளே, தனியனேன்—யான் உதவியற்றவனாய், பிறவிப் பெரும் பௌவத்து—பிறவிப் பெருங் கடலில் (வீழ்ந்து), எவ்வம் தடம் திரையால் எற்றுண்டு—துன்பமாகிய பெரிய அலைகளால் அலைக்கப் பட்டு, பற்று ஒன்று இன்றி—பற்றுக்கோடு ஒன்றும் இல்லாமல், கனியை நேர் துவர் வாயார் என்னும் காலால் கலக்குண்டு—கொவ்வைப் பழத்தை ஒத்த சிவந்த வாயினை யுடைய மகளிர் என்னும் காற்றினால் தடுமாற்றம் எய்தி, காமம் வான் சுறவின் வாய்ப்பட்டு—காமமாகிய பெரிய சுறா மீன் வாயிற் சிக்கி, இனி உய்யும் ஆறு என் என்று என்று எண்ணி—இந்நிலையில் உய்திபெறும் நெறி என்னும் என்று பல்கால் நினைந்து, அஞ்சு எழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை—திருவைந்தெழுத்தாகிய தெப்பத்தைப் பற்றிக் கிடக்கின்றவனாகிய, மூர்க்கனேற்கு—மூடனாகிய எனக்கு, முதல் அந்தம் இல்லா மல்லல் கரை காட்டி ஆட்கொண்டாய்—தோற்றக் கேடு இல்லாத வளமிக்க முத்திக் கரையைக்காட்டி ஆட்கொண்டு அருளினை (நின் அருட்பெருமை யென்னே!) என்பது.

வி-ரை: முனைவன் என்னும் சொற்பற்றி 22-ம் திருப் பாட்டில் விளக்கக் குறிப்புக் கூறப்பட்டுள்ளது. கடலில் வீழ்வான் ஒருவனுக்கு அப்பொழுது உதவி புரியத் தக்கார் யாரேனும் அருகில் இருப்பாராயின், எவ்வழியானும் முயன்று கரையேற்றவும் கூடும். வினைக்கீடாகப் பிறவிக் கடலில் வீழும் தமக்குத் துணைபுரிவார் ஒருவரும் இலர் என்னும் கருத்தால், " தனியனேன் " என்றார். தனிமை— உதவியற்ற நிலை. உயிர்க்கு உயிராக விளங்கும் இறைவன் துணை யுளதே எனின், வினைக்கீடாக மாயையினின்றும் உடல் முதலியவற்றைக் கொடுத்துப் பிறப்பிற் செலுத்துவது சிவ சத்தியாதலின், அது கருதத்தக்கதன்று. ஈண்டுக் குறித்தது பிறிதொரு துணையை என்க. உயிர்களைப் பிறவியிற் செலுத்தல் இறைவன் கருணைக்கு இழுக்கு ஆகாதோ எனின், பாச நீக்கஞ் செய்து வீட்டின்பப் பேற்றிற்கு உரிமையாக்க வேண்டுமென்பதே இறைவன் திருவுள்ள மாதலின் இழுக்காகாது என்க. " பிறவிப் பௌவம் " என்னாது, " பிறவிப் பெரும் பௌவம் " என்றது, பௌதிக மாகிய கடலினின்றும் பிறவிக் கடற்குள்ள சிறப்பு நோக்கி யென்க. என்னை சிறப்பு எனின், [1] " பிறவிப் பெருங்கடல் " என்புழி, " காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரை யின்றி வருதலிற் பிறவிப் பெருங்கடல் என்றார் " என்று பரிமேலழகர் கூறியதே சிறப்பென்க. காரண காரியத் தொடர்ச்சி பிறவிக்கு உண்டு. முன்னைப் பிறப்புப் பின்னைப் பிறப்பிற்குக் காரணமாதலும், பின்னது முன்னதன் காரிய மாதலும், இங்ஙனமே தொடர்ந்து வருதலுங் காண்க. கரையின்மை — வரம்பு இல்லாமை. உயிர் வீட்டு நிலை எய்துங்காறும் பிறப்பு உண்மையின் அளவிலதாதல். வருதல் — மேன் மேலும் வந்து கொண்டிருத்தல். இம் மூன்றும் பௌதிகக் கடலுக்கு இல்லை; காரண காரியத் தொடர்ச்சி இன்மையும், கரை உண்மையும், ஒரே நிலையில் நிற்றலும்; அதன்கட் காணப் படுதலின். இதனாலே பிறவிப் பெருங்கடல் என்னப்பட்டதென்பது கருத்து. வீழ்ந்தார் உய்தி பெற்றுக் கரை யேறுதல் அருமை கருதிப் பிறப்புக் கடலாகக் கூறப்பட்டது.

1. திருக்குறள் 10.

தடந்திரையால் எற்றுண்ணப் படுதல், வீழ்ந்தபின் நிகழ்வதாகலின், "வீழ்ந்து" என்பது வருவித்துரைக்கப் பட்டது. கடலிற் காணப்படும் அலைகள் பெரியனவும் சிறியனவுமாகப் பல உள்ளன. அவற்றுட் பேரலைகள் துன்ப மயமாகவே உள்ளன என்பார், "எவ்வத் தடந்திரை" என்றார். வினைக்கு ஈடாக வுள்ள பிறப்பில் தீவினைப் பயன் துன்பமே. நல்வினைப் பயன் இன்பமாயினும், சிற்றளவினதாக நின்று, மீண்டும் பிறத்தற்கு ஏதுவாகிப் பேரின்பத்திற்குத் தடையாய் முடிதலின், அதுவும் துன்ப மாகவே கருதப்படும். ஆகவே, பேரலைகளைப் போன்ற துன்பங்களும், இடையிடையே சிற்றலைகளைப் போன்ற அழியும் இயல்பினவாகிய இன்பங்களும் உளவாகிப் பிறவியுட்பட்ட உயிர்களை அலைக்குமென்பது கருத்து. இங்ஙனம் தாக்கப்படுதலையே, "திரையால் எற்றுண்டு" என்றார். கடலுள் வீழ்ந்தானொருவன் அலைகளால் அங்கும் இங்கும் அலைக்கப்படுங்கால், பற்றுக்கோடு ஒன்று கிடைப்பினும் ஒரு கால் உய்தி பெறலாகும். அதுவும் இன்று என்பார், "பற்றொன்றின்றி" என்றார். நீர் எப் பொழுதும் சலிக்கும் இயல்பினது. கடல் அலைக்கோ அசைவு மிக வுண்டென்பது சொல்ல வேண்டியதின்று. அம் மிகுதியான் அசைவுக்குக் காற்றும் உதவி புரியுமானால் அலைகளின் கடுமை மிகப் பெரிதாகும். அப்பொழுது வீழ்ந்தவன் படும்பாடு பெரிதாகுமன்றோ? அந் நிலையே தமக்கும் ஆயிற்றென்பார், "காலாற் கலக்குண்டு" என்றார். கால்—காற்று. மகளிர் காற்றாக உருவகிக்கப் பட்டனர்; பிறப்பிற்பட்டுப் பழவினைப் பயன் நுகர்ச்சியில் தலைப்படுங்கால், வந்தேறும் புதிய கன்மங்களுட் பெரும் பாலன மகளிரைப் பற்றியே உள்ளன வாதலின், "கனியை நேர் துவர் வாயார்" என்றது கலக்கம் எய்துதற்கு ஏதுக்காட்டிய படியாம். கனி, இயைபு நோக்கி ஈண்டுக் கொவ்வைப் பழமாகக் கொள்ளப்பட்டது. ஆடவர் மயங்குதற்குரிய இனிய சொற்கள் தோன்று தற்கும் வாய் இடனாதல்பற்றி, "கனி" ஒப்புக் கூறப் பட்டதெனினும் ஆம். ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள்

இரண்டிற்கும் உரிய இடன் வாயாதலால், அவ்விருவகைக் கருவிகளாலும் கலக்கம் உறுத்தலைப் புலப்படுக்கக் "கனியை நேர் துவர்வாயார்" என்னப்பட்டனர்.

மகளிர் காட்சியாற் கலக்கம் எய்தினர், காமத்தில் சிக்கி உழல்வராதலின், "காமவான் சுறவின் வாய்ப்பட்டு" என்றார். வான் சுறவு— பெரிய சுறா மீன். தன் வாய்ப்பட்டார் ஊனுடலை உண்டு உயிரைப் பற்றாது விடும் கடற் சுறவு போலாது, காமச் சுறவு, தன்கட் பட்டார் உடலோடு உயிரையும் உண்ணும் என்பது தோன்ற, "வான் சுறவு" என்னப்பட்டது. [1] "உயிர் உருக்கிக் குடிக்குங் கூளி.........கடிய காமம்" என்றார் பிறரும். தீவினையாக நின்று, பிற்பிறப்புக்களிலும் உயிரைத் துன்புறுத்தும் என்பது கருத்து. பழவினைக்கு ஈடாகப் பிறந்தார்க்கு, நுகரப்படுவதும், ஈட்டப்படுவதும், சேர்க்கப்படுவதுமாகிய முத்திற வினைகளும் உள வென்பதை முறையே, "எவ்வத் தடந் திரையால் எற்றுண்டு," "வாயார் என்னும் காலாற் கலக்குண்டு," "காமவான் சுறவின் வாய்ப்பட்டு" என்பன குறிப்பிற் புலப்படுத்து நிற்றல் அறிக. எவ்வம் வினைப்பயனாதலின், பிராரத்தமாகிய நுகரப்படுவதாதலும், மகளிர் என்னும் காற்றால் கலக்கம் எய்துதல்,ஆகாமியமாகிய ஈட்டப்படுவது ஆதலும், காமச்சுறவு வாய்ப்படுதல், சஞ்சிதமாகிய சேர்க்கப்படுவதாதலும் புலனாதல் அறிக. காமச்சுறவு வாய்ப்பட்டு என்றது, சஞ்சித கன்மம் பக்குவம் ஆகுங்காறும் நுண்ணிதாய் மாயையில் அடங்கியிருக்கும் உண்மையைக் குறிப்பிற் புலப்படுக்கும். காமம் பொதுவாக எல்லாப் பொருள்களினும் செல்லும் அவா வாயினும், சிறப்பாக மகளிரைப்பற்றி நிகழ்வதைக் குறிப்பதாகும். மண், பெண், பொன் என்னும் மூவகைப் பொருள்களினும் செல்லும் ஆசைகளுட் பெண்ணாசை வலியுடைத்து என்ப. [2] "மண்ணாசை தன்னிற் பொருளாசையின் மாய வாழ்க்கைப், பெண்ணாசை

1 திருக் குற்றாலத்தல புராணம், மந்தமாருதம், செ. 35. 2. கந்த புராணம்.

நீங்கலெளிதோ பெரியோர் தமக்கும்" என்பர் கச்சியப்ப சிவாசாரியர். [1] "நடுவணதெய்த இருதலையும் எய்தும்" என்பது ஈண்டும் கருதத்தக்கது. என்னை? பெண் விருப்பம் காரணமாக மண் விருப்பமும் பொன் விருப்பமும் உளவாதல் காணப்படுதலின்.

அலையால் மோதப்பட்டுக் காற்றால் கலக்குண்டு; சுறவின் வாய்ப்பட்டதும், வேறு நெறி அறியப்படாமையின், எவ்வாறு உய்தல் கூடுமெனப் பாம்பின் வாய்த் தேரைபோலப் பற்பலவிதமாக எண்ணலானேன் என்பார், "இனி உய்யுமாறு என் என்று என்று எண்ணி" என்றார். காமச் சுறா சிறிது விழுங்கியும் முழுதும் விழுங்காமலும் இருக்கும் நிலையில், ஒரு தெப்பம் அடிகளுக்கு நல்லூழ் வயத்தால் அணிமையிற் பிடிக்கக் கிடைத்ததாம். அது திருவைந்தெழுத்தாகிய தெப்பமாகும். அத்தெப்பத்தைத் தொட்டதும், காமச் சுறவின் ஆற்றல் குன்றிவிட்டதென்பதும், அதனால் முற்றும் விழுங்கப்படாமையும் குறிப்பிற் புலப்படும். காம முதலிய தீங்குகள் எல்லாம் திருவைந்தெழுத்தால் நீங்கும் என்பதை,

> [2] "விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
> உண்ணிய புகில்அவை யொன்றும் இல்லையாம்
> பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை
> நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே"

என்னும் தமிழ் மறையானும் அறியலாம். பிறவிக் கடலினின்றும் கரையேறுதற்குத் திருவைந்தெழுத்தே சிறந்த தெப்பமாயிற்றும். ஆளுடைய அரசு, கல்லோடு பிணித்துக் கடலில் வீழ்த்தப்பட்ட ஞான்று, அவரை அஞ்செழுத்து அருமறை கரையேற்றிய செய்தியைக் கூறுங்கால்,

> [3] "இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
> வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
> அருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல்
> ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ"

---

1. நாலடியார் 114. 2. திருநாவுக்கரசு தேவாரம்.
3. பெரிய புராணம், திருநாவுக்கரசர் புராணம், செ. 129.

என்று அருண்மொழித் தேவர் பாராட்டியதும் ஈண்டுக் கருதத்தக்கது. காமச்சுறவின் வாய்ப்பட்டதும், இறைவன் திருவருள் கூட்டுவிக்க, அஞ்செழுத்தாகிய தெப்பத்தைப் பற்றினேனாக, அந்நிலையில் சுறவு வலியிழந்து ஒழிய, அப்புணையையே துணையாகக் கொண்டு கிடக்கின்றேன் என்பார்; "புணைபிடித்துக் கிடக்கின்றேனை" என்றார். தெப்பத்தைப் பிடித்ததும், அதனைச் செலுத்திக் கரை சேரலாமே, ஏன் அங்ஙன முயலவில்லை என்பதற்கு விடையாக, "மூர்க்கனேற்கு" என்றார். திருவருள் துணையால் பிடித்ததே அன்றிக் கரை சேர்தற்குரிய அறிவு, வாற்றல் தமக்கு இன்று என்பது புலப்படுக்க, அடிகள் தம்மை மூர்க்கன் என்று குறிப்பிட்டுள்ளார். உலகியல் நோக்கி இவ்வாறு தம்மைக் கூறிக்கொண்டனர் போலும்.

அடிகள் அஞ்செழுத்தை நெஞ்சழுத்தியதும், மூவகைக் கன்மங்களும் அழிந்து ஒழிந்தனவென்பதும், வீட்டு நிலைக்குத் தகுதியாயினாரென்பதும் குறிப்பிற் புலப்படுக்கப் பட்டபடியாம். அஞ்செழுத்தின் என்புழி இன்னும், கிடக்கின்றேனை என்புழி ஐயும் சாரியைகளாம். புணை பிடித்தல் தம் கடனாகவும், கரை சேர்த்தல் இறைவன் கடனாகவும் குறிக்கொண்டு, "கரை காட்டி" என்றார். அக்கரையாவது, தோற்றக் கேடுகள் இல்லாத மிக்க வளம் பொருந்திய வீட்டின்பம் என்பது தோன்ற, "முதலந்த மில்லா மல்லற் கரை" என்றார். மல்லல்—வளன். வீட்டு நிலை அழிவில் இன்பம் ஆதலின், "முதலந்தமில்லா" என்னும் அடை புணர்க்கப்பட்டது. மல்லல் ஆகுபெயராக நின்று, வீட்டு இன்பத்தை உணர்த்துவதாகும். கடலில் அலைப் புண்டு தத்தளித்துக் கிடப்பவனுக்கு வளம் பொருந்திய கரை இதோ உள்ளது என்று காட்டுதல் முதலில் ஆறுதல் அளிப்பதாகும். ஆதலால், அங்ஙனம் காட்டிப் பின் ஆட்கொண்டு கரை சேர்த்தனன் என்பது தோன்ற, "மல்லற் கரைகாட்டி ஆட்கொண்டாய்" என்று கூறி அருளினார்.

இதன்கண், "முதல் அந்தம் இல்லா மல்லற் கரை காட்டி" என்றதனால், வீட்டு நிலை அவன் அருளே கண்ணாகக்கொண்டு காணத்தக்கது அன்றிச் சுட்டறிவினால் அறியத்தக்கது அன்று என்பது தெளியப் படுதலின், சுட்டறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருளும், எவ்வத் தடந்திரையும் துவர் வாயார் என்னும் காற்றும், காமவான் சுறவும் வெறுக்கத்தக்கனவாகக் கூறப்பட்டிருத்தலின், வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

28. கேட்டாரும் அறியாதான் கேடொன் றில்லான்
 கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
 நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
 கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
 எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே.

க-ரை: வீட்டு நிலைக்குச் சாதனமாகிய திருவைந் தெழுத்தைத் தாம் கடைப்பிடித் தமையைப் பற்றி முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், அத் திருவைந் தெழுத்து ஓதுதலால் தாம் பெற்ற பேற்றின் வகைகளையும், அவற்றை இறைவன் தமக்கு அருளிச் செய்த முறையினையும் இத் திருப்பாட்டில் விளக்கிக் கூறுகின்றார்.

ப-ரை: கேட்டு ஆரும் அறியாதான்—கேள்வியளவில் யாரானும் அறியப்படாதவனும், கேடு ஒன்று இல்லான்—கேடு சிறிதும் இல்லாதவனும், கிளை இலான் — சுற்றத் தொடர்பு இல்லாதவனும், கேளாதே எல்லாம் கேட்டான்—பொறி வாயிலாகக் கேளாமலே எல்லாவற்றையும் கேட்டவனும் ஆகிய இறைவன், நாட்டார்கள் விழித்திருப்ப—நாட்டில் உள்ளாரனைவரும் சோர்தலின்றி விழிப்புடையராக இருப்பவும், ஞாலத்து உள்ளே — இந்

நிலவுலகத்தே, நாயினுக்குத் தவிசு இட்டு—ஒரு நாய்க்குத் தவிசு இட்டதுபோல், நாயினேற்கு — நாய்த் தன்மை யுடைய எளியேனுக்கு, காட்டாதன எல்லாம் காட்டி — காட்டக் கூடாதனவாகிய எல்லாவற்றையும் காட்டியும், கேளாதன எல்லாம் கேட்பித்து—கேட்கப்படாதன எல்லா வற்றையும் கேட்கச் செய்தும், என்னை—தகுதியில்லேனாகிய சிறியேனை, மீட்டேயும் பிறவாமல் காத்து ஆட் கொண்டான் — மீண்டும் பிறவியிற் புகாமல் காப்பாற்றி ஆட்கொண்டு அருளினன், எம்பெருமான் செய்திட்ட விச்சைதானே — இங்ஙனம் எங்கள் தலைவன் செய்த மாய வித்தையே யாகும் என்பது.

வி-ரை : கேடொன்றும், விழித்திருப்பவும், காட்டியும், கேட்பித்தும் என்புழி உள்ள உம்மைகள் செய்யுள் விகாரத்தால் தொக்கன. தவிசிட்டு என்புழி, உவம உருபை விரித்து, இட்டாங்கு எனக் கொள்க. மீட்டேயும் என்புழி ஏ, தான், ஏ என்பனவும் அசைகளாகும். கேட்டல், ஈண்டு உரையளவையைக் குறிக்கும். உரை யளவையால் இறைவன் இயல்பை ஒருவாறு அறியலாமே யன்றி, முற்றும் உணர்தல் இயலாது. [1]“கேட்பான் புகில் அளவில்லை” என்பது தமிழ் மறை. மெய்யுணர்வில் தலைப்படாதார், நூற் கேள்வி அளவில் எத்துணை அறிவு படைத்தவராயினும், இறைவனது உண்மை இயல்பை அறிதற்குரிய தகுதி இலராவர் என்பது தோன்ற, “கேட்டு ஆரும் அறியாதான்” என்றார். உரையளவை யால் முற்றும் அறியப்படுவன அழியும் இயல்பின வாகிய மாயா காரியப் பொருள்களேயாகும். இவ் வுண்மை குறித்தே, இறைவன் கேள்வியளவில் அறியப் படான் என்பதற்கு ஏது புலப்படுக்கும் முகமாக, “கேடொன்றும் இல்லான்” என்றார். ஒன்றும் என்பது சிறிதும் என்னும் பொருட்டு. சைவ சித்தாந்தம் கூறும் இறை, உயிர், கட்டு என்னும் முப்பொருள்களும் அழிவில் பொருள்கள் ஆயினும், அவற்றுள் உயிர்க்கு ஆணவ இயைபால் அறிவு விளக்கத்திற்கு அழிவும், வினைக்கு

1. திருஞான சம்பந்தர், திருப்பாசுரம், “ஆட்பாலரவர்க்கருளும்”

ஈடாக மாயையிலிருந்து கிடைக்கும் உடல் முதலிய வற்றின் அழிவும் காணப்படுதலானும், கட்டின் வகை களாகிய ஆணவம், கன்மம், மாயை என்னும் இவற்றிற்கு, முறையே ஆற்றல், விளைவு, காரியம் என்னும் இவற்றின் அழிவும் காணப்படுதலானும், இறைவன் இயைபுகளுள் எதற்கும் அழிவு கேட்கப்படாமையானும், "கேடு சிறிது மில்லான்" என்று கூறப்பட்டது.

கிளை – தாய் தந்தை முதலிய சுற்றம். இறைவன் பிற வுயிர்களுக்குச் சுற்றமாவானே யன்றித் தனக்குச் சுற்றமாக யாரையும் இல்லாதவன் என்பது தோன்ற, "கிளையிலான்" என்றார். [1]"எந்தையாய் எம்பிரான் மற்றியாவர்க்கும், தந்தை தாய் தம்பிரான் தனக்கு அஃதிலான்" என்னும் அடிகள் திருவாக்கும் நோக்குக. "தனக்கு அஃதிலான்" என்பது தனக்கு அச் சுற்றத் தொடர்பு இல்லாதவன் என்னும் பொருட்டு.

"கேளாதே யெல்லாங் கேட்டான்" என்பது, செவிப் பொறி வாயிலாக அன்றித் தன் நிறை வியலால் எல்லாவற்றையும் ஒரே காலத்தில் ஒருங்கு அறிபவன் என்னும் பொருளது. உபலக்கணத்தால் காணாதே கண்டான் என்பது முதலியவற்றையும் கொள்ளல் வேண்டும். [2]"பொறி வாயில் ஐந்தவித்தான்" என்பது, பொறி வழியாக இல்லாத ஐம்புலன்களையும் அவித்தவன் என்றும் பொருள் படுதலால், இறைவன் அறிவு பொறி களை வாயிலாக இல்லாதது என்பது போதரும். இறை வனது இயல்பை விளக்கப் போந்த மறை முடிவில், "எல்லாவற்றையும் எப்பொழுதும் தானே காட்சி யளவையில் ஒருங்கு அறிகின்றான்" என்று கூறப்பட் டுள்ளது. இதனால் உயிர்த் தொகுதிகளின் குற்ற நற்றங் களை உள்ளவாறு அறிந்தே அருள் செய்பவன் என்பது விளக்கமாம்.

நாடு ஞாலத்தின் ஒரு பகுதியாகும். அப் பகுதியில் உள்ள அன்பர்கள் பலரும் இப் பேறு நமக்கு எப்பொழுது

1. திருவாசகம், திருச்சதகம் 47. 2. திருக்குறள் 6.

கிடைக்குங் கொலோ என்று சோர்வின்றி விழிப்புடைய ராக இருப்பவும், அவரை விட்டு, அந்நாட்டுள் பிறந்த இழி பிறப்புடைய ஒரு நாய்க்கு அந் நாட்டில் உள்ளார் காணும் அளவில் அன்றி, அத்தகைய நாடுகள் பலவற்றையும் தன்னுட்கொண்ட உலகத்துள்ளார் யாவரும் காணும்படி தவிசிட்டுப் பொருட் படுத்தியது போல் என்பார், "நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே நாயினுக்குத் தவிசிட்டு" என்றார். நாய்க்குத் தவிசிடல் என்பதற்கு நாய் இருத்தற்குச் சிறந்த இருக்கை யமைத்தல் என்றும், யானையின் மேலிடும் அழகிய தவிசை நாயின் மேல் அமைத்தல் என்றும் பொருள் கொள்ளலாம். [1]"நாய் மேல் தவிசிட்டு நன்றாய்ப் பொருட் படுத்த, தீ மேனியான்" என்பது அடிகள் மணி மொழி. [2]"அடுகளிற் றெருத்தி னிட்ட, வண்ணப்பூந் தவிசுதன்னை ஞமலிமே லிட்ட தொக்கும்" என்பர் சிந்தாமணி நூலாசிரியர். இனி, நாட்டம் என்பது ஈறு தொக்கதாகக் கொண்டு, வீட்டின் பத்திலே நாட்ட முடையார் பலரும் விழிப்புடையராக இருப்பவும், அந் நாட்டம் சிறிதுமில்லாத ஏழையேனை உலகம் அறியப் பொட் படுத்து ஆண்டாய் என்று கூறினர் எனினும் பொருந்தும். [3]"நான்றனக்கு அன்பின்மை நானுந் தானும் அறிவோம், தானென்னை ஆட்கொண்டது எல்லாருந்தாம் அறிவார்" என்னும் மணிமொழியும் ஈண்டு நினைக்கத் தக்கது. நாயினேற்கே என்புழி, ஏகாரம் தேற்றப் பொருட்டு.

உயிர்த் தொகுதிகளின் இயல்பும்; அவற்றை உடைமையாக உடைய ஆண்டவன் இயல்பும், கட்டறுத்து அப் பெருமான் திருவடிகளை அடையும் நெறியும் ஆகிய இன்னோரன்னவைகளே காணாதனவும் கேளாதனவுமாம். கேட்டல்—அறிவியல் நூல்களின் வாயிலாகவும், ஞானாசிரியன் உபதேசங்களானும் ஆம். காண்டல், அங்ஙனம் கேட்டவழி அநுபவித்து உணர்தலாகும். இவ்விரண்டனுள்ளும், கேட்டற் குரிய தகுதியினும் காண்டற் குரிய

1. திருவாசகம், திருக்கோத்தும்பி 20. 2. சீவக சிந்தாமணி, செய்யுள் 202.
3. திருவாசகம், திருக்கோத்தும்பி 12.

த்குதி சிறந்த தென்பது எளிதில் அறியத்தக்கது. இவ் வுண்மை குறித்தே, அடிகள் கேளாதன எனக் கேட்டற்கு வினை முதலாகத் தம்மையும், காட்டாதன எனக் காட் டற்கு வினை முதலாக இறைவனையும் குறிப்பிட்டுள்ளார். கேளாதன கேட்பித்தலாவது, இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளி வந்து, சிவஞானபோத ஞான நூற் பொருளை உணர்த்தித் திருவைந் தெழுத்தை உபதேசித்ததாகும். காட்டாதன காட்டுதல் என்பது, அவ்வுணர்வு உபதேசங் களின்படி அநுபவத்தில் தெளிவித்தல் ஆகும். 1 "காட்டா தன வெல்லாங் காட்டிச் சிவங் காட்டி" என்னும் மணி மொழியும் ஈண்டு நினைக்கத்தக்கது. 2 "தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்" என்புழித் தம்மை உணர வைத்தல் காட்டாதன காட்டுதலும், தமை யுடைய தன்னை உணரவைத்தல் சிவங் காட்டுதலும் ஆம் என்பது தெளிவாம். கேளாதன கேட்பித்த பின்னரன்றே காட்டாதன காட்டுதல் முறையாகும். அங்ஙன மின்றிக் காட்டுதலை முன்னும் கேட்பித்தலைப் பின்னும் கூறியதன் கருத்து என்னை யெனிற் கூறுவேம். ஆண்டவன் அடி களுக்கு முதலில் ஞான நூற் பொருளையும் திருவைந் தெழுத்தையும் உபதேசித்து, பின்னர் அந் நெறியே ஒழுகுமாறு அநுபவ நிலையையுங் காட்டினனாக, அவன் காட்டிய வழியே அநுபவத்தில் தலைப்படுங்கால், மேன் மேலும் தெளிவுறுத்தற்பொருட்டுப் பின்னும் உண்ணின்று உபதேசித்து உணர்த்தினன் என்பது கருத்தாகலின் அவ் வாறு கூறப்பட்டதென்க. இவ் வுண்மை புலப்படுக்கவே, "பின்னுங் கேளாதன வெல்லாங் கேட்பித்து" என்றார். பின்னும் என்ற எச்ச வும்மையால் கேட்பித்தல் முன்னும் நிகழ்ந்த தென்பது தெளிவாம்.

இங்ஙனம் கேட்பித்தும் காட்டியும் செய்த உதவிகள் எல்லாம் யான் மீண்டும் பிறவாமைப் பொருட்டாம் என்பது தோன்ற, "மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்" என்றார். இறைவன் காப்பு, பிறப்பித்துக்

1. திருவாசகம், திருவம்மானை 6. 2. சிவஞானபோதம், அவையடக்கம்.

காத்தலும், பிறவியிற் புகாதபடி காத்தலும் என இருதிறப் படும். பிறப்பித்துக் காத்தல் கட்டறுத்தற் பொருட்டாம். பிறவியிற் புகாதபடி காத்தல், அழிவில் இன்ப நுகர்ச்சிப் பொருட்டாம். இவ்விரண்டனுள்ளும் சிறந்த காப்பைத் தகுதியில்லாத தமக்குச் செய்தான் என இறைவன் அருட் சிறப்பை அடிகள் வியந்தவாறிது. காத்தாட்கொண்டான் என்பதை, ஆட்கொண்டு காத்தான் என முன்னர் உரைத் தாங்கு உரைத்துக் கொள்க. காட்டாதன காட்டுதலும், கேளாதன கேட்பித்தலும், உலகத்தில் மாய வித்தையால் நிகழும் செயல்களாதலின், "எம்பெருமான் செய்திட்ட விச்சைதானே" என்றார். விச்சை என்பது உலகியல் முறையில் மாய வித்தையைக் குறிக்குமாயினும், உண்மை யாக நோக்குங்கால், ஞானம் என்னும் பொருளுடைய தாகும். எம்பெருமான் தன்னை யறிந்து அநுபவித்தற்கு எனக்கு அருளிய ஞான சத்தியே இத்துணைப் பேறுகள் எல்லாவற்றிற்கும் காரணமாம் என்பது முடிந்த பொரு ளாகும்.

இதன்கண், "கேட்டாரும் அறியாதான்" என்பது முதலிய இறையிலக்கணங்களும், காட்டாதன முதலிய அனுபவ இலக்கணங்களும் சுட்டி உணரப்படுவனவாக இல்லாமல், மெய்யுணர்வினால் தெளியத்தக்கன ஆதலின், சுட்டறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

29. விச்சைதான் இதுவொப்ப துண்டோ கேட்கின்
மிகுகாதல் அடியார்தம் அடியன் ஆக்கி
அச்சந்தீர்த் தாட்கொண்டான் அமுதம் ஊறி
அகநெகவே புகுந்தாண்டான் அன்பு கூர
அச்சன்ஆண் பெண்அலியா காசம் ஆகி
ஆரழலாய் அந்தமாய் அப்பால் நின்ற
செச்சைமா மலர்புரையு மேனி யெங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவன் தமக்கு அருளிய பேற்றின் வகைகளையும் முறையினையும் கூறிய

அடிகள், அங்ஙனம் தாம் பெற்ற பேற்றின் வகைகளுள் ஆண்டவன் தமக்குப் புறக்காப்பும் அகக் காப்புஞ் செய்து ஆட்கொண்டு அருளியதையும், அக் காப்புக்களால் தமக்கு விளைந்த பயன்களையும் இத் திருப்பாட்டில் அருளிச் செய் கின்றார்.

ப-ரை: அச்சன் ஆகி — எனக்குத் தந்தையாய், ஆண் பெண் அலியாகி — அவன் அவள் அதுவெனும் உலகத் தொகுதியாய், ஆகாசம் ஆகி — ஞானப் பரவெளியாய், ஆர் அழலாய் — அரிய ஒளி வடிவாய், அந்தமாய் — முடிவு இடனாய், அப்பால் நின்ற—அதற்கும் அப்பாலாக நிலையுதல் பெற்ற, செச்சைமாமலர் புரையும் மேனி—வெட்சியின் அழகிய மலரையொத்த செம்மேனியை யுடைய, எங்கள் சிவபெருமானும்—, எம்பெருமான்—எங்கள் தலைவனும், தேவர்கோ — தேவர்களுக்குத் தலைவனும் ஆகிய ஆண்டவன், மிகு காதல் அடியார் தம் அடியன் ஆக்கி— மிக்க மெய்யன்பினையுடைய தன் அடியவர்களுக்கு என்னை அடியனாகச் செய்து, அச்சந் தீர்த்து ஆட்கொண்டான் — பண்டை வாதனை இன்னும் தாக்குங்கொலோ என்னும் அச்சத்தை யொழித்து ஆளாகக் கொண்டான், அமுதம் ஊறி அகம் நெக — அமிழ்தம் ஊற்றெடுத்து நெஞ்சம் உருகவும், அன்புகூர — மெய்யன்பு மிகவும், புகுந்து ஆண்டான் — என் உட்புகுந்து ஆட்கொண்டருளினன், கேட்பின் — இங்ஙனமாய அப்பெருமான் செயலைக் கேட்கப்புகின், இது ஒப்பது விச்சைதான் உண்டோ— இதனை ஒத்ததாகிய வித்தை வேறுண்டோ (இல்லை) யென்றபடி என்பது.

வி-ரை: தான் அசை. ஆகி என்பது முன் ஈரிடத்துங் கூட்டப்பட்டது. அச்சன்—அத்தன்; தந்தை. [1]தந்தையை அச்சன் என்பது குடநாட்டு வழக்கு. பின்னர் ஆண், பெண், அலி என்றதனால் பெறப்படும் உலகத்திற்கும் தமக்கும் தந்தை என்பது தோன்ற, "அச்சன்" என்றார். ஆண் பெண் எனச் சுட்டி உணரப்படும் உலகத் தொகுதியுட்பட்ட தந்தையாவான், தனக்குரிய தந்தையைக்

1. தொல். சொல், சூ. 400, நச்சினார்க்கினியர் உரை.

குறிக்குங்கால் மகனுமாவான். இங்ஙனம் தந்தையாம் தன்மையும் மகன்மையும் மாறிமாறி நிகழும் முறைபற்றிய தந்தை போலாது, எல்லா உலகங்கட்கும் தந்தையாவான் என்பது, பின் உலக உருவினன் என்னும் குறிப்பால் உணரத்தக்கது. ஆண், பெண், அலியாகி என்புழி ஆண் பெண் என்பன அவன் அவள் என்னும் பொருளினவாகிய உயர்திணையையும், அலி என்பது, அது என்னும் பொருட்டாகிய அஃறிணையையும் உணர்த்தும். ஆகவே, உயர்திணையும் அஃறிணையும் கலந்து, அவன், அவள், அதுவெனச் சுட்டியறியப்படும் உலகத்தொகுதியுமாவான் என்பது போதரும். மாயா காரியமாகிய உலகின் இயக்கம், இறைவனை இன்றியமையாமையின், அப் பெருமானை உலகெலாமாயினன் என்று கூறுவர். [1] "எல்லா உலகமும் ஆனாய் நீயே" என்பது தமிழ் மறை. இங்ஙனம் உலக உருவமாக இறைவனைக் கூறியது, உலக நிகழ்ச்சி அவனையின்றி நடைபெறாது என்னும் கருத்தால் எனின், அப்பெருமான் உண்மை இயல்புதான் எவ்வாறு அறியத்தக்கது என்பார்க்கு விடையாக, "ஆகாசமாகி" என்பது முதலியவாகக் கூறினார். ஆகாசம் என்பது ஈண்டுத் தகராகாசம் எனப்படும் நுண்ணிய ஞானப் பரவெளியாகும். பூதாகாசம் எனின், 'ஆண், பெண், அலி' என்னும் உலகத் தொகுதியுள் அடங்கும் ஆதலின், அஃது அன்றென்பது. 'ஆரழல்' என்பதற்கும் ஈதொக்கும். நெஞ்சத் தாமரை மலரை அலர்வித்து, அதன் நடுவண் உள்ள தகராகாசமாகிய நுண்ணிய ஞானப் பரவெளியில் ஒளி வடிவமாக இறைவனைத் தியானித்தல்வேண்டும் என்பது மறைமுடிவிற் கண்டது. இதனைத் தகரவித்தை என்ப. இவ்வுண்மையைப் புலப்படுக்கவே, "ஆகாசமாகி ஆரழலாய்" என்றார். ஆர் அழல்—சிவ யோகிகளால் அன்றிக் காண்டற்கரிய ஒளியாகும். அழல் ஆகுபெயர். [2] "ஒளியே யுன்னை

1. திருநாவுக்கரசர் தேவாரம்.

2. சுந்தரர் தேவாரம், திருக்காளத்தி, "தளிர்போல்."

யல்லால்" எனவும், [1] "பொங்கிய வொளியினீழற் பொருவிலன்புருவமானார்" எனவும் பெரியோர் ஒளி வடிவாகக் கூறிய உண்மையும் அறிக. நுண்ணிய ஞானப் பரவெளி இறைவனுக்கு இடமாயினும், அதற்கும், அதனுள் ஒளி உருவமாக விளங்கும் இறைவனுக்கும் வேற்றுமை யின்மைபற்றி, "ஆகாசமாகி ஆரழலாய்" என்றார்.

உலக வடிவமான பருப்பொருளாகவும், நுண்ணிய பரவெளியில் ஒளி உருவமாக விளங்கும் நுண்பொருளாக வும் உள்ள அவ் இறைவனே பேரூழியின் இறுதியில் எல்லாம் ஒடுங்குதற்குரிய முடிவிடமாகவும் உள்ளான் என்பது தோன்ற, "அந்தமாய்" என்றார். அயன், மால் உருத்திரன் என்னும் அதிகார தேவர் மூவருள் ஒருவனாகிய குணிருத்திரனும், பிரகிருதி புவனாந்தம் ஒடுங்குதற்கு முடிவிடமாகவுள்ளான் ஆதலின், அவனின் நீக்குதற்கு "அப்பால்" என்றார். பரமசிவன் அம்மூவருள் ஒருவன் அல்லன் என்றும், மூவர் கோனாகச் சுத்த மாயா புவனாந்தம் ஒடுங்குதற்கு இடமாக நிற்பவன் என்றும் மறையாகமங்கள் கூறுவன. இந்நிலையே எல்லாவற்றிற்கும் இறுதியான இடம். எல்லாம் ஒடுங்கிப் பரம சாந்தமான நிலையில் சிவபெருமான் ஒருவனே தனியாக நிலையுதல் உடையனாய் நிற்பன் என்பது தோன்ற, "அப்பால் நின்ற" என்றார். இவ்வுண்மையை, [2] "ஓதத்தொலி மடங்கி யூருண்டேறி யொத்துலகமெல்லாம் ஒடுங்கிய பின், வேதத்தொலி கொண்டு வீணைகேட்பார் வெண்காடுமேவியவிகிர்தனாரே" என்னும் திருநாவுக்கரசர் தேவாரத்தானும் உணர்க.

இத்துணை அரிய பொருளாகவுள்ள இறைவன் மெய்யன்பர்க்கு ஞானாசிரியனாக உருவத்திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து, எளியனாய்க் காட்சி நல்கும் இயல்பைப் புலப்படுத்துவார், "செச்சை மாமலர் புரையும் மேனி எங்கள் சிவபெருமான்" என்றார். வெட்சிமலர்

1. பெரிய புராணம், கண்ணப்பர், செய்யுள் 104.
2. திருநாவுக்கரசர் தேவாரம், திருத்தாண்டகம் "பாதந்தனிப்பார்மேல்" தி, பா—10

செவ்வண்ணமுடையது. மெய்யன்பர் எல்லோரையும் உளப்படுத்து, "எங்கள்" என்றார். சிவபெருமான் என்றது இன்பவடிவினன் என்னும் பொருட்டு. இதனால் மெய்யன்பர்க்கு அழிவில் இன்பம் பயப்போன் என்பது புலப்படுத்தவாறும். அன்பர் எல்லோரையும் உளப்படுத்து, எங்கள் என்று பொதுப்படக் கூறினாராயினும், தம் சிறப்புரிமையையும் புலப்படுத்த, எம்பெருமான் என்றார். மிகச் சிறியேனாகிய எனக்குத் தலைவனாதல் அவன் பெருமைக்கு இழுக்கன்றோ எனின், அவ்வாறு எண்ணற்க; எல்லாத் தேவர்களுக்கும் தலைவன் அவனே யாவான் என்பார், "தேவர் கோவே" என்றார்.

இனி, இறைவன் தம்மைப் புறத்தும் அகத்தும் நின்று ஆட்கொண்டருளியதையும், அவ்வாட்சிகளால் விளைந்த பயன்களையும் அடிகள் அருளிச் செய்கின்றார். புறத்தே நின்று ஆட்கொண்டது மெய்யன்பர் கூட்டத்தில் தம்மை இயைத்துப் பணி செய்வித்ததாகும். அத்தகைய அன்பர் பெருமையைப் புலப்படுத்துவார், "மிகு காதலடியார்" என்றார். மிகு காதல் வினைத்தொகையாதலின், ஒவ்வொரு கணத்தும் மேன்மேலும் மிகுகின்ற மெய்யன்பென்பது. அவ்வடியார்க்கு அடியனாகச் செய்தமையால் விளைந்த பயன், பண்டைக் கன்ம வாதனை இன்னும் தாக்குங் கொலோ எனவும், அதனாற் காம வெகுளி மயக்கங்களும் அவற்றின் பயனாக மீண்டும் பிறப்பிறப்புக்களும் நேருங் கொலோ எனவும் உண்டாகும் அச்சத்தின் ஒழிவாகும். மெய்யன்பராகிய அடியார் சூழலில் இருப்போர்க்கு இத்தகைய அச்சம் சிறிதும் உண்டாகாதென்பது தெளிவு. [1] "பாசமானவை பற்றறுத்துயர்ந்த தன் பரம் பெருங் கருணையால், ஆசை தீர்த்து அடியாரடிக்கூட்டிய அற்புதம் அறியேனே" என்னும் மணிமொழியும் கண்டு நினைக்கத் தக்கது. இறைவனுடைய திருக்கைகளுள் ஒன்று அபயக் குறிப்பும், மற்றொன்று வரதக்குறிப்பும் உடையனவாகக் காணப்படும் உண்மையும் நோக்குக. நோயுடையொரு வற்கு, முதலில் அந்நோய் தீர்க்கும் மருந்தும், அதன்பின்

1. திருவாசம் அற்புதப் பத்து 8

உடல் நலத்திற்கு நல்லுணவும் கொடுக்கப்படல் வேண்டும். அங்ஙனமே பாசப்பிணிப்பிற்கு அஞ்சி வந்தவனுக்கு முதலில் அச்சத் தீர்வும், பின்னர் இன்ப அன்பும் அருளிக் காப்பதே முறையாகும். உளம் புகுந்து செய்யும் அக ஆட்சியைத் தானும், புற ஆட்சியைத் தன் அடியாரைக்கொண்டும் இறைவன் செய்தது உலகியற்கும் ஒத்தது ஆதல் அறிக. இறைவனுக்கும் அவன் அடியார்க்கும் வேற்றுமை கருதலாகாதென்னும் உண்மையும் இதனாற் புலனும்.

இனி, அகத்தே புகுந்து ஆண்டதன் பயனைப் புலப்படுத்துவார், "அமுதம் ஊறி அகம் நெக அன்புகூர" என்றார். திட்பமானதொரு பொருள் உருகினால், அப் பொருள் இயல்பினின்றும் வேறுபடாத திரவப் பொருளாகவே காணப்படும் அன்றி வேறாகாது. இங்கே அடிகள் உள்ளம் குழைந்து உருகுங்கால் எங்ஙனம் ஆயிற்று எனின், அமுதம் ஊற்றெடுப்ப உருகிற்றாம். அடிகள் தம் உள்ளத்தை, "இருப்பு நெஞ்சம்," "கன்னெஞ்சம்," "நெஞ்சங்கல்லாம்" என்று பலவிடத்தும் கூறியுள்ளார் ஆதலின், அஃது உருகுங்கால், இருப்பு நீராகவும், கல்நீராகவும் காணப்படவேண்டும். அங்ஙனமின்றி, ஆண்டவன் உட்புகுந்து ஆண்டமையால், இருப்புத் தன்மையும், கற்றன்மையும் மாறி, அமிர்தமயமாக ஊற்றெடுத்து உருகிற்று என்பார், "அமுதம் ஊறி அக நெக" என்றார். உட்புகுந்தாண்ட தன் இயல்பு முன்னர்க் கூறப்பட்டது காண்க. உள்ளம் உருகிய நிலையில், ஆண்டு மிக்கது மெய்யன்பு என்பார், "அன்பு கூர" என்றார். [1] "பெறவே வேண்டு மெய்யன்பு" என்பது அடிகள் மணிமொழி. [2] "அன்பே சிவமாவது" என்று திருமந்திரம் கூறியபடி, சிவ வடிவமாக உள்ள மெய்யன்பு அகங்குழைந்து உருகிய நிலையில், ஆண்டு வேறன்றி வளர்ந்ததென்பது அடிகள் அநுபவம். [3] "உரமென்னும்

1. திருவாசகம், பிரார்த்தனைப்பத்து 6. 2. திருமந்திரம், செ, 270.
3. சுந்தரர் தேவாரம்,

பொருளானை உருகிலுள்ளுறைவானை '' என்பது தமிழ் மறை. இங்ஙனம் அமுதம் ஊறி அகம் நெகவும், அன்பு கூரவும் புகுந்து ஆண்டான் என, அகவாட்சியும் அதன் பயன்களும் தெளிவிக்கப்பட்டன. இறைவனுடைய இத்தகைய செயலின் அருமைப் பாட்டைக் கேட்கப் புகின், இதனை ஒப்பதாகிய வித்தைதான் பிறிதொன்று உண்டோ? என அடிகள் பெரு வியப்பு அடைகின்றார். வித்தை அற்புத உலகியற் செயலாகிய மாய வித்தை எனவும், சிவஞானம் எனவும் முன்னர்க் கூறப்பட்டது. ஒன்றை உருக்கிப் பிறிதொன்றாக்குதல் முதலிய அற்புதச் செயல்களே ஈண்டு மாய வித்தைக்கு எடுத்துக் காட்டாகும். இனி, ஞானமே இறைவன் சத்தியாதலின், இறைவனது பேர் ஆற்றலே இந் நிகழ்ச்சிகளுக்கு எல்லாம் காரணம் என்பது போதரும்.

இதன்கண், புறத்தே செச்சை மலர் புரையும் திருமேனியுடைய ஞானாசிரியனாக எழுந்தருளி ஆட்கொண்டமையால், இறைவன் சுட்டுப் பொருளாகக் காணப்படினும், அகத்தே புகுந்தாண்டதும் ஆகாசமாகி ஆரழலாய் அந்த மாய உண்மைத் தன்மையும் காணப் படுதலான், சுட்டறுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

30. தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோன் என்னையும் வந் தாண்டு கொண்டான்
யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவனடியார் அடியா ரோடும்
மேல்மேலுங் குடைந்தாடி யாடு வோமே.

க-ரை: இறைவன் தம்மைப் புறத்தும் அகத்தும் ஆட்கொண்டருளியமையால் விளைந்த அச்சத் தீர்வும் அன்பு மிகுதலுமாகிய பயன்களை முன்னைத் திருப்பாட்டிற் கூறிய

அடிகள், அப் பயன்களைத் தாம் அநுபவித்த முறையையும், அங்ஙனம் அநுபவித்தற்கு ஏதுவாகவுள்ள இறைவனது அளவிறந்த பெருமையையும் இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

**ப-ரை:** தேவர்கோ அறியாத தேவ தேவன்—விண்ணவர்க்கு அரசனாகிய இந்திரனாலும் அறியப்படாத மகா தேவனும், செழும் பொழில்கள் பயந்து காத்து அழிக்கும்—வளம் பொருந்திய உலகங்கள் அனைத்தையும் படைத்துக் காத்து அழித்தலைச் செய்யும், மற்றை மூவர் கோனாய் நின்ற முதல்வன்—அவனின் வேறாகிய அயன் திருமால் உருத்திரன் என்னும் மூவர்க்கும் தலைவனாக நிலையுதல் பெற்ற முதற் பொருளும், மூர்த்தி—அவ் அயன் முதலியோர் வடிவம் எல்லாம் தன் வடிவாக உள்ளவனும், மூதாதை—பாட்டனும், மாது ஆளும் பாகத்து எந்தை—உமையம்மையார் ஆட்சிக்குரிய ஒரு கூற்றினையுடைய என் தந்தையும், யாவர் கோன்—எல்லோர்க்கும் தலைவனும் ஆகிய சிவபெருமான், வந்து என்னையும் ஆண்டு கொண்டான்—வலிய வந்து மிகச் சிறியேனாகிய என்னையும் ஆளாகக் கொண்டருளினான், ஆதலால் யாம் ஆர்க்கும் குடியல்லோம்—நாம் பிறர் எவர்க்கும் அடிமையாக மாட்டோம், யாதும் அஞ்சோம்—எதற்கும் சிறிதும் அஞ்சுவேம் அல்லேம், அவன் அடியார் அடியாரோடு மேவினோம்—அப் பெருமானுடைய அடியார்க்கு அடியாரோடு பொருந்தினோம், மேல் மேலும் குடைந்து ஆடி ஆடுவோம்—மேலும் மேலும் இன்ப வெள்ளத்தில் மூழ்கித் திளைத்து ஆடிக் கூத்தாடுவோமாக என்பது.

**வி-ரை:** நல்வினைப் பயனையே நுகரும் தேவர்கள், அது காரணமாக இறைவன் நம்மால் எளிதில் அறியத் தக்கவன் என்று எண்ணினாராக, அவராலும் அவர்க்கு அரசனாக இருத்தலால் மிகவும் எளிமையில் அறியலாம் என்று இறுமாந்த இந்திரனாலும் அறியப்படாதவன் என்பது தோன்ற, இந்திரன் முதலிய தனிப் பெயர்களாற் சுட்டாமல், "தேவர்கோ அறியாத" என்றார். போக நுகர்ச்சியில்

பெரிதும் ஈடுபட்டு, யானே எல்லோர்க்குந் தலைவன் என்று செருக்குற்றிருந்த இந்திரன் அறியாமை, கேனோபநிடதத்தில் ஒரு வரலாற்றில் வைத்துப் புலப்படுக்கப்பட்டுள்ளது. அவ் உபநிடதத்தில் பரமசிவன், இயக்க உருவம் தாங்கி வந்து, ஒரு சிறு துரும்பை நட்டு, அதனை அசைத்தவர் முதற் பொருளாவர் என்று கூறியதாகவும், இந்திரன் முதலிய தேவர் எல்லோரும் மிக முயன்றும், அங்ஙனம் செய்ய இயலாமலும், அவ் இயக்கனை இன்னான் என்று அறியாமலும் மயங்கி நிற்குங்கால், அப் பெருமான் மறைந்து விட்டதாகவும், மயங்கி நின்ற இந்திரனை நோக்கி, அப் பெருமானுடைய சத்தியும் இமவான் புதல்வியும் ஆகிய உமையம்மையார், விண்ணில் வெளிப்பட்டு, "இவ்வியக்கன் பிரமம்" என்று கூறிச் சிவபிரானது பரம்பொருள் தன்மையை வெளிப்படுத்தியதாகவும் கூறப்பட்டுள்ளன. தேவருள் வீரிய பலத்திற் சிறந்தவன் இந்திரன் ஆதலால், அவன் முகமாகக் கேனோபநிடதத்தில் இவ் வுண்மை தெளிவிக்கப்பட்டுள்ளது. ஆதலின், ஈண்டும் அடிகள், "தேவர்கோ அறியாத தேவ தேவன்" என்று அருளிச் செய்தனர்.

மக்களை நோக்க இந்திரனும் அவனுக்கு உட்பட்டாரும் தேவராதல் போல, அத் தேவரை நோக்கச் சிவபெருமான் தேவ தேவன் ஆவன் என்பதாம்; இதுபற்றியே மகா தேவன் என்றும் கூறப்படுவன். இனி, அத்தேவ தேவர் என்னும் வரிசையில் வைத்து, அயன் மால் உருத்திரன் என்னும் இவரும் எண்ணப்படுதலால், அவருள் ஒருவனாகிய உருத்திரனைப் பரமசிவன் என்று அறியாமல் எண்ணுவார்க்கு, பரமசிவன் அவ் உருத்திரன் அல்லன்; அம் மூவர்க்குந் தலைவனுவான் என்பது தோன்ற, "செழும் பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மற்றை, மூவர் கோனாய் நின்ற முதல்வன்" என்றார். பொழில் என்பது உலகம் என்னும் பொருட்டு. பலவாகலின், "பொழில்கள்" எனவும், மக்கள் தேவர் முனிவர் என்னும் அறிவுடையாரையும் தம் அகத்துடைமையால், "செழும் பொழில்கள்"

எனவும் கூறப்பட்டன. உலகம் என்பது இடத்தையும், அதன்கண் வாழ்வாரையும் உணர்த்தும். அறிவுடைப் பொருள் உண்மையைத் தெளிவுறப் புலப்படுத்தற்குச் "செழுமை" என்னும் அடை புணர்க்கப்பட்டது என்க. படைத்து காத்து அழிக்கும் மூவர் முறையே அயன் திருமால் உருத்திரன் என்பார் ஆவர். மற்றை என்பது இந்திரன் அல்லாத என்னும் பொருட்டு. ஈண்டுக் கூறிய உருத்திரன், பிரகிருதி புவனாந்தம் சங்கரிக்கும் குணி ருத்திரன் ஆவன். சுத்த மாயா புவனாந்தம் சங்கரிக்கும் மகா ருத்திரனே பரமசிவனாவன். இவ் வுண்மையை, 1 "நம்மவரவரே, மூவரென்றே யெம்பிரானொடு மெண்ணி விண்ணாண்டு மண்மேல், தேவரென்றே இறுமாந்து என்ன பாவம் திரிதவரே" என்று அடிகளும், 2 "தேவரில் ஒருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்ற தோரார்" என்று சிவஞான சித்தியும் கூறியவாற்றானும் அறிக. சிவஞான போதம் முதற் சூத்திரப் பேருரைத் தொடக்கத்தில், மாதவச் சிவஞான முனிவரர் இதனைத் தடை விடைகளில் வைத்து விளக்கியிருத்தல் ஆண்டு அறியத்தக்கது. அயன் முதலிய மூவரும் அவ்வத் தொழில் நிலைபற்றித் தலைவராக எண்ணப்படினும், அவர் எல்லோர்க் கும் அத் தகுதிகளை அளித்துத் தொழில் புரிவிக்கும் பெருந் தலைவன் சிவபிரான் ஆதலின், "மூவர்கோன்" என்றார். 3 "மூவண்ணல்தன் சந்நிதி முத்தொழில் செய்யவாளா, மேவண்ணல்" என்பர் பௌராணிகர். படைத்தற்றொழில் முதலியவற்றைச் செய்யும் தேவரனைவரும் பேரூழிக் காலத்தில் இறைவன்பால் ஒடுங்க, அவ்விறைவன் ஒருவனே நிலையுடைப் பொருளாக இருத்தலின், மூவர் கோன் என்ற அளவில் அமையாது, "நின்ற முதல்வன்" என்றும் கூறினர். நிற்றல்—அழிவின்றி ஏகனாக நிலையுதல். மூர்த்தி—வடிவம். மூவர்கோன் என்றதனால், அயன் முதலியோர் இறைவனின் வேறாவர் என்பது பெறப்படுமாயினும்,

1. திருவாசகம், திருச்சதகம் 4. 2. சிவஞானசித்தி சுபக்கம், சூ.1, செ. 49.
3. பரஞ்சோதி, திருவிளையாடல், கடவுள் வாழ்த்து 1.

அவரெல்லாம் மூர்த்தியாகத் தான் மூர்த்திமானாக, அவர் உண்ணின்று படைத்தல் முதலியவற்றிற்கு ஆற்றல் அளிப்பவன் என்பது தோன்ற, "மூர்த்தி" என்றார். மூர்த்தியும் மூர்த்திமானும் அவனே என்பது கருத்து. [1] "படைத்தளித் தழிப்ப மும்மூர்த்திகளாயினை" என்பது ஆளுடைய பிள்ளையார் அருளுரை.

இனி, பிரமன் முதலிய அதிகார தேவர் அனைவரும் பேரூழிக் காலத்துத் தம்மின் மேற்பட்ட தத்துவங்களின் முறையே ஒடுங்க, இறுதியில் அவ்வெல்லாவற்றையும் ஒடுக்கி நின்ற இறைவன், ஒடுக்கியவாறே மீளத் தோற்றுவித்தல்பற்றி, அத் தேவர்க்கு "மூதாதை" ஆயினான் என்பது. அங்ஙனம் தோற்றுவிக்குங்கால், சத்தியும் சிவமும் ஆக நின்று தோற்றுவிப்பன் என்பது தோன்ற, "மாதாளும் பாகத்து எந்தை" என்றார். இறைவன் சத்தியும் சிவமுமான தன்மையின் உண்மை யிதுவே. "மாதாளும் பாகத்து எந்தை" என்றதில் மற்றொரு குறிப்பும் உண்டு. அஃது ஒரு குழந்தை முதலில் தாயை அறிந்து, பின் அவளாற் காட்டப்பட்டுத் தந்தையைக் காண்டல்போல, முதலில் உமையம்மையை உபாசித்து, அவள் அருளால் இறைவனைக் காண்டல் முறையாதலின், அம் முறைப்படி அடிகளுக்கு உதவிய தாயுடன்கூடிய தந்தையாயினான் என்பது. "இறைவன் ஆட்கொள்ளுதற்கு உரிய தகுதி ஒரு சிறிதும் இல்லாத என்னையும் வலியவந்து ஆட்கொண்டு அருளினான்" என்று அடிகள் கூறத் தொடங்குங்கால், தம் சிறுமையையும் அப்பெருமானது அளவிடற்கரிய பெருமையையும் நினைந்தனராக, அந் நிலையிற் பெரிதும் வியப்புற்று, மீண்டும், "யாவர்கோன்" என்றார். யாவர்கோன் என்புழி, உருபும் உம்மையும் தொக்கு நின்றன. என்னையும் என்பது மிகச் சிறியேனாகிய என்னையும் எனவும், "வந்து" என்பது வலியவந்து எனவும் பொருள் பயந்து நிற்பன. [2] "அடித் தடித்து அக்கார முன் தீற்றிய அற்புதம்" என்பது ஈண்டு

1. திருஞான சம்பந்தர், திருவெழு கூற்றிருக்கை.
2. திருவாசகம், அற்புதப் பத்து 8.

நினைக்கத்தக்கது. இறைவன் தம்மை வலிய வந்து ஆட்கொண்டருளியதைக் குறிக்குங்கால், என்னையும் என ஒருமையிற் கூறிய அடிகள், அவ்வாட்சியின் பயன் நுகர்ச்சியைக் கூறப் புகுந்து, தமக்கு உண்டாகிய இன்ப மிகுதியானும், மெய்யடியார் குழுவில் கலந்ததனால் அவ் வடியாரை உளப்படுத்தும்; "யாமார்க்குங் குடியல்லோம்" எனப் பன்மையிற் கூறத்தொடங்குகின்றார். "மேவினோம் அவனடியார் அடியாரோடும்" என்பது சிங்க நோக்காக முன்னதற்கும் பின்னதற்கும் ஏதுவாக நிற்றல் அறிக.

முன்னைத் திருப்பாட்டில் இறைவன் தம்மை மிகு காதல் அடியார் தம் அடியனாக்கினான் என்றார். அதற் கேற்ப, ஆண்டவன் அருள்வழி நின்று, அப்பயனை அநுபவிப்பாராய், இத் திருப்பாட்டில், "அவனடியார் அடியாரோடும் மேவினோம்" என்றார். அடியார்க்கு அடியனாகச் செய்ததன் பயனாக முன்னர்க் கூறப்பட்ட அச்சத் தீர்வைக் குறித்து, "யாமார்க்குங் குடியல்லோம யாதுமஞ்சோம்" என்று அடிகள் தாம் அநுபவித்த முறையைப் புலப்படுத்தருளினார். "[1] நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்" என்பர் திருநாவுக்கரசர். ஈண்டுக் குடி என்றது அடிமை என்னும் பொருட்டு. இறைவனும் அவன் அடியாரும் அல்லாத பிறர் எவர்க்கும் அடிமையாக மாட்டோம் என்பார், "யாமார்க்கும் குடியல்லோம்" என்றார். தமக்கு நேர்ந்த சார்பு வலிநோக்கி, இனி எதற்கும் சிறிதும் அஞ்சேம் என்பது தோன்ற, "யாதும் அஞ்சோம்" என்றார். இஃது அச்சத்தீர்வின் அநுபவம் ஆகும். அவன் அடியார் அடியாரோடும் மேவியது இதற்கும் ஏதுவாதல் உணரத்தக்கது.

முன்னைத் திருப்பாட்டில் அகநெகவும் அன்பு கூரவும் புகுந்தாண்டதன் பயனை அடிகள் அநுபவித்த முறை, "மேன்மேலுங் குடைந்தாடி ஆடுவோம்" என்பதனாற் புலப்படுக்கப்பட்டுள்ளது. உள்ளம் அமுதம் ஊறி உருகிய

1. திருநாவுக்கரசர் தேவாரம்.

நிலையில் மெய்யன்பு பெருகியதாக, அதனால் விளைந்த பேரின்ப வெள்ளத்துள் முழுகித் திளைத்தெழுந்து, இன்பக் கூத்து ஆடுவோம் என்பது அவ் அநுபவ விளக்கமாகும். இன்பக்களிப்பினால் ஆராமை தோன்ற, "மேன்மேலுங் குடைந்தாடி யாடுவோமே" என்றார். இங்ஙனம் அடிகள் தம்மை ஆண்டவன் புறத்தும் அகத்தும் ஆட் கொண்டதன் பயன்களாக முன்னைத் திருப்பாட்டில் கூறப்பட்டவற்றின் அநுபவ நிலை இத் திருப்பாட்டில் குறிப்பாகப் புலப்படுக்கப்பட்டது உணர்ந்து இன்புறத் தக்கது.

இதன்கண், தேவதேவன், மூவர்கோன், முதல்வன், மாதாளும் பாகத்தெந்தை என்பன முதலியவாகக் கூறப் பட்ட இறைவனுடைய உண்மை இயல்புகள், மெய்யுணர் விற்கு அன்றிச் சுட்டறிவிற்குப் புலப்படாதன ஆதலின், **சுட்டறுத்தல்** என்னும் பதிக நுதலிய பொருளும், மேன் மேலுங் குடைந்தாடியாடுவோம்" எனவும், "யாமார்க் கும் குடியல்லோம் எனவும் கூறியவாற்றால் **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதக நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

# 4. ஆத்தும சுத்தி

ஆத்தும சுத்தி என்பதற்கு உயிரினது தூய்மை என்பது பொருள். முன்னைப் பதிகத்தில் உயிரினது சுட்டறிவிற்கு இறைவன் உண்மை நிலை புலப்படாதென்பதும், மெய்யுணர்விற்கே புலப்படும் இயல்பினது என்பதும், அதனால் இறைவனைச் சுட்டுப் பொருள்களுள் ஒன்றாக வைத்து எண்ணலாகாது என்பதும் தெளிவிக்கப்பட்டன. அங்ஙனம் சுட்டறுத்து, இறை நிலை உணர்தற்குச் சிறந்த கருவியாகிய மெய்யுணர்வு விளக்கம் பெறுதற்கு உயிர்க்கு, தூய்மை நிலை இன்றியமையாதது ஒன்று. அத் தூய்மை தானும் யான் எனது என்னும் அகப் புறப் பற்றுக்களுக்கு ஏதுவாகிய வினை மாசு நீங்கிய நிலையில் ஏற்படுவதாகும். வினை மாசின் நீக்கம் இடையறாத இறை பணியினால் பெறத்தக்கது. இறை பணிக்கு மன மொழி மெய்களாகிய முக்கரணங்களும் ஈடுபடல் வேண்டும். ஆதலின், அம் மூன்றனுள்ளுஞ் சிறந்ததாகிய மனத்தை முன்னிலைப் படுத்து, ஏனைய கரணங்களின் செயல்களும் நிகழாமைக்கு அதனையே காரணமாகக் கொண்டு, ஒருத்துரைக்கு முகமாக, உயிரின் தூய்மைக்கு உரிய பணிகளை இப் பதிகத்து முதல் ஐந்து திருப்பாட்டுக்களாலும், அப் பணிகளின் பயனாகக் கிடைத்த இறைவனது அணுக்கம் பண்டைப் பாசத் தொடர்பினால் ஒரோவழி நெகிழ்ந்த நிலையில், அது பற்றித் தமக்கு உண்டாகிய ஆற்றாமையைப் பின் ஐந்து திருப்பாட்டுக்களானும் அடிகள் அருளிச் செய்கின்றார். தச காரியத்துள் ஒன்றாகிய ஆன்ம சுத்தி இதுவெனக் கூறுவாரும் உளர். அங்ஙனம் கூறுதற்கு ஈண்டு இயைபின்மை அறிக. தசகாரிய வுண்மை இத் திருச்சதகத்தில் அமைந்திருத்தலைத் தனியே ஆராய்ந்து, "திருவாசகத்தேன்" என்னும் நூலில் விளக்கிக் கூறுவாம்.

அறு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

31. ஆடு கின்றிலை கூத்துடை
யான்கழற் கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ்
செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின்
றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ
றலறிலை செய்வதொன் றறியேனே.

க-ரை: இதன் முன்னைப் பதிகத்து இறுதித் திருப் பாட்டில் இறைவன் தம்மை ஆட்கொண்டருளியமையால் விளைந்த பயன்கள் இன்னவெனக் கூறப்பட்டன. அவற்றுட் சிறந்த அன்பினது மேலீட்டால் தம் ஆன்ம சுத்திக்கு இன்றியமையாத இறை பணியாகிய கரணங் களின் செயல்கள் போதிய அளவு நிகழாமை குறித்து, நெஞ்சை முன்னிலைப்படுத்து ஒறுத்துக் கூறுமுகமாக, அப் பணிச் செயல்களைப் புலப்படுத்து இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

ப-ரை: பிண நெஞ்சே — பிணத்தைப் போல் செய லற்றுக் கிடக்கும் நெஞ்சமே, கூத்து உடையான் கழற்கு அன்பு இலை — இன்பத் திருக் கூத்துடைய சிவ பெருமான் திருவடிக் கண் அன்பு செய்கின்றிலை, ஆடுகின்றிலை— அன்பு மிகுதியால் ஆடு கின்றாயும் இல்லை, என்பு உருகிப் பாடுகின்றிலை — எலும்பு உருகப் பாடுகின்றாயும் இல்லை, பதைப்பதும் செய்கிலை — துடித்தலையும் மேற் கொள்ளு கின்றாய் இல்லை, பணிகிலை — வணங்குகின்றாயும் இல்லை, பாத மலர் சூடு கின்றிலை — அப்பெருமான் திருவடி மலரை நின் தலைமேல் சூடு கின்றாயும் இல்லை, பாதமலர் சூட்டு கின்றதும் இலை — அப் பெருமான் திருவடிக் கண் மலரைப் பெய்து புனைவதுஞ் செய்கின்றிலை, தேடுகின்றிலை — அப் பெருமான் யாண்டு உள்ளான் என்று தேடுகின்றாயும்

இல்லை, தெருவுதோறு அலறிலை – ஒவ்வொரு தெருவிலும் சென்று அலறுகின்றாயும் இல்லை, துணையிலி – அதனால் துணையில்லாயுமாயினாய், செய்வது ஒன்று அறியேனே– இந் நிலையில் யான் செய்யத்தக்கது இன்னதென்று ஒன்றையும் அறியேனாயினேன் என்பது.

**வி-ரை :** ஆடல் பாடல் முதலிய புறச் செயல்களும், என்பு உருகுதல், அன்பு செய்தல் முதலிய அகச் செயல் களும் அற்று, உயிர் நீங்கிய உடல் போற் கிடத்தலின், "பிணநெஞ்சே" என விளித்தார். ஆண்டவன் இன்பத் திருக்கூத்து, படைத்தல் முதலிய ஐந்தொழிற்கும் தலைமையைப் புலப்படுப்பதாகலின், அச் சிறப்பு நோக்கி, "கூத்துடையான்" என்றார். அத் திருக் கூத்தையும், அது நிகழும் அரங்கத்தையும், 1 "அண்ணலார் தமக் களித்த மெய்ஞ் ஞானமே யானஅம் பலமுந்தம், உண்ணிறைந்த ஞானத் தெழும் ஆனந்த ஒருபெருந் தனிக்கூத்தும்" என்று சேக்கிழார் பாராட்டியிருத்தல் ஈண்டு அறியத்தக்கது. அரங்கத்தை மெய்யுணர்வாகவும், திருக்கூத்தை அம் மெய்யுணர்வில் தோன்றும் பேரின்ப மாகவும் புனைந்துரைத்த இயைபு இன்புறத் தக்கது. ஆண்டவன் திருக்கூத்து, ஆக்கல் முதலிய ஐந்தொழிற் குறிப்பைப் புலப் படுப்பதாலும், அத் தொழிற் பாட்டிற் குரியது உலகம் ஆதலாலும், அவ் வுலகம் உடைமையாக, இறைவன் உடையவனாவான் ஆதலின், "கூத்துடையான்" என்றார். ஆடல் பாடல் முதலிய செயல்கள் எல்லாவற்றிற்கும் மூலம் திருவடிக்கட் செய்யும் மெய்யன்பாதலின், "கழற்கு அன்பிலை" என்றார். அகத் தேயுள்ள அன்பின் மிகுதியால் நிகழும் புறச் செயல்களுள் முதலில் ஆடலைக் கூறியது, இறைவன் கூத்துடையா னாதலான், அதனையே அன்பரும் மேற்கோடல் அவன் உவப்பிற்கும் பொருத்தமாம் சிறப்பு நோக்கி என்க. இறைவனைப் பாடுங்கால், அப் பாடற் பயனை அழுந்தி அறிந்து உள்ளம் நெகிழப் பாடுதலே மெய்யன்பின்

1. பெரிய புராணம்; திருஞான சம்பந்தர் புராணம்; செ. 160.

விளைவாகும் ஆதலின்,"என்புருகிப் பாடுகின்றிலை" என்றார். உருகி என்னும் செய்தென் எச்சத்தை, செயவென் எச்சமாகக் கொள்ளல் வேண்டும். ஆடலும் பாடலும், மெய், மொழிகளின் செயல்கள் ஆயினும், அவ்வெல்லாவற்றிற்கும் காரணம் நெஞ்சமாதலின், அதன் செயல்களாக உபசரித்துக் கூறப்பட்டன. பின் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். பதைத்தல் துடித்தலாகும். உள்ளம் உருகிப் பாடுங்கால், விரைவு தோன்றாத அமைதியே உள்ளத்தில் நிலை பெறுவதாகும். அவ் அமைதி இறைவன் திருவடிப் பேற்றிற்குச் சாதனம் ஆயினும், பாடற் பொருளில் நெஞ்சம் நினைக்குங்கால், இறைவன் திருவடிக்காட்சி எப்பொழுது பெறக்கூடும் என்னும் விரைவு தோன்றுமாதலின், அவ் விரைவு பற்றி நிகழும் உள்ளப் பதைப்பு வேண்டற் பாலதென்னும் குறிப்புத் தோன்ற, "பதைப்பதும் செய்கிலை" என்றார். ஆடல், பாடல், பதைத்தல் என்னும் இம் மூன்று செயல்களும் மெய்யன்பினால் முறையே மெய், மொழி, மனம் என்னும் முக்கரணங்களாலும் நிகழ்வனவாம். இந் நிகழ்ச்சி குறித்து, ஆண்டவன் அருள் கூர்ந்து தன் திருவடியை அகக் காட்சிக்கு நல்கினாக, அந்நிலையிலும் நெஞ்சம் வணங்காமை குறித்து இரங்குவார், "பணிகிலை" எனவும், அப் பணிவின் பயனாக அப் பெருமான் திருவடி மலரைத் தலையிற் சூடுதலாகிய பேறு கிடைத்திருப்பவும், செய்கிலை என்பார், "பாத மலர் சூடு கின்றிலை" எனவும் கூறினர். பாத மலர் இடை நிலை விளக்காக நின்று, பின்வரும், "சூட்டு கின்றதுமிலை" என்பதனோடும் இயையும். சூடுகின்றதும் இலை என்புழித் திருவடியாகிய மலரை எனப் பண்புருபும், இரண்டாம் வேற்றுமை உருபும் விரித்துக் கொள்ளல் வேண்டும்.

திருவடி மலரைச் சூடுகின்றிலை என்பதனால் தலைவணக்கமாகிய பணிவு கூறப்பட்டது. இறைவன் திருவடியைக் கண்ட அளவில், [1] "காண்டலும் தொழுது வீழ்ந்துடன் எழுந்து" என்றபடி தொழுது வணங்குதலும், அதன்

1. பெரிய புராணம், ஏயர்கோன் புராணம் 90.

பின் மலர்கொண்டு வழிபடுதலும் முறையாதலின் பின்னர், "பாதமலர் சூட்டுகின்றதும் இலை" என்றார். ஈண்டுத் திருவடிக் கண் மலரை என, ஏழாம் உருபும் இரண்டாம் உருபும் விரித்துக் கொள்க. சூட்டுதல்—மலர் பெய்து அலங்கரித்தல். தேடுதல்—உள்ளத்தே துருவி ஆராய்தல். அருட் கடலாகிய இறைவன் திருவடிக் காட்சி அகத்தே நிகழப் பெற்ற அடிகள், பண்டைப் பாசத் தொடர்பால் ஒரோவமயங்களில் அது புலப்படாமை நோக்கி இரங்குதலைப் பல விடத்துங் காணலாம். அந் நிலையில் உள்ளத்தே புக்கவன் யாண்டு ஒளிந்தனன் என்று முயன்று தேடுதல் அடிகள் அநுபவமாகும். [1] உள்ளுருகித் தேடுவேன்" என்பது அடிகள் திருவாக்கு. அங்ஙனம் தேடுதலால் உண்டாம் பயனைப் பிறிதோரிடத்து, [2] "பண்டே பயில் தொறும் இன்றே பயில் தொறும், ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்" என்று அடிகளும், [3] "தேவனை என்னுளே தேடிக் கண்டு கொண்டேன்" என்று அப்பரும் கூறியிருத்தல் அறிக. மீண்டும் காட்சிப் படுதலாகிய பயனை நோக்கி, அகத்தே தேடி உணர முயலுதல் இன்றியமையாதது என்பது கருதி, "தேடு கின்றிலை" எனவும், தேடியும் பயன் பெறாத நிலையில் தன்வயம் இழந்து நாடவர் பழித்துரை பூணதுவாகக் கொண்டு, தெருக்கள் தோறும் சென்று, இறைவன் திருப் பெயர்களைக் கூவிக் கதறுதலை மேற்கொள்ளின், அந்நிலை குறித்தாயினும் இறைவன் வெளிப்படுதல் கூடுமே; அதுவும் செய்திலை என்பார், "தெருவு தோறலறிலை" எனவும் கூறினர். மேற்குறித்த ஆடல் பாடல் முதலிய அன்பின் விளைவாகிய செயல்களை மேற்கொள்ளாமையால், அழிவில் இன்பப் பேற்றிற்குத் துணை செய்ய வேண்டிய மனம் தமக்குத் துணையாக இல்லை என்பது கருதி, "துணையிலி" என்றார். இனி, துணையிலி என்னும் சொற்கு, நீ துணை இழந்திருக்கின்றாய் என நெஞ்சை நோக்கிக் கூறியதாகவும் கொள்ளலாம்.

---

1. திருவாசகம் திருவம்மானை 17. 2. திருவாசகம், திருவண்டப்பகுதி, அடி 140. 3. திருநாவுக்கரசர் தேவாரம், திருவங்க மாலை.

நெஞ்சம் திருவருட் பேறு எய்துதற்கு இத் திருப்பாட்டில் குறித்த செயல்கள் எல்லாம் துணைக் கருவிகளாகவும், அத் துணையை இழந்திருக்கின்றாய் எனக் கொள்ளுதலும் பொருத்தமே. தம் முயற்சிக்குப் பெரிதும் துணை நிற்க வேண்டிய நெஞ்சம், அங்ஙனம் நில்லாமையால், மேற் செய்யக்கடவது இன்னதென்று அறியேன் என்பார், "செய்வதொன்றறியேன்" என்றார். செய்யத்தக்கது சிறிது அறியினும், அந் நெறியைக் கடைப் பிடிக்கலாம்; அத்துணை தானும் இன்று என்பது, "ஒன்றும்" என்னும் சொல்லாற் பெறப்படும். உம்மை தொக்கு நின்றது.

இதன்கண், ஆடல் பாடல் முதலிய அன்புச் செயல் களின் இன்றியமையாமை கூறப்பட்டிருத்தலின், **பத்தி விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும், அச் செயல்கள் ஆன்மாவின் தூய்மைக்கு வேண்டற்பாலன என்பதனால், **ஆத்தும சுத்தி** என்னும் பதிகம் நுதலிய பொருளும் விளக்கமாதல் அறிக.

32. அறிவிலாத எனைப்புகுந் தாண்டு
கொண் டறிவதை யருளிமேல்
நெறியெ லாம்புலம் ஆக்கிய
எந்தையைப் பந்தனை யறுப்பானைப்
பிறிவி லாதஇன் அருள்கள்பெற்
றிருந்துமா றுடுதி பிணநெஞ்சே
கிறியெ லாமிகக் கீழ்ப்படுத்
தாய்கெடுத் தாயென்னைக் கெடுமாறே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் மெய்யன்பினால் நிகழும் ஆடல் பாடல் முதலிய செயல்களை மேற்கொண்டு, தமக்குத் துணை செய்யாமை பற்றி நெஞ்சத்தை வெறுத்துக் கூறிய அடிகள், அந்நிலையிலும் இறைவன் தன் அருட்கு இடனாக்கிய பேருதவியைப் பெற்றிருந்தும், அங்ஙனம் துணை செய்யாமையோடு அமையாது, மாறாக வும் நின்று தமக்குக் கேடு விளைத்தலைக் குறித்து, அந் நெஞ்சை நோக்கி இத் திருப்பாட்டில் இரங்கிக் கூறு கின்றார்.

ப-ரை: பிண நெஞ்சே—, அறிவு இலாத எனை—மெய் யறிவு இல்லாத அடியேனை, புகுந்து ஆண்டுகொண்டு — வலிய வந்து ஆளாகக்கொண்டு, அறிவதை அருளி— தன்னை அறிதற்குக் கருவியாகிய ஞானத்தை நல்கி, மேல் நெறியெலாம் புலம் ஆக்கிய எந்தையை—மேலாகிய வீட்டிற்கு உரிய வழிகள் எல்லாவற்றையும் விளங்கச் செய்த என் தந்தையும், பந்தனை அறுப்பானை—பாசப் பிணிப்பை ஒழிப்பவனும் ஆகிய சிவபெருமானை, பிறிவு இலாத இன் அருள்கள் பெற்றிருந்தும்—எஞ்ஞான்றும் நீங்குதல் இல்லாமைக்கு ஏதுவாகிய இனிய அருள் உதவிகளை எளிதல் பெற்றுக்கொண்டும், மாறுடுதி— மாறுபட நிற்கின்றாய், கிறி எலாம் மிக—பொய்மை எல்லாம் மேலோங்கி நிற்ப, என்னைக் கீழ்ப்படுத்தாய் கெடுமாறு கெடுத்தாய்—என்னைக் கீழ்ப்படத் தாழ்த்துக் கெட்டு ஒழியுமாறு கெடுத்தாய் என்பது.

வி-ரை: "பிண நெஞ்சே" என்பதை இருமுறை ஓதி, முறையே விளியாகவும் ஏகாரத்தை வினாப் பொருளில் வந்த எதிர்மறையாகக்கொண்டு பிண நெஞ்சல்லை எனவும் பொருள் கொள்ளல் வேண்டும். இங்ஙனம் மூலபாடத்தை இரு முறை ஓதிப் பொருள் வேறு கோடலைத் தொல்காப் பியச் சொல்லதிகாரம்–77 ஆம் சூத்திரத்திற்குச் சேனாவரை யர் கூறிய உரையினும் அறிக. ஆடல் பாடல் முதலிய புறச்செயல்களும் அன்பினால் உருகுதல் முதலிய அக உணர்ச்சியும் அற்றுத் துணை செய்யாமற் பிணம்போற் கிடந்தமை நோக்கி, முன்னைத் திருப்பாட்டில், "பிண நெஞ்சே" என்ற அடிகள், இத் திருப்பாட்டில் "மாறு பட்டுக் கேடு செய்கின்றாய் ஆதலின், பிணம்போற் செயலற்ற நெஞ்சாகவும் இல்லையே" என வியந்து இரங்குவாராய், "பிணநெஞ்சே?" என்றார் என்பது. பிணம் நற்செயலின்றிக் கிடத்தல்போலவே தீச்செயலும் செய்யாமற் கிடக்கும். ஈண்டு மாறுபட்டுக் கேடு விளைத்தலாகிய தீச்செயலைச் செய்கின்றமையின், பிண நெஞ்சாகவும் இல்லையே என்பது உட்கோள்.

ஆண்டவன் அன்பரை ஆட்கொள்ளுங்கால், உயிராகிய தம் இயல்பையும், தம்மை உடைமையாகவுள்ள உடையானாகிய இறைவன் இயல்பையும் அறியும் அறிவுடையராக இருத்தல் வேண்டும். இதுவே ஆட்கொள்ளுதற்கு உரிய தகுதியாகும். இங்ஙனமாகவும், அத்தகுதியில்லாத நிலையில் இறைவன் வலிய வந்து தம்மை ஆட்கொண்டருளிய அருட்டிறத்தைப் பாராட்டுவாராய், "அறிவிலாத வெனைப்புகுந்தாண்டு கொண்டு" என்றார். [1] "அறிவிலாமையன்றே கண்டதாண்ட நாள்" என்று பிறிதோரிடத்தும் அடிகள் அருளிச் செய்தமை அறிக. ஆட்கொண்ட பின்னரே, தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணரும் ஞானத்தை இறைவன் தமக்கு அருளினன் என்பார், "அறிவதையருளி" என்றார். ஓர் அரசன் அமைச்சியல் தகுதி பெறுதான் ஒருவனை அன்புரிமை பற்றி அப் பதவியில் இருத்திப் பின் அவனைப் பெருமைப் படுத்தற்கும் தகுதியில்லாதானைத் தெரிந்தெடுத்த குற்றம் தன்னைச் சாராமைப் பொருட்டும், அவற்கு அத்தகுதியையும் உதவுதல் போல, ஆட்கொள்ளுதற்குரிய அறிவிலாத தம்மை, அருட்பெருக்கால் ஆட்கொண்டு, பின்னர் அதற்குத் தகுதியாகிய ஞானத்தையும் இறைவன் அருளினன் என்பது அடிகள் கருத்து. மெய்யுணர்வை அருளிய அளவில் அமையாது, அதனால் அடையத்தக்க வீட்டிற்குரிய நெறிகள் பலவற்றையும் புலப்பட வைத்தான் என்பார், "மேல் நெறியெலாம் புலமாக்கிய" என்றார். இந்திரன் முதலியோர் பதவிகளை அடைதற்குரிய சிறுநெறிகளைப் போலாது, அழிவில் இன்பப் பேற்றிற்குரிய நெறிகள் என்பது புலப்பட, "மேல் நெறியெலாம்" என்று கூறப்பட்டது. எல்லாம் என்பது, வீட்டு நிலை அடைதற்குரிய அன்புநெறி, ஞானநெறி முதலிய உயர்நெறி பலவற்றையும் குறிக்கும். அவ் எல்லா நெறிகளும் முடிவில் இறைவனையடைதற்குரியவாயினும், அவற்றுள்ளும் இடர்ப்பாடின்றி எளிதில் அடைதற்குரிய

1. திருவாசகம், திருச்சதகம் 50.

நன்னெறி ஒன்றே வேண்டத்தக்கதாகவும், அவ் எல்லா நெறிகளையும் புலப்பட வைத்தது, அவற்றின் அருமை எளிமைகளை உணர்ந்து மேற்கொள்ளுதற்கேயாம். செவ்விய நன்னெறியாகிய சிவநெறி ஒன்றையே புலப்படுத்து, அந்நெறியே ஒழுக உபகரித்தல் போதியதாகவும், பன்னெறிகளையும் புலம் ஆக்குதல் எற்றுக்கெனின், ஒழுகும் நெறி ஒன்றே; அது சிவநெறியாகும். பல நெறிகளையும் அறியவைத்தது, அவ்வெல்லா நெறிகளினும் சிவநெறியின் சிறப்புத் தெளிதற்கென்க. இது கருதியே, நெறியெல்லாம் புகுவித்த என்னாது, "நெறியெலாம் புலமாக்கிய" என்றார். இத்தகைய உண்மை நெறி விளக்கம், ஞானத் தந்தை தன் அருமைப் புதல்வனுக்குச் செய்யத்தக்கதாகலின் எந்தையை என்றார். ஆண்டவன் தமக்குப் பல நெறிகளும் புலனாதற்கு ஏதுவாகிய அறிவொளியை உதவிய தந்தையாதலோடு, அந்நெறிகளுட் சிறந்ததாகிய சிவநெறிக்கண் சேறற்குத் தடையாகவுள்ள பாசப்பிணிப்பை அகற்றும் ஞானாசிரியனும் ஆயினன் என்பது தோன்ற, "பந்தனையறுப்பானை" என்றார். இத்தகைய பேருதவியாளனாகிய இறைவன், ஞான முதலிய சாதனங்களை உதவிய அளவில் அமையாது, இடையறாது சாத்தியமாகிய தன்னை அனுபவித்தற்கும் நெஞ்சிற்கு இன்னருள் புரிந்தானாக, அவ்வுதவியை அடைந்திருந்தும் என்பார், "பிறிவிலாத இன்னருள்கள் பெற்றிருந்தும்" என்றார். பிறிவில்லாமை—ஒரு கணப்பொழுதும் நெஞ்சில் நின்றும் நீங்காமை. [1] "இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறிய மணி மொழியும் ஈண்டு நினைக்கத்தக்கது. இறைவன் அன்பர்க்கு நன்னெறி காட்டி உபகரித்தலோடு, அந்நெறியே போந்து இன்பம் நுகர்தற்குத் தன்னையும் வழங்கும் பெரு வண்மையாளன் என்பதை, [2] "தன்னைத் தந்த என் ஆரமுதை" என்னும் அடிகள் மணிமொழியாலும், [3] "தன்னையே தந்தான் என்றுந்தீபற" என்னும்

1. திருவாசகம், சிவபுராணம், அடி 2. 2. திருவாசகம், புணர்ச்சிப்பத்து 1.
3. திருவுந்தியார், செ. 6.

சைவநூற் குறிப்பானும் உணரலாம். பிறிவில்லாத என்னும் எச்சம் காரணப்பொருட்டு.

இறைவனது கருணை, அறக்கருணை எனவும் மறக் கருணை எனவும் இருதிறப்படும். அவற்றுள் தன்னெஞ்சில் நின்று நீங்காமைக்கு ஏதுவாகச் செய்த கருணை அறக் கருணை என்பார், "இன்னருள்கள்" என்றார். அருள் ஒன்றாயினும், அதனைப் பெற்ற நெறி பலவாதலின், அருள்கள் எனப் பன்மை கூறப்பட்டது. திருவருட் பேறு கிடையாதபொழுது, அது குறித்து வேண்டி இரங்குவதல்லது மாறுபட்டு இகலுதல், இறைவன் திறத்து மேற்கொள்ளத் தகாததொன்றாம். அங்ஙனம் ஆகவும், அவ்வருளோ கிடைக்கப் பெற்றுள்ளது; ஒருவாறு அது மறக்கருணையாக இருப்பின், அறியாமையால் மாறு படுதலும் பொருந்தும். அக்கருணையோ இன்னருள் ஆயிற்று. அதனை முற்றும் அடைந்திருந்தும், நன்றி மறந்து மாறாகவும் நடத்தல் என்ன அறியாமை என்பார், "மாறாடுதி" என்றார். அதனால், கீழ்ப்பட்டுத் தேய்ந்து ஒழியவேண்டிய எல்லாம் மேற்பட்டு உயரவும், உயர்ச்சி பெற்றுச் சிறப்படைய வேண்டிய யான் கீழ்ப்பட்டுக் கேடு எய்தவும் நேர்ந்தன என்பார், "கிறியெலாம் மிகக் கீழ்ப்படுத்தாய் கெடுத்தாய் எனை" என்றார். நெஞ்சம் நன்னிலைப்பட்டுத் தூய்மையுடையதாக இருக்குமாயின், வஞ்சகம், பொய் முதலிய இழி குணங்கள் எல்லாம் கீழ்ப்பட்டுத் தேய்ந்து ஒழியும் என்பதும், அவ்வொழி வினால் உயிர் நன்னிலை எய்தி, இறையருட்பேற்றினால் உயர்ச்சி பெறும் என்பதும் ஞானநூல் துணிபாகும். அம்முறைக்கு மாறாக ஆயிற்று என்று இரங்குவார், "கிறியெலாம் மிக" எனவும், "கீழ்ப்படுத்தாய் கெடுத்தாய் எனை" எனவும் கூறியருளினர். வஞ்சகம், பொய் முதலிய இழி குணங்களை மிகுதிப்படுத்து முகமாக, தம்மைக் கீழ்ப்படுத்து, நெஞ்சம் கேடு செய்தது என்பது கருத்து. கெடுமாறு கெடுத்தாய் என முடித்தல் வேண்டும். கெடும் ஆறு — யான் கெடுதற்குரிய உபாயம். ஆறு —

உபாயமென்னும் பொருளாதலே, [1] "ஆற்றின் வருந்தா வருத்தம்" என்னும் குறட்பகுதிக்குப் பரிமேலழகர் கூறிய உரையானும் அறிக. இனி, "என்னை" என்பதை இடைநிலை விளக்காகக் கொண்டு, என்னைக் கெடுத்தாய் என இரண்டாம் உருபு பெற்று வந்த தன்மை ஒருமைப் பெயராகவும், இனிக் கெடுமாறு என்னை யென வினைக் குறிப்பாகவும் கொள்ளுதல் பொருந்தும். இப் பொருட்குக் ககர ஒற்று மிகாமைப் பாடங் கொள்ளல் வேண்டும்.

இதன்கண், இறைவனது சிறந்த பேருதவியை நினைவு கூராமல் மாறுபடும் நெஞ்சத்தை வெறுத் துரைக்கும் முகமாக, உயிரின் தூய்மைக்கு உரிய பிரிவில்லாத இனிய திருவருட் பேற்றின் பெருமை கூறப்பட்டிருத்தலின், **ஆத்தும சுத்தி** என்னும் பதிகம் நுதலியபொருளும், "கிறியெலாமிகக் கீழ்ப்படுத்தாய்" என்பதனுல் **வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனுதல் அறிக.

33. மாறி நின்றெனைக் கெடக்கிடந்
  தனையையெம் மதியிலி மடநெஞ்சே
தேறு கின்றிலம் இனியுனைச்
  சிக்கெனச் சிவனவன் திரள்தோள்மேல்
நீறு நின்றது கண்டனை
  யாயினும் நெக்கிலே இக்காயம்
கீறு கின்றிலே கெடுவதுன்
  பரிசிது கேட்கவுங் கில்லேனே.

**க-ரை:** தம் நெஞ்சம் தமக்கு மாருக நின்று கேடு விளைத்தலைக் குறித்து முன்னைத் திருப்பாட்டில் இரங்கிக் கூறிய அடிகள், அங்ஙனம் மாறுபடுதற்குக் காரணம், அறிவுரையைக் கேளாத மடமை எனக் கண்டு, அந் நிலையில் அது நம்புதற்குரியது ஆகாது என்பதையும், அதனுல் அங்ஙனம் மாறுபட்ட நெஞ்சின் வழி நிற்றல் இயலாத தென்பதையும் இத் திருப்பாட்டில் வற்புறுத்துக் கூறுகின்ருர்.

---

1. குறள் 468.

ப-ரை: எம் மதியிலி மட நெஞ்சே — யாம் கூறும் அறிவுரையை ஏற்றுக்கொள்ளாத அறியாமையை உடைய நெஞ்சமே, எனை மாறி நின்று—என்னை மாறுபட்டு நின்று, கெடக் கிடந்தனையை உன்னை—யான் கெடுமாறு என்பாற் கிடந்த நின்னை, இனிச் சிக்கெனத் தேறுகின்றிலம்—இனி மேல் உறுதியாகத் தெளியமாட்டோம், சிவன் அவன் திரள் தோள் மேல் — சிவபெருமானாகிய அவ் இறைவனுடைய திரண்ட தோள்களிடத்து, நீறு நின்றது கண்டனை ஆயினும்—திருநீறு நிலை பெற்று விளங்குதலைக் கண்டாய் ஆயினும், நெக்கிலை — உருகுகின்றாய் இல்லை, இக் காயம் கீறுகின்றிலை — இவ் வுடலைப் பிளவு படச் செய்கின்றாய் இல்லை, உன் பரிசு கெடுவது—உன் தன்மை கேடு விளைப்ப தாகும், இது கேட்கவும் கில்லேன் — இதனைக் கேட்கவும் ஆற்றேன் என்பது.

வி-ரை: இத் திருப்பாட்டில், "எனை" எனவும், "கில்லேன்" எனவும் தம்மை ஒருமையில் வைத்துக் கூறிய அடிகள், "எம்மதியிலி" எனப் பன்மை கூறியது, தம் நெஞ்சு, தாம் கூறும் அறிவுரையைக் கேளாமையோடு, மற்றை அன்பர் அறிவுரைகளையும் ஏற்று நடக்கவில்லை என்பது குறித்தாம். ஒரு குழந்தைக்குத் தந்தை கூறும் அறிவுரை விழுமிதாயினும், அதனை ஏற்றுக் கொள்ளா விட்டால், அது குறித்துத் தந்தை வெறான் என்னும் துணிவு பற்றி, அக் குழந்தை அதனைப் பொருட்படுத்தாமலிருத்தலும், ஆசிரியர் முதலிய மற்றையோர் கூறும் அறிவுரையை வெறுப்பிற்கு அஞ்சியாவது ஏற்றுக்கேட்டலும் உலகியலிற் கண்டவை. அம் முறையில் அடிகள் தம் நெஞ்சு தாம் கூறும் அறிவுரையை ஏற்றுக் கொள்ள வில்லையானாலும், மற்றை மெய்யன்பர் கூறும் அறிவுரைகளையாவது ஏற்றுக் கொண்டிருக்கலாம்; அப்படியும் இல்லையே என வருந்துவார், அவ் அன்பரையும் உளப்படுத்து, "எம்மதி" எனப் பன்மையாகக் கூறினர். மடம் — அறியாமை. இயல்பாகவே அறியாமையுடைய நெஞ்சத்தைத் தாமும் பிற அன்பர்களும் இடித்துரைத்து

அறிவுறுத்தும் திருந்தவில்லை என்பது தோன்ற, "மட நெஞ்சே" என்ற அளவில் அமையாது, "எம்மதியிலி மட நெஞ்சே" என்றார். [1] "ஏவவுஞ் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர், போஒம் அளவும்ஓர் நோய்" என்னும் பொருளுரைப்படி, நெஞ்சம் தானாகவும் அறிந்திலது; பெரியோர் அறிவுரைகளையும் கேட்டிலது என்பது கருத்து. நெஞ்சிற்கு அறிவின்மை கூறியது, உணர்ந்தபடி ஒழுகுதற்கு இடந்தராமை குறித்து. [2] "கை கவியாச் சென்று கண் புதையாக் குறுகி......தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ, குறு மகள், மென்றோள் பெறநசைஇச் சென்ற என் நெஞ்சே" என்று அகப் பாட்டில் நெஞ்சிற்குக் கை முதலிய உறுப்புக் கூறியதுபோலக் கவிமரபும் ஆம். [3] "வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும், தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவன்" என்று தமிழ் மறை கூறியபடி, இறைவனை நினைந்து உய்தி பெறுதற்குக் கருவியாகத் தமக்குக் கிடைத்த நெஞ்சம், அங்ஙனம் துணை நின்று உபகரியாமையோடு, பகைமையையும் மேற்கொண்டு நின்றது என இரங்குவார், "எனை மாறி நின்று" என்றார். "எனை" என்புழி ஐகாரம் [4] "செறலின் உவத்தலின்" என்பவற்றுள் செறுதற் பொருள்பற்றி வந்தது. "செறல்—வெகுளியது காரியம்" என்பர் சேனாவரையர்.

வெளிப்பட நிற்றலால், அறிந்து விலக்குதற்குரிய புறப்பகையினும், மறைந்து நின்று கெடுக்கும் அகப்பகை கொடிது என்பது தோன்ற, யான் "கெடக்கிடந்தனை" என்றார். யான் கெடுமாறு என்பாற் கிடந்தனை என்றது, என்னைப் பற்றுக்கோடாகப் பற்றி நின்றே எனக்குக் கேடு விளைத்தலால், உய்தியில்லாத நன்றிமறத்தல் என்னும் குற்றத்திற்கு ஆளாயினை என்று அடிகள் நெஞ்சை வெறுத்தவாறு இது. கிடந்தனையை என்பது முன்னிலை வினையாலணையும் பெயராய், இரண்டன் உருபு ஏற்று நின்றதெனக் கொள்ளலாம். கிடந்தனையாகிய உன்னைத்

1. திருக்குறள் 848. 2. அகநானூறு, களிற்றியானைநிரை 9.
3. அப்பர் தேவாரம். 4. தொல். சொல், சூ. 72.

தேறுகின்றிலம் என முடிக்க. ஐகாரம் சாரியை எனக் கோடலும் உண்டு. உட்பகையாக நின்று கேடு விளைக்கும் உன்னை நம்புவேம் அல்லேம் என்பார், "இனி உனைத்தேறுகின்றிலம்" என்றார். 1 "உட்பகையஞ்சித் தற்காக்க வுலைவிடத்து, மட்பகையின் மாணத்தெறும்" என்பது பொய்யில் புலவர் பொருளுரையாதலின், தற்காப்பின் நிமித்தம் தெளிகிலேன் என்பார் இங்ஙனம் கூறினர். மேலே நெஞ்சிற்கு அறிவுறுக்கும் முகமாக, மற்றை மெய்யன்பரையும் உளப்படுத்துக் கூறியதற்கு ஏற்ப, தெளியாமைக்கும் அம் மெய்யன்பரை உளப் படுத்து, "தேறுகின்றிலம்" என ஈண்டும் பன்மை கூறினர். யான் நம்பாமை உனக்குப் பொருள் இல்லை ஆயினும், மெய்யன்பரும் நம்பமாட்டார் என்று நெஞ்சை இடித்துக் கூறியவாறு இது. வஞ்சத்தால் ஒரோவமயம் நல்லதுபோல் நடித்துத் தேறற்கு இடனுகலாம் என்று ஒரு சிறிதும் கருதற்க என்பது தோன்ற, "சிக்கெனத் தேறுகின்றிலம்" என்றார். சிக்கென என்பது உறுதியாக என்னும் பொருட்டு.

மறை யாகமங்களால் துணியப்பட்ட இன்ப வடிவினனுகிய அவ் இறைவன் என்பார், "சிவனவன்" என்றார். அவன் என்னும் சுட்டுப் பெயர் பண்டே பரம்பொருள் என அறியப்பட்டவன் என்பதை உணர்த்தி நிற்பதாகும். "திரள் தோள்" என்றது, மனித வடிவில் உருமேனி தரித்துக்கொண்டு ஞானுசிரியனுக எழுந்தருளிக் காட்சி நல்கிய பொழுது காணப்பட்ட திருமேனியின் உத்தம இலக்கணத்தைக் குறிப்பதாகும். திரண்ட தோள் அளவில் காணப்பட்டதாயின், சிறந்த ஆடவருள் ஒருவனைப் புலப்படுத்தும் அவ்வளவிலாம். ஈண்டு உறுப்பு நலங்களில் ஏதும் குறையில்லாத ஞானுசிரியன் என்பதை, "திரள் தோள்மேல் நீறு நின்றது" என்னும் தொடர், விளக்க முறுத்துவதாகும். நீறு உபலக்கணத்தால் உருத்திராக்க மணியையும் உணர்த்தும். 2 "உருவுடலிற்

1. திருக்குறள் 883. 2. சைவ சமய நெறி பொதுவிலக்கணம், செ. 162.

கண்டிகை நீறு" என்பது சைவர்கமம். இறைவன் திருமுக மண்டலத்து இயற்கை ஒளியோடு இயைந்து, திருநுதல் வெண்ணீற்றொளி விஞ்சி நிற்றலையும், அப்பே ரொளியைத் தம் கண்ணொளியின் வரம்பிற்கு அடக்கி அறியத் தம் நெஞ்சிற்கு ஆற்றல் இல்லாமையையும் உணர்ந்து, "திருநுதல் மேல் நீறு நின்றது கண்டனே" என்னாது, "திரள் தோண்மேல் நீறு நின்றது கண்டனே" என்றார். உலகத்துப் பொருள்கள் எல்லாம் முடிவில் நீறாகும்; நீறு பிறிதொன்றாகாது. ஆதலின், அஃது இறைவன் திருமேனியில் நிலைபெற்று நின்றதென்னும் குறிப்பு, உலகம் முற்றும் தன்பால் ஒடுங்க, இறைவன் ஒருவனே தனி முதலாகத் திகழ்வன் என்பதைப் புலப்படுப்பதாகும். [1] "அந்தமதாவது நீறு" என்று தமிழ் மறை இயம்புதலும் தெளிக. "திரள் தோள்மேல் நீறு நின்றது கண்டனே" என இறந்த காலத்திற் கூறியதனால், இப்பொழுது காண்கின்றாயில்லை என்பது போதரும். இறைவன் உருமேனி தரித்துக்கொண்டு ஞானாசிரியனாக எழுந்தருளிவந்து அடிகட்கு உபதேசித்து, இன்னுஞ் சின்னாள் இருத்தி என்று சொல்லி உருக்கரந்த நிலையில், அப்பிரிவாற்றாது வருந்திக் கூறிய குறிப்புக்கள் இப்பதிகத்தின் பல பகுதிகளிலும் காணப்படுகின்றன. அக் குறிப்பே இத் திருப்பாட்டிலும் புலப்பட வைத்தார் எனக் கூறலாம். அப்பெருமான் ஞானாசிரியன் நிலையில் வெளிப்பட்டவமயம் கண்டது, திரள் தோள்மேல் நீறு நின்றது. உருக்கரந்த இந்நிலையில் அக்காட்சியை நினைந் தாயினும் உருகுகின்றாயில்லை என்பார், "ஆயினும் நெக்கிலை" என்றார்.

தமக்குக் குரு வடிவில் வந்து, அபரஞானமாகிய சிவ ஞான போத நூல் அறிவையும், அவ்வழி ஒழுகுதலாகிய பரஞானம் என்னும் அநுபவ வுணர்வையும் அருளிக் காத்த இறைவனது திருவுருவம், தம் கட்புலனுக்குத் தோன்றாத நிலையில், [2] "தலைவனை நனி காணேன் தீயில்

1 திருஞான சம்பந்தர் தேவாரம். 2. திருவாசகம், திருச்சதகம் 39.

வீழ்கிலேன் ” என்று துடித்து வருந்திய உண்மையைப் பின்வரும் திருப்பாட்டுக்களில் பரக்கக் காணலாம். அம் முறையே பரமபதியின் பிரிவை ஆற்ருது, “ நெக்கிலை ” என உள் நிகழ்ச்சியையும், “ இக் காயம் கீறுகின்றிலை ” எனப் புற நிகழ்ச்சியையும் மேற்கொண்டிலை என நெஞ்சை முன்னிலைப் படுத்துக் கூறுவாராயினர். இக் காயம் என்னும் சுட்டு, கிடைத்தற்கரிய பேற்றை இழந்து வெறு விதாயிருக்கும் நிலையைப் புலப்படுத்துவதாகும். இந்நிலையில் இவ்வுடல் எதற்கு வேண்டும்? பயனற்ற இவ்வுடலைச் சிதைத்து விடுதலே நலமாகவும், அங்ஙனம் செய்தற்கு ஒருப்பட்டிலை என்பார், “ இக் காயம் கீறு கின்றிலை ” என்ருர். இங்ஙனம் பிரிவு பற்றி, அகத்தும் புறத்தும் இரக்கக் குறிப்பு மேற்கொள்ளாதிருக்கும் நின் இயல்பு உனக்கும் எனக்கும் கேடு செய்வதாகும் என்பார், “ கெடு வது உன் பரிசு ” என்ருர். கெடுவது தொழிற் பெயர் அளவாய் நின்றது. “ இது ” என்றது உள் உருகுதல் இல்லாமையும், உடலைச் சிதைத்தற்கு ஒருப்படாமையு மாகிய நெஞ்சத்தின் கெட்ட இயல்பைக் குறிக்கும். செவி வாயிலாகக் கேட்டற்கும் இயலாத தொரு கொடிய தன்மையைக் கண்ணினல் எங்ஙனம் கண்டு ஆற்றுவேன் என்பார், “ கேட்கவும் கில்லேனே ” என்ருர்.

இதன்கண், ஆன்மாவின் தூய தன்மைக்குக் கேடு விளைக்கும் மாறுபட்ட நெஞ்சத்தைக் குறித்து, “ எம் மதி யிலி மட நெஞ்சே ” என விளித்தும், அதன் கொடிய செயலைக் கருதி, “ இனி உனைத் தேறுகின்றிலம்; கெடுவ துன் பரிசு ; இது கேட்கவுங்கில்லேன் ” என வெறுத் துரைத்தும் அடிகள் இரங்குகின்றமையால், இங்ஙனம் கொடிய நெறியிற் செல்லும் நெஞ்சத்தைச் செந் நெறிப் படுத்துத் தூய்மை பெற வேண்டும் என்பது பெறப்படு தலின், ஆத்தும சுத்தி என்னும் பதிக நுதலிய பொருள் தோன்றியவாறு அறிக.

34. கிற்ற வாமன மேகெடு வாயுடை
யானடி நாயேனை
விற்றெ லாமிக ஆள்வதற் குரியவன்
விரைமலர்த் திருப்பாத
முற்றி லாஇளந் தளிர்பிரிந் திருந்துநீ
உண்டன எல்லாமுன்
அற்ற வாறுநின் அறிவுநின் பெருமையும்
அளவறுக் கில்லேனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் ஞானாசிரியனாக எழுந்தருளிக் காட்சி யளித்து உருக்கம்தந்த இறைவன் பிரிவில் உள்ளுடைந்து வருந்தாத நெஞ்சின் வழி நிற்றல் இயலாதென்ற அடிகள், இத் திருப்பாட்டில் இறைவன் பிரிவில் நீ பெற்ற பேறுதான் என்னையென, அந் நெஞ்சை நோக்கி இழித்துக் கூறுகின்றார்.

ப-ரை: மனமே—, உடையான்—உலகத்துப் பொருள்கள் எல்லாவற்றையும் உடைமையாகவும் அடிமையாகவும் உடையானும், அடி நாயேனை விற்று எல்லாம் மிக ஆள்வதற்கு உரியவன்—அடிமையாகிய நாய் போன்ற என்னை விற்று எனக்கு எல்லா நலங்களும் மிகுமாறு ஆண்டு கோடற்கு உரியவனும் ஆகிய சிவபெருமானுடைய, விரை மலர்த்திருப்பாதம் முற்று இலா இளம் தளிர் பிரிந்திருந்து—மணம் பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளாகிய முற்றுதல் இல்லாத இளம் தளிரில் நின்றும் பிரிந்திருந்து, முன் நீ உண்டன எல்லாம் அற்ற வாறும்—முன்னர் நீ நுகர்ந்தன எல்லாம் அற்றபடியையும், நின் அறிவும் நின் பெருமையும்—அதனை அறியும் நின் அறிவையும் அதனாலாகிய நின் பெருமையையும், அளவு அறுக்கில்லேன்—அளவிட்டு வரையறுக்கும் ஆற்றலுடையேன் அல்லன் ஆதலால், கிற்றவா — நீ செய்தவாறு என்னே, கெடுவாய்—கெடுவாயாக என்பது.

வி-ரை: உலகத்து ஒழுக்கம் தவறி நடப்பான் ஒருவனை உரிமை பற்றி அறிவுடையார் இடித்துரைக்கப் புகுங்கால்,

முதலில் அத் தவறுகளை இன்னவென்று கூருமல், தம உள்ளத்தே கொண்டு, சுருங்கிய வாய் பாட்டில் குறிப் பாகக் கழறிக் கூறல் இயல்பாதலின், அம் முறையில் நெஞ்சத்தின் தவற்றை அடிகள் தம் அறிவகத்தே கொண்டு செய்தவாறு என்னே என்று குறிப்பாகப் பொருள் தோன்ற, “கிற்றவா மனமே” என்ருர். “மனமே” என முதலில் விளித்துச் செய்தவாறு என்னே என்று கூருமல் மாற்றிக் கூறியது, விளியளவில் இழிதக்க நெஞ்சம் தன் பெருமையை நினைந்து இறுமாந்து விடாமைப் பொருட்டாம். குறிப்பாக, “கிற்றவா” என்ற அளவிலும் நின்றுவிடுதல், அதன் இயல்பிற்குத் தக்கதன்று எனக்கருதி, இந்நிலை கேடு விளைப்பதாகும் என்னும் பொருள் தோன்ற, “மனமே கெடுவாய்” என்று கழறிக் கூறுவாராயினர்.

உலகத்துள்ள அறிவில் பொருள்கள் எல்லாம் உடைமையாக, இறைவன் உடையான் எனவும், அறிவுடைப் பொருள்கள் எல்லாம் அடிமையாக, ஆண்டான் எனவும் கூறப்படுவன். இவ்விரு நிலைகளும் முறையே, “உடையான்” என்பதனுலும், “ஆள்வதற் குரியவன்” என்பதனுலும் பெறப்பட வைத்தார். ஒப்புடையன் அல்லனும், ஓர் உவமன் இல்லியுமாகிய இறைவன் பெருமையை நோக்க, தன் சிறுமையே முன்னிற்பது கருதி, அடிமையாகிய இழிவுடையேன் என்பது தோன்ற, “அடிநாயேனை” என்ருர். ஒரு பொருளை விலைகொடுத்துக் கொண்டு ஆளுதல் உலகத்தில் கண்டது. விற்று ஆளுதல் நிகழாததொன்று. ஈண்டு இறைவன் ஆன்மாவை வினைக்கு ஈடாகப் பிறப்பித்தலே விற்றலாகும். அங்ஙனம் பிறப்பித்தற்கு ஏது, உயிர் வினை யொழிவு பெற்றுத் தன் திருவடி நிழல் அடைய வேண்டும் என்னும் அருட்பெருக்கே யாதலின், அதுவும் ஆட்கொண்டபடியாம் என்பது தோன்ற, “விற்று ஆள்வதற்குரியவன்” என்ருர். உண்மையாக ஆட் கொள்ளுதல் கட்டறுத்த பின்னர், [1] “தந்ததுன்றன்னைக்

---

1. திருவாசகம், கோயில் திருப்பதிகம் 10.

கொண்டதென்றன்னை" என்றபடி, இறைவன் தன்னைத் தந்து உயிரைக் கொள்ளுதலாகும். இந்நிலையில் ஆளான உயிர் எய்தும் பேறு அந்தமொன்றில்லா ஆனந்தமாகும். இது கொண்டு ஆட்கொள்ளுதல். விற்று ஆட்கொள்ளுதலால் விளையும் பயன் கட்டறுத்தலாகும். இது கருதியே, விற்று ஆண்டனன் என்னாது, "ஆள்வதற்கு உரியவன்" என்றார். "எல்லாம் மிக" என்றது, விற்று ஆட்கொள்ளும் நிலையிலும், அன்பு, தவம் முதலிய உயரிய நலங்கள் எல்லாம் அடிமையாகிய உயிர்க்கு மிகும்படி என்னும் பொருட்டு. கொண்டு ஆட்கொள்ளுதலில் விளையும் பயன் முற்கூறியபடி அந்தமொன்றில்லா ஆனந்தமாகும். ஆனால், விற்று ஆட்படுத்தும் நிலையிலும் உயிர்க்கு ஊதியம் உண்டோவெனின், அதற்கு விடையாக "எல்லாம் மிக" என்றார். விற்று ஆட்கொள்ளுதலால் உயிர்க்குச் சாதனப்பேறும், கொண்டு ஆட்கொள்ளுதலால் சாத்தியப் பேறும் உண்டாம் என்பது தெளிவாம். ஆண்டான் அடிமைத் திறத்தில், உலகத்தொண்டு, கடவுள் தொண்டு என இரண்டு வகை நினைக்கத்தக்கன. உலகத்தொண்டால் விளையும் பயன் ஆண்டானுக்கே சிறந்தது; கடவுள் தொண்டினால் விளையும் பயன் அடிமைக்கே சிறந்ததாகும். இதுகுறித்தே அடிகள் பிறிதோரிடத்து, [1] "அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாது நீ பெற்றதொன்றென்பால்" என்று அருளிச்செய்தனர்.

இனி, ஒரு சில பரம்பரையினர், தம் நிலம் முதலிய பொருள்களின் வருவாயை அநுபவிக்கலாமே யொழிய, அம் மூலப் பொருளை விற்றற்கு உரிமையிலராதலை உலகியலிற் காண்கின்றோம். அங்ஙனமே, உயிராகிய உடைமையை இறைவன் ஆட்சி புரியலாமேயன்றி, விற்றற்கு உரிமையிலன் ஆவனோ என்பார்க்கு விடையாக, விற்றல், அனுபவித்தல் முதலிய எல்லாவற்றிற்கும் இறைவன் உரிமையுடையான் என்பது தோன்ற, "விற்றெலாமிக ஆள்வதற்குரியவன்" என்றார் என்று கோடலும் ஒன்று.

1. திருவாசகம், கோயில் திருப்பதிகம் 10.

[1] "இருந்தென்னை ஆண்டுகொள், விற்றுக்கொள் ஒற்றிவை என்னின் அல்லால்" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதும் இக்கருத்துப்பற்றியே. இஃது உலகியலோடு பொருந்தக் கண்டது.

அடிகள் தமக்குச் சிறந்த பற்றுக் கோடாகவுள்ள இறைவன் திருவடிகளில் ஈடுபட்டுப் பாராட்டுவார், "விரை மலர்த் திருப்பாத முற்றிலா இளந்தளிர்" என்றார். ஈண்டு, மலர்ப் பாதம் என்றதில், உவமை அணியும், பாத இளந்தளிர் என்றதில் உருவக அணியும் அமைந் திருத்தலான், "விரைமலர்த் திருப்பாத முற்றிலா இளந் தளிர்" என்று கூறியது, உவம உருவக அணியாகும். இறைவன் திருவடிக்காட்சி, தம் உண்முகமாக வுள்ள ஐம்புல நுகர்ச்சிக்கும் இனிதாதலை விளக்குவார் இங்ஙனம் கூறினர். மலரிலுள்ள தேன் சுவைக்கும், மலரும் தளிரும் ஒளி, ஊறு என்னும் இவற்றிற்கும், தேன் நுகரும் வண்டொலி ஓசைக்கும், விரை, நாற்றத்திற்கும் உரிய வாதல் அறிக. தளிர் என்னும் அளவிலே முற்றுதல் இன்மை பெறப்படும். ஆயினும், மரம், செடி, கொடிகளில் உள்ள தளிர்கள், நாள் செல்லச்செல்ல முற்றி இலையாகவும் சருகாகவும் கழிதல் கூடும். இறைவன் திருவடியாகிய தளிர்கள் என்றும் இளமையும் அழகும் உடையனவாய் நிலைபெற்றிருத்தலின், "திருப்பாத முற்றிலா இளந்தளிர்" என்றார். பிரிந்திருத்தல்—இறைவன் திருவடிச் சார்பை விட்டு உலகியற் பொருள்களைப்பற்றி நிற்றல். அங்ஙனம் நிற்பதால் விளையும் பயன் சிறியதும் அழிதன்மாலையதும் ஆம் என்பதைப் பின்வரும் தொடர்மொழிகளால் விளக்கு கின்றார். திருவடிச் சார்பைவிட்டு நெஞ்சம் முன் அநுப வித்தவை, புறப்பொருள்களைப் பற்றிப் பொறி வாயிலாக நுகரப்படும் ஐம்புல இன்பங்களேயாம். அவ்வின்பங்கள் எல்லாம் துன்பத்தோடு கலந்து அநுபவப்படுதலையும், மறுகணத்தில் நிலையுதலின்றி அழிவு எய்துதலையும் இயல்பாக உடையன. இவ்வுண்மை குறித்தே, நெஞ்சை

1. திருவாசகம், நீத்தல் விண்ணப்பம் 18.

நோக்கி, "முன் நீ உண்டனவெல்லாம் அற்றவாறும்" என்றார். அறுதல்—செரித்தல்; இல்லாமற் போதல். திருவடிச் சார்பு ஒழிந்த ஞான்று, நெஞ்சம் நுகர்ந்தன எல்லாம் பொய்யாய்க் கழிந்த முறைமையும், அந்நுகர்ச்சிகளையே பொருளெனக் கண்ட சிற்றறிவும், அச்சிற்றின்பத்தையும் சிற்றறிவையும் உடைமையால் நெஞ்சம் எய்திய பெருமையும், தம்மால் அளவிட்டுரைக்க இயலாதன எனப் புகழ்பவர்போற் பழித்துரைப்பார், "அற்றவாறும் நின் அறிவும் நின் பெருமையும் அளவறுக்கில்லேனே" என்றார். "நீ யுண்டன", "நின் அறிவு", "நின் பெருமை" என அடுத்தடுத்து மூன்றிடங்களிலும் முன்னிலைப் பெயரைக் கூறியது, நெஞ்சத்தின் சிறுமை கருதிக் குறிப்பாக இழித்தற்பொருள் தோன்றற்கு என்க. அறிவு, பெருமை, ஆண்மை என்னும் இம்மூன்று குணங்களும் சிறந்த அரசற்கு உரியன. உலகத்து மற்றோர் அரசனுக்கும் கீழ்ப்படாமல் தானே தலைவனாக நின்று ஆட்சிபுரியும் தனியரசுபோல நெஞ்சம் தன்னைக் கருதிக்கொண்டு, ஆண்டவன் திருவடி மலர்க்கும் கீழ்ப்படாமல் ஆட்சி புரியத் தொடங்கியது கண்டு இவ்வாறு கூறினர். இம் மூன்று குணங்கள் உள்ளும், அறிவும் பெருமையும் வெளிப்படக் கூறப்பட்டன. ஆண்மை அநுபவத்திற்குரியதாகலின், "உண்டனவெல்லாம்" என்பதனால் அது பெறப்படும். நெஞ்சம் இம்மூன்று குணங்களையும் போலியாகக் கொண்டு, போலியாட்சியில் தலைப்பட்டது கண்டு, தாமும் போலியாகப் புகழ்வாராய், "அளவறுக்கில்லேனே" என்று இழிவு தோன்றக் கூறினர். அறுக்ககில்லேன் என்றது அறுக்கில்லேன் என்றாயிற்று. இங்ஙனமாய விபரீதச் செயல்களை உட்கொண்டே தொடக்கத்திலே நீ செய்தவாறு என்னே என்று இரங்குவாராயினர். கிற்றவாறு என்பதில் ஈற்றுகரம் தொக்கு நின்றது. 1 "நுகருமா நுகரே" என்புழிப்போல. கிற்றல்—செய்தல். என்னே என்பது சொல்லெச்சம். மாறுபட்ட இந்நெறியில் ஒழுகத் தலைப்படுதல் கேட்டிற்குக் காரணம் என்பார், "மனமே கெடுவாய்" என்றார்.

1. திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா "தனதனற்றோழா"

இதன்கண், மெய்யன்புடையாரை ஆட்கொள்ளும் இறைவன், அவர்தம் உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் ஏன்றுகொண்டு, தன் திருவடி மலரை ஒரு கண்பொழுதேனும் பிரியாதிருக்கச் செய்தலே அவர்க்கு உறுதி பயப்பதாகும் என்று கூறுமுகமாக, ஆன்மாவின் தூய்மைக்குரிய சாதனம் கூறப்பட்டமையால், "ஆத்தும சுத்தி" என்னும் பதிகம் நுதலிய பொருள் புலப்பட வைத்தது அறிக.

35. அளவ றுப்பதற் கரியவன்
 இமையவர்க் கடியவர்க் கெளியான்நங்
களவ றுத்துநின் றாண்டமை
 கருத்தினுட் கசிந்துணர்ந் திருந்தேயும்
உளக றுத்துனை நினைந்துளம்
 பெருங்களன் செய்ததும் இலைநெஞ்சே
பளக றுத்துடை யான்கழல்
 பணிந்திலை பரகதி புகுவானே.

க-ரை: இறைவன் திருவடிச் சார்பை விட்டுப் போலியாட்சியில் தலைப்படும் நெஞ்சை நோக்கி முன்னைத் திருப்பாட்டில் இழித்துக் கூறிய அடிகள், அவ் இழிவையும் பொருட்படுத்தாத நிலையில், அந்தோ உண்மையாக ஆட்கொண்ட இறைவன் இயல்பை உணர்ந்தும், அவ் இறைபணியில் தலைப்பட்டு நலம் பெற முயலாமை என்னே! என மீண்டும் இரங்கிக் கூறுகின்றார்.

ப-ரை: நெஞ்சே—, அளவறுப்பதற்கு இமையவர்க்கு அரியவன்—தன் இயல்பை வரையறுத்து உணர்தற்கு அமரர்க்கு அரியவனும், அடியவர்க்கு எளியான்—மெய்யன்பர்க்கு எளியவனும் ஆகிய இறைவன், நம் களவு அறுத்து ஆண்டு நின்றமை — நம் வஞ்சத்தை யொழித்து ஆட் கொண்டு நிலை பெற்ற தன்மையை, கருத்தின் உள் உணர்ந்து கசிந்து இருந்தேயும்—உள்ளத்தில் கொண்டு உணர்ந்து ஈடுபட்டு உருகியிருந்தும், பரகதி புகுவான்—

வீட்டு நிலையை அடைதற் பொருட்டு, உள கறுத்து உனை நினைந்து — பொறி நுகர்ச்சிகளாக உள்ளனவற்றை வெறுத்து நின் இயல்பை நினைந்து, உளம் பெருங்களன் செய்ததும் இலை—உள்ளத்தை இறைவன் தங்குதற்குரிய பெரிய இடமாகச் செய்ததும் இல்லை, பளகு அறுத்து உடையான் கழல் பணிந்திலை — தடையாகிய குற்றத்தை ஒழித்து ஆண்டவன் திருவடியை வணங்கினையும் இல்லை. நின் இயல்பு இருந்தவாறு என்னே என்பது.

வி-ரை: அளவு—தன்மை. அறுத்தல்—வரையறுத்து உணர்தல். அளவறுப்பதற்கு என்பதை ஈரிடத்துங் கூட்டி, இமையவர்க்கு அளவறுப்பதற்கு அரியவன் எனவும், அடியார்க்கு அளவறுப்பதற்கு எளியவன் எனவும் இயைத்துப் பொருள் கொள்ளல் வேண்டும். இறைவன் இயல்பைத் தேவர் அறியாமைக்குக் காரணம், புண்ணியப் பயனாகிய இன்பம் ஒன்றிலே ஈடுபட்டு, அவ் இறைவனைத் தம்மவருள் ஒரு தலைவன் என்ற அளவில் நினைந்து இறுமாந் திருத்தலாகும். மெய்யன்பர் தம் எளிமையை நினைந்து, இறைபணியில் ஈடுபட்டு, அவ் இறைவன் திருவருளையே பற்றுக் கோடாகக் கொண்டு ஒழுகுதலின், அவர்க்கு இறைவன் தன்மை அறிதற்கு எளிதாயிற்று என்பது. [1] "தன்மை பிறராலறியாத தலைவா" என்ற இடத்தும், பிறர் என்றது மெய்யன்பர் அல்லாதார் என்னும் பொருட்டு. [2] "வானோர்க் கரிய மருந்தே" எனவும், [3] "ஏனோர்க் கெளிய இறைவா" எனவும் போந்த திருவாக்குக்களையும் நோக்குக. இனி, "அளவு அறுப்பதற்கு அரியவன்" என்பதற்கு, அளவைகளால் வரையறுத்து உணர்தற்கு அரியவன் என்றும், அதனால் மெய்யுணர்விற்கு எளியவன் என்றும் கொண்டு, மெய்யுணர்வில் தலைப்படாதார் தேவராயினும், அவர்க்கு அரியனாவான் எனவும், மெய்யன்புள்ள அடியாராயின், அளவைகளில் தலைப் பட்டிலர் எனினும் எளியனாவான் எனக் கோடலும்

1. திருவாசகம், திருச்சதகம் 59. 2, 3. திருவாசகம், போற்றித் திரு அகவல், அடி 116, 117.

ஒன்று. அளவு—காட்சி முதலிய அளவைகளை விளக்கும் நூல்; காட்சி, கருதல், உரையெனவும், வேறு சில வகைகளாகவும் ஆராயப்படுவது. இவ்வளவைகளைக் கொண்டு இறைவன் இயல்பை ஒருவாறு துணியலாமே யன்றி, முற்றும் உணர்தல் அரிது. மெய்யுணர்வாகிய அநுபவ ஞானமே இறைவனை உணர்தற்கு உரிய நன்னெறியாகும். [1] "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச், சோதிக்க வேண்டா சுடர் விட்டுளன் எங்கள் சோதி" என்பது பெரியார் திருவாக்கு. இப் பாசுரப் பகுதியில், ஏதுக்கள் என்பது அநுமான அளவையையும், எடுத்த மொழி என்பது உரை அளவையையும் உணர்த்துவன. இவற்றால் ஏனைய அளவைகளையும் கூறியபடியாம். இவ்வளவைகளில் வைத்து ஆராய்வது பயனில் செயல் என்பதை, "சோதிக்க வேண்டா" என்பதனாலும், மெய்யுணர்விற்குக் காட்சிப்படுபவன் என்பதை, "சுடர் விட்டுளன் எங்கள் சோதி" என்பதனாலும் தெளியலாம்.

நல்வினைப் பயனையே மிகுதியாக அநுபவிக்கும் தேவராயினும், அநுபவ உணர்வில் தலைப்பட்டிலரேல், அவர் காட்சிக்கு அரிய பொருளாகவுள்ள இறைவன், இருவினைப் பயனையும் கலந்து அநுபவிக்கும் மக்கட் பிறப்பினராயினும், மெய்யன்பராயின், அவர் அநுபவத்திற்கு எளியனாவான் என்பது தோன்ற, "அடியார்க் கெளியான்" என்றார். தேவர் அறிதற்கே அரியனாகிய இறைவன், அன்பர் அநுபவத்திற்கு எளியனாவன் என்று குறிப்பாற் புலப்படக் கூறியது இன்புறத்தக்கது.

இங்ஙனம் அருமைக்கும் எளிமைக்கும் இறைவன் இடனாதலை உணர்ந்தே, [2] "அருமையில் எளிய அழகே போற்றி" என்று அடிகள் பிறிதோரிடத்தும் அருளிச் செய்வாராயினர். களவு, வஞ்சம் முதலிய கரவொழுக்கம், வேடநெறி நில்லார் வேடம் பூணுதலும் அது. [3] "தவ மறைந்தொழுகும் தன்மையிலாளர்" என்பர் சிலப்பதிகார ஆசிரியர். தவ வேடத்தைக்கண்டு, அறியாத உலகம்

1. திருஞானசம்பந்தர் தேவாரம். 2. திருவாசகம், போற்றித் திருஅகவல், அடி 126. 3. சிலப்பதிகாரம் 5, 128.

மயங்கும். அவ்வேட நெறிக்குப் பொருந்தாத தீயொழுக்கத்தை, உயிர்க்குயிராகிய இறைவன் அறிவன். ஆதலின், அவ்வஞ்ச ஒழுக்கத்தைக்கொண்டு இறைவனை ஏமாற்ற இயலாது. அங்ஙனமாகவும், நம் வஞ்ச ஒழுக்கத்தை அறிந்தும் நம்மை ஆட்கொண்டது, அப்பெருமான் நம்பால் கொண்டுள்ள அருட்பெருக்கமாகும்; வேறு காரணம் இன்று என்று நெஞ்சிற்கு உணர்த்துவார், "நம் களவறுத்து நின்று ஆண்டமை" என்றார். ஆட்கொண்டு, கருதிய பயன் நிறைவேறியதும் கைவிடும் உலகத்துத் தலைவர் போலாது, என்றும் நீங்காது நம் உள்ளே உறு துணையாக நிலைபெற்று நின்றான் என்பது தோன்ற, "நின்று ஆண்டமை" என்று அருளிச்செய்தனர்.

இறைவன் நம்பால் கொண்டுள்ள அருட்பெருக்கால் கட்டறுத்து, நம்மை ஆட்கொண்டு நின்றமையை நாம் உணராதிருந்தேம் அல்லேம். நன்றாக உள்ளத்தால் உணர்ந்திருந்தும், அவ்வுணர்ச்சிவாயிலாக ஈடுபட்டிருந்தும் என்பார், "கருத்தினுட் கசிந்துணர்ந்திருந்தேயும்" என்றார். இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளி வந்து தமக்கு மறைமொழி கூறித் தம்மை ஆட்கொண்டதை உலகம் நன்கு அறியும். அங்ஙனம் புறக்காட்சியால் உலகம் அறிந்த அளவில் போதியதென அமைதி அடையாமல், தம் அகக் காட்சியாலும் அறிந்து அநுபவித்த உண்மையை அடிகள் இங்ஙனம் புலப்படுத்து அருளினார். முன்னிலைப் படுத்த நெஞ்சை உளப்படுத்து, "நம் கருத்தினுள்" என்று நெஞ்சிற்கும் நெஞ்சு உளதாகக் கூறினர். இங்ஙனம் கூறுதல் செய்யுள் மரபு. இதனை, [1] "உறுப்புடையது போல், உணர்வுடையதுபோல், மறுத்துரைப்பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும்" என்னும் விதியாலும், [2] "வருந்தினை வாழிய நெஞ்சே.........ஒழியச் சூழ்ந்தனை யாயின் தவிராது, செல் இனிச் சிறக்க நின் உள்ளம்" என்னும் அகப்பாட்டானும் அறிக. இவ்வாறு பின்வரும் இடங்களுக்கெல்லாம் இலக்கணம் எடுத்துக் காட்டுகளை

1. தொல். பொருள், பொருள் இயல், சூ. 2.
2. அகநானூறு, செ. 19.

இங்ஙனமே கொள்க. உலகத்தில் ஒருவன் செய்த நன்றியை அறியாமலிருத்தலே நன்று அன்ரும். [1] "நன்றி மறப்பது நன்றன்று" என்பது பொருளுரை. அறியாமல் இருத்தலே நன்றன்ருயின், அறிந்தும் ஈடுபட்டும் அந்நன்றியைப் பொருட்படுத்தாமல் இருத்தல் எத்துணைக் குற்றமாம் என்பது நினைக்கத்தக்கது. அம்முறையில் அடிகள் ஆண்டவன் அருட்செயலைத் தம் நெஞ்சம் உணர்ந்தும், ஈடுபட்டிருந்தும், அது குறித்து மேற்கொள்ளவேண்டியவைகளைச் செய்யாமல் இருத்தல் குறித்து இரங்கிச் செய்யவேண்டிய கடமைகள் இன்னவென விளக்கிக்கூற முற்படுவாராயினர். கடமைகளைக் கூறுதற்குப் பயன் இன்றியமையாததாதலின், "பரகதி புகுவான்" என்ருர்.

உள என்பது உண்மையடியாகப் பிறந்த பன்மைப் பெயர். அது பொறி வாயிலாக நுகரப்படும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் புலன்களை உணர்த்தும். கட்டு, வீடு என்னும் இரண்டற்கும் மனமே காரணம் என்பர். இறைவன் உட்கோள், [2] "வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும்" என்றபடி, தன்னை நினைந்து, கட்டறுத்து, நலம் பெறுதற்கே நெஞ்சம் வேண்டும் என்பது. ஆகவே, இறைவன் திருவுள்ளப்பாங்கின்படி, பொறிவாயிலாக நுகரப்படும் பொருள்களை வேண்டாமல் என்பார், "உள கறுத்து" என்ருர். கறுத்தல்—வெறுத்தல். உனை நினைந்து என்பது, நெஞ்சை நோக்கி, இறைவனை நினைந்து பணி செய்தலாகிய உன் இயல்பைக் கருதி என்றபடியாம். நின் இயல்பை நினைந்த அளவில், நின் உள்ளத்தை இறைவன் எழுந்தருளுதற்கு உரிய பெரிய இடமாக அமைத்தலே செய்யத்தக்கதென்பது துணிவாகும் என்றும், அத்தகைய சிறந்த கடமையைச் செய்யாதிருத்தல் தவறு என்றும் நெஞ்சிற்கு அறிவுறுத்துவாராய்," உளம் பெருங்களன் செய்ததும் இலை நெஞ்சே" என்ருர். ஆண்டவன் தங்குதற்கு அன்பர் நெஞ்சம் இடமாதலை, [3] "நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்"

1. திருக்குறள் 108. 2. திருநாவுக்கரசர் தேவாரம். 3. அப்பர் தேவாரம்.

என்னும் தமிழ் மறையானும் உணர்க. "உனை நினைந்துளம் பெருங்களன் செய்ததுமிலை" என்பதற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது, "உனை நினைந்துளம்" என்பதை முற்றாகக் கொண்டும், "பெருங்களன்" என்பதற்குப் பெரிய வஞ்சகம் என்றும், பெரிய நட்பு என்றும் பலவாறு உரை கூறுவாருமுளர். அவ்வுரையெல்லாம் பொருட் பொருத்தம் இன்மையால் பொருந்தாமை உணர்க. பளகு—குற்றம்; ஆண்டவன் திருவடியை அடைதற்குத் தடை. அத்தடையைச் சிவ பாவனையால் ஒழித்து, அப்பெருமான் திருவடியை வணங்கினேயும் இல்லை என்பார், "பளகறுத்துடையான் கழல் பணிந்திலை" என்றார். உடையான் என்றது, நெஞ்சத்தை உடைமையாக உடையான் என்னும் பொருளதாம். **'உளம் பெருங்களன் செய்ததுமிலை' என்றதனால், அகவழிபாடு இன்மையும், 'உடையான் கழல் பணிந்திலை' என்றதனால் புற வழிபாடு இன்மையும் கூறியபடியாம்.** இறுதியில் நின் இயல்பு இருந்தவாறு என்னே என்பது குறிப்பெச்சம்.

இதன்கண், பொறி வாயிலாக நுகரப்படும் புலன்களை ஒழித்து, நெஞ்சத்தைத் தூய்மைப்படுத்து, இறைவன் தங்குதற்குரிய நல் இடமாக அமைத்தல் வேண்டும் என்னும் அக வழிபாடும், கழல் பணிதல் ஆகிய புற வழிபாடும், உயிர் தூய நிலையடைதற்கு இன்றியமையாதன வென்று கூறப்பட்டிருத்தலின், **ஆத்தும சுத்தி** என்னும் பதிக நுதலிய பொருள் புலனாதல் அறிக.

36. புகுவ தாவதும் போதர
 வில்லதும் பொன்னகர் புகப்போதற்
 குகுவ தாவதும் எந்தையெம்
 பிரானென்னை யாண்டவன் கழற்கன்பு
 நெகுவ தாவது நித்தலும்
 அமுதொடு தேனொடு பால்கட்டி
 மிகுவ தாவதும் இன்றெனின்
 மற்றிதற் கென்செய்கேன் வினையேனே.

**க-ரை:** இதுகாறும் தம் நெஞ்சின் மாறுபட்ட நிலையை நோக்கி இரங்கிக் கூறிய அடிகள், இனி வீட்டு நிலையை அடைதற்குத் தடையாகவுள்ள கட்டு அறுதி பெறுமாறும், அன்பு நெறிச் சென்று பேரின்ப நிறைவில் ஈடுபட்டு அவ் இன்ப நுகர்ச்சியில் தலைப்படுமாறும் கிடைக்கப் பெறுமை குறித்து, அதற்குத் தம் பழவினை ஏதுவாதலை அறிந்து இத் திருப்பாட்டில் வருந்திக் கூறுகின்றார்.

**ப-ரை:** புகுவது ஆவதும் — அடைதற்கு உரியதும், போதரவு இல்லதும் — அடைந்தால் மீண்டு வருதற்குரிய நெறியில்லாததும் ஆகிய, பொன்னகர் புகப் போதற்கு— சிவ நகருள் புகுதற் பொருட்டுச் செல்லுதற்கு, உகுவது ஆவதும்—தடையாக உள்ள அகப் புறப் பற்றுக்கள் நீங்கி ஒழி வெய்துதலும், எந்தை எம்பிரான் என்னை ஆண்டவன் கழற்கு அன்பு நெகுவது ஆவதும் — என் தந்தையும் எங்கள் தலைவனும் என்னை ஆட்கொண்டருளிய பெருமானும் ஆகிய இறைவனுடைய திருவடிகளுக்கு அன்பு செய்து உருகுதலும், நித்தலும் அமுதொடு தேனொடு பால் கட்டி மிகுவது ஆவதும் — இடையறாது அமிழ்தத்தோடும் தேனோடும் கலந்த பாலும் கருப்புக் கட்டியும் ஆகிய இவற்றின் சுவையினும் மிக்கதாகிய இனிய சுவை உண்டாதலும், இன்று எனின் — இல்லையாயின், இதற்கு வினையேன் என் செய்கேன்—இந் நிலைக்குத் தீவினை யுடையேன் யாது செய்ய வல்லேன் என்பது.

**வி-ரை:** ஒரு வீட்டின் உட் புகுதற்கு அமைந்த வாயில் வழியே, திரும்பி வெளிப்படுதற்கும் வாயிலாக அமைந்திருத்தலைக் கண்கூடாகக் காண்கின்றோம். அல்லது உட் புகுதற்கு ஒரு வாயிலும், வெளிப்படுதற்கு ஒரு வாயிலும் ஆக அமைத்தலும் உண்டு. இஃது இல்லங்களுக்கேயன்றி நகரங்களுக்கும் பொருந்துவதாகும். முத்தி நிலையை வீடாகவும், நகரமாகவும், உலகமாகவும் கூறுதல் உண்டு. எல்லாப் பற்றுக்களையும் விட்ட நிலையே வீடாகும். நகரமாகவும் உலகமாகவும் கூறுதல் உபசார வழக்கு. [1] "சிவநகர்

1. திருவாசகம், திருச்சதகம் 40.

புகப் போகன்''; [1]''சிவமாநகர் குறுகப் போனார்''; [2]''வாரா உலகருள வல்லான்'' என்று அடிகளும் மற்றைப் பெரியோரும் கூறியிருத்தல் அறிக. அம்முறையில் ஈண்டு வீட்டு நிலையைப் பொன்னகர் என்றனர். பொன்னகர் என்பது பொன்போலப் போற்றத்தக்க முத்தி நகரம் என்று பொருள் படும். உலகத்தில் பொன்னில் பற்றுடையார், அப் பற்று அற்ற நிலையில் அதனைப்போல் விரும்பத்தக்கது வீட்டு நிலை ஆதலின், பொன்னகர் என்றார். உலகத்துள்ள அழகிய நகரங்களில் நின்றும் வீட்டு நிலையாகிய பொன்னகரின் இலக்கணம் வேறுபட்டது என்பதைப் புலப்படுத்தற்கே, ''புகுவதாவதும் போதர வில்லதும்'' என்றார். உட்புகுதற்கு வழி அமைந்தது போலத் திரும்பி வருதற்கு வழியில்லாதது என்பது பொருள். [3]'' மீண்டு வாரா வழியருள் புரிபவன் '' என்பது அடிகள் திருவாக்கு. போதரவு—திரும்புதல்; ஆகு பெயரால் வழியை உணர்த்தும்.

புகப் போதல் — உட்புகச் செல்லல். வீட்டு நிலையை அடைதற்குத் தடையாக உள்ள யான் எனது என்னும் அகப்புறப் பற்றுக்கள் ஒழிய வேண்டும் என்பார், '' உருகுவதாவதும் '' என்றார். உருகுதல்—தேய்ந்து ஒழிதல். சிறந்த ஓரிடத்தை அடைதற்குச் செந்நெறி காண்டலும், அச் செந்நெறிச் சேறற்குத் தடையாகவுள்ள பொருள்களைக் களைந்து ஒழித்தலும் வேண்டும். ஈண்டு, வீட்டு நிலையை அடைதற்கு உரிய செந்நெறியாக அடிகள் கண்டது அன்பு நெறியே யாகும். அந்நெறிச் சேறற்குத் தடையாக உள்ள அகப்புறப் பற்றுக்களைத் திருவைந்தெழுத்து ஓதுதல் முதலிய சாதனங்களால் ஒழித்தல் வேண்டும். அத்தடை ஒழிந்த பின்னர்ச் செந்நெறியாகிய அன்பு நெறியைக் காண்டல் வேண்டும். அவ் அன்பு, உலகத்து மனை மக்கள் முதலிய பற்று விளைக்கும் பொருள்களை முன்னிட்டு உண்டானதாக இருப்பின், அஃது அச் செலவிற்குத் தடையாகுமாதலின், அவ்வாறு இல்லாமல் ஆண்டவன் திருவடியை முன்னிட்டுத் தோன்றியதாக இருத்தல் வேண்டும் என்பார்,

1. திருவாசகம், திருச்சதகம் 85. 2. அப்பர் தேவாரம்.
3. திருவாசகம், கீர்த்தித் திருவகவல், அடி 171.

"எந்தை எம்பிரான் என்னை ஆண்டவன் கழற்கு அன்பு" என்றார். எந்தை முதலிய சொற்களின் பொருள் நலங்கள் முன்னைத் திருப்பாட்டுக்களில் ஆராயப்பட்டன.

நெகுதல்—உருகுதல். இறைவன் திருவடிக்கு அன்பு செய்து நெஞ்சம் உருகுதலே அன்பு நெறியாகும். அந் நெறிச் சென்று எய்தும் சிறந்த பேறு எத்தன்மைத்து என்று அறியலுறுவார்க்கு, "நித்தலும் அமுதொடு" என்பவை முதலிய சொற்களால் விளக்கமுறுத்துவாராயினர். இறைவன் திருவடியில் இயைந்து நுகரும் பேரின்பம் அமிழ்தம் முதலியவற்றின் நுகர்ச்சியால் உண்டாம் இன்பம்போல உவப்புடையது ஆகாது என்பார், "நித்தலும்" என்றார். நித்தலும் என்பது எந்நாளும் என்னும் பொருட்டு. அமுதம் — தேவர் உணவு. தேன், பால், கட்டி இம்மூன்றும் மக்கள் உணவு. [1] "தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்" என்பது அடிகள் திருவாக்கு. இப்பாடற் பகுதியில் அமுதம் என்றது பாலை உணர்த்தும். தேவர் உணவு, மக்கள் உணவு என்னும் வேறுபாட்டைப் புலப்படுத்தற்கே ஒடு உருபு ஈரிடத்தும் போந்தது. அமரர் உணவாகிய அமுதத்தோடு, மக்கள் உணவாகிய பால், தேன், கருப்புக்கட்டி என்னும் இவற்றையும் கலந்து உண்டால் எத்துணை இனிமைச் சுவை தோன்றுமோ, அத்துணைச் சுவையினும் இறைவன் திருவடி இன்பம் மேம்பட்டது என்பார், "அமுதொடு தேனொடு பால் கட்டி மிகுவது" என்றார். ஒப்பதும் மிக்கதும் இல்லாததாகிய இறைவன் திருவடி இன்பத்திற்கு வேறு எடுத்துக்காட்டு இல்லாமையால், கேட்கப்பட்ட தேவர் உணவிலும், நுகரப்பட்ட மக்கள் உணவிலும் இனிமை மிக்க சில பொருள்களை எடுத்துக் காட்டினர். இங்ஙனம் கூறுதல் ஆன்றோர் கொள்கை. இறைவன் கருணைக்குப் பால் நினைந்தூட்டும் தாயின் அன்பை எடுத்துக்காட்டியதும் இதனை வலியுறுத்தும். அமுதம் முதலிய சுவைப் பொருள்களை எடுத்துக்காட்டி, அவற்றினும் மிகுவது எனவும், எஞ்ஞான்றும் நிலையுதல் உடையது எனவும் வீட்டின்பம் குறிக்கப்பட்டது அறிக.

1. திருவாசகம், திருவம்மானை 16.

மிகுவது—மிக்கதாகிய சுவை. ஆவது—ஆதல். இன்று என்பது, உகுவது, நெகுவது, மிகுவது என்னும் இவற்றோடு தனித்தனி இயையும். [1] "கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன், அடுமுரண் தேய்க்கும் அரம்" என்புழி, அரம் என்பது தனித்தனி இயைதல் அறிக. இவ்வாறு முடிப்பதனை, "பிரத்யேக பந்த அன்வயம்" என்பர் வடநூலார். மற்று—அசை. இத் திருப்பாட்டில் வீட்டு நிலையின் இயல்பை விளக்கி, அதனைச் சார்தற்கு உரிய செந்நெறிச்செலவும், அதற்குத் தடையாக வுள்ள அகப்புறப் பற்றுக்களின் ஒழிவும், அவற்றின் ஒழிவில் அச்செந்நெறியாகிய அன்பு நெறிப் படர்தலும், அந்நெறிச் சென்று எய்தும் பேரின்பப் பேறும் ஆகிய இவற்றை முறையே கூறி, இவற்றுள் ஒன்றேனும் அடையப் பெற்றிலேன் எனின், இது குறித்து யான் செய்யத்தக்கது யாதுளது என்று இரங்குவார், "இதற்கு என் செய்வேன்" எனவும், இங்ஙனம் அடையப் பெறுமைக்கு ஏது என் தீவினையே என்பார், உடம்பொடு புணர்த்து, "வினையேனே" எனவும் கூறினர்.

இதன்கண், பொன்னகர் புகப்போதற்குத் தடையாக வுள்ளன உகுதலும், ஆண்டவன் கழற்கு அன்பு நெகுத லும் அமுதொடு தேனொடு பால்கட்டி மிகுதலும் ஆகிய இவை உயிரின் தூய்மைக்கு இன்றியமையாதனவென்று கூறப்பட்டிருத்தலின், ஆத்தும சுத்தி என்னும் பதிகம் நுதலிய பொருள் விளக்கமாதல் அறிக.

37. வினையென் போல்உடை யார்பிறர்
ஆர்உடை யான்அடி நாயேனைத்
தினையின் பாகமும் பிரிவது
திருக்குறிப் பன்றுமற் றதனாலே
முனைவன் பாதநன் மலர்பிரிந்
திருந்துநான் முட்டிலேன் தலைகீறேன்
இனையன் பாவனை யிரும்புகல்
மனஞ்செவி யின்னதென் றறியேனே.

---

[1] திருக்குறள் 567.

க-உரை: கட்டறுதி பெருமை முதலியவற்றிற்கு ஏதுவாகவுள்ள தம் பழ வினையை நோக்கி முன்னைத் திருப்பாட்டில் வருந்திக் கூறிய அடிகள், அவ் வினை தம் அளவில் மிக்க வலி படைத்திருத்தலை அநுபவத்திற் கண்டு, அதனால் நேர்ந்த இறைவன் திருவடிப் பிரிவிற்கு வருந்தித் தம் வலிய இயல்பை இத் திருப்பாட்டில் வெளிப்படுத்துக் கூறி மேலும் இரங்குகின்றார்.

ப-உரை: என் போல் வினை உடையார் பிறர் ஆர்—என்னைப்போலத் தீவினையுடையார் பிறர் யாவர் (ஒருவரும் இல்லை என்றபடி), அடி நாயேனை—அடிமையாகிய நாய் போன்ற என்னை, தினையின் பாகமும் பிரிவது—தினையளவு போதும் பிரிந்திருத்தல், உடையான் திருக்குறிப்பு அன்று — இறைவனுக்குத் திருவுள்ளக் கருத்து அன்று; அதனாலே—, முனைவன் பாதம் நல் மலர் பிரிந்திருந்தும்—ஆண்டவனுடைய திருவடிகளாகிய நல்ல மலர்களைச் சாராது பிரிவுற்றிருந்தும், நான் முட்டிலேன் தலைகீறேன்—யான் தலையை வலிய பொருளோடு மோதுதல் செய்கிலேன் பிளத்தலும் செய்கிலேன், இனையன் பாவனை இரும்பு — இத்தகைய எனது நினைவு இரும்பாகும், மனம் கல்—நெஞ்சம் கல்லாகும், செவி இன்னது என்று அறியேன்—செவியை இன்ன பொருள் என்று சொல்ல அறிந்திலேன் என்பது.

வி-உரை: வினை ஈண்டுத் தீவினையை உணர்த்தும். ஆண்டவன் திருவுள்ளம் தினைத்துணைப் போதும் தம்மை விட்டுப் பிரியாதிருப்பதாகவும், தாமே பிரிந்து தனிப்பட்டு வருந்துதற்கு ஏதுவாகிய தீவினைப் பயன் நுகர்ச்சியில் தம்மைப் போல் பிறர் யாரும் உலகில் இருக்கமாட்டார் என்னும் கருத்தால், "வினையென் போலுடையார் பிறரார்" என்றார். இத்தகைய வலிய வினைக்கு ஆளாயினார் என்னைப் போல் பிறர் இருக்கமாட்டார் என்பதை யான் அறிவேன்; என் சிற்றறிவுக்கு அறியப்படாமல் வேறு யாரும் இருப்பாராயின், அவ் வுண்மை உணர்ந்தாயினும் ஓராற்றான் ஆறுதல் அடையலாமே என்னும் கருத்தால், அடிகள்,

"பிறர் ஆர்" என்று வினு வாய்பாட்டால் கூறுவா ராயினர். உடையான் என்பது, வலிய தீவினையுடைய என்னையும் அடிமையாக உடையான் என்னும் பொருட்டு. மிகவும் இழிந்தவன் என்று என்னை அறிந்திருந்தும், என்னைப் பிரியாதிருக்கும் திருவுள்ளம் உடையான் என்பார், "அடி நாயேனை" என்றார்.

தினையின் பாகம்—தினையளவு கூறு. இக் கூறு, கால அளவின் மிக்க சிறுமையை உணர்த்தும். [1] "இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்" என்னும் அடிகள் மணி மொழியும் ஈண்டு நினைக்கத் தக்கது. இனி, என் அறிவில் முழுதும் கலந்துள்ளானே யன்றித் தினையளவு ஒரு சிறு கூறும் விலகியிருக்கும் குறிப்புடையான் அல்லன் என்றார் எனினுமாம். ஆகவே, தினையின் பாகமென்பது, காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்துமாறறிக. குறிப்பு இறைவனதாதலின், திருக் குறிப்பு என்னப்பட்டது. மற்று அசை. அதனாலே என்னும் ஏது, முனைவன் பாத நன்மலர் பிரியாதிருத்தலே கடமை யென்றற்கு ஆம். அடியேனைத் தினையின் பாகமும் பிரிவது உடையானுக்குத் திருக்குறிப்பு அன்று ஆயின், அக் குறிப்பு உணர்ந்து, அப் பெருமான் திருவடி மலர்களைப் பிரியாது இறுகப் பற்றிக் கோடல் என் கடமையாகவும், வலிய தீவினையின் தடையால் பிரிந் திருக்க நேர்ந்தது என்று இரங்குவார், "முனைவன் பாத நன் மலர் பிரிந்திருந்தும்" என்றார். இங்ஙனம் இறைவன் திருவடிக் காட்சியின் பிரிவு அடிகளுக்கு நேர்ந்ததற்குக் காரணம், இறைவன் ஞானசிரியனாக எழுந்தருளி வந்து உபதேசித்துச் சைவச் செந்நெறியாகிய அன்பு நெறியை இனிய பாடல்களின் மூலமாக உலகத்தவருக்கு விளக்கி உபகரித்தற்பொருட்டு, இன்னும் சின்னாள் இருத்தி என இட்ட கட்டளையே யாகும். இறைவன் கட்டளை அதுவா யினும், அளப்பரிய இன்பத்திற்கு ஏதுவாக இருந்த திரு வடிக் காட்சி, விரைவில் கரந்தது பொறாமல் துடித்து வருந்தும் நிலையினர் ஆயினர் என்பது. ஞானசிரியனாக

1. திருவாசகம், சிவபுராணம், அடி 2.

எழுந்தருளிய இறைவன் திருவுருக்கரந்த நிலையில், அப் பிரிவாற்ருது வருந்திப் பாடிய பின் வரும் பாடற் பகுதிகட் கெல்லாம் இங்ஙனமே கருத்துக் கொள்க. "முட்டிலேன்," "தலை கீறேன்" என்புழி, தலையை ஈரிடத்துங் கொண்டு, தலையைக் கல் முதலிய வலிய பொருளோடும் மோது கின்றிலேன், பிளக்கின்றிலேன் என்று கொள்ளல் வேண்டும். ஏனைய உறுப்புக்களை விட்டுத் தலையை மாத் திரம் இங்ஙனம் கூறியது, காட்சியில் திளைத்தற்குரிய கண் முதலிய பொறிகள் எல்லாவற்றையும் உடைமையானும், இறைவன் திருவடி மலரைச் சூடுதற்கு உரிமை இருந்தும், அங்ஙனம் சூடிக் கொள்ளாமையானும் ஆம் என்பது. சிறிதும் தம்மைப் பிரியாதிருத்தலே இறைவன் திருவுள்ள மாகவும், அதற்கு மாருகப் பிரிந்திருக்க நேர்ந்தது பற்றி உண்டாகிய துன்பத்தால், "முட்டிலேன் தலை கீறேன்" என்று தம் உடலையே மாய்த்துக் கொள்ளாத தம் வன் கண்மையை இவ்வாறு புலப்படுத் தருளினர். இனையன் என்பது, இத்தகைய வன்கண்மை உடையேன் என்னும் பொருட்டு.

இறைவன் திருவுருவைப் பாவித்தற்கு நெஞ்சத்தின் குழைவு வேண்டும். குழைவு இன்றேல், உள்ளம் கடவுள் வடிவில் ஈடுபட்டுப் பாவித்தற்கு இயலாது என்பது பெரியார் அநுபவம். [1] "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும் பொன்னர் சடைப் புண்ணியன்" என்பது தமிழ் மறை. ஈண்டு அடிகள் இறைவன் திரு வுருவைப் பாவித்தற்கு உள்ளக் குழைவு இன்மையால், "இனையன் பாவனை இரும்பு" எனவும், பாவித்தற்கு உரிய குழைவு இல்லாத மனம் கல்லைப் போன்றிருத்தலின், "கல் மனம்" எனவும் கூறினர். இரும்பு, நெருப்பு முதலிய சாதனங்களால் உருகும் இயல்பினது. அது போலத் தவ ஆற்றலால் பாவனைக்குரிய குழைவைப் பெறக் கூடுமா யினும், அதற்கு மூலமாகவுள்ள மனம் எதற்கும் உருகாத கல்லாயிற்று என்பது கருத்து. மனம் கல்லாகிய நிலையில்,

1. திருநாவுக்கரசர் தேவாரம்.

அக முகமாக இறைவனைப் பாவித்தல் இல்லாமையோடு, பொறிகளின் வழியே சென்று, புல்நுகர்வினும் இறைவனை அனுபவித்தற்கு இயலாததாகும் என்னும் குறிப்பை, "பாவனை இரும்பு கல் மனம்" எனவும், செவி இன்ன தென்றறியேன் எனவும் கூறியவாற்றான் அறிக. பொறிகளுக்கு உபலக்கணமாக ஈண்டுச் செவி கூறப்பட்டது. காட்சி ஒழிவில் கேள்வி அளவிலாவது இறைவன் திருப் புகழ் அமிர்தத்தைப் பருகற்கும் இயலவில்லையே என்பது குறிப்பு.

இதன்கண், "தினையின் பாகமும் பிரிவது திருக் குறிப்பு அன்று" என்றதனாலும், "முனைவன் பாத நன் மலர் பிரிந்திருந் தும்" என்றதனாலும் இடையறாது இறைவன் திருவடிக் காட்சியில் ஈடுபட்டிருத்தல் உயிரின் தூய நிலைக்கு ஏதுவாம் என்பது போதரலின், ஆத்தும சுத்தி என்னும் பதிக நுதலிய பொருள் புலனாதல் அறிக.

38. ஏனை யாவரும் எய்திட
லுற்றுமற் றின்னதென் றறியாத
தேனை ஆனெயைக் கரும்பினின்
தேறலைச் சிவனையென் சிவலோகக்
கோனை மானன நோக்கிதன்
கூறனைக் குறுகிலேன் நெடுங்காலம்
ஊனை யானிருந் தோம்புகின்
றேன்கெடு வேனுயிர் ஓயாதே.

க-ரை: ஆண்டவன் திருவடிப் பிரிவிற்கு வருந்தித் தம் அகப் புறக் கரணங்களின் வலிய இயல்பைக் குறித்து முன்னைத் திருப்பாட்டில் இரங்கிக் கூறிய அடிகள், மீண்டும் இறைவனை அணுகப் பெறாத நிலையில் உடலோம்புதலின் மிகையையும் உயிர் ஒழிவு பெறாமையையும் நினைந்து வருந்துகின்றார்.

ப-ரை: ஏனை யாவரும் எய்திடல் உற்றும்—மெய்யன்பர் அல்லாத மற்றைத் தேவர் மக்கள் முதலிய எல்லோரும் அடைதற்கு முயன்றும், இன்னது என்று அறியாத—இத்

தன்மை உடையது என்று அறியப்படாத, என் தேனை ஆன் நெய்யை கரும்பின் இன் தேறலை—எனக்குத் தேனும் பசுவின் நெய்யும் கரும்பினது இனிய சாற்றின் தெளிவும் ஆயவனை, சிவனை சிவலோகக் கோனை மான் அன்ன நோக்கி தன் கூறனை — இன்ப வடிவினனும் சிவலோக நாதனும் மான் விழி போன்ற கண்களையுடைய அம்மை யைத் தன் ஒரு கூற்றில் உடையவனும் ஆகிய இறைவனை, நெடுங்காலம் குறுகிலேன் — நீண்ட காலமாக அணுகப் பெற்றிலேன், கெடுவேன் யான் இருந்து ஊனை நெடுங் காலம் ஓம்புகின்றேன்—இந் நிலையில் கேடு அடையத்தக்க யான் இவ் வுலகில் வாழ்ந்திருந்து உடலை நீண்டகாலமாகப் பாது காக்கின்றேன், உயிர் ஓயாதே—என் உயிர் கெட்டு ஒழியாதா? என்பது.

வி-ரை: ஏனை யாவரும் என்றதனால், மக்கள், தேவர் முதலிய குழுவினருள் ஒரு சிலர் அல்லாத மற்றைய எல் லோரையும் கொள்ளல் வேண்டும். அச் சிலர் தாம் யாவர் எனின், வினை மாசு நீங்கிய மெய்யன்பராவர் என்பது. மற்று—அசை. இறைவனை அடைதற்கு உரிய செந்நெறி யாகிய அன்பு நெறியான் அன்றி, வேற்று நெறிச் செல் வார், எத்துணை ஆற்றலும் முயற்சியும் உடையராயினும், இறைவன் இயல்பை இத் தன்மைத்து என்று அறியும் வலியிலராவர் என்பது தோன்ற, "இன்னதென்று அறி யாத" என்றார். அறியாத என்னும் பெயரெச்சம் தேன் முதலிய சொற்களாற் குறிக்கப்படும் "இறைவன்" என்னும் பெயரைக் கொண்டு முடியும்.

"என்" என்னும் சொல்லைத் தேன் முதலிய ஆறு இடங்களிலும் கூட்டி, எனக்குத் தேன் முதலியனவாக உள்ளானை எனக் கொள்ளல் வேண்டும். ஏனையோரால் இன்ன தன்மையன் என்று அறியப்படாத இறைவனைத் தேன் முதலியனவாக அடிகள் தாம் அறிந்து கூறுதல் எங்ஙனம் பொருந்தும் எனின், [1] "அடித்தடித்து அக்கார முன் தீற்றிய அற்புதம்" என்றபடி, ஆண்டவன் வலிய

1. திருவாசகம், அற்புதப்பத்து 3.

வந்து, தன் இயல்பை அறிவித்து, அருளமுதத்தை ஊட்டி ஆட்கொண்டதை அடிகள் பல விடத்தும் குறிப்பிடுகின்றார். ஆதலின், அம் முறையிற் பொருந்தும் என்க. அடிகள் தம்முடைய முதிர்ந்த அன்பினால், 1 "அன்பினில் விளைந்த ஆரமுதே" என்றபடி, ஆண்டவனை மிக இனிய பொருளாகக் கண்டு அனுபவித்தவர் என்பதை அறிகின்றோம். அங்ஙனமாகவும், அடிகள் தம் அடிமை இயல்பையும், ஆண்டவன் அருட் பெருக்கத்தையும் வெளிப்படுத்தும் கருத்தினராய்த் தம்மை இழித்தும், திருவருளை உயர்த்துங் கூறுதலைப் பல விடத்தும் காணலாம். தேன் பால் கன்னல் இம் மூன்றனையும் இனிமையிற் சிறந்த பொருள்களாகக் கொண்டு, இறைவனுக்கு ஒப்பிட்டுப் பெரும்பாலும் இம் முறையிற் கூறுதலைப் பலவிடங்களிலும் காணலாம். 2 "தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்தினிய கோன்" என்பது முதலிய இடங்களிற் காண்க. இறைவன், 3 "அருமையில் எளிய அழகே" என்று கூறியபடி, தேவர், முனிவர் முதலியோரும் அரிய தவம் செய்தும் காணுதற்கரிய பொருளாகவும், தூய அன்பு நெறியில் ஒழுகும் அடியவர்க்கு எளிய பொருளாகவும் உள்ளான் என அறிகின்றோம். அடியவர், 4 "பெறவே வேண்டும் மெய்யன்பு" என்றபடி, ஆண்டவனிடத்து அன்பைப் பெருக்கிக் கொள்வராயின், இறைவன் அன்புவலையில் தானேவந்து படுபவன் ஆவன். அங்ஙனம் வலியவந்து முதலில் எளியனாய்த் தன் கருணைத் தேன் காட்டி, அவ் அடியவரைத் தன் வயப்படுத்துத் தன் அரிய தன்மையைப் படிப்படியாக உயர்த்துக் காட்டித் தன் இன்ப வெள்ளத்தில் திளைக்கச் செய்வன் என்பது பெரியார் கண்ட உண்மை அனுபவம். ஒரு குழந்தைக்கு இனிமை மிக்க எளிய பொருளை முதலில் காட்டி நுகர்வித்து, அதன்மேல் சிறிது சிறிதாக உயர்ந்த பொருள்களை உண்பித்து உடலுக்கு நலம் செய்வார்போல,

---

1. திருவாசகம், பிடித்த பத்து 3. 2. திருவாசகம், திருவம்மானை 14
3. திருவாசகம், போற்றித் திருவகவல் 126. 4. திருவாசகம், பிரார்த்தனைப் பத்து 6.

மெய்யன்பர்க்கு, ஆண்டவன் முதலில் எளியனாய்க் காட்சி யளித்துப் படிப்படியாகத் தன் அரிய நிலையையும் உணர வைத்து, முடிவில் இன்பத்துள் திளைப்பித்து, அவர் தம் உயிர்க்கு நலம் செய்பவன் ஆவன் என்க. இம் முறையில் அடிகளுக்கு ஆண்டவன் தன் இயல்பை முதலில் எளிமை யில் காட்டி, ஈர்த்துப் படிப்படியாக அருமை நிலையை உணர்த்தி ஆட்கொண்டதைப் புலப்படுத்துவாராய்,"தேனை ஆனெயை" எனத் தொடங்கி, முறையே கூறுவாராயினர். தேனைப் பெற்றவுடன், அடுதல் முதலிய செய்ற்படுத்தாமல் இனிமை தோன்ற எளிதில் உண்ணலாம். "ஆனெயை" என்றமையால் பசுவினிடத்தினின்றும் நெய் பெற வேண்டு மானால், பாலை அடுதற் செயற் படுத்துத் தயிராக்கிப் பெறல் வேண்டும். கரும்பின் இன் தேறல் என்புழி, தேறல் ஆகு பெயராய்க் கட்டியை உணர்த்தும். கரும்பின் தேறல் பெற வேண்டுமானல், கரும்பை ஆலையில் இட்டுத் தெளிந்த சாறு எடுத்து, அடுதற் செயலாற் கட்டியாக்கிப் பெறவேண்டும். ஈண்டுக் கூறிய தேன் நெய் கருப்புக் கட்டி இம் மூன்றும் இனிமைச் சுவையில் ஒன்றுபட்டிருந்தாலும், முன்னதை நோக்கப் பின்னது அரிதிற் பெறத்தக்கதாக இருத்தல் அறியத்தக்கது. தேனை என அடைமொழி இன்றியும், ஆனெய், கரும்பின் இன் தேறலை என மற்றைய இரண் டிற்கும் அடைமொழி புணர்த்தும்கூறியது, தேன் ஆக்குஞ் செயல் ஈக்களுக்கே அன்றி மக்களுக்கு இன்றென்பதும், நெய்யும் கருப்புக் கட்டியும் ஆக்குஞ் செயல் மக்களுக் குரியன என்பதும் புலப்படுத்தற் கென்க. தேன் முதலிய மூன்றையும் ஆண்டவன் இயல்பிற்கு ஒப்புமை பற்றிக் கூறிப் பின்னர்ப் பொருள் இயல்பு பற்றிச் சிவன் முதலிய சொற்களால் விளக்கத் தொடங்குகின்றார்.

சிவன் என்பது இன்பவடிவினன் என்னும்பொருட்டு. தேன் முதலியன புலன் உணர்விற்கு இன்பம் செய்தல் போலப் புலன்களுக்கு எட்டாத மெய்யுணர்விற்கு இன்பம் செய்பவன் இறைவன் என்பது தெளிவித்தற்கே முதலில் "சிவனை" என்றார். சிவபெருமான் இன்ப

வடிவினன் ஆதலோடு, அவன் ஆட்சிக்கு உட்பட்ட உலகமும் இன்பமயமான தென்பதும், அவ் உலகத்தில் இன்பத் தனியரசாக விளங்குபவன் என்பதும் புலப்படுத்தற்கு, "சிவலோகக் கோனை" என்றார். போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தை புரிதற்கும், உயிர்த் தொகுதிகள் அருள் உருவினளாகிய அன்னையை வழிபட்டு, அவள் காட்டக்கண்டு அப்பனை அடைதல் முறையாதலின், அம்முறையில் அவ்வுயிர்களுக்கு அருளுதற்பொருட்டும், இறைவன் உமையொரு கூறனாய் விளங்குகின்றான் என்னும் உண்மையைப் புலப்படுத்தற்கு, "மானன நோக்கி தன் கூறனை" என்றார். அம்மைக்கு நோக்கச் சிறப்புக் கூறியது, தன் மக்களாகிய உயிர்த் தொகுதிகளின்பால் வைத்த அருட்குணம் அதன் முகமாக வெளிப்படுதல்பற்றி என்க. சிவன், சிவலோகக் கோன், உமையொருகூறன் என்னும் இம்மூன்று பெயர்களும், பொருளியல்பில் ஒன்றாயினும், அடையும் முறையில், முன்னதை நோக்கப் பின்னது அருமை உடையதாதலை உய்த்துணரல் வேண்டும். ஆண்டவன், மெய்யன்பர்க்கு, முதலில் தன்னை இன்ப வடிவினனாகவும், பின்னர் இன்ப உலகத் தனியரசாகவும், அதன்பின், உமையொரு கூறனாகவும் காட்சியளித்து இன்புறுத்தும் உண்மை புலனாதலறிக. அருமையில் எளிய அழகு இருந்தவாறு இது. நெடுங்காலம் என்பதை இடைநிலையாகக்கொண்டு, "குறுகிலேன்" என்பதனோடும், "ஓம்புகின்றேன்" என்பதனோடும் கூட்டுக. குறுகுதல்—அணுகுதல். நெடுங்காலம் குறுகிலேன் என்றது பண்டைப் பிறப்புக்களிற் சென்ற காலத்தைக் குறித்து என்க. இப் பிறப்பைக்குறித்துக் கூறியதாகக்கொள்ளின், ஆண்டவனை அணுகாத காலம் சிறிதாயினும், பிரிவு நிலையில் பெரிதாகத் தோன்றும் ஆதலின், அதுபற்றி நெடுங்காலம் என்று கூறினார் எனக்கொள்ளல் வேண்டும். கெடுவேன் யான் என்பது, இந்நிலையில் கேடு அடையத்தக்க யான் என்னும் பொருட்டு. "யான் இருந்து ஊனை ஓம்புகின்றேன்" என்றது, இப்பிறப்பில் ஆண்டவனை அணுகாத நிலையில், உடலை மாய்த்துக் கொள்ளாமல் உயிருடன் கூடி வாழ்ந்து,

இவ்வுடலை நீண்டகாலமாகப் பாதுகாக்கின்றேன்; இஃது என்ன அறியாமை என்பது குறித்து என்க. என் அறியாமையால் பொய்யுடலை மெய்யெனக் கொண்டு யான் ஓம்புகின்றேன் ஆயினும், ஆண்டவன் அணுக்கம் பெறாத நிலையில், உயிராவது தானே உடலை விட்டுக் கழியலாமே; அதுவும் இல்லையே என்பார், "உயிர் ஓயாதே" என்றார். ஓயாதே என்புழி, ஏகாரம் எதிர்மறைப் பொருளது. 1 "தானேயும் அழியாதாவி" என்னும் பௌராணிகர் உரையும் இக்குறிப்புப் பற்றியதென்க.

இதன்கண், ஊன் ஓம்புதலைப் பொருட்படுத்தாமல், இனிய பொருளாகிய ஆண்டவனை விரைந்து அணுகுதல் உயிரின் தூய நிலைக்கு இன்றியமையாதது என்னும் பொருள் புலப்பட்டு நிற்றலின், ஆத்தும சுத்தி என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

39. ஓய்வி லாதன வுவமனில்
இறந்தன ஒண்மலர்த் தாள்தந்து
நாயில் ஆகிய குலத்தினுங்
கடைப்படும் என்னைநன் னெறிகாட்டித்
தாயில் ஆகிய இன்னருள்
புரிந்தஎன் தலைவனை நனிகாணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரை
யுருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் இறைவன் பக்கல் அணுகப்பெறாத நிலையில் உடல் ஓம்புதலின் மிகையை நினைந்து இரங்கிக் கூறிய அடிகள், இத் திருப்பாட்டில் தமக்கு நன்னெறி காட்டி இன்னருள் புரிந்த ஆண்டவனைக் காணாமல் காலம் மிகக் கழிதலைப் பொறாராய்த் தீ முதலிய வற்றால் தாம் அழியாமல் இருப்பது குறித்து வருந்துகின்றார்.

ப-ரை: ஓய்வு இலாதன — அழிந்தொழிதல் இல்லாதனவும், உவமனில் இறந்தன — உவமங்களைக் கடந்தனவும்

1. பரஞ்சோதி திருவிளையாடல், வாதவூரடிகளுக்கு உபதேசித்தது 55.

ஆகிய, ஒள்மலர்தாள் தந்து — ஞான ஒளி பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளை அளித்து, நாயில் ஆகிய குலத்தினும் கடைப்படும் என்னை — இழிந்த நாய்ப் பிறப்பினும் கடைப்பட்ட எனக்கு, நல்நெறி காட்டி — வீடு அடைதற்கு உரிய சிறந்த வழியாகிய அன்பு நெறியை அறிவுறுத்தருளி, தாயில் ஆகிய இன்னருள் புரிந்த — தாயிடத்து உண்டாகிய இனிய அருளினும் சிறந்த அருளைச் செய்த, என் தலைவனை நனிகாணேன் — என் ஆண்டவனை மிகவும் கண்டிலேன், (இந் நிலையில்) தீயில் வீழ்கிலேன் — நெருப்பில் வீழ்ந்து இறந்திலேன், திண்வரை உருள்கிலேன் —திண்ணிய மலைமேலிருந்து உருண்டிலேன், செழும் கடல் புகுவேனே—நீர்ப் பெருக்கினையுடைய கடலினும் சென்று வீழ்வேனோ? (அதுவும் செய்யேன் என்றபடி) என்பது.

வி-ரை; இறைவன் உயிர்களுக்கு அருளும் மெய்ஞ் ஞானத்தை இறைவன் திருவடி எனக் கூறுதல் மரபு. அழிந்து ஒழியாதன என்னும் பொருள் தோன்ற, "ஓய்விலாதன" என அத் திருவடிகளின் இயல்பு கூறப் பட்டது. இங்ஙனம் கூறியது அனுமான அளவை பற்றி என்க. அனுமான அளவையின் உறுப்புக்கள் ஐந்தனுள், மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு என்னும் மூன்றும் சிறந்தனவாம். ஈண்டு மேற்கோள் இறைவன் திருவடிகள் அழிந்தொழியாத இயல்புடையன என்பது. அதற்கு ஏது, அத் திருவடிக்கு உரிய முதல்வன் என்றும் அழிவில்லாத வனாக இருத்தலின் என்பது. இதற்கு எடுத்துக் காட்டு வேண்டும். அழிவின்மையும் எங்கும் நிறைந்திருத்தலும் ஆகிய குணங்களுடைய கடவுளைப்பற்றிய செய்திக்கு, அப் பொருளின் நிறைவுக்கு உட்படாத பொருள் பிறி தொன்று இன்மையால், எடுத்துக் காட்டுக் காண்டல் அரிது. எடுத்துக் காட்டு இல்லாமல் இருப்பின், அளவை இலக்கணம் பிழைபடும். இத்தகைய இடங்களில் உடன் பாட்டு முகமாக எடுத்துக்காட்ட இயலாமையின், எதிர் மறை முகமாக எடுத்துக் காட்டுதலை மேற்கொள்வர் அளவை நூலார். இவற்றை முறையே அந்வய திருட் டாந்தம், வெதிரேக திருட்டாந்தம் என்பர் வடநூலார்,

இங்கே ஆண்டவனுடைய திருவடி ஞானத்திற்கு உடன் பாட்டு முகமாக எடுத்துக் காட்டுதற்குப் பொருள் இல்லாமையால், எதிர் மறை முகமாகக் கொண்டு, "உவமனில் இறந்தன" என்றார்.

ஒண்மை — ஞானம்; இறைவன் திருவடியைச் சிவ ஞான வடிவமாகச் சைவ நூல் கூறும். அத்தகைய உயர்ந்த திருவடி ஞானப் பேற்றிற்கு உரிய தகுதி ஒரு சிறிதும் இல்லாத கடையேன் என்பார், "நாயில் ஆகிய குலத்தினும் கடைப்படும் என்னை" என்றார். நாய்ப் பிறப்பினும் இழிந்த பிறப்புடையேன் என்று அடிக்கடி அடிகள் தம்மைக் கூறிக் கொள்ளுதலின் கருத்து இன்னது என்பது முன்னைத் திருப்பாட்டுகளில் விளக்கப்பட்டது. நன்மை எல்லாவற்றினும் சிறந்தது வீடு ஆதலின், அதற் குரிய நெறியை நன்னெறி என்றார். அஃது அன்பு நெறி யாகும். அறிவு நெறி முதலிய வேறு பல நெறிகளும் உள வேனும், அடிகள் சிறப்பாகக் கண்டது, பத்தி நெறியாகிய அன்பு நெறியேயாம். அந் நெறியைக் காட்டுதலாவது, அக முகமாக நின்று உணர்த்தி அவ்வழிப் படுத்தலாம். ஆண்டவன் அன்பர்பால் வைக்கும் அருளுக்கு, [1] "உயர்ந்த தன் மேற்றே உள்ளுங்காலை" என்னும் விதிப்படி உவமை கூறுதல் இயலாததொன்று ஆதலின், அதற்கு உலக நிகழ்ச்சியுள் சிறந்தது ஒன்றை எடுத்துக் காட்டுதல் பெரி யோர் கொள்கை. அவ் எடுத்துக் காட்டாவது, அறியாப் பருவத்து மழவிளங் குழவிபால் தாய் வைத்துள்ள அருட் குணமேயாம். அங்ஙனம் எடுத்துக் காட்டுங்கால், உறழ் பொருவும், உவமப் பொருவும் என்னும் இருவகையுள், உறழ் பொருவு பற்றியே கூறத்தக்கதாகும். காக்கையிற் கரிது களம்பழம் என்புழிக் காக்கையினும் கரிது என்பது உறழ் பொருவுக்கும், காக்கை போலக் கரிது என்பது உவமப் பொருவுக்கும் உதாரணங்களாம். ஈண்டுத் தாய் அருள் போன்ற அருள் என்பதை உறழ் பொருவாகக் கொண்டு, தாய் அருளினும் சிறந்த அருள் எனக் கொள்ளு தலே பொருத்தம் உடைத்தாம்.

---

1. தொல். பொருள், உவம இயல், சூ. 3.

அறக் கருணை, மறக் கருணை என்னும் இருவகையுள், இறைவன் தமக்குச் செய்தது அறக் கருணை என்பார், "இன்னருள்" என்றார். ஞானசிரியனாக எழுந்தருளி வந்து திருவடிக் காட்சி அளித்துத் தமக்கு நன்னெறி காட்டி இன்னருள் புரிந்த பெருமான் உருக்கரந்த நிலையில், அப் பிரிவு சிறு பொழுதாயினும், அதனைப் பொறாத அடிகள், அச் சிறு பொழுதைப் பெரும் பொழுதாக நினைந்து, இத் துணை நெடுங்காலம் கடந்தும் காணப் பெற்றிலேனே என்று இரங்குவார், "என் தலைவனை நனி காணேன்" என்றார். நனி என்னும் உரிச் சொல் காணுமைக்கு ஏது வாகிய கால மிகுதியைக் குறிக்கும். அருமருந்தன்ன ஆண்டவன் திருவடிக் காட்சி மறைந்த நிலையில் உயிர் வாழ்தல் தகாது எனக் கண்ட அடிகள், தம் உடம்பை மாய்த்துக் கொள்ளாமல் இருத்தல் பற்றிப் பெரிதும் கவல் கின்றார். துன்பம் பொறாத நிலையில் சாதற்குத் துணிவார், தீப் பாய்தல், வரையின் நின்றும் உருளல், நீரில் வீழ்தல் முதலிய உடற்கு அழிவுச் செயல்களை மேற்கொள்ளுதல் உண்டு. இங்கே கூறப்பட்ட மூன்றனுள், நீரில் வீழ்தற் குரிய மன வலியினும், வரையினின்றும் உருளுதற்குரிய மனவலி சற்று மிகுதியாகவும், தீப் பாய்தற்குரிய மனவலி அதனினும் சற்று மிகுதியாகவும் வேண்டும் என்பது ஊன்றி உணர்வார்க்குப் புலனும். அம் முறையில் தலைவன் பிறிவாற்றாமை பற்றித் தீப் பாய்ந்து இறத்தலே தக்க தாகவும், அச் செயலின் கடுமை நினைந்து அவ்வாறு செய் திலேன் ஆயினும், மலையினின்றும் உருண்டு வீழ்ந்து இறத்தல் வேண்டும்; அதற்கும் துணிவு தோன்ற வில்லை யாயினும், கடலில் ஆயினும் முழுகி இறத்தல் வேண்டும்; அதுவும் செய்திலேன் என்பார், "தீயில் வீழ்கிலேன் திண் வரை உருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே" என்றார். புகுவேனே என்புழி, ஏகாரம் எதிர்மறைப் பொருட்டு. நீரில் மூழ்குதற்கு நீர்ப் பெருக்கினையுடைய கடலைக் கூறி னார்; மூழ்கினார் உய்தி பெறுமைப் பொருட்டு. செழுங் கடல் என்புழிச் செழுமை, நீர்ப் பெருக்கு.

37-ம் திருப்பாட்டில், "பாத நன்மலர் பிரிந்திருந்தும்" என்றார்; பிரிந்த அணிமை தோன்ற. 38-ம் திருப்பாட்டில் பிரிந்த பின்னர் அணுகுதல் கூடுமே; நெடுங் காலமாகியும் அணுகப் பெற்றிலேனே என்னும் கருத்தால், "குறுகிலேன் நெடுங்காலம்" எனவும், இத் திருப்பாட்டில் காலம் மிக நெடிதாகியும் காணப் பெற்றிலேனே என்று இரங்குவார், "தலைவனை நனி காணேன்" எனவும் கூறினர். இம்முறை நினைந்து இன்புறத்தக்கது.

இதன்கண், அடிகள் தமக்கு நன்னெறி காட்டி இன்னருள் புரிந்த தலைவனது காட்சி இடையறாது நிகழ வேண்டும் என்று கருதுகின்றார் என்பது விளக்கமாதலின், அங்ஙனம் இடையறாத திருவடிக் காட்சியே உயிரின் தூய்மைக்கு இன்றியமையாதது எனப் பதிக நுதலிய ஆத்தும சுத்தி என்னும் பொருளும், தீப் பாய்தல் முதலியன கூறியிருத்தலின், வைராக்கிய விசித்திரம் என்னும் சதக நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

40. வேனில் வேள்கணை கிழித்திட
மதிகெடும் அதுதனை நினையாதே
மானி லாவிய நோக்கியர்
படிறிடை மத்திடு தயிராகித்
தேனி லாவிய திருவருள்
புரிந்தஎன் சிவனகர் புகப்போகேன்
ஊனில் ஆவியை ஓம்புதற்
பொருட்டினும் உண்டுடுத் திருந்தேனே.

க-ரை: ஆண்டவன் பிரிவில் தாம் அழியாமல் உயிர் வாழ்தல் குறித்து முன்னைத் திருப்பாட்டில் வருந்திக்கூறிய அடிகள், இத்திருப்பாட்டில் காமம் முதலிய பகைவருக்கங்களால் இடுக்கட்பட்டு உழலும் ஊனுடலைப் பேணுதற் பொருட்டுச் சிவனகர் புகுதற்கு உரிய செந்நெறிச் செலவைக் கைவிட்டிருக்கின்றேனே என்று மீண்டும் வருந்துகின்றார்.

ப-ரை: தேன் நிலாவிய திருவருள் புரிந்த என் சிவன்—தேன்போன்ற இனிய சுவையினையுடைய திருவருளை உதவியருளிய என் ஆண்டவனாகிய சிவபெருமானது, நகர் புகப் போகேன் — பொன்னகருட் புகுதற்குச் செல்லேனாய், வேனில்வேள் கணை கிழித்திட மதி சுடும் அது தனை நினையாது — இளவேனிற் கிழவனாகிய காமனுடைய மலரம்பு என் நெஞ்சைப் பிளந்திட அப்புண்ணில் திங்கட் செல்வன் சுடுகின்ற மாறுபட்ட அத்துன்ப நிலையையும் கருதாமல், மான் நிலாவிய நோக்கியர் படிறு இடை — மான்விழி போன்ற விழிகளையுடைய மகளிரின் வஞ்சகச் செயலின் கண்ணே, மத்து இடு தயிர் ஆகி—மத்திட்டுக் கடையப்படும் தயிரைப்போற் கலக்குண்டு, ஊனில் ஆவியை இன்னும் ஓம்புதற்பொருட்டு—ஊனுடலின் கண்ணே உயிரை நிறுத்தி இன்னமும் பாதுகாத்தற் பொருட்டு, உண்டு உடுத்து இருந்தேன்—நல்ல உணவுகளை உண்டும், நல்ல ஆடைகளை உடுத்தும் இதுகாறும் வாழ்ந்திருந்தேன் (என் அறியாமை இருந்தவாறு என்னே) என்பது.

வி-ரை: இறைவன் திருவருட் பேறு, தகுதியுடையார்க்கு அன்றி, அடைதற்கும் அனுபவித்தற்கும் அரியது. அங்ஙனம் அரிய அருளமுதை எளிமையும் இனிமையும் உடையதாக்கி, வலியவந்து இறைவன் தம்மை ஊட்டினான் என்பதே அடிகள் அநுபவத்திற் கண்டது. எளிமையில் இனிமைச் சுவை மிகப்பெற்றது குறித்தே, "தேனிலாவிய திருவருள்" என்றார். தேனின் எளிமை, ஆன் நெய், கருப்புக்கட்டி என்பவற்றோடு எண்ணப் பட்டுக் கிடந்த முன்னைத் திருப்பாட்டில் விளக்கிக் கூறப் பட்டுள்ளது காண்க. புரிந்த என்னும் சொல், விரும்பிச் செய்த என்னும் பொருட்டு. தம்மை அடிமையாகக் கொள்ளுதற்கு வலிய வந்து திருவருள் பாலித்த உரிமை தோன்ற, "என் சிவன்" என்றார். விரும்பி அளித்த திருவருள் தேனைப்போல் இனிமை சுரந்து இன்பம் பயந்து நிற்றலின், அதற்கேற்ப, முதல்வனை இன்பம் செய்பவன்

என்னும் பொருள் உடையதாகிய சிவன் என்னும் பெயரால் குறிப்பிட்டனர். சிவன் நகர் என்பது அழிவில் இன்பம் துய்த்தற்கு உரிய வீட்டு நிலையைக் குறிக்கும். புகப்போதல்—உட்புகுதற்கு உரிய செந்நெறிச் செலவை மேற்கோடல். போகேன் என்பது முற்றெச்சம்; செல்லாமல் என்னும் பொருட்டு. அஃது ஈற்றடியில் உள்ள இருந்தேன் என்னும் வினையைக் கொண்டு முடியும். பொன்னகர் புகப் போகாமல் இருந்தேன் என்புழி, இருத்தற்கு இடம் இம்மண்ணுலகம் என்பது போதரும்.

இனி, இம்மண்ணுலக வாழ்க்கையின் பயனைப் புலப் படுத்தத் தொடங்குகின்றார். வேள் இருவராதலின், செவ்வேளாகிய முருகனின் வேறுபட்டவன் என்பது தோன்றக் காமனை, "வேனில் வேள்" என்றார். காமன் கணையோ மெல்லிய மலர்களாகும். அம்மலர் அம்பினால் நெஞ்சம் பிளவு படும் என்றது, இவ்வுலக இன்ப நுகர்ச் சிக்கு உரிய கருவிகளின் வலியின்மையைப் புலப்படுத்தற்கு என்க. மலர் அம்பு கிழித்த புண்ணில் திங்கள் நிலவு சுடுகின்றதாம். அது, "புண்ணில் ஆம் பெரும் புழைக்கட் கனல் நுழைந்தாற்போல்" ஆயிற்று என்றபடி. மலரம்பு நெஞ்சத்தைப் பிளத்தலும், திங்கட் கதிர் சுடுதலும் இயற்கைக்கு மாறுபட்ட செய்திகளாம். உலக வாழ்க்கையின் நொய்ம்மை இத்தன்மைத்து என இந்நிகழ்ச்சிகளில் வைத்து நினைக்க வேண்டியது கடமையாகவும், அதனை நினையாமல் இருந்தேன் என்பார், "அது தனை நினையாது" என்றார். மலர் அம்பினால் ஊறுண்டு, திங்கட் கதிரினால் சூடுண்டு, ஆற்றாமை மிக்கு, மகளிரைத் தஞ்சம் அடைந்தேனாக, அந்நிலையில் அவர்தம் வஞ்சகச் செயலில் ஈடுபட்டு, மத்தினால் கடையப்பட்ட தயிர்போலக் கலக்குண்டேன் என்பார், "மானிலாவிய நோக்கியர் படிறிடை மத்திடு தயிராகி" என்றார். மான் நிலாவிய நோக்கியர் என்றது, ஆடவர் நெஞ்சத்தையும் நிறையையும் கவரும் கருவியாகிய நோக்குடையார் என்னும் பொருட்டு. [1] "நெஞ்சமும்

[1]. சீவக சிந்தாமணி 1024.

நிறையும் நீல நெடுங்கணுற் கவர்ந்த கள்வி" என்னும் சிந்தாமணி நூலுடையார் கருத்தும் ஈண்டு நினைக்கத் தக்கது. ஊறுபாடும் சூடும் பொருது புகலடைந்த நிலையில் மதிமயங்கி மகளிர் இட்டதே சட்டமாக அவர் தம் மாயச் செயலிற் சிக்கி, உய்திபெற முடியாத நிலையில் கலக்குண்ட செய்தியை, "மத்திடு தயிராகி" என்பதனுற் புலப்படுத்தார்.

இத்துணைத் துன்ப நிலையிலும் இன்பம் உண்டெனக் கருதி, அழியும் இயல்பினதாகிய ஊனுடம்பின் கண்ணே, அழிவு இலதாகிய உயிரை வைத்துப் பாதுகாக்கக் கருதினேனே என்பார், "ஊனிலாவியை ஓம்புதற்பொருட்டு" என்ருர். அறிவு வடிவம் ஆகிய உயிரை ஓம்பல்வேண்டுமாயின், முற்றறிவினனுகிய இறைவன் திருவடி நீழலில் இயைதற்கு முயலல் வேண்டும். உயிர்க்கு உண்மைப் பாதுகாப்பு அதுவேயாகும். அதனை விட்டு, ஊனில் ஆவியை வைத்து ஓம்ப நினைப்பது, பசு மட்குடத்தைப் பற்றி, நீர் கடக்க முயல்வது போலாம் என்பது. ஆண்டவன் திருவருட்பதிவு ஒரு சிறிதும் இல்லாத நிலையில், ஊனில் ஆவியை ஓம்புதல் ஓராற்ருற் பொருந்துவதாகும். தேனிலாவிய திருவருள் புரிந்த பின்னரும் அங்ஙனம் ஓம்ப நினைக்கின்றேனே என்பார், "இன்னும் ஓம்புதற் பொருட்டு" என்ருர். உண்ணலும் உடுத்தலுமே இவ்வுலக வாழ்க்கையிற் கண்ட சிறந்த செயல்களாகும். "உண்டுடுத்திருந்தேனே" என்று கழிந்ததற்கு இரங்கிஞர்; இனியாவது சிவனகர் புகப்போதற்கு உரிய தவச்செயலில் தலைப்படுதற்கு உரிய நல்லூழ் வாய்க்கமாட்டாதா என்னும் குறிப்புத் தோன்ற. சிவன் நகர் புகப்போகாமல், அதுதனை நினையாமல், மத்திடு தயிராகி இன்னும் ஓம்புதற் பொருட்டு உண்டுடுத்திருந்தேனே என முடிக்க.

இதன் கண், சிவன் நகர் புகப் போதற்கு உரிய தவத்தை விடுதலும், ஊனுடல் ஓம்புதல் பொருட்டு உயிர் வாழ்ந்திருத்தலும் தகாத செயல்களாம் என்று கூறியிருத்தலால், சிவனகர் புகுதற்கு உரிய தவச் செயலே

உயிரின் தூய்மைக்கு வேண்டற்பாலது என்பதும், மத்திடு தயிர் போலக் கலக்குண்டு ஊனில் ஆவியை ஓம்புதல் வெறுக்கத் தக்கது என்பதும் பெறப்படுதலின், முறையே ஆத்தும சுத்தி என்னும் பதிகம் நுதலிய பொருளும், வைராக்கிய விசித்திரம் என்னும் சதக நுதலிய பொருளும் புலனுதல் அறிக.

# 5. கைம்மாறு கொடுத்தல்

கைம்மாறு கொடுத்தல் என்பது ஓர் உதவி செய்தார்க்குப் பிரதியாக உதவுதல் என்னும் பொருளதாம். முன்னைப் பதிகத்தில் உயிரினது தூய்மைக்கு வேண்டுவன கூறப்பட்டன. மன மொழி மெய்களாகிய முக் கரணங்களும் இறை பணியில் ஈடுபட வேண்டும் என்பதும், அவற்றுள்ளும் உள்ளப்பணி மிக இன்றியமையாதது என்பதும் கூறப்பட்டன. அங்ஙனம் இறை பணியினால் வினை மாசு நீங்கித் தூய்மை எய்திய தமக்கு, ஆண்டவன் ஞானாசிரியனாக எழுந்தருளி, வெளிப்பட்டு, ஞானத்தை உணர்த்தி, இன்பமயமாகிய தன் அருளமுதத்தைத் துய்ப்பித்தனாக, அப் பெருமான் திருவடிக் காட்சியில் ஈடுபட்டு, மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்திருந்த நிலையில், பண்டை வினைத் தொடர்பால் ஒரோவமயம் அவ் இன்பக் காட்சி மறைந்தும் வெளிப்பட்டும் நிகழா நிற்ப, மறைந்த நிலையில், அப் பிரிவாற்றாது, தம் உடலையே வெறுத்து வருந்திக் கூறிய செய்தியும் முன்னைப் பதிகத்திற் கண்டாம். பின்னர், வரம்பிகந்த இனிய அருள் அமுதை யூட்டிய வள்ளற் பெருமானுக்குத் தாம் செய்யும் கைம்மாறு யாதென ஆராய்ந்து கொடுக்கக் கருதினாராக, பேரின்ப வள்ளலாகிய இறைவன், அவ் வின்ப மயமாகிய தன்னையே அடிகளுக்கு வழங்கினனானால், அதற்குக் கைம்மாறாக அடிகளால் வழங்கத் தக்கது யாதுள்ளது? அடிகளுடைய உடல், பொருள், ஆவி மூன்றும் ஆண்டவன் உடைமைகளே. கைம்மாறு கொடுத்தல் என்றால், கொடுக்கப்படுவது கொடுப்பவனுடைய உடைமையாக வன்றோ இருத்தல் வேண்டும்? கொடுப்பவராகிய அடிகளுக்கு என ஏதும் இல்லாத நிலையில், கைம்மாறு கொடுக்க வேண்டும் என்று அடிகள் கருதுதற்குக் காரணம் என்னையெனின், திருவடிக் காட்சியினின்றும் பிரிவு நேர்ந்தபொழுது, அப்பெருமான் உதவிக்கு ஈடாக ஏதும் செய்யாமல் இருக்கலாமா?

செய்ய வேண்டியது கடமையென, அன்பு மேலீட்டால் சிறிது உயிர் முனைப்புப்பற்றி எழுந்த எண்ணமேயாம் என்க. பின்னர், மீண்டும் காட்சியில் ஈடுபட்டு, அம் முனைப்பும் ஒடுங்கிய நிலையில், தம் உடல், பொருள், ஆவி யெல்லாம் அவனுடைமை என்னும் உண்மையை உணர்ந்து [1] "தந்ததுன்றன்னைக் கொண்ட தென்றன்னைச் சங்கரா யார்கொலோ சதுரர்" என்று அருளியபடி, கைம்மாறாக ஏதும் கொடுக்க இயலாதென்னும் உண்மை அநுபவம் கைவரப் பெறுவர். இவ் வுண்மை அநுபவ நிலையிலே, தாயுமான அடிகளும், [2] "சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்ற வுன்னைத், தந்த வுனக் கென்னையு நான் தந்தேன் பராபரமே" என்று அருளிச் செய்வாராயினர். இவ் வுண்மை அநுபவத்திற்குச் சிறிது முற்பட்ட நிலையே கைம்மாறு கொடுத்தற்கு உரியதாகும். இறைவனது இன்ப அருள் அமுதை ஒரோவழி யுண்டு, பிரிவு நேர்ந்த பொழுது இங்ஙனம் கருதுதல் அன்பு மேலீட்டால் ஆவதாகும். பிரிவு நேர்தற்கு அடிகளுடைய பண்டை வினைத் தொடர்பு ஓரளவு காரணமாயினும், இறைவன் தன் அருளமுதின் நுகர்ச்சியில் அடிகளுக்கு மேன் மேலும் ஆர்வம் விளைவிக்க வேண்டு மென்னும் திருவுள்ளக் குறிப்பே சிறந்த காரணம் ஆகும் என்பது.

41. இருகை யானையை யொத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெவ்வமே
வருக என்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்பன் உண்ணவே.

க-ரை: இதன் முன்னைப் பதிகத்து இறுதித் திருப் பாட்டில் ஆண்டவன் பிரிவில் ஊனுடலைப் பேணுதலையும், செந்நெறிச் செலவைக் கைவிட்டிருக்கின்றமையையும் கருதி வருந்திய அடிகள், அந்நிலையில் முன்னர் ஞானாசிரியனாகி எழுந்தருளி, உண்மைப் பொருளை உபதேசித்துத் திருவடிக் காட்சி யளித்து இன்புறுத்திய இறைவனது

1. திருவாசகம், கோயில் திருப்பதிகம் 10 2. தாயுமானவர்.

பெறற் கரும் பேருதவியை நினைந்தும், அதற்குக் கைம் மாருக எதனைக் கொடுக்கலாம் என்று ஆராய்ந்தும், அப் பேருதவிக்குத் தகுதியான கைம்மாறு கொடுத்தற் குரிய ஆற்றல் தமக்கு இல்லாமையை எண்ணியும், இறைவனை உண்முகமாக முன்னிலைப் படுத்து, இப் பதிகத்தின் தொடக்கத் திருப்பாட்டாகிய இதன்கண் அருளிச் செய்கின்ருர்.

ப-ரை: வான் உள்ளோர்க்கு ஒருவனே—வானுலகத்துள்ள அமரர்க்கு ஒப்பற்ற முழு முதலே, யான் இருகை யானையை ஒத்து இருந்து—நான் இரண்டு கைகளையுடைய யானையை ஒத்து • உயிர் வாழ்ந்திருந்து, என் உள்ளக் கருவைக் கண்டிலேன் — என் உள்ளத்தின் உள்ளே விளங்கும் மூலப் பொருளாகிய நின்னை நோக்கி உணர்ந்திலேன், கண்டது எவ்வமே—யான் கண்டது துன்பத்தையே, வருக என்று பணித்தனை — அங்ஙனமாகவும் திருவடிக் காட்சி நல்கி வருக என்று கட்டளை இட்டனை, கிற்றிலேன் — அக் கட்டளைப்படி வருவதற்கும் அது குறித்துக் கைம்மாறு கொடுத்தற்கும் ஆற்றல் இல்லாதவனுயினேன், உண்ணக்கிற்பன்—மீண்டும் பொறி வழிப் புலனுகர்ச்சியில் தலைப்படுதற்கு ஆற்றல் உடையவனுகின்றேன் என்பது.

வி-ரை: இறைவன், விண் மண் பாதலம் என்னும் மூன்றிடத்துள்ளார்க்கும் ஒத்த தலைவனே யாயினும், அம் மூவிடத்தும் உள்ளார் முறையே புண்ணியப் பயனையும், புண்ணிய பாவப் பயனையும், பாவப் பயனையும் நுகரும் இயல்பினராதலின், அன்னுர் தகுதிக் கேற்பத் தன் இயல்பைப் புலப்படுத்து விளங்குவன் என்பது பெரியார் அநுபவத்திற் கண்டது. இவ் வுண்மையை, [1] "விண்ணேர் முழு முதல், பாதாளத்தார் வித்து, மண்ணேர் மருந்து" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியிருத்தலும் அறிக. அமரர் தொகுதியுள் தன்னையும் ஒரு தலைவனுகக் காட்டி, அன்னுர் புண்ணியப் பயனுக்குக் காட்சி யளித்து

1. திருவாசகம், திருத்தெள்ளேணம் 19.

விளங்குதல் பற்றி, "வானுளோர்க்கு ஒருவனே" என்றார். விண்ணோர் முழு முதல் என்றதும் இக் கருத்துப் பற்றியே. புண்ணியப் பயனுக்கு அணுக்கங் காட்டிய அருட் குறிப்பை உணராத நிலையில், அவ் வமரர்க்கும் அறியப் படாதவன் ஆவான் என்பதை, [1]"தேவர் கோ வறியாத தேவதேவன்" என்னும் பாடற் பகுதியால் விளக்கி யிருத்தலும் அறிக.

இருகையானை—இல் பொருளுவமை. ஒரு கையினால் மிகுதியான உணவை வாரி வாரி விழுங்கி, உலகத்தில் உள்ள எல்லாப் பிராணிகளிலும் மிகுதியாக உடல் பருத் திருப்பது யானை. ஒரு கை யுடைய அவ் யானையினும் சிறக்க, உடற்கு வேண்டிய உணவுப் பொருள்களை ஈட்டி, உண்டு, செருக்குற்று இருக்கின்றமையால், யான் இரண்டு கைகளையுடைய யானையை ஒப்பாவேன் என்பது தோன்ற, "இருகை யானையை ஒத்திருந்து" என்றார். அத்துணை உடற் பருமைக்கு வேண்டும் உணவு முதலியவற்றை நல்கித் தன்னைப் பாதுகாக்கும் பாகனது நன்றியை ஒரு சிறிதும் நினையாமல், யானை அப்பாகனுக்கே கேடுவிளைக்கும் இயல்பினதாகும். [2]"யானை யனையவர் நட்பொரீஇ நாயனையார், கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்— யானை, அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்பது நீதி நூல். ஆண்டவன், தன்னை வழிபடுதற்கு உதவிய உடலை, அந் நெறியிற் பயன் படுத்தாமலும், அப் பெரு மானது நன்றியை மறந்தும், ஆக்கைக்கே இரை தேடி அலமந்திருத்தலின், இருகை யானைக்குத் தம்மை ஒப்பிட்டுக் கூறியருளினர். இனி, யானையை ஒத்திருந்து கண்டிலேன் எனக் கூட்டி, யானை தன் உடலை அறியாதது போல், யான் உள்ளக் கருவைக் கண்டிலேன் என்பது கருத்து எனக் கூறுவாரும் உளர். வாழ்க்கையின் சிறந்த குறிக் கோளாகிய கடவுட் காட்சியைப் பெறாது, வறிதே உடலோம்பியிருக்கின்றேன் என்பார், "இருந்து" என்றார். "உள்ளக் கரு" என்றது, உயிர்க்கு உயிராக விளங்கும்

1. திருவாசகம், திருச்சதகம் 30. 2. நாலடியார் 213.

முதல்வனைக் குறிக்கும். கரு — காரணம். உலகிற்கு இறைவன் நிமித்த காரணன் ஆதலின், "கரு" என்னும் சொல்லால் குறிக்கப் பட்டான். நிமித்த காரணனாய், உயிர்க்கு உயிராக நின்று பாசக் கட்டை ஒழித்துப் பேரின்பம் நுகர்விக்கும் முதல்வனது பேருதவியை நினைந்து வழிபடுதலே உயிரால் செய்யத் தக்கது. அங்ஙனம் செய்யாது, புலன்களின் நுகர்ச்சியில் பெரிதும் ஈடுபட்டு, உடல் ஓம்புதலையே குறிக்கோளாகக் கொண்டேன் என்பார், "என்னுள்ளக் கருவை யான் கண்டிலேன் கண்டது எவ்வமே" என்றார். "கண்டிலேன்" என்றது, உதவியை நினைவு கூர்ந்திலேன் என்னும் பொருட்டு. "எவ்வம்" என்றது, இன்பம்போற் காட்டித் துன்பமாக முடியும் புலன் நுகர்ச்சிகளை. அவ் எவ்வத்தைக் காண்ப தாவது, அந்நுகர்ச்சிகளையே பொருளென மதித்து மேற் கொள்ளுதல். யானை, தன்னை நன்னெறிப் படுத்தும் பாகன் உதவியை நினைவு கூராது, அவனைத் துன்புறுத்தி மதச் செருக்கால் புலன் நுகர்ச்சிகளில் தலைப்படுதல் போல, தனக்கு மூல காரணனாக நின்று, பேருதவி புரியும் இறைவன் அருள் திறத்தை நினைவு கூராது, அவனுக்கு இடனாய உள்ளத்தைப் பொறி வழிப் போக்கி, இன்ப மெனக் காட்டித் துன்பமாக முடியும் புலன்களில் தலைப் படலானேன் என்பது இவ் விரண்டு அடிகளானும் பெறப் படும் கருத்தாம் என்க. தம் உள்ளத்தைப் பற்றி நிற்கும் இறையருளை நினையாமல், அவ் வுள்ளத்தைத் தீய வழிகளில் செலுத்தும் கொடியவன் என்று தம் இயல்பை அறிந்தும், வெறுத்து, இன்பமயமாக வுள்ள தன் பக்கலை அணுகுமாறு ஞானாசிரியன் வடிவமாக எழுந்தருளிக் கட்டளையிட்ட பெருமையைப் புலப்படுப்பார், "வருக என்று பணித்தனை" என்றார். [1] "வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான் கருணை" என்று பிறிதோரிடத்து அடிகள் அருளிச் செய் ததும் அறிக. பணித்தல்—கட்டளையிடுதல். "வருக" என்னும் வியங்கோட் சிறப்பால், இறைவன் மெய்யன்பர் மாட்டு வைத்திருக்கும் பெருங் கருணைத்திறம் புலனாம்.

1. திருவாசகம், திருக்கோத்தும்பி 4.

"கிற்றிலேன்" என்னும் சொல், ஆற்றலை உணர்த்தும் கில் என்னும் இடைச் சொல் அடியாகப் பிறந்த எதிர்மறை வினை முற்று. "கிற்பன்" என்பது அங்ஙனமாய உடன்பாட்டு எதிர்கால வினை முற்று. ஒருவன் தனக்கு நலம் செய்வான் ஒருவனை வெறுத்துத் தீங்கு செய்பவனை அறியாமையாற் பின்பற்றி, அலைந்து திரிந்து பயன் ஒன்றும் காணமல் துன்புற்று, மீண்டும் அந் நலம் புரிவோனை அணுகுதற்கு நாணி ஒதுங்கிச் சேறல் உலகியலிற் கண்டது. அங்ஙனம் ஒதுங்கிச் செல்வோனை, அந் நல்லோன் கண்டுழித் தன் கருணையால் தான் அவனுக்குச் செய்யத் தக்க உதவியைக் குறிக் கொண்டு, "வருக" என்று அழைத்தல் போல, தன்னை நினையாதிருந்த என்னை நலஞ் செய்வான் திருவுளங் கொண்டு இறைவன் அழைத்தனன் என்பது, "வருக" என்னும் சொல்லால் பெறப்படுவதாகும். அங்ஙனம் பேரானந்தப் பெருஞ் செல்வத்தை அருளுதற் பொருட்டு வலிந்து, "வருக" என்று பணித்த பேருதவிக்குக் கைம்மாறு யாது செய்ய வல்லேன்; ஏதும் செய்தற்கு ஆற்றல் இல்லாதவனாக உள்ளேன் என்பார், "கிற்றிலேன்" என்றார். இனி, அங்ஙனம் வலிந்து அழைத்தும்,அப் பேரானந்தப் பெருஞ் செல்வத்தை அடைதற்கு அணுக ஒருப்பட்டிலேன் என்பார், "கிற்றிலேன்" என்றார் எனினுமாம். கிற்றிலேன் என்பது, ஆற்றல் இல்லேன் என்னும் பொருள் பயக்குமாயினும், ஈண்டு, இலக்கணைச் சொல்லாக நின்று, வருதற்கு உடன்பட்டிலேன் என்னும் பொருள் பயந்து நிற்பதாகும். இறைவன் திருவருள் அமுதத்தை உண்ணுதற்கு ஒருப்படாமல், உடலோம்பி, இழிந்த பொறி இன்பங்களை நுகர்தற்கு ஆற்றல் உடையேனாக இருக்கின்றேன் என்பார், "உண்ணவே கிற்பன்" என்றார். ஏகாரம் தேற்றப் பொருட்டு. ஈண்டு உண்டல், இழிந்த போகங்களை நுகர்தல். உள்ளக் கருவைக் கண்டு, அக் கருவின் வழி நின்று, அழிவில் இன்பம் நுகராமல் துன்பம் தரும் பொருள்களில் தலைப்பட்டு, அழியும் இயல்பினவாகிய இன்பங்களை நுகரத் தலைப்படுகின்றேன்; என் அறியாமை இருந்தவாறு என்னே! என்பது கருத்து.

இதன்கண், "என்னுளக் கருவையான் கண்டிலேன்" என இறைவனைத் தாம் நினையாதிருந்த நிலையிலும், 'வருக' என்று பணித்த பேருதவிக்குக் கைம்மாறு செய்யும் கடப்பாடு உடையனாக இருந்தும், அதற்கு ஆற்றல் இல்லாதவன் ஆயினேன் என்பதனால், **கைம்மாறு கொடுத்தல்** என்னும் பதிகம் முதலிய பொருளும், "என்னுளக் கருவை," "வானுளோர்க்கு ஒருவனே" என்பவற்றால் **பத்தி விசித்திர மாகிய** சதகம் முதலிய பொருளும் புலனாதல் அறிக.

42. உண்டோர் ஒண்பொருள் என்றுணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி யென்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் தம் உயிர்க்கு உயிராக விளங்கும் ஆண்டவனை நினையாதிருந்தும், வருக என்று பணித்த அருள் திறத்தைப் பாராட்டிய அடிகள், இத் திருப்பாட்டில் அவ் இறைவன் தன் கட்டளைப்படி வாராதிருந்த என்பால் தானே வந்து, பிறர்க்கெல்லாம் இப்படியன் என்று உணரவொண்ணாத தன் உண்மைத் தன்மை இயல்பு காட்டிக் காட்சியளித்த பேருதவியைப் பாராட்டுகின்றார். முன்னைத் திருப்பாட்டில், "வருக என்று பணித்தனை" என்பதும், அக் கட்டளைப்படி வாராமையால், இத் திருப்பாட்டில் தானே வந்து தோன்றினான் என்பதும் ஆகிய இயைபு கருதத்தக்கது.

**ப-ரை:** ஓர் ஒண் பொருள் உண்டு என்று உணர்வார்க்கு எல்லாம்—ஒரு சிறந்த முதற் பொருள் அழிவிலதாக உள்ளது என்று பொதுவகையில் உணரும் அன்பர்களுக்கெல்லாம், பெண்டிர் ஆண் அலி என்று அறிய ஒண்கிலை—அப்பொருள் பெண்ணென்றாதல் ஆணென்று ஆதல் அலியென்றாதல் இன்னது எனத் துணிந்து அறிய முடியாத நிலையில் உள்ளாய், தொண்டனேற்கு—அடிமையாகிய எனக்கு, உள்ளவா வந்து தோன்றினாய்—உண்மைத் தன்மை இருந்தபடி எழுந்தருளி வந்து காட்சி

தந்து அருளினாய், கண்டும் கண்டிலேன்—அங்ஙனம் அருளிய உண்மை இயல்பைக் கண்டுவைத்தும் காணாதவன் ஆயினேன், என்ன கண்மாயம்—ஈதென்ன கண் மயக்கமோ? என்பது.

வி-ரை: "ஓர் ஒண் பொருள்" என்புழி, ஓர் குறுகி நின்றது. தனக்கு ஒப்பதும், மிக்கதும் பிறிதொன்று இல்லாத பரம் பொருள் என்பது தோன்ற, "ஓர் ஒண் பொருள்" என்றார். ஒருமை தனிச்சிறப்பையும், ஒண்மை, இயற்கை உணர்வினன் ஆதல் முதலிய எண் குணங் களையும் குறிப்பனவாம். இவ்விரண்டு அடைமொழிகளும் முதற் பொருளின் சிறப்பியல்புகளை நன்கு புலப்படுத்து நிற்றல் அறிக. ஓர் உயிர், இழிந்த பல பிறவிகளினின்றும் நல்வினைப்பயன் காரணமாக, மேன்மேற் சென்று அரிதின் அடைந்த மக்கட் பிறப்பில், "தெய்வம்" என்பதோர் சித்தம் உண்டாகப் பெறுதல் அரிது. இது குறித்தே, "தெய்வம் தெளிமின்" என்பது சிலப்பதிகார முடிவுரை. மக்கள் முதலிய உயிர்த் தொகுதிகளின் ஆற்றலினும் எத்துணையோ சிறந்த ஆற்றலின் விளைவைக் காணுங்கால், இது கடவுள் தன்மை என்னும் முடிவுக்கு வருகின்றோம். அந்நிலையில் அக் கடவுள் இயல்பை நூல் வாயிலாக அறிந்து, அநுபவ வாயிலாக உணரத்தலைப்படுவார்க்கு, அக் கடவுட் பொருள் ஒன்றாகவும், இயற்கை உணர்வு முதலிய அருட் குணங்களுடையதாகவும் தெளியப்படும். தெளிந்த பின்னர், அப் பரம்பொருளின் உண்மைத் தன்மை, அகக் காட்சிக்கும், புறக் காட்சிக்கும் ஒத்த நிலையில் எங்ஙனம் அறியப்படும் எனின், அது மாற்ற மனங்கழிய நின்ற நிலையாதலின், மெய்யுணர்விற்கு நேர்படுவதல்லது வேறு வகையான் உணர்தற்பாலதன்று.

பின்னர், "பெண்டிர் ஆண் அலி" என்று அறிய முடியாதது என்றதற்கு ஏற்ப, "பொருள்" என்னப் பட்டது. இங்ஙனம் முதற்பொருள் ஒன்று உண்டு என்று தெளிந்தார் சிலராக, அன்னாரும் அத்தகைய காட்சிப்படும்

நிலையில் பெண்ணென்றுதல், ஆணென்றுதல், அலியென்று ஆதல் அறிய வொண்ணுத தன்மை உடையயாய் உள்ளாய் என்பார், "பெண்டிர் ஆணலி யென்றறி யொண்கிலை" என்றுர். இறையருள் பெற முயல்வார்க் கெல்லாம், அருள் வடிவினளாகிய அம்மையை முதலில் வழிபட்டு, அவள் காட்ட, அப்பனைக் காண்டல் முறையாகும். கேநோபநிடதத்தில், இயக்க உருவம் தாங்கி வந்த இறைவனை, இந்திரன் முதலியோர் அறியாமல் மயங்கி நிற்புழி, உமையம்மையார் தோன்றி, அது பரம் பொருள் என்று தெளிவுறுத்திய செய்தியும் இதனை வலியுறுத்துவதாகும். [1] "அவனருளாலே யவன்தாள் வணங்கி" என்பதும் அது. இங்ஙனம், இன்ன தன்மையன் என்று அறிய முயல்வார்க்கு, முதற் குறிப்பு அம்மையைப்பற்றி நிகழும். ஆதலின் முதலிற் "பெண்டிர்" எனவும், அடுத்து, "ஆண்" எனவும் கூறப்பட்டன. உலகம், அவன், அவள், அது எனும் முக்கூற்றதென்ப. உயர் திணை ஆணும், பெண்ணும் அல்லாத அஃறிணைப் பொருளை, "அது" என்பது புலப்படுக்கும். அவ்வுல கெலாம் ஆகி நிற்கும் இறைவன், அம் முக்கூற்றுள் யாதன்பாற் படுவன் என்று ஆராய்வார்க்கு, அவற்றுள் ஒன்றன்பாற் படுபவன் அல்லன்; அவ்வெல்லாமாய், அல்லதுமாய் விளங்குபவன் என்னும் உண்மை பெறப் படும். அம் முக்கூற்றுள் அஃறிணைக்குத் தனியே ஒன்றை எடுத்துக் காட்டாமல், அலியைக் கூறியது ஒரு நயம் கருதி என்க. அலி, ஆண் தன்மையும் பெண் தன்மையும் திரிந்த உருவமாகும். இதனைத் தன்மை திரிபொருள் எனக்கொண்டு, பொருள் வகையான் உயர்திணைக் கண்ணும், சொன் முடிவால் அஃறிணையுள்ளும் அடக்கிக் கூறுவர் [2] "தொல்காப்பியனுர். இதனுல், அலி உயர் திணையாகவும் அஃதல்லாததாகவும் நிற்கும் என்பது பெறப்படும். இங்ஙனமே எல்லாமாய் அல்லதுமாய் நிற்கும் இறை இயல்புமாம் என்பது புலப்படும் என்க.

1. திருவாசகம், சிவ புராணம், அடி 18.
2. தொல். சொல், சூ. 56, சேனுவரையர் உரை.

இது கருதியே, [1] "பெண்ணாகி ஆணாய் அலியாய்" எனப் பலவிடத்தும் அலியை இயைத்தே அடிகள் கூறியருளினார் என்க. இம்முறை பிறழ்ந்தும் ஒரோவழிக் கூறுவர்; கருத்து வேறுபாடு கண்டு.

ஓர் ஒண்பொருள் உண்டு என்று அறியும் அறிவு கைவரப்பெறுதலே அரிது. அங்ஙனம் பெற்றார்க்கும் நின் உண்மைத் தன்மை இன்னது என வரையறுத்துத் தெளிதற்கு உரிய நிலையில் காட்சிப்படுவாய் அல்லை என்பார், "என்று அறியொண்கிலை" என்றார். அறிய என்னும் செயவென் வாய்பாட்டு வினையெச்சத்து ஈறு தொக்கு, "அறியொண்கிலை" என்றாயிற்று. இங்ஙனம் முற்றறிவு முதலிய குணங்களும், தனிமைச் சிறப்பும் உடைய கடவுட் பொருள் ஒன்று உண்டு என்று அறியும் தத்துவ ஞானிகளுக்கும், பெண், ஆண், அலியென்னும் இக்கூறுகளில் வைத்து இன்னதென்று அறியவொண்ணாத நீ, சிற்றறிவுடைய தொண்டனாகிய எனக்கு நின் உண்மைத் தன்மை இன்னதென உள்ளவாறு காட்டி வெளிப்பட்டு அருளினை என்பார், "தொண்டனேற்குள்ளவா வந்து தோன்றினாய்" என்றார்.

முன்னைத் திருப்பாட்டில் குறிப்பிட்டபடி, "வருக" என்று அருளா நிற்பவும், அக்கட்டளைப்படி செல்லா திருந்த அக்குற்றத்தையும் பொறுத்து, ஆண்டவன் தானே தமக்கு வலிய வந்து காட்சியளித்தனன் என்பார், "வந்து தோன்றினை" என்றார். இஃது அருமையில் எளிய அழகு களில் ஒன்றாகும் என்பது கருத்து. அடிகள் தம்மைக் குறிப்பிடுங்கால், "அடியேன்", "தொண்டன்" என்று கூறிக்கொள்வதிலே பெரிதும் விருப்பம் உடையவர் என்பது வெளிப்படும். ஆண்டவன் கட்டளை வழி நிற்பதல்லது, அடிமைக்கு என யாதும் இன்மையாலும், [2] "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு

---

1. திருவாசகம், திருவெம்பாவை 18.
2. திருவாசகம், குழைத்த பத்து 7.

நாயகமே" என்று எல்லாப் பொறுப்புக்களையும் விட்டுச் சுமை நீங்கி, இறையருள் வழி நின்று அமைதிபெறுதற்கு அவ்வடிமையே சிறந்ததொன்று ஆகலானும், திருத் தொண்டில் உறைத்து நிற்பாராயினர். [1]"மறைத்திற நோக்கி வருந்தினர்க் கொளித்தும், இத்தந்திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்கு, அத்தந்திரத்தின் அவ்வயின் ஒளித்தும்" என்றபடி, மறை ஆகமங்கொண்டு காண முயல்வார்க்கு, இறைவன் தன் இயல்பைப் புலப்படுத்தாமல் இருக்கலாம்; அன்னார் நூலறிவிற் செருக்குற்று இருக் கின்றமையின். மெய்த்தொண்டர்க்கு உண்மைத் தன்மை மறைக்கப்படுமாயின், அந்நிலையிற் காட்சிப்படுவதையே ஆராயாமற் கடைப்பிடிப்பர் ஆதலானும், அஃது இறை யருள் இயல்பிற்குக் குறையாகும் ஆதலானும், உள்ளபடி காட்சிப்படுதலே அருள் உருவினர்க்கு முறையாகும் ஆதலானும், அவ்வாறு தமக்குக் காட்சிதந்து வெளிப்பட்ட பேருதவியை நினைந்து, "தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாய்" என்றார். உள்ளவாறு தோன்றுதல் —எல்லாமாய் அல்லதுமா யிருக்கும் தன் உண்மைத் தன்மை புலப்பட ஞானாசிரியனாக வெளிப்பட்டு அருளுதல். அங்ஙனம் காட்சி அளித்து ஞானோபதேசம் செய்த பரமபதி, ஆண்டே மறைந்து நிற்ப, அதுகண்டு வருந்திய அடிகள், "கண்டுங் கண்டிலேன்" என்றார். கண்ணிழந் தவன் முன்னைத் தவத்தால் அதனைப் பெற்று மீண்டும் இழந்ததுபோல, பண்டை நல்வினைப் பயனாக ஞானாசி ரியனாக இறைவன் வெளிப்பட்டு அருளப்பெற்ற அடிகள், அக்காட்சி கரந்தபொழுது துடிதுடித்துக் கதறியழுதார் என்பது, [2]"என் தலைவனை நனிகாணேன், தீயில் வீழ்கி லேன் திண்வரையுருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே" என்பது முதலிய பாடற் பகுதிகளால் அறியலாம். அரிய பொருளைப் பெறாத நிலையில் ஏற்படும் வருத்தத்தைவிடப் பெற்று இழந்த நிலையில் ஏற்படும் துன்பம் பெரிதாகுமாத லின், "கண்டுங் கண்டிலேன்" என்று தம் துன்ப மிகுதி யைப் புலப்படுத்தார் என்க.

1. திருவாசகம், திருவண்டப் பகுதி 130. 2. திருவாசகம், திருச்சதகம் 39.

இறைவன் காட்சியில் ஈடுபட்டுத் திளைத்துக் கொண்டிருக்கும் பொழுதே அது கரந்ததாகலின், "என்ன கண்மாயமே" என்றார். கண்மாயம்—கண்கட்டு வித்தை. இல்லாத ஒரு பொருளை இருப்பதாகக் காட்டியும், கண்ட பொருளைக் காணாவாறு செய்வதும் கண்கட்டு வித்தை என்பர். அங்ஙனமே, காண்டற்கு அரிய பொருள் காட்சிப்பட்டுக் கிடைத்ததும், கிடைத்தது உடனே மறைந்ததும் ஆகிய அந்நிகழ்ச்சியைக் குறித்து, "என்ன கண்மாயமே" என்றது பொருத்தமே. அன்றிக் கண் மாயம் என்பதற்குக் கண் மயக்கம் எனக் கொண்டு, என் கண் மயக்கம் இருந்தவாறு என்னே யென்றலுமாம். ஈண்டு, இறைவன் அழிவில்லாத பொருளாதலால், அவன் காட்சி மறைதற்குத் தம் அகப்புறக் கண்களின் குற்றமே காரணமாகலாம் என்பது கருத்து.

இதன்கண், "தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாய்" என்றதனால், இப் பேருதவிக்கு யான் செய்யுங் கைம்மாறு காணேன் என்பது பெறப்படுதலின், **கைம்மாறு** கொடுத்தல் என்னும் பதிக நுதலிய பொருள் புலனாதல் அறிக.

43. மேலை வானவ ரும்அறி யாததோர்
கோல மேயெனை யாட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேயிவை வந்துபோங்
கால மேயுனை யென்றுகொல் காண்பதே.

**க-ரை:** இப்பதிகத்தின் முதல் திருப்பாட்டில் இறைவன் "வருக" என்று பணித்தனனாக, அக்கட்டளையின் அருமைப் பாட்டைப் பொருட்படுத்தாதிருந்ததற்குத் தன் உண்மைத் தன்மை இயல்பு காட்டித் தானே வந்து எளிமையில் வெளிப்பட்டருளினன் எனக் கூறிய அடிகள், அவ்வள வின் அமையாது, பாசப்பிணிப்பையும் அறுத்து, அறிவு தந்து ஆட்கொண்ட அப் பெருமான் அருள் திறத்தில் ஈடுபட்டுத் தேடுகின்றார்.

ப-ரை: மேலைவானவரும்—மிக உயர்ந்த பதங்களில் உள்ள தேவர்களும், அறியாதது ஓர் கோலமே—அறியப் படாதது ஆகிய ஒப்பற்ற திருவுருவமே, என்னை ஆட் கொண்ட கூத்தனே — எளியேன் ஆகிய என்னையும் அடிமை கொண்ட கூத்தப்பெருமானே, ஞாலமே விசும்பே இவை வந்து போம் காலமே — மண்ணும் விண்ணும் தோன்றி ஒடுங்குதற்குக் காரணமான காலவடிவமான பெருமானே, உனைக் காண்பது என்று — அரிய பொரு ளாகிய நின்னைக் காண்டல் எப்பொழுதோ? என்பது.

வி-ரை: வானவர் என்ற அளவிலே, தேவர் என்பது பெறப்படுவதாக, ஈண்டு மேலை வானவரென்றது, இந்திர பதத்திற்கு மேற்பட்ட பிரம பத முதலியவற்றில் உள்ள தேவர்களைக் குறிக்கும். அன்னார் இறைவனுடைய அதிகார நிலையங்களில் தலைவராக இருக்கின்றமையின், அவ் வணுக்கம் பற்றி அவர்களுக்கு அறிதற்கு எளியனோ என்று கருதுவார்க்கு, அவர்க்கும் தன் உண்மைத்தன்மை இயல்பு அறிய வொண்ணாத நிலையில் உள்ளான் என்பதைப் புலப்பட வைத்தற்கு, "மேலை வானவரும் அறியாதது" என்றார். [1] "வானோர்க்கரிய மருந்தே" என்பது அடிகள் திருவாக்கு. வானவரும் என்புழி, உம்மை சிறப்புப் பொருளில் வந்தது. பிரம பத முதலிய அதிகார நிலையத் தலைவர்களாலும் இறைவன் இயல்பு அறிய வொண்ணாதது என்பதை, [2] "பங்கயத் தயனுமால் அறியா நீதியே" என்பது முதலிய புராண கதையை யுட்கொண்டு கூறிய அடிகள் திருப்பாடற் பகுதிகளாலும் அறிக. தகுதி வாய்ந்த பெரிய அமரர் தலைவராலும் காண்டற்கரியது என்றதனால், இஃது இன்மைப் பொருளைப் பற்றிய செய்தி யாகுங் கொலோ வென்று ஐயுறல் ஆகாது என்பார், "ஓர் கோலமே" என்றார். அக் கோலம் யாண்டுங் கண்டறியப் படாதது ஆகிய ஞானசிரிய வடிவமாகும். "கோலம்" அழகு என்னும் பொருள் தரும். ஆதலின், அருமையில்

---

1. திருவாசகம், போற்றித்திருவகவல் 116.
2. ஷை. அருட்பத்து 18.

எளிய அழகுக்கு எல்லையாக விளங்கிய அவ் வுருவத்தில் தாம் ஈடுபட்டதை அடிகள் மனம் உருகிப் பாராட்டியுள்ளார். [1] "கோலங் காட்டி யாண்டானை" என்பர் பின்னும். பேரழகு வாய்ந்த இறைவனது ஞானாசிரியத் திருக்கோலத்தில் ஈடுபட்டு அணுகியதும், இறைவன் ஞானோபதேசம் செய்து ஆட்கொண்டான் என்பது தோன்ற, "என்னை ஆட்கொண்ட கூத்தனே" என்றார். உயர்ந்த தேவராலும் அறியப்படாத திருக்கோலமுடைய பரமசிவன், அத் தேவர் முதலிய யாவரும் யாவும் ஒடுங்கிய பேரூழிக் காலத்து, அவ் எல்லோரையும் எல்லாவற்றையும் ஒடுக்கிக் கொண்டு, தான் ஒருவனே அழிவிலாப் பொருளாக நின்று, படைத்தல் முதலிய ஐந்தொழிற்கும் தானே தலைவன் என்பது புலப்பட, அருட் கூத்து இயற்றும் பெற்றியன் என்பது தோன்ற, "ஆட்கொண்ட கூத்தனே" என்றார். ஐந்தொழில் திருக்கூத்து இயற்றும் ஆண்டவன் திருவுருவைக் காண்டலினும், ஞானாசிரியனாக எழுந்தருளிக் காட்சி தரும் நிலை காண்டற்கு அரியது என்பது தோன்ற, ஆட்கொண்ட கூத்தனே எனக் குணிப் பொருளாகவும், "அறியாததோர் கோலமே" எனக் குணப்பொருளாகவும் கூறியருளினர். கூத்தன் என்பதிற் கூத்து, ஆடலாகிய வினையை உணர்த்தும் ஆதலின், கூத்தன் என்பது அவ் வினைப் பண்பை உடையான் என்று குணிப்பொருளாகவும், "கோலம்" என்பது அழகு, உருவம் என உடைமை அளவில் நிற்பதால், குணப் பொருளாகவும் அறிதல் வேண்டும். அறிதற்கு அருமை, கோலத்திற்குக் கூறப்பட்டமையால், கூத்தனும் நிலை அதனிற் சற்று எளிமை உடைத்து என்பது போதரும். படைப்பு முதலிய எல்லாவற்றையும் குறிக்கும் கூத்தாடல், யாவரும் காண, [2] "ஐயர் தாம் வெளியே ஆடுகின்றாரை" என்றபடி, பொது வெளியில் நிகழ்வதாகும். ஞானாசிரியனாக எழுந்தருளிப் பக்குவம் உடையார்க்கு உபதேசித்தல் தனிமையில்

---

1. திருவாசகம், ஆனந்தமாலை 3.
2. பெரிய புராணம், தடுத்தாட்கொண்ட புராணம் 105.

நிகழ்வதாகும். இவ் வுண்மையும் மேற் காட்டியதற்குச் சான்று ஆதல் அறிக.

" ஞாலமே விசும்பே " என்புழி, ஏகாரம் எண்ணுப் பொருளில் வந்தன. இவற்றை இறைவனைக் குறிக்கும் விளியாகக் கொண்டு பொருள் கூறுவர் சிலர். பின், இவை என்னும் அஃறிணைப் பன்மைச் சுட்டு உண்மையால், மண்ணும் விண்ணும் ஆகிய பூதங்களை உணர்த்துவனவாகக் கோடலே பொருந்தும் என்க. பூதங்களுள் முதலும் இறுதியும் கூறியது கொண்டு, நடுவண் உள்ள நீர் தீக் காற்று என்னும் இவற்றையும் கொள்ளல் வேண்டும். ஐம் பெரும் பூதங்களும் உபலக்கணமாக நின்று, ஆன்ம தத்து வங்கள் எல்லாவற்றையும் புலப்படுக்கும். எல்லாத் தத்து வங்களும் காரியப்பட்டுத் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் காரணமாக உள்ளது கால தத்துவம் என்ப. வந்து போதல்—தோன்றி ஒடுங்குதல். கால தத்துவம், ஆன்மாக் களுக்குத் தொழில், அறிவு இச்சைகளை முறையே விளக்கி உபகரிக்கும் கலை, வித்தை, அராகம் என்னும் வித்தியா தத்துவங்களையும் தன்னுள் அடக்கி மேல் நிற்பதாகலானும், பேரூழிக்காலத்து, எல்லாம் ஒடுங்கிய ஞான்று, இறைவன் ஒருவனே அக் காலத்தின் இறுதியில் விளங்குபவன் ஆதலானும், அக் காலத்தோடு ஒற்றுமைப் படுத்து, " காலமே " என்று விளிக்கப் பட்டுள்ளான். உண்மையில், காலத்தையும் கடந்த தனிப் பொருளாக நிற்றலின், இறைவன் கால காலன் ஆவான். ஆன்ம தத்துவங் களுக்குக் காலம் இறுதியாக உள்ளது ஆகலின், அத் தத்துவங்களாலாய உடம்போடு கூடிய உயிர்களின் இயல்பு நோக்கி, இறைவனைக் " காலமே " என்றார். மேல், [1] " கழிதரு காலமுமாய் அவை காத்தெம்மைக் காப் பவனே " என்று கூறியதன் கண்ணும் இவ் வுண்மை காண்க. இனி, அசுத்தமாயா தத்துவம் ஆகிய கால தத்து வத்திற்குச் சுத்தமாயா தத்துவம் ஆகிய காலம் காரணம் ஆகலானும், அது, சிவ தத்துவங்களின் அணிமையில்

1. திருவாசகம், திருச்சதகம் 8.

உண்மையானும், அது பற்றிக் "காலமே" என்றார் எனினும் ஆம்.

"என்றுகொல் காண்பதே" என்புழி, என்று என்பது காலத்தைப் பற்றிய வினாவாகும். கால தத்துவத்தின் எல்லையே பெரிதாக, அதனையும் கடந்து கால காலனாக நிற்கும் நின்னை, இவ் உடம்பு முகந்து நின்ற மிகச் சிறுகால எல்லையுள் வைத்து எங்ஙனம் காண்பேன் என்பார், "என்று கொல் காண்பதே" என்றார். காண்பது, தொழில் அளவில் நின்றது. கொல்—அசை.

இதன்கண், மேலை வானவரும் அறியாத தோர் அரிய திருக்கோலத்தைக் காட்டி ஞானோபதேசம் பண்ணி ஆட்கொண்டு அருளிய கூத்தப் பெருமானே என்றதனால், அப் பெருமானது பேருதவிக்குக் கைம்மாறு கொடுத்தல் ஆற்றேன் என்பது பெறப்படுதலின், **கைம்மாறு கொடுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "உனை யென்று கொல் காண்பதே" என்றதனால், சதகம் நுதலிய **பத்தி விசித்திரப்** பொருளும் புலனாதல் அறிக.

44. காண லாம்பர மேகட் கிறந்ததோர்
வாணி லாப்பொரு ளேயிங்கொர் பார்ப்பெனப்
பாண னேன்படிற் றாக்கையை விட்டுனைப்
பூணு மாறறி யேன்புலன் போற்றியே.

**க-ரை:** மேலை வானவரும் அறியாத ஓர் கோலம் என்றும், அதனை என்றுகொல் காண்பது என்றும், முன்னைத் திருப்பாட்டில் கூறிய அடிகள், அக்கோலம் காண்டற்கு உரியதோ காணொணாததோ என்று நினைவார்க்கு விடையையும், அதனைத்தாம் அடைதற்கு விரைதலையும் இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

**ப-ரை:** காணல் ஆம் பரமே—சிவ ஞானத்தாற் காண்டற்கு உரியதாகிய பரம் பொருளே, கட்கு இறந்தது ஓர் வாள் நிலாப் பொருளே—கட்புலனாற் பற்றப்படா வாறு கடந்து நிற்பதாகிய ஒப்பற்ற ஒளிப்பிழம்பாகவுள்ள பொருளே, இங்கு ஓர் பார்ப்பு என—இவ்விடத்து ஒரு

பறவைக் குஞ்சு (கூடு அல்லது முட்டை தனித்து வறிதே கிடப்ப அதனினின்றும் பறந்து சேறல்) போல, பாணனேன்—வீணன் ஆகிய யான், புலன் போற்றி—சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஆகிய ஐம்புல இன்பங்களையும் பரிகரித்து, படிறு ஆக்கையை விட்டு உன்னைப் பூணுமாறு அறியேன்—பொய்யாகிய இவ்வுடலை விட்டு வெளிப்பட்டு மெய்யாகிய நின்னைப் பொருந்தும் நெறியை அறியாதவன் ஆகின்றேன் என்பது.

**வி-ரை :** இறைவனது பரம் பொருள் தன்மை, மன மொழிகளைக் கடந்த தொன்று ஆகலின், கட்புலனாற் காணத்தக்கது அன்றாம். அப் பெருமானது ஒளி மிக்க உருவம் ஒருவாற்றால் கட்புலனாற் காணத்தக்கது ஆகும். அங்ஙனமாகவும், பரம் பொருள் தன்மை காணத்தக்கது எனவும், ஒளி உருவம் கட்புலனாற் காணத்தகாதது எனவும் கூறியதன் கருத்து ஆராயத்தக்கது. இறைவன், பாசஞான பசுஞானங்களால் காணப்படாதவன் எனவும், பதி ஞானம் ஆகிய சிவ ஞானம் ஒன்றாலே காணத் தக்கவன் எனவும் சைவநூல்கள் கூறும். [1] "ஊனக் கண் பாச முணராப் பதியை, ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி" என்னும் சிவஞான போத சூத்திரத்தாலும், அதன் விளக்கம் ஆகிய [2] "பாச ஞானத்தாலும் பசு ஞானத் தாலும் பார்ப்பரிய பரம் பரனைப் பதி ஞானத்தாலே, நேச மொடும் உள்ளத்தே நாடி" என்னும் சிவஞான சித்தி யானும் அறியலாம். நூல்கள் முகமாக நிகழ்வது பாச ஞானம் எனவும், நான் பிரமம் என்று மதிக்க வருவது பசு ஞானம் எனவும் கூறுவர். இவ்வுண்மையை, [3] "வேத சாத்திர மிருதி புராண கலை ஞானம்...... நாத முடிவான வெலாம் பாச ஞானம்" எனவும், [4] "காதலினால் நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசு ஞானம்" எனவும் கூறிப் போந்த பிரமாணங்களால் அறிக. அவன் அருளே கண்ணாகக் காண்டல் பதிஞானம் ஆகும். இம் மூத்திற

1. சிவஞான போதம், சூ. 9. 2. சிவஞான சித்தி, சுபக்கம், சூ. 9—1. 3. சிவஞான சித்தி, சுபக்கம், சூ. 9—2. 4. சிவஞான சித்தி, சுபக்கம், சூ. 9—2.

ஞானங்களுள், இறைவனது பரம் பொருள் தன்மை அறிதற்கு உரியது மெய்ஞ்ஞானம் ஆகிய பதிஞானம் ஆகும். அப் பதிஞானத்தால் உணரத்தக்கவன் என்பது போதர, "காணலாம் பரமே" எனவும், பாச ஞான, பசு ஞானங்களால் அப் பெருமானது ஒளி உருவமே முற்றும் காண்டற்கு இயலாததொன்று என்பார், "கட்கிறந்ததோர் வாணிலாப் பொருளே" எனவும் கூறினர். இறைவனுடைய அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூவகை நிலையுள், முன்னைய இரண்டும் மெய்யுணர்வாகிய சிவ ஞானத்தானும், பின்னையது அப்பெருமான் அருளைக்கால் ஆன்மாத் தூய்மை பெற்ற நிலையிலும் அறியத்தக்கன. சிவலிங்காதி உருவங்கள் எல்லோரானும் அறியத்தக்க நிலையில் உள்ளனவே எனின், ஈண்டுக் கூறியது அவற்றுள் ஒன்றை அன்று; ஒளிமிக்க ஞானாசிரிய வடிவமே ஆகும். அவ் வடிவத்தை அப் பெருமான் அருள் நோக்கால் அறிந்தனர். ஆயினும், அக்காட்சி நெடிது நில்லாமையானும், நின்ற அளவிலும் தம் கட்புலனால் அளவிட்டு உணரும் அளவில் இல்லாத பேரொளிப் பிழம்பாக உள்ளமையாலும், "கட்கு இறந்ததோர் வாணிலாப் பொருளே" என்றார். பரம்பொருள் ஆம் நிலையில் காண இயலாது என்பாரை நோக்கிச் சிவ ஞானத்தால் காணத் தக்கவன் என்பது போதர, "காணலாம் பரமே" எனவும், உருமேனிகள் எல்லாம் கண்ணால் பார்க்கத்தக்கன என்பாரை நோக்கி, ஞானாசிரிய வடிவ முதலியவற்றில் உள்ள ஒளி மிகுதி கட்புலனால் முற்றும் காண்டற்கு இயலாதது என்பது போதர, "கட்கு இறந்ததோர் வாணிலாப்பொருளே" எனவும் கூறினார் என்க.

இங்கு—இவ்வுலக வாழ்க்கையில் ஒரு பறவைக் குஞ்சு உவமையை, [1] "குடம்பை தனித்தொழியப் புட் பறந் தற்றே, யுடம்போ டுயிரிடை நட்பு" என்னும் திருக்குறளில் உள்ளபடி ஈண்டும் அமைத்துக்கொள்ளல் வேண்டும். அடிகள் தம் உயிர்க்குப் பற்றுக் கோடாக

1. திருக்குறள் 338.

உள்ள ஊனார் உடலை ஒழித்து, இறைவன் திருவடி நிழலை அடைவதில் விரைவும் விருப்பமும் உடையார் என்பதைத் திருவாசகத்தில் பல இடங்களிலும் காணலாம். வினை வயத்தால் கிடைத்த உடலை விரைவில் விட்டுப் பின் அதனைப்பற்றிய நினைவின்றிச் சேறற்குப் பறவைக் குஞ்சு உவமை கூறப்பட்டது. இக் கருத்திற்குப் பரிமேலழகர் கண்டபடி, குடம்பையை முட்டை என்று பொருள் கோடல் சிறந்ததாகும். "பார்ப்பென" என்புழி, உபமேயமாகிய உயிரின் தொழிலாகிய விட்டுச் சேறல் என்னும் வினை, அவ் உவமைக் கண்ணும் இயைத்துக் கொள்ளப்பட்டது. கூடு அல்லது முட்டையினின்றும் பறவைக் குஞ்சு பருவம் வந்ததும் பறந்து வெளிப்படல் போல, வினைக்கு ஈடாக எடுத்த உடம்பினின்றும் வினை ஒழிவு பெற்று, விரைவில் அதனைவிட்டு நின்னைக் கூட வேண்டியவனாகவும், அங்ஙனம் கூடுமாறு அறிந்திலேன் என்பார், "படிற்றாக்கையை விட்டு உன்னைக் கூடுமாறறிந் திலேன்" என்றார். பார்ப்பென விட்டு என இயையும். இனி, பார்ப்பு என்பதற்குப் பறந்து செல்லும் ஆற்றல் படையாத இளங் குஞ்சு எனக் கொண்டு, பார்ப்பென அறியேன் என இயைத்துப் பொருள் கோடலுமாம். பார்ப்பைப் போலப் படிற்றாக்கையை விட்டுச் செல்ல அறியாதவன் ஆயினேன் என்பது இதற்குக் கருத்தாகக் கொள்க.

அங்ஙனம் அறியாமைக்குக் காரணமாகத் தமக்கு ஒரு பெயரை இட்டுக் கொண்டார், "பாணன்" என்று. பாழ் நன்—பாணன் என்றாயிற்று; பயன் இன்மையை உடையேன்; சிறந்த உறுதிப் பயனைப் பெற முயலாது வறிதே இருக்கின்றவன் என்பது கருத்து. ஆக்கையை, "வஞ்ச வினைக் கொள் கலம்" என்பர். அதனாலும், மெய் எனப் பெயர் பெற்றுப் பொய்யாகக் கழிதலானும், "படிற்றாக்கையை" என்றார். படிறு—வஞ்சம், பொய். ஆக்கை என்றதனால் வினைக்கு ஈடாக, என்பு, நரம்பு முதலிய வற்றால் ஆக்கிக் கட்டப்பட்டது என்பது போதரும்.

பூணுதல்—திருவடியைத் தலை மேல் கோடல்; தள்ள வேண்டியதும் கொள்ள வேண்டியதும் கூறியபடியாம். தள்ள வேண்டியது என்பினை நரம்பிற் பின்னி இயைந்தது ஆகிய ஆக்கையை; கொள்ள வேண்டியது அழிவில் இன்ப வடிவினன் ஆகிய ஆண்டவன் திருவடியை. உன்னைப் பூணுமாறு என்பதற்கு, நின்னைப் பொருந்துமாறு என்பது பொருள். பொருந்துதல் — திருவடியைத் தம் தலைக்கண் இயைத்தல். அன்றி, உன்னை என்பதற்கே உன் திருவடியை என்று பொருள் கோடலும் பொருந்தும். ஈண்டு, அவயவ அவயவிகளின் வேற்றுமை இன்மை கருதத் தக்கது. அறியேன் என்பதனை படிற்றாக்கையை விடுதற்கும், உன்னைப் பூணுதற்கும் எனக் கொள்ளல் வேண்டும்.

புலன் போற்றி என்புழி, போற்றுதல், பரிகரித்தல் என்னும் பொருட்டு. 1 “புறஞ் சொற் போற்றுமின்” என்னும் இடத்து, இப் பொருளில் வந்தது காண்க. ஐம்புல இன்பங்களைத் துய்ப்பதில் உள்ள வேட்கை நீங்க வில்லையானால், ஆக்கையை விடுமாறும் திருவடியை அடையு மாறும் கூடா. ஆதலால், ஆக்கையை விடுதற்கும், திரு வடியைக் கூடுதற்கும் புலனுகர்ச்சியின் ஒழிவே காரணம் ஆம் என்பது விளங்கும். புலன்களைப் பரிகரித்துப் பூணு மாறு என இயையும். இனிப் புலன் போற்றி என்பதற்கு, ஐம்புல இன்பங்களைப் பேணி எனப் பொருள் கொண்டு, அறியேன் என இயைத்துப் பேணுதல் ஆகிய காரணத்தால் அறியாதவன் ஆயினேன் எனக் கோடலும் ஒன்று. ஈண்டுப் பேணி என்னும் எச்சம் காரணப் பொருள் உடையதாகும்.

இதன்கண், “புலன் போற்றிப் படிற்றாக்கையைக் கைவிட்டுப் பூணுமாறறியேன்” என்றதனால், அத்தகைய இழிந்த நிலையில் உள்ள என்னையும் ஆட்கொண்டருளிய பேருதவிக்கு யாது கைம்மாறு செய்ய வல்லேன் என்பது

1. சிலப்பதிகாரம் 80, 186.

குறிப்பெச்சமாகக் கொள்ளக் கிடத்தலால், **கைம்மாறு கொடுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "பாணனேன் படிற்றாக்கையை விட்டு" என்றதனால், உடற் சுமையில் வெறுப்புற்றது தோன்றுதலின், **வைராக்கிய விசித்திரம்** என்னும் சதக நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

45. போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்துநின்
றாற்றல் மிக்கஅன் பால்அழைக் கின்றிலேன்
ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறுங்
கூற்றம் அன்னதோர் கொள்கையென் கொள்கையே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் சிவஞானத்தால் அறியத் தக்க இறைவன் இயல்பை உணர்ந்து, புலனுகர்ச்சியில் பற்றற்று, ஆக்கையை விட்டு, அப் பெருமானை அடையும் நெறியைச் சார்தற்கு விரைதலை மேற்கொண்ட அடிகள், அதற்கு ஏதுவாக இத் திருப்பாட்டில் முதலில் மன மொழி மெய்கள் இறை பணியினால் தூயனவாகப் பெற்று, ஆற்றல் மிக்க அன்பு நெறியில் தலைப்படவேண்டியதிருக்க, அதற்கு மாறாகச் செல்லும் கொள்கை உடையேன் ஆயினேன்; ஆயினும் அந் நிலையிலும் என்னை ஏற்று அருளல் வேண்டும் என்று வேண்டுகின்றார்.

**ப-ரை:** போற்றி யென்றும்—நெஞ்சத்தாற் காத்தருள்க என்று நினைந்தும், புரண்டும்—உடலால் புரண்டு வலம் வந்தும், புகழ்ந்தும்—நாவினால் புகழ்ந்து பாராட்டியும், நின்று—அன்பு நெறியில் நிலையுதல் பெற்று, ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன் — உறுதியான மெய்யன்பினால் கூவி அழையாமல் இருக்கின்றேன், என் கொள்கை—இத்தகைய என் கொள்கை, எதிர் ஏற்று வந்து—எதிராகப் பொர வந்து, தாமரைத்தாள் உறும்—நின் தாமரை மலர் போன்ற திருவடியில் பொருந்தப் பெற்ற, கூற்றம் அன்னது ஓர் கொள்கை—கூற்றுவனது கொள்கையை ஒத்ததாகிய ஒருவகைக் கொள்கையேயாம் என்பது.

வி-ரை: சிறந்த அன்பின் விளைவிற்கு மன மொழி மெய்கள் தூயன ஆதல் வேண்டும். இம் மூன்று கரணங்களாலும் முறையே இறைவனை நினைதலும், புகழ்ந்து பாராட்டுதலும், பணி செய்தலும் ஆகிய செயல்கள் நிகழற்பாலன. இந் நிகழ்ச்சிகளாலே அவை தூய்மை உடையன ஆம். நினைதல் — இறைவன் பெருமையை நினைதலும், தமக்கு வேண்டியவற்றை அவன்பால் வேண்டிக்கொள்ளுமுகமாக நினைதலும் என இருவகைப்படும். அவற்றுள், இறைவன் பெருமையை இடையறாது நினைதல் அன்றி, வேறு ஒன்றையும் நினையாமல், " நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே " என்று இருக்கும் அடிகள், இடையிடையே தம்மை உலக வாழ்க்கையினின்றும் விடுவித்துத் திருவடி இன்பம் நல்கிக் காத்து அருளல் வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுதல் உண்டு. அம் முறையில் ஈண்டுக் காத்து அருள்க என்று வேண்டுவார், " போற்றி யென்றும் " என்றார். பின்னர்ப் " புகழ்ந்தும் " என்று வந்தமையால், இஃது எண்ணத்தின் பாற் படும். நெஞ்சம் இல் வழி நிகழும் செயல்கள் சிறந்தன ஆகா ஆதலின், முதலில் நினைவு கூறப்பட்டது. அந்நினைவுக்கு ஏற்ப, மெய்யின் செயலும் நாவின் செயலும் பின்னர் நிகழ்ந்தன. உடல் உறுப்புக்கள் அனைத்தும் இறை பணியில் ஈடுபடுதலைப் புலப்படுக்கவே, தொழுதல், வணங்குதல் என்னும் செயல்களைக் குறிப்பிடாமல், " புரண்டும் " என்றார். புரளுங்கால், உடல் உறுப்புக்கள் அனைத்தும் நிலத்திற்படியும் உண்மை அறிக. மன மொழி மெய்கள் ஒரோவமயம் இங்ஙனம் இறை பணியில் தலைப்படுதலும், மற்றைக் காலங்களில் புலனுகர்ச்சிகளில் ஈடுபடுதலும் உண்டு. அடிகள் அங்ஙனம் ஆதலை விரும்பாராய், என்றும் ஒரே படித்தாக முக்கரணங்களும் இறைபணியில் நிலைப்படுதலை விரும்பும் இயல்பினர் ஆதலின், " நின்று " என்றார்.

ஒரு பொருளைப் பற்றிப் பற்பல பிறவிகளிலும் பிறழ்ச்சி இன்றித் தொடர்ந்து வேர் ஊன்றிய அன்பே

ஆற்றல் மிக்க அன்பாகும். முடிந்த நிலையில் இது மெய்யன்பு ஆகும். இதனையே அடிகள், [1] "பெறவே வேண்டும் மெய்யன்பு" என்பர். இத்தகைய சிறந்த அன்பு விளைதற்கு மன மொழி மெய்கள் தூயன ஆதல் வேண்டும் ஆதலின், அத்தூய்மையே முதல் அடியிற் பெறப்பட்டது என்க. கரணங்கள் தூயனவாகப் பெற்று, முறுகிய தலையன்பினால் இறைவனைக் கூவி அழைத்தல் இன்றியமையாத தாகவும், அவ்வாறு செய்திலேன் என்பார், "ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன்" என்றார். அன்பினால் அழைத்து அடையும் பேறு எனக்கு இல்லை ஆயினும், வன்பினால் கூற்றுவன் எதிர்ப்பட்டுத் திருவடிப் பேறு கிடைக்கப் பெற்றது போன்ற ஒரு கொள்கையிலாவது தலைப்படமாட்டேனா என்பது பின் இரண்டு அடிகளின் கருத்தாகும். [2] "அஞ்சியாயினும் அன்பு பட்டாயினும், நெஞ்சம் வாழி நினை நின்றியூரனை" என்னும் தமிழ் மறையில், அன்பு காரணமாக இறைவனை நினைதற்கு இயலாதார், அச்சம் காரணமாக நினைய நேர்ந்தாலும், அந்நினைவும் ஓரளவு நலம் பயக்கும் என்று கூறியபடி, ஆற்றல் மிக்க அன்பினால் அழைக்க இயலாவிட்டாலும், மாறுபட்ட கொள்கையை மேற்கொண்டாவது இறைவன் சினத்திற்கு இடனாகி, அவன் பொன்னடிகளைக் காணும் பேறு பெறலாமே என்று கருதுகின்றார் அடிகள். இக்குறிப்பை, [3] "உடையாய் கூவிப் பணி கொள்ளாது ஒறுத்தால் ஒன்றும் போதுமே" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதுகொண்டு தெளியலாம். அரசன் அவைக் களத்தில் சென்று, அவனால் மதிக்கப் பெற்று, அவன் திருவோலக்கத்தைக் காண்டற்கு இயலாத ஓர் எளியவன், அரசனுக்கு மாறுபட்ட செயலில் தலைப்பட்டுக் குற்றவாளியாகி, அரசவைக்குக் கொண்டுவரப் பட்ட நிலையில், அவனைக் காண்டலை ஒரு பேறாகக் கருதுதல் போல் அடிகள் கருதுகின்றார் என்பது, "ஒறுத்தால்

1. திருவாசகம், பிரார்த்தனை 6. 2. திருநாவுக்கரசர் தேவாரம்,
3. திருவாசகம், குழைத்த பத்து 2.

ஒன்றும் போதுமே" என்றதனுற் புலப்படும். கூற்றுவன், மார்க்கண்டேயர் பொருட்டு இறைவன் திருவுள்ளக் குறிப்போடு முரண்பட்டு எதிர்த்துச் சென்றுன் ஆயினும், அப்பெருமான் திருவடிப் பரிசப் பேறு எய்தினுன் என்பதைப் பின்வரும் அப்பர் அருள் மொழியாலும் அறிக:

1 "மேலும் அறிந்திலன் நான்முகன் மேற்சென்று கீழிடந்து
மாலும் அறிந்திலன் மாலுற்ற தேவழி பாடுசெய்யும்
பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்த சிந்தைக்
காலன் அறிந்தான் அறிதற் கரியான் கழலடியே"

என்பது.

"ஏற்று வந்தெதிர்" என்பதை, எதிர் ஏற்று வந்து என மாற்றி உரைத்துக் கொள்க; நேராக எதிர்த்து வந்து என்பது பொருள். ஒருவன், தன்னினும் வலி மிகப் படைத்தவனேடு போர்செய்ய நேர்ந்தபொழுது, மறைந்து நின்று அம்பு எய்தலைக் கேட்டிருக்கின்றேம். கூற்றுவன் இறைவனது பேர் ஆற்றலை அறிந்திருந்தும், மறைந்து ஒழுக நினைந்தான் அல்லன் என்பது தோன்ற, "எதிரேற்று" என்றூர். ஒருவன் தன்னின் மெலியவனேடு போர்செய்ய நேர்ந்துழிச் சந்திவிக்கிரக முதலிய அறு வகைக் குணங்களுள் ஒன்றுகிய போர் குறித்து மேற் சேறலை மேற்கொண்டு, அம்மெலிய பகைவன் இருந்தஇடம் நோக்கிச் சேறல் இயல்பு. அதற்கு மாறுகத் தன்னின் எத்துணையோ மிக்க வலி படைத்த இறைவனை நோக்கிக் கூற்றுவன் மேற்சென்றுன் என்பது தோன்ற, "எதிரேற்று வந்து" என்றூர். இங்ஙனம் அஞ்சாமல் கூற்றுவன் எதிர்த்து வந்ததற்குக் காரணம், இறைவன் அவனுக்கு இட்ட பொதுவான கட்டளையை நிறைவேற்றுவதில் உள்ள கடமையும், அதன் நிமித்தம் பிரமாதி தேவராலும் காண்டற்கு அரிய இறைவன் திருவடியைக் கண்டு இன்புறலாம் என்னும் ஆர்வ உட்கோளும் ஆகலாம் என்பது குறிப்பின் அறியத்தக்கது. அக்குறிப்பின் பயனுக, இறைவனது தாமரை மலர் போன்ற திருவடிப் பரிசப் பேறு கிடைக்கப் பெற்றுன் என்பது தோன்ற,

1. திருநாவுக்கரசர் தேவாரம்.

"தாமரைத் தாளுறும்" என்றார். உறுதல் — பொருந்தப் பெறுதல். திருவடிக் காட்சியே அருமை. பரிசிக்கப் பெறுதல் அதனினும் அரிது. திருவடி அழுந்தப் பெறுதல் கிடைத்தற்கு அரிய பேறு அன்றோ? இப் பேறு, வன்பு நிலையில் நிகழாது, அன்பு நிலையில் நிகழும் ஆயின், அந் நிலையே வீட்டு இன்பமாகும்.

"கூற்றம் அன்னது" என்பதற்குக் கூற்றுவன் கொள்கை போன்றது என்பது பொருள். கொள்கை போன்றதாகிய ஒரு கொள்கை என் கொள்கையாகும் என முடிக்க. ஆற்றல் மிக்க அன்பால் அழைக்க இயலாத நிலையில் அமைதி அடைவேனோ எனின், அங்ஙனம் இரேன், இறைவன் திருவுள்ளக் குறிப்பிற்கு வெறுப்பு விளைக்கத் தக்க நிலையில் மாறுபட்டாவது அப்பெருமான் திருவடிப் பேற்றிற்கு ஆளாவேன் என்பது அடிகளின் பத்தி விசித்திரமாகும்.

இதன்கண், மன மொழி மெய்களின் தூய்மையால் உண்டாம் மெய்யன்பினால் நின்னை அடைய இயலாத நிலையிலும், நின் திருவடிப் பேற்றிற்கு என்னை ஆளாக்கப் பிறிதொரு கொள்கையை நினைவுறுத்திய பேருதவிக்குக் கைம்மாறு கண்டிலேன் என்பது போதரலின், **கைம்மாறு கொடுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், நேரிய அன்பு நெறியில் வழிபடும் ஆற்றல் இல்லேன் ஆயினும், மாறுபட்ட வன்பு நெறியிலாவது நின் திருவடியைப் பெறுமல் ஒழியேன் என்று கூறுதலின், **பத்தி விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் தோன்றுதல் காண்க.

46. கொள்ளுங் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி
கள்ளும் வண்டும் அறுமலர்க் கொன்றையான்
நள்ளுங் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல்நின்ற எந்தையே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் முக்கரணங்களும் தூயனவாகப் பெற்று முறுகிய பேரன்பினால் ஆண்டவனைக் கூவி அழைக்கப் பெறுமை பற்றி இரங்கிய அடிகள்,

இத் திருப்பாட்டில் அங்ஙனம் யான் அழையாத நிலையிலும் இறைவன் தானே என்னைக் கூவி அழைத்துப் பணி செய்வித்துக் கொள்ளுவானோ என்று எண்ணி வருந்துகின்றார்.

ப-ரை : யாவுளும் நள்ளும் கீழ் உளும் மேல் உளும்—எல்லாப் பொருள்களிடத்தும் நடுவணும் கீழும் மேலும் ஆகிய எவ்விடத்தும், எள்ளும் எண்ணெயும் போல் நின்ற எந்தை—எள்ளும் அதன் கண் யாண்டும் நிறைந்திருக்கும் எண்ணெயும்போல் நிறைந்து நிலைபெற்று இருக்கும் என் தந்தையாகிய, கள்ளும் வண்டும் அறுமலர்க் கொன்றையான் — தேனும் அதனை நுகரும் வண்டும் நீங்காத கொன்றை மலர் மாலையை உடைய ஆண்டவன், வில்லேனை—பேரன்பினால் அழைக்கும் ஆற்றல் இல்லாத என்னை, அன்பரிற் கூய்ப்பணி கொள்ளும்—மெய்யன்பரைக் கூவி அழைத்துப் பணிகொள்ளுதல் போலக் கூவி அழைத்து அடிமை கொள்ளுவானோ? என்பது.

வி-ரை : இறைவன் என்னும் சொல் பரம சிவனுக்கே வழங்கப்பட்டிருத்தலைப் பண்டைப் பனுவல்களில் பரக்கக் காணலாம். அச் சொல்லின் பொருள் எங்கும் நிறைந்தவன் என்பது. இறுத்தல்—தங்குதல்; யாண்டும் தங்குதல். இவ் வியாபகம், கண்டப் பொருள்களில் தனித் தனியேயும், அகண்டப்பொருளில் முழுதும் உள்ளதாகும். எடுத்துக் காட்டாக எள்ளில் எண்ணெயைக் காணலாம். அது கண்டப் பொருள் வியாபகம் ஆகும். கருப்பங் கழியில் சாறும் அன்னதே. அகண்டப் பொருளின் வியாபகம் அங்ஙனம் அன்று. இயங்குதிணை, நிலைத்திணை ஆகிய எல்லாப் பொருள்களிடத்தும் ஏகமாக நிறைந் திருத்தலாகும். இந்நிலையை அடிகள் இத் திருப்பாட்டின் பின் இரண்டு அடிகளிலும் தெளிவாக விளக்கியுள்ளார்.

ஒரு பொருளைப் பகுத்து வரையறை செய்யுங்கால், அம் முதல் இறுதி நடு என முக்கூறு படுத்து வழங்குவர். அம் முக்கூறுகளில் ஒரு பகுதி அளவில் இறைவன் வியாபகம் உள்ளதோ என்பாரை நோக்கி, அங்ஙனம் அன்று ;

யாண்டும் உளது என்பார், "நள்ளும் கீழுளும் மேலுளும்" என்றார். கீழ், மேல் என்பவற்றில் உள் என்பன இடப் பொருளிலும், உம்மைகள் எண்ணுப் பொருளிலும் வந்தன. கீழும் மேலும் முடிந்த இடங்களாக, நடுப் பகுதி முடிவு காணப்படுவது அன்று ஆகலின், இறைவனது நிறைவு, எல்லை காணப்படாதது ஒன்று என்பதைப் புலப்படுத்த, முதலில் நள்ளும் என்றார். பின்னர், ஆதார ஆதேய முறை பற்றிக் கீழும் மேலும் கூறப்பட்டன. ஆதாரம் தாங்குவது. ஆதேயம் தாங்கப்படுவது. ஒரு பொருளின் அடிப்பாகம் தாங்குவதும், நுனிப்பாகம் தாங்கப்படுவதும் ஆதல் அறிக. நடு கீழ் மேல் என்னும் மூவிடத்தும் என்று கூறிய அளவில், வியாபகம் யாண்டும் என்பது பெறப்படுவதாகப் பின், "யாவுளும்" என்று கூறியது எற்றிற்கு எனின், நடு கீழ் மேல் என்னும் இடங்கள் கண்டப் பொருள்களில் காணப்படுவன ஆதலின், இறைவன் வியாபகம் உலகத்துள்ள கண்டப் பொருள்களின் அளவிற்றோ என மயங்குவார்க்கு, அம் மயக்க நீக்கம் கருதி, "யாவுளும்" என்று கூறப்பட்டது என்க. "யாவுளும்" என்பதற்கு, எல்லாப் பொருள்களிடத்தும் என்பது பொருள். இயங்கு திணை, நிலைத்திணை ஆகிய எல்லாப் பொருள்களிடத்தும், முதல் இறுதி நடு என்னும் யாண்டும் இறைவனது நிறைவுளது என முழு வியாபகம் கூறியபடியாம்.

இங்ஙனம் அகண்டமான வியாபக நிலையைச் சிற்றறிவுடைய மக்கள் மனத்தால் வரையறைப்படுத்துத் தெளிதல் அரிதாகலின், தெளிவுறுத்தற் பொருட்டுக் கண்டப் பொருளில் விளங்கத்தக்கது ஒன்றை எடுத்துக் காட்டுவாராய், "எள்ளும் எண்ணெயும் போல்" என்றார். கண்டப் பொருள்களுள் ஒன்றில் ஒன்று நிறைந்து இருத்தற்கு, எள்ளும் அதன்கண் உள்ள எண்ணெயும் போலப் பிறிதொன்றைக் காண்டல் அரிது. ஆமணக்கு முதலிய வித்துக்களிலும் நெய்ப்பகுதி உள்ளதே எனின், அப்பகுதி தோயாத கொட்டைத்தோடு வலிதாக உள்ளது

என்பது அறியத்தக்கது. மெல்லிய தோல் உள்ள கனியையும் சாற்றையும் கூறல் ஆகாதோ எனின், அக்கனியில் அத்தோலோடு வித்துக்களும் இடையறவாக உளவாகலின் ஆகாது என்க. எள்ளில் தோல் இருப்பினும் மிக மெல்லியதாகும். மேலும், அதனைவிட மெல்லிதாகிய தோல் பிறிதொன்றில் காண்டல் அரிது. ஆதலின், இறைவனது அகண்ட வியாபகத்திற்குக் கண்டப் பொருள்களுள் எடுத்துக் காட்டத்தக்கது அதுவே ஆதலின், "எள்ளும் எண்ணெயும் போல்" என்று எடுத்துக் காட்டுவார் ஆயினர். "திலேஷு தைலம்" என்று மறைமுடிவு கூறுதலும் ஈண்டு அறியத்தக்கது. இவ்வுவமையில் காணப்படும் குற்றம் ஒன்றைப் பரிகரித்தற் பொருட்டு, "நின்ற" என்றார். நிற்றல், காலத்தாலும் இடத்தாலும் பிறிதொரு பொருளாலும் கேடு இன்றியும் பிரிக்க முடியாதபடியும் நிலைத்திருத்தல். எள்ளில் உள்ள எண்ணெய், காலம், இடங்களால் கேடு அடைதலும், செக்கு முதலிய கருவிகளால் வேறுபடுத்தப்படுதலும் காண்கின்றோம். இறைவன் நிறைவு அன்னது அன்று என்பது புலப்படுக்க, "எள்ளும் எண்ணெயும் போன்ற" என்னாது, "போல் நின்ற" என்றார். "போல்" என்ற அளவில் ஒப்புப் பெறப்பட்டது. "நின்ற" என்பது நிறைவு யாண்டும் ஒரே படித்தாக நிலைத்து இருத்தல் என்னும் பொருட்டு.

"எந்தையாகிய கொன்றையான்" என இயைக்க. கொன்றை மாலை பரம சிவனுக்குப் பலவகையானும் சிறந்தது என்பது முன்னர்க் கூறப்பட்டது. அம் மலர், தெய்வத்தைச் சார்ந்தது ஆகலின், என்றும் வாடாமல் புதிய செழுமை உடையது என்பது போதர, "கள்ளும் வண்டும் அறுமலர்க் கொன்றை" எனப்பட்டது. வண்டு விரும்பாத நிலையில், கள் நிறைந்த மலரும் உளது ஆகலின், அதனை நீக்குதற்கு, "கள்ளும் வண்டும் அறுமலர்" எனப்பட்டது. இவ் அடைமொழிகள் இறைவனிடத்து உலப்பு இலா இனிமை மிக்க அருள் அமுதம் உளது

என்பதையும், அதனைப் பக்குவ முதிர்ந்த ஆன்மாக்கள் பருகி இன்புறற் பொருட்டு என்றும் நீங்காது செறிந்து இருப்பர் என்பதையும் குறிப்பில் புலப்படுத்து நிற்றல் அறிக.

"கில்லேனை" என்பது, "கில்லெனை" எனக் குறுகி நின்றது; ஆற்றல் இல்லாத என்னை என்னும் பொருட்டு. இதன் முன்னைத் திருப்பாட்டில், "ஆற்றன் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன்" என்று கூறியதை வழி மொழிந்து, அத்தகைய அன்பு, ஆற்றல் இல்லாத என்னை என்பது பொருள். ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கும் பேறு இல்லாத என்னையும் இறைவன் சிறந்த மெய்யன்பரை வலிய அழைத்துப் பணி கொள்ளுதல்போலக் கூவி அழைத்துப் பணி கொள்ளுவானோ என்பது கருத்து. "பணிகொள்ளும்" என்பதில் கொள்ளும் என்பது காகு என்னும் ஓசை வேறுபாட்டால், எங்ஙனம் கொள்ளுவான் என்று ஐயுறுதல் புலனாக நின்றது. காகு என்பது ஒரு சொல்லில் பிறிதொரு பொருள் தோன்றுதற்கு உரிய ஓசை வேறுபாடு என்பர் வடநூலார். இதற்கு இவ்வாறு பொருள் கூறாது, கொள்ளுங்கில் எனக்கொண்டு, கொள்ளும் ஆற்றல் உடையான் எனப் பொருள் கூறுவாரும் உளர். சொல் அமைப்பு அங்ஙனம் பொருள் கோடற்கு இடம் தராது என்பது உய்த்து உணர்வார்க்குப் புலனாம். எங்கும் நிறைந்த இறைவன், அன்பர்க்கு இன்ப மயமான அருள் அமுதை ஊட்டும் குறிப்புத் தோன்றுமாறு அடையாள மாலை அணிந்து இருத்தலின், யான் ஆற்றன் மிக்க அன்பால் அழையாத நிலையினும், மெய்யன்பு உடையாரைக் கூவி அழைத்துப் பணி கொள்ளுதல்போல, என்னையும் பணி கொள்ளுவானோ என்பது இத் திருப்பாட்டின் திரண்ட கருத்து என்க.

இதன்கண், ஆண்டவன் மெய்யன்பரை அழைத்துப் பணி கொள்ளுமாறு போல, ஆற்றல் மிக்க அன்பு இல்லாத என்னையும் பணி கொள்ளுவானோ என்று அடிகள் ஐயுறுதல் கூறப்பட்டு இருத்தலானும், அவ் ஐயத்தின்

துணிவாக, "இரும்புதரு மனத்தேனை ஈர்த்து ஈர்த்து" என்றபடி, வலிந்து ஆட்கொள்ளவும் கூடும் என்பது பின்னர்ப் பெறப்படுதலானும், அங்ஙனம் ஆட்கொண்டால் அதற்குக் கைம்மாறு யாது செய்வது என்று கருது முகமாகக் **கைம்மாறு கொடுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக. பதிகப் பொருளைப் பாட்டின் குறிப்புப்பொருளில் தோன்ற வைத்தல் உயர்ந்த கவி மரபு என்பதும் தெளிக.

47. எந்தை யாயெம் பிரான்மற்றும் யாவர்க்குந்
தந்தை தாய்தம் பிரான்தனக் கஃதிலான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவருஞ்
சிந்தை யாலும் அறிவருஞ் செல்வனே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவன் மெய்யன்பரைக் கூவி யழைத்துப் பணி செய்வித்துக் கொள்ளுதல் போலத் தம்மையும் பணி கொள்ளுவாரோ என்று ஐயுற்று வருந்திய அடிகள், இத் திருப்பாட்டில் தாம் அடிமையாதற்கு முன்னரே, தம் முட் புகுந்து ஆட்கொள்ளத் தொடங்கிய பேருதவியை நினைந்து ஆறுதல் அடைகின்றார்.

**ப-ரை:** எந்தை ஆய் எம்பிரான்—எனக்குத் தந்தையும் தாயும் தலைவனும் ஆயவன், மற்றும் யாவர்க்கும் தந்தை தாய் தம்பிரான்—மற்றைத் தேவர் மக்கள் முதலிய எல்லோர்க்கும் தந்தையும் தாயும் தலைவனும் ஆவன், தனக்கு அஃதில்லான் — தனக்குத் தந்தையும் தாயும் தலைவனும் ஆகிய அம் முறை உரிமை இல்லாதவன், யாவரும் சிந்தையாலும் அறிவு அரும் செல்வன் — அமரர் முதலிய எல்லோரும் மொழிகளால் அன்றி மனத்தாலும் அறிதற்கு அரிய ஞான ஐசுவரியம் உடைய பெருமான், முந்தி யென்னுட் புகுந்தனன்—யான் அடிமையாதற்கு முன்னரே என்னுட் புகுந்து ஆட்கொள்ளத் தொடங்கினன் என்பது.

**வி-ரை:** மக்களுக்கு இம்மை வாழ்க்கையில் நெருங்கிய தொடர்பு உடையார், தந்தையும் தாயும் தலைவனும் ஆவர்.

தந்தை வித்தும், தாய் நிலமுமாகத் தோன்றிய கான்முளை ஆதலின், ஒரு மகனுக்கு அவ் இருவரும் இன்றி அமையாத தொடர்புடையர் ஆவர். பின்னர்த் தலைவன் தொடர்பு வேண்டற்பாலது. ஒருவற்குத் தலைவன், குடித்தலைவன், கல்வித் தலைவன், தொழில் தலைவன், தேயத்தலைவன், ஞானோபதேசத் தலைவன் எனப் பலவகைப்படுவன். அத் தலைமைகளுட் சிலவும் பலவும் தந்தையால் அமைதலும் உண்டு. வளர்த்தற்குத் தாயும், அறிவு கொடுத்தற்குத் தந்தையும், நன்னெறி நிறுத்தற்குத் தலைவனும் ஒரு மகனுக்கு இன்றியமையாதவர் ஆவர். உடலைப் பற்றிய இம் முத்திறத் தொடர்பு உடையாரும், பிறவிதோறும் வேறு வேறு ஆவர். உயிரைப்பற்றிய தொடர்பை நினையுங் கால், அங்ஙனம் வேறுபடாமல், என்றும் ஒரே நிலையில் உள்ள உண்மைத் தந்தையும் தாயும் தலைவனும் சிவபெரு மான் ஒருவனே ஆவன். அடிகள் [1]"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி" என்றபடி, தம் உயிர்க்குக் கீழ்ப் பிறவி களில் நின்றும், இத்துணை உயர்ந்த மக்கட் பிறவியை அளித்து, அறிவு நல்கி, நன்னெறிப் படுத்திய பேருதவியை நினைந்து, உடல் உரிமையை விட்டு, உயிர் உரிமை கருதித் தமக்கு உண்மைத் தந்தையும் தாயும் தலைவனும் அப் பெரு மானே என்னும் தெளிவு கைவரப் பெற்றவராய், "எந்தை யாய் எம்பிரான்" என்றார். தம் அளவில் சிறப்புரிமையில் முதலில் கண்டார். பின்னர், மற்றையோர்க்கும் தந்தை முதலியோராக இருத்தலை ஆராய்ந்து, அன்னார்க்கும் உயிர்த் தொடர்பை நோக்க, உண்மைத் தந்தையும் தாயும் தலை வனும் அப் பரமபதியே என்பதைத்தெளிந்து, "யாவர்க்கும் தந்தை தாய் தம்பிரான்" என்றார். ஆர்வ மிகுதியால் முதலில் தம் அளவிற் கண்டார். பின்னர், எண்ணி எண்ணி முடிவாகக் கண்டது, மற்றும் யாவர்க்கும் தந்தையும் தாயும் தலைவனும் அப் பெருமானே என்பது.

ஒருவன், மகனை நோக்கத் தான் அவன் தந்தை ஆதல் போல, அத் தந்தையை மகனைக் கருதுங்கால், அவற்கு

1. திருவாசகம், சிவபுராணம் 26.

உரிய தந்தையும் தாயும் தலைவனும் இன்னாரென்பது வெளி யாகும் அன்றோ? அந் நிலையில், தமக்கும் மற்ற எல்லோர்க்கும் தந்தை தாய் தலைவனாக உள்ள அப் பெருமானுக்கும், தந்தை முதலியோர் யாராக இருக்கலாம் என்று நினைந்து கூறுகின்றார், "தனக்கு அஃதிலான்" என்று. "அஃது" அஃறிணை ஒருமைச் சுட்டு. அச் சுட்டு, தந்தை முதலிய முறை உரிமையின் மேல் நின்றது. இறைவன் தனக்கு ஒரு தந்தை தாய் தலைவனை ஏன் பெறாமல் இருக்கின்றான் எனின், அமரர், முனிவரர் எல்லோர்க்கும் பிறப்பு இறப்புக்கள் கேட்கப்பட்டன. பரமசிவன் ஓரிடத்துப் பிறந்தான் இறந்தான் என்பது கேட்கப்படாதது ஒன்றாதலால், பிறப்பு இல்லாதானுக்குத் தந்தை தாய் என்னும் முறை உரிமை இல்லை என்பது வெளிப்படை அன்றோ? தலைமை இலக்கணம் முற்றும் அமைந்தவன் சிவபெருமானே என்பது திருவாசகத் திருப்பாடல்கள் பலவற்றால் அறியப்படுவதொன்று. அதனால், தனக்குத் தலைவன் ஆம் முறை உரிமையும் இல்லாதவன் என்பது தெளிவு ஆம். தந்தை தாய் தம்பிரான் என்னும் மூவரும் உயர் திணைப் பொருள் ஆகலான், அதற்கேற்ப, "அவர் இலான்" என்று கூறியிருக்கலாம். அங்ஙனம் கூறாது, பெற்றோரே அன்றி, வளர்ப்பு முதலியவற்றால் தந்தை முதலிய முறை உரிமைக்கும் சிறிதும் இடன் இன்று என்பது போதர, முறை உரிமையின் பால் வைத்து, அஃறிணையாக, "அஃதிலான்" என்றார் என்பது. "யாவரும்" என்றது, பிரமபதம் முதலிய அதிகார நிலையங்களில் அணுக்கராக இருக்கும் அமரர் முதலியோரையும், புற்றுமாய் மரமாய்ப் புனல் காலே உண்டியாக உடைய முனிவரர் முதலியோரையும் குறிக்கும். அன்னார் எல்லோரும் கண்களால் காண்டற்கும், ஏதுக்களாலும் எடுத்த மொழிகளாலும் அளந்து அறிதற்கும் அரியன் ஆதலே அன்றி, மனத்தால் நினைந்து அறிதற்கும் அரியன் ஆயினன் என்பது தோன்ற, "சிந்தையாலும் அறிவருஞ் செல்வன்" என்றார். "சிந்தையாலும்" என்புழி, உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. காண்டல்

அளவைக்கும், உரை அளவைக்கும் எட்டாத பொருளைக் கருதல் அளவையால் துணியலாம் ஆயினும், இறைவன் அங்ஙனமும் துணிதற்கு உரியவன் அல்லன் என்பது குறிப்பு. மனத்தாலும் சிந்திக்க முடியாத ஒரு பொருள், யாண்டும் இல்லாத இன்மைப் பொருளாக அன்றோ முடியும்? என்பார்க்கு, அங்ஙனம் அன்று; அறிவில் பொருள்களை அறியும் கருவிகளைக் கொண்டு, அறிவுடைப் பொருளை அறியத் துணிதல் இயலாத தொன்று என்பதே ஈண்டுக் கருத்தாகும். அன்றி, மெய்யுணர்வினால் அறியத் தக்க இறைவன், என்றும் உள்பொருளாக மாத்திரம் இருத்தலே அன்றித் தன்னை அடைந்தார்க்கு வழங்குதற் பொருட்டு ஞான ஐசுவரியப் பேரானந்தப் பெரும் செல்வமும் உடையன் என்பது தோன்ற, ''செல்வன்'' என்றார்.

இறைவன் தம் உள்ளத்தே புகுந்து ஆட்கொண்டது, அப் பெருமான் தங்குதற்கு உரிய தம் உள்ளத்தில் ஞான விளக்கம் இல்லாத பொழுது என்பார், ''முந்தி யென்னுள் புகுந்தனன்'' என்றார். [1] ''அறிவிலாமை யன்றே கண்டதாண்ட நாள்'' என்பது அடிகள் திருவாக்கு. இனி, மேற்பதங்களில் உள்ள பிரமன் முதலிய அமரர்களும், தவச் செல்வர்களாகிய முனிவரரும் இறைவனை அறிந்து கொள்ளுதற் பொருட்டுத் தம் சிந்தைகளை அவன்பால் ஏவினராக, அவற்றிற்கு எட்டாத அப் பெருமான், அன்னார் சிந்தனைகள் சென்று அணுகுதற்கு இல்லாத ஓர் ஒதுக்கிடத்தில் ஒளித்தல் கருதியே, தம் சிந்தையுட் புகுந்தனன் என்பார், ''முந்தி யென்னுட் புகுந்தனன்'' என்றார் என்பதுமாம். ஈண்டு, ''முந்தி'' என்பது, அமரர், முனிவரர் சிந்தனைகள் இறைவனைத் தொடர்ந்து பற்றுதற்கு முன்னரே என்னும் பொருள் உடையதாகும். உயர் பதங்களில் உள்ள அமரர், முனிவரர் முதலியோர் இறைவனை ஆராயப் புகுங்கால், மறைத் திறங்களை நோக்கியும், தம்மின் மேலான பதங்களில் உள்ளவர்களின் சார்பு பற்றியும் முற்படுவாரே அன்றி, தம்மில் கீழ் நிலையில் உள்ளார்க்கு இறைவன்

---

1. திருவாசகம், திருச்சதகம் 50.

காட்சி நேராது என்னும் துணிபு உடையராய், அன்னாரைக் கருதுவது இல்லை. உலகத்தில் மிகு விலையுள்ள மணியொன்றைப் பெற விரும்புவோன், பொருள் மிகப்படைத்த வாணிகர் இடத்து அன்றிச் சுருங்கிய பொருளினை உடைய எளியவரைப் பொருட்படுத்தி அடையான் என்பது அனுபவத்தில் கண்டது. அமரர், முனிவரர் சிந்தனைகள் எல்லாம் இறைவனை அறிதற்குத் தொடர்ந்து செல்ல, அவர் சிந்தனை செல்லப் பெறாத இடம் என்று தம் சிந்தனையைக் கண்டு, அவர் காணுவாறு விரைந்து மறைந்தனன் என்னும் குறிப்புத் தோன்ற, "முந்தி" எனவும், "புகுந்தனன்" எனவும் அருளிச் செய்தனர். "முந்தி" என்பது ஈண்டு விரைந்து என்னும் பொருள் பயந்து நிற்பதாகும். தம் நெஞ்சு இறைவன் புகுதற்குத் தகாத ஊன் ஆர் உடற் கண்ணதாயினும், மற்றையோர் சிந்தனைக்கு எட்டாமல் ஒளிந்து கொள்ளும் குறிக்கோள் ஒன்றே பற்றித் தமக்கு அகப்பட்டனன் என்று அடிகள் கருதினர் என்பது, "புகுந்தனன்" என்னும் சொல் ஆற்றலால் பெறப்படுவதாகும்.

இதன்கண், யாவரும் சிந்தையாலும் அறிவரும் செல்வன், முந்தி யென்னுட் புகுந்தனன் என்று கூறியதனால், அங்ஙனம் வலிந்து புகுந்து ஆட்கொண்ட பேருதவிக்கு யாது கைம்மாறு செய்ய வல்லேன் என்பது தோன்றி நிற்றலின், **கைம்மாறு கொடுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "எந்தையா யெம்பிரான்" என்றதனால், **பத்தி விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

48. செல்வம் நல்குர வின்றிவிண் ணோர்புழுப்
புல்வரம் பின்றி யார்க்கும் அரும்பொருள்
எல்லை யில்கழல் கண்டும் பிரிந்தனன்
கல்வ கைமனத் தேன்பட்ட கட்டமே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் தாம் ஆண்டவனை அறிந்து அடிமைப் பணி செய்தற்கு முன்னரே தம்முட் புகுந்து அருளிய அருமைப் பாட்டை வியந்து கூறிய

அடிகள், அங்ஙனம் வலிய வந்து புகுந்த அப்பெருமானுடைய திருவடிக் காட்சி கரந்த நிலையில் தாம் எய்திய துன்பம் பெரிது என இத் திருப்பாட்டில் இரங்கிக் கூறுகின்றார்.

**ப-ரை:** செல்வம் நல்குரவு இன்றி — நல்வினைப் பயனாகிய செல்வம் உடையார் தீவினைப் பயனாகிய வறுமை உடையார் என்னும் ஏற்றத்தாழ்வு இன்றியும், விண்ணோர் புழுப் புல் வரம்பு இன்றி—நல்வினைப் பயனே நுகரும் தேவர் தீவினைப் பயனே நுகரும் புழுப் புல் என்னும் வரையறை இன்றியும், யார்க்கும் அரும்பொருள்—இயங்கு திணை நிலைத் திணைகளாகிய எவர்க்கும் எவைக்கும் அடைதற்கு அரிய பரம்பொருளினுடைய, எல்லையில் கழல் கண்டும் பிரிந்தனன் — அளவுட்படாத திருவடிகளைத் தரிசிக்கும் பேறு பெற்றும் நீங்கினேன் (இப்பிரிவு), கல்வகை மனத்தேன் பட்ட கட்டமே—கல்லின் வகைகளுள் ஒன்று எனக் கருதப்படும் வலிய நெஞ்சத்தை உடையேன் எய்திய துன்பம் ஆகும் என்பது.

**வி-ரை:** யார்க்கும் அரும் பொருள் என்பது, உபலக்கணத்தால் எவைக்கும் அரும் பொருள் என்பதையும் புலப்படுத்தும். யாரும் எவையும் என்பன, முறையே உயர்திணைப் பொருள்களையும், அஃறிணைப் பொருள்களையும் உணர்த்தி நிற்றலால், இயங்குதிணை, நிலைத்திணையாகிய உலகம் எல்லாவற்றையும் குறிக்கும். நல்வினைப் பயனே நுகர்வனவும், தீவினைப் பயனே நுகர்வனவும், இரண்டனையும் கலந்து நுகர்வனவும் என உயிர்கள் முத்திறப்படும். அவற்றுள் நல்வினை, தீவினை இரண்டையும் கலந்து நுகரும் மக்கள் உயிர்களைக் கருதி, "செல்வம் நல்குரவு" என்றனர். புண்ணியம் விஞ்சப் பெற்றார் செல்வரும், பாவம் விஞ்சப் பெற்றார் வறியரும் என மக்கட் பிறப்பினர் இருதிறப்படுவர். ஆகவே, "செல்வம் நல்குரவு" என்பன ஆகு பெயராக நின்று, அவற்றை உடையாரை உணர்த்தி நின்றன.

இதன் முன்னைத் திருப்பாட்டில் இறைவன், "அறிவருஞ் செல்வன்" என்று கூறப்பட்டான். உலகத்தில் ஒரு செல்வனைக் காண்டல் மற்றொரு செல்வற்கு எளிது அன்றோ? ஆதலின், இறைவனாகிய செல்வனை, நல்வினைப் பயன் காரணமாக உள்ள செல்வன் காண்டல் எளிதாமே எனின், இறைவன் அருட் செல்வன்; மக்கள் பொருட் செல்வர்; ஆதலிற் காண்டல் எளிது அன்று என்பதைப் புலப்படுத்தவே, இப்பாட்டில் செல்வம் என்று தொடங்கப்பட்டது. இறைவனைக் காண்டற்குப் புண்ணியப் பயனாகிய செல்வமும், பாவப் பயனாகிய நல்குரவும் காரணம் ஆகா; மெய்யுணர்விற்கு உரிய தவமே காரணம் ஆகும். ஆதலின், அத்தவம் இலாராகிய செல்வராற் காண்டற்கு அருமையும், அஃதுடைய நல்குரவாளராற் காண்டற்கு எளிமையும் ஏற்படலாம் என்பது போதர, "செல்வம் நல்குரவின்றி" என்றனர்.

இனிப் புண்ணியப் பயனே நுகரும் உயிரைக் குறிக்க, "விண்ணோர்" எனவும், பாவப்பயனே நுகரும் உயிர்களைக் குறிக்க, "புழு" எனவும் கூறி அருளினர். விலங்கின் பிறப்பை நரக கதியாகக் கூறும் மரபு உண்மையின், புழு என்பது நரகரைக் குறிக்கும். இத்துணையும் மூத்திற உயிர்களுள் இயங்கு திணைப்பாற் பட்டவை கூறப்பட்டன. நிலைத்திணைக்குப் "புல்" என்றனர். அஃது உபலக்கணத்தால், மரம், செடி முதலிய ஏனைய பொருள்களையும் உணர்த்தும். தேவர்கள் நல்வினை மிக்கார் ஆயினும், இன்பமே நுகர்தலில் செருக்குற்று நிற்றலின், அவர்க்கும், ஓர் அறிவு உயிர்களாகிய புழுப்புல் முதலியன மிகவும் கீழ்ப் பிறவிகள் ஆதலின், அவை அபுத்தி பூர்வமாகச் செய்யும் நல்வினைகள் காரணமாக, மேன்மேல் சென்று நற்பிறப்பு எய்தவேண்டும் ஆதலின், அவற்றிற்கும் இறைவன் அடைதற்கு அரிய பொருள் ஆவான் என்பது தெளிக. நல்வினைப் பயனால் நலம்பெற்று வாழும் விண்ணோர்க்கு இறைவன் காட்சி எளிது எனவும், தீவினைப் பயனால் துன்புறும் புழு முதலியவற்றிற்கு அக்காட்சி

அரிது எனவும் கொள்ளல் ஆகாது. இறை அருட் பார்வைக்கு இலக்கு ஆகும் தூய்மை பெற்ற உயிர் யாது ஆயினும், அதற்கு எளிது ஆகலாம் என்பது புலப்படுக்க, "விண்ணோர் புழுப்புல் வரம்பின்றி" என்றார். ஆகவே, இத்திருப் பாட்டின் முதலடியில் புண்ணிய பாவப் பயன் களைக் கலந்து நுகரும் மக்களைக் குறித்தற்கு, "செல்வம் நல்குரவு எனவும், புண்ணியப் பயனை நுகரும் தேவர்களைக் குறித்தற்கு, "விண்ணோர்" எனவும், பாவப் பயனை நுகரும் உயிர்களைக் குறித்தற்கு, "புழு" எனவும் இம் முத்திறமும் இயங்கு திணைகளாக, நிலைத்திணையைக் குறித் தற்கு, "புல்" எனவும், இவ்வரையறை தோன்றக் கூறப் பட்டன எனக் கொள்க.

1 "பாதாளம் ஏழினுங் கீழ்ச் சொற்கழிவு பாதமலர்" என்றது பற்றி, இறைவன் திருவடி, "எல்லையில் கழல்" என்று கூறப்பட்டது. வரம்புட்பட்ட பொருளைக் காணும் தம் கண்களுக்கு, வரம்புட்படாத இறைவன் திருவடிக் காட்சி எளிது அன்று ஆகவும், அப்பெருமான் அருட் பார்வைக்கு இலக்கான பேறு காரணமாக எளிதாகக் காணப்பெற்றேன் என்பார், "எல்லையில் கழல் கண்டும்" என்றார். இனி, திருவடியை மெய்ஞ்ஞானம் எனவும், இறைவனது அருட்சத்தி எனவும் சிவாகமங்கள் கூறும். ஆதலின், "எல்லையில் கழல்" என்பதற்கு, மாற்ற மனங் கழிய நின்ற இறைவனது திருவருள் எனக் கோடலும் ஒன்று. கண்டும் என்புழி உம்மை, காண்டலின் அருமை யைப் புலப்படுத்து நின்றது. பெறல் அரும் பொருளைத் தேடி அலைவான் ஒருவன், அப்பொருள் காணப்படாத இடங்களைக் கண்டு கண்டு நீங்கிச் சேறலும், தான் கருதிய பொருளை அரிதிற் காணப்பெற்றான் ஆயின், அதனை விட்டு நீங்காமல் இருத்தலும் உலகியலில் கண்டன. ஈண்டு, அடிகள் அரிய தவம் கிடந்தும், காண்டற்கு அரிய இறை வனுடைய எல்லையில் கழல்களை எளிதிற் காணப்பெற்றும் பிரிய நேர்ந்ததே என்று அடங்காத வருத்தமேற்கொண்டு,

1. திருவாசகம், திருவெம்பாவை 10.

"கண்டும் பிரிந்தனன்" என்றார். கண்ணிலான் பெற்று இழந்த கதை ஆயிற்று என்பது குறிப்பு.

அரியதொரு பொருளைப் பெறாத நிலையில் உண்டாம் துன்பத்தினும், பெற்று இழந்த காலை உண்டாம் துன்பம் பெரிது அன்றோ? இங்ஙனம் எல்லையில் கழல் கண்டும், பிரிந்த இந்நிலையே தமக்குப் பெரும் துன்பமாக முடிந்தது என்பார், "பட்ட கட்டம்" என்றார். இன்ன துன்ப நிலை ஆற்றொணாதது என்பதை, [1] "என் தலைவனை நனி காணேன், தீயில் வீழ்கிலேன் திண் வரை உருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே" என்று அடிகள் பிறிதோரிடத்து அவலித்துக் கூறிய செய்தியானும் அறிக. மனம் சடப்பொருள் ஆயினும், உருவம் உடையது அன்று; உருவம் இல்லாது இருந்தும், குழைவு சிறிதும் இன்மையால், உருவம் உடையதாய் உலகிற் காணப்படும் கல் வகைகளுள் ஒன்று ஆயிற்று என்பார், "கல்வகை மனத்தேன்" என்றார். [2] "கல்லை மென்கனியாக்கும் விச்சை கொண்டு என்னை நின் கழற்கு அன்பன் ஆக்கினாய்" என்பது அடிகள் திருவாக்கு. "கல் வகை மனத்தேன் பட்ட கட்டம்" என்பதில், இரங்கிக் குழையும் இயல்பு சிறிதும் இல்லாத வன்னெஞ்சம் உடைய தமக்கு இத் துன்பம் நேர்தல் பொருத்தமே என்று அவலத்தில் ஆறுதல் தோன்றி நின்ற குறிப்புண்மையும் அறிக. கட்டம் என்னும் பெயர்ப் பயனிலைக்கு எழுவாய், பிரிந்தனன் என்னும் வினை முற்றில் தோன்றிய அப்பிரிவு என்பது ஆகும். அப்பிரிவு எனக்குப் பெரும் துன்பம் ஆயிற்று என்பது கருத்து.

இதன்கண், யார்க்கும் அரும் பொருளின் எல்லையில் கழல் கண்டும் பிரிந்தனன் என்புழி, அக் காட்சி அரியதாகவும், எளிவந்த கருணைக்கு ஈடுபட்டு வேறு கைம்மாறு செய்திலேன் ஆயினும், அதனினின்றும் பிரியாமையே என்னால் ஆகிய கைம்மாறாகவும், அது தானும் செய்ய இயலாதவன் ஆயினேன் என்னும் அடிகள் இரக்கக் குறிப்புத் தோன்றி நிற்றலின், கைம்மாறு கொடுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாயவாறு அறிக.

1. திருவாசகம், திருச்சதகம் 39. 2. திருவாசகம், திருச்சதகம் 94.

49. கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ
றிட்ட அன்பரொ டியாவருங் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டி னோடிரண் டும்அறி யேனையே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் இறைவன் திருவடிக் காட்சி பெற்றும் பிரிய நேர்ந்த துன்பத்திற்கு வருந்திய அடிகள், இத் திருப்பாட்டில் உண்மை அடியார்கள் கண் கூடாகக் காணும்படி தம்மை வித்தியா மண்டபத்தில் ஏற்றி, அறிஞரோடு இருந்து, சமய உண்மைகளை ஆராய்ச்சி செய்ய உதவிப் பெருமைப் படுத்திய நிகழ்ச்சியை நினைந்து, திருவருளைப் பாராட்டி ஆறுதல் அடைகின்றார்.

ப-ரை: ஏற்றினை—ஊர்தியாகப் பெற்ற எருதினையுடையாய், எட்டினோடு இரண்டும் அறியேனை என்னை—எட்டும் அதனோடு இரண்டும் சேர்த்து எண்ண அறியாத சிறியேனாகிய என்னை, கட்டு அறுத்து ஆண்டு—பாசப்பிணிப்பை அகற்றி அடிமை கொண்டு, நீறு இட்ட அன்பரொடு யாவருங் கண்ணாரக் காண—திரு நீறு அணிந்த மெய்யடியாரோடு மற்றை அன்பர்களும் கண்கூடாகக் காணும்படி, பட்டி மண்டபம் ஏற்றினை—சமய வாதம் புரிதற்குரிய வித்தியா மண்டபத்தில் ஏறி வீற்றிருக்கச் செய்தனை, இதற்கு யான் செய்யத் தக்க கைம்மாறு யாது உளது? என்பது.

வி-ரை: ஏற்றினை என்பது முன்னிலைப் பெயர். இடப ஏறு அறத்தின் வடிவம் என்றும், அதனை நடாத்துபவன் இறைவன் என்றும் சிவாகமங்கள் கூறும். மேலும், ஆதார ஆதேயப் பாதுகாப்பிற்கு அடையாளமாக ஊரப்பட்டதும், எடுக்கப்பட்டதும் அவ் ஏறே என்பார், [1] "ஊர்திவால் வெள் ளேறே சிறந்த, சீர் கெழு கொடியும் அவ் ஏறு என்ப" என்பது காண்க.

உலகியலில் அறிவு இல்லாதவன் ஒருவனைக் குறித்து, "எட்டும் இரண்டும் எவ்வளவு" என்று கேட்டால்,

1. புறநானூறு, கடவுள் வாழ்த்து.

சொல்ல அறியாதவன் என்று இழித்து உரைத்தலைக் கேட்கின்றோம். அதனையே அடிகள் தம்பால் ஏறிட்டு, "எட்டினோடிரண்டும் அறியேனை" என்று கூறினர். இனி, எட்டினோடு என்பதற்கு, அகரத்தோடு எனவும், இரண்டும் என்பதற்கு உகர மகரங்கள் எனவும் பொருள் கொண்டு, அகர உகர மகரங்களின் இயைபு ஆகிய பிரணவ மந்திரம் எனக் கோடலும் ஒன்று. தமிழில் உள்ள எண்ணைக் குறிக்கும் வடிவங்களில், எட்டு அகர வடிவாகவும், இரண்டு உகர வடிவாகவும், "இரண்டும்" என்புழி, இறுதி மகர வொற்றாகவும் இருத்தல் அறிக. ஏனைய தேவர்களைக் குறிக்கும் மந்திரங்கள் பிரணவத்தோடு எண்ணப்பட்டே, எட்டு எழுத்து முதலிய பெயர் பெறும். சிவ மந்திரமாகிய திரு வைந்தெழுத்துப் பிரணவத்தின் விரிவே ஆதலின், பிரணவம் இன்றியும் ஐந்தெழுத்தாக நிலை பெறுவதாகும். ஆதலின் பிரணவத்தின் இயல்பு அறியாதவன் என்பதற்குச் சிவ மந்திரமாகிய திரு வைந்தெழுத்தின் இயல்பு அறியாதவன் என்பது பொருள் ஆகும் என்க. இவ் வுண்மையை, [1] "எட்டும் இரண்டும் இனிது அறிகின்றிலர், எட்டும் இரண்டும் அறியாத ஏழையர், எட்டும் இரண்டும் இரு மூன்று நான்கு எனப், பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே" என்று விளக்கிக் கூறுவர் திருமூலர். ஈண்டு, எட்டும் இரண்டும் பிரணவம் என்று அறியாத ஏழையர் இரு மூன்று நான்கு என்பர் என இழித்துக் கூறியதும் அறிக.

பட்டி மண்டபம்—சமய உண்மைகளைத் தடை விடைகளின் வைத்து ஆராய்தற்கு உரிய வித்தியா மண்டபம் ஆகும். [2] "பகைப் புறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்" என்று சிலப்பதிகாரமும், [3] "ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள், பட்டி மண்டபத்துப் பாங்கு அறிந்து ஏறுமின்" என்று மணிமேகலையும் கூறுமாறு அறிக. இதற்கு இவ்வாறு பொருள் கூறாது, பட்டி—நாய்; நாயை மண்டபத்து ஏற்றியது போல என்று வேறுபடக் கூறுவாரும் உளர்.

1. திருமந்திரம், செ 986. 2. சிலப்பதிகாரம், இந்திர. அடி 102.
3. மணிமேகலை, விழாவறை காதை, அடி 60.

அக் கருத்துப் பொருந்தாது என்க. 'எட்டினோடு இரண்டும் அறியாத சிறியேனைச் சமய உண்மைகளை ஆராய்ந்து தெளிதற்கு உரிய சமய வாதிகள் கூடும் பட்டி மண்டபத்தில் வீற்றிருக்கச் செய்தனை' என்று இறைவன் அருட் பெருக்கை வியப்பாராய், "பட்டி மண்டபம் ஏற்றினை" என்றார். அம் மண்டபத்தில் வீற்றிருக்கும் தகுதிப் பேறு குறித்து, "கட்டறுத் தெனையாண்டு" என்றார். அறியாமைக்கு ஏதுவாகவுள்ள பாசப் பிணிப்பை ஒழித்து, ஆளாகக் கொண்டு என்பது அத்தொடரின் பொருள். அறியாமைக்கு ஏதுவாகவுள்ள பாச நீக்கத்தால், சமய நூல் அறிவு முதலிய ஞான விளக்கமும், ஆட்கொண்டமையால், அநுபவ உணர்வும் உண்டாதல் தெளிக. எல்லா வகையாலும் மேம்பாடு எய்தி விளங்கும் பெரியவன் ஒருவன், மிகவும் சிறியவன் ஒருவனைத் தனிமையில் பலபடப் பாராட்டிப் பேசி, பலர் கூடிய அவைக் களத்தில் புறக்கணிப்பது மிகவும் கொடிய செயல் என்பர். [1] "எனைத் துங்குறுகுதல் ஓம்பல் மனைக் கெழீஇ, மன்றிற் பழிப்பார் தொடர்பு" என்று நீதி நூல் அத்தகைய கொடியவர்களின் தொடர்பு வெறுக்கத்தக்கது என்று கூறுதலும் அறிக. அங்ஙனம் அன்றிக் குற்றம் உளதேல், தனிமையில் வைத்து ஒறுத்துரைத்தும்,மன்றில் குணம் பாராட்டியும் பெருமைப் படுத்தலே உண்மைப் பெரியார் இயல்பு ஆகும். அம் முறையில் பலரும் அறியத் தம்மைப் பட்டி மண்டபம் ஏற்றியது பெருமைப் படுத்தியது என்பார், "யாவருங் காண" என்றார். காண்பார் பலராயினும், தகுதியுடையார் அல்லர் ஆயின், அன்னார் காண்டலால் வரும் சிறப்பு யாதும் இன்றாம். காண்பவர் பெருமைப் படுத்தப்படுபவரின் உள்ளம் மகிழத்தக்க தகுதி உடையராய் இருத்தல் வேண்டும். உள்ளம் ஒத்தவர் மதிப்பையே தூய சிந்தை உடையார் விரும்புவர் என்பதற்குத் தம்பிரான் தோழர் காட்சியில் ஈடுபட்ட பரவையார் இயல்பே சான்று ஆகும். சுந்தர மூர்த்திகளைத் திருக்கோயிலிற் கண்டு, காதல்

---

1. திருக்குறள் 820.

அரும்பப் பெற்ற பரவையார், தம் இல்லத்திலிருந்து விரக தாபத்தால் வாடி, அருகு இருந்த தோழியை நோக்கி, 'திருக்கோயிலிற் காணப்பட்டவர்யார்'என்றுகேட்டலும், அத் தோழி, 1 "சைவமுதற் றிருத்தொண்டர் தம்பிரான் தோழனார் நம்பி" என்றாளாம். இவ்வுரை கேட்ட அளவில் பரவையார்க்கு வன்றொண்டர் பால் வைத்த மனக் காதல் அளவின்றி வளர்ந்து பொங்கிற்றாம். இந் நிகழ்ச்சியில் ஓர் உண்மை காணப்படும். ஒரு மணப் பெண்ணுக்குக் கணவன் இயல்பைக் கூறுவோர், கட்டழகும் இளமையும் செல்வமும் உடையன் என்பாராயின், அப் பெண்ணிற்கு உளம் பூரித்துக் காதல் வளரும். அங்ஙனம் அன்றி, மண மகன் சிவ பத்தன்; திருநீறு கண்மணி புனைவோன் என்று கூறக் கேட்பின், காதல் வளர்ச்சிக்கு இடன் உண்டாமா? இஃது உலகியற் செய்தியாகும். இங்கே, பரவையார் உள்ளமும் சுந்தரமூர்த்திகள் உள்ளமும் உலகியலைக் கடந்து, சிவபெருமானிடத்து அன்பு பூண்டு தூய்மை அடைந்தன ஆதலின், ஒத்த இயல்பின ஆகும். அதனாலே, சிவனடியார் என்றலும் காதல் வளர்ந்து பொங்கிற்று என்றார். வேறு எவ்வகையாகச் சுந்தரர் வருணிக்கப்படி னும், அம்மையார்க்குக் காதல் கால் ஊன்றாது என்க. அங்ஙனமே, ஈண்டு அடிகளின் உள்ளம் மகிழத் தக்கவர் நல் அன்பர் ஆதலின், "அன்பரொடு யாவருங் காண" என்றார். "ஒடு" உருபு உயர்ந்த பொருளைச் சார்ந்து வரும் என்ற விதிப்படி, "யாவரும்" என்னும் சொல்லாற் குறிக்கப் பட்டாரினும், அன்பர் சிறந்தவர் என்பது ஈண்டுக் கருதத் தக்கது.

இனி, அன்பர் என்பது, உலகியலில் தாய் தந்தை மனைவி மக்கள் நண்பர் முதலியோரிடத்துஅன்பு உடையா ரையும் குறிக்கும். ஆதலின், அத்தகைய அன்பர் காண, அடிகள் பெருமைப் படுத்தப்பட்டார் என்பதனால், அடி களுக்கு வரும் உவகை யாதும் இன்றாம். அடிகள் சிவ னடியவரைச் சிவன் என மதிக்கும் பெற்றி வாய்ந்த

1. பெரிய புராணம், தடுத்தாட், செ. 171.

பெரியார் ஆதலின், சிவன் இடத்து அன்பு உடையாரையே பெரியர் என அவர் உள்ளம் விழையும் என்பது தெளிவு ஆம். அம் முறையில், "நீறிட்ட அன்பர்கள்" என்று அருளிச் செய்யப்பட்டது என்க. "நீறிட்ட அன்பர்கள்" என்புழி, நீறிட்டமையால் புறம் தூய்மையும், அன்புடைமையால் அகம் தூய்மையும் பெற்றும். ஆகவே, புறமும் அகமும் தூய்மையுடைய சிவனடியாரையே ஈண்டுக் குறிப்பது என்க. அத்தகைய சிவனடியார், தம்மை இறைவன் பட்டி மண்டபம் ஏற்றுங்கால் எங்ஙனம் கண்டனர் எனின், அவர் தம் கண் குளிர நேரிற் கண்டனர் என்பார், "கண்ணார" என்றார். ஆகவே, தனி நிலையில் தம்மை ஒறுத்து, நன்னெறிப்படுத்து, வெளிப்படையில் உண்மைச் சிவனடியார் பலருடன் மற்றையோரும் கண்ணாரக் காணும்படி வித்தியா மண்டபத்தில் வீற்றிருக்கச் செய்த பேருதவிக்கு யான் செய்யக் கடவ கைம்மாறு யாது உளது என்பது அடிகள் கருத்து என்க.

இதன்கண், 'எட்டினோடு இரண்டும் அறியேனைப் பட்டி மண்டபம் ஏற்றினை' என்று கூறப்பட்டதால், அப் பேருதவிக்கு யான் யாது கைம்மாறு செய்ய வல்லேன் என்பது போதரலின், கைம்மாறு கொடுத்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் வெளிப்பட்டு நிற்றல் அறிக.

50. அறிவ னேயமு தேஅடி நாயினேன்
அறிவ னாகக்கொண் டோஎனை ஆண்டது
அறிவி லாமையன் றேகண்ட தாண்டநாள்
அறிவ னோவல்ல னோஅரு ளீசனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில், "கட்டறுத்தெனை யாண்டு" என்றார். அங்ஙனம் ஆட்கொள்ளுங்கால், ஞான வடிவினன் ஆகிய இறைவன், ஐம்புல வேடரின் அயர்ந்து கிடந்த ஆன்மாவை, "நீ வேடர் மகன் அல்லை; என் மகன் ஆவாய்" என அறிவுறுத்து, அவ் அறிவு நிலை எய்தப்பெற்ற பின்னரே ஆட்கோடல் மரபு. ஈண்டு, என்பால் உள்ள பேர் அருள் காரணமாக,

அம் மரபிற் பிறழ, என் அறிவிலாப் பருவத்தே புகுந்து என்னை ஆண்டனையோ என்று அடிகள் இறைவன் திரு வருள் திறத்தைப் பாராட்டி இன்புறுகின்றார்.

ப-ரை: அறிவனே—ஞான வடிவு உடையவனே, அமுதே—இனிய அமிழ்த மயம் ஆனவனே, அடி நாயினேன் எனை—அடிமையாகிய நாயின் தன்மை உடைய என்னை, அறிவன் ஆகக்கொண்டோ ஆண்டது—அறிவுடையவனாகத் திருவுளம் கொண்டோ ஆட் கொண்டது, ஆண்ட நாள் கண்டது அறிவிலாமையன்றே—அடியேனை ஆட்கொண்ட காலத்தில் என்பாற்கண்டது அறிவிலாமை அன்றோ, அறிவனோ அல்லனோ ஈசனே அருள்—யான் இந்நிலையில் அறிவுடையவனோ அறிவு இல்லாதவனோ எம் பெருமானே இதனைத் தெளிவித்து அருள்புரிவாயாக என்பது.

வி-ரை: முற்றும் உணர்தல், இயற்கை உணர்வினன் ஆதல் முதலிய அருட் குணங்கள் உடைமை பற்றி, இறைவனை, "அறிவனே" என்றார். இறைவனை ஞான வடிவினன் என்று முது நூல் கூறும். வரம்பில் இன்பம் உடைமைபற்றி, "அமுதே" என்றார். "அறிவனே" என்றதனால் ஆண்டவனது அளத்தற்கு அரிய பெருமையும், "அமுதே" என்றதனால், அவன் தன் அன்பர்க்கு இனியனாதலும் புலப்படுக்கப்பட்டபடியாம். ஆண்டவன் யாராலும் அணுகுதற்கு அரிய ஞான வடிவினன் என்றதனால், அவன் அருமையும், அமுதம்போல அடைந்தார்க்கு இனியன் ஆவன் என்றதனால் அவன் எளிமையும் கூறியபடியும் ஆம். அறிவன் ஆதலின் ஆண்டவன் ஆகவும், அமுதமயமாக உள்ளபடியால் அடியவரை அடிமை கொள்பவனாகவும் உள்ளான் என்பதும் குறிப்பிற் போதரும்.

"அடி நாயினேன் எனை" என இயைக்க. நாயின் தன்மை போன்ற இயல்பு உடையன் ஆயினும், நின் அடியைப் பற்றுக்கோடாக உடையேன் ஆதலின்,

விலக்கத்தக்கவன் அல்லன் என்னும் குறிப்புத் தோன்ற, "அடிநாயினேன்" என்றார். "என்னை" என்றது, நினக்கு ஆள் ஆதற்குச் சிறிதும் தகுதி இல்லாத என்னை என்னும் பொருள் பயந்து நிற்பதாகும். சிறந்த தலைவன், மற்றொருவனைப் பணி கொள்ளுங்கால், தன் தகுதிக் கேற்றவாறு குறிப்பு அறிந்து ஒழுகும் அறிவு உடையானை அன்றோ ஏற்றுக்கொள்ளுவான்? உலகியலிற் காணப் படுவதே இங்ஙனம் ஆயின், ஆண்டவன் தொண்டிற்கு உரியார் எத்துணைத்தகுதி உடையராய் இருத்தல் வேண்டும் என்பது கூறவேண்டா. ஆட்கொண்ட பின்னும் தம்மை அறிவிலன் என்று அடிகள் கூற அஞ்சுகின்றார்; [1] "அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும், குன்றேயனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ" என்றபடி, ஆட்கொண்ட காலத்தே உடல் பொருள் ஆவி எல்லாம் இறைவன் உடைமை ஆயினபடியாலும், அவ் இறைவன் உடைமைக் குக் குறை கூறியதாக முடியும் ஆதலானும் என்க. இது பற்றியே, "ஆண்டபின்" என்றது, உடனிகழ்ச்சி யாக, "ஆண்ட நாள்" என்றார். ஆட்கொண்ட நாளில் என்பாற் கண்டது, அறிவு இலாமை அன்றோ என்ற இடத்துக் காண்டற்கு வினைமுதல் இன்னார் எனத் தெளிதல் வேண்டும். கண்டது இறைவன் எனின், இறைவன் காட்சிக்கு அஞ்ஞானம் எப்படிப் புலன் ஆகும்? ஞானாசிரியன் பக்குவம் உள்ள மாணவனுக்கு ஞானோபதேசம் செய்த பின், அவனை நோக்கி, ஆணவ மலத்தின் இயல்பை அறிவுறுத்த நிலையில், அம் மாணவன், "சுடரால் இருள் தேடச் சொல்லார்கள் எந்தாய், சுடரால் இருள் தேடச் சொன்னாய்" என்றானும். விளக்கைக் கொண்டு இருளைத் தேடச் சொல்லியபடி என்பது கருத்து. விளக்கின் முன் இருள் நில்லாமை போல, மெய்யுணர்வின் முன் அஞ்ஞானம் நிலை பெறாமையாற் புலப்படாது என்பது. ஞான நிலை எய்திய

1. திருவாசகம், குழைத்த பத்து 7.

மாணவகனுக்கே இவ் அநுபவம் ஆயின், மெய்ஞ்ஞான வடிவமாக வுள்ள இறைவன் காட்சிக்கு உயிரின் அறியாமை எப்படிப் புலன் ஆகும் என்பது. ஈண்டு, ஆண்டவனே, நீ என்னை ஆட்கொண்ட நாளில் யான் கண்டது என்பால் அறிவு இலாமை அன்றோ? என்பது அடிகள் கருத்து எனக்கொள்ளல் வேண்டும். "ஆண்ட நாள்" என்றதனால், ஆட்கொள்ளத் தொடங்கிய காலம் என்பது போதரும். அதன் பின்னர், நினக்கு ஆட்பட்டமையால் யான் அறிவுடையனாக இருக்கலாம்; ஆனால், ஆட்பட்டும் பிரிய நேர்ந்த நிகழ்ச்சியை நினையுங்கால், அறிவுடையன் அல்லனாகவும் இருக்கலாம் என்று அடிகள் ஐயுற்று, அவ் ஐயுறவு தோன்ற, "அறிவனோ அல்லனோ" என்றார். அடிகள் தம்மைப் பற்றிக் கூறிக்கொள்ளுங்கால், [1] "நான்தனக் கன்பின்மை நானும் தானுமறிவோம்" என்றபடி, அடிமைப் பணிவு தோன்றக் குறைத்துக் கூறுதலிலே கருத்து உடையார் என்பது காணப்படும். ஆதலானும், அம்முறையே தம்மை ஈண்டும் அறிவிலான் என்று கூறின், ஆண்டவன் பெருமைக்கு இழுக்குச்செய்த குற்றம் உளதாம் என்னும் அச்சத்தானும் ஐயுறவு தோன்றக் கூறினார் என்க. இத்தகைய ஐயுறவிற்குத் தெளிவு வேண்டுமாயின், அதனைச் செய்தற்கு ஞான ஐசுவரியச் செல்வனாகிய இறைவனே தலைவன் ஆதல் வேண்டும் என்பார், ஈண்டு, "ஈசனே" என்று விளித்துக்கொண்டார் என்க. விளித்து, இந்நிலையில் யான் அறிவனோ அல்லனோ என்பதைத் தெளிவித்து அருள்க என்பார், "அருள்" என்றார் என்க. என்னை ஆட்கொண்ட நாளில் என்பால் யான் கண்டது அறிவு இலாமை ஆகவும், அந்நிலையில் அறிவனாகத் திருவுளங்கொண்டோ என்னை ஆட்கொண்டது? ஆட்கொண்டபின், நின் காட்சி கரந்ததாதலின், இற்றைஞான்று யான் அறிவனோ அல்லனோ?

1. திருவாசகம், திருக்கோத்தும்பி 18.

இதனைத் தெளிவித்து அருளல் வேண்டும் என்பதே இத் திருப்பாட்டில் அடிகள் கருதிக் கூறியது என்க.

இதன்கண், அடிகள் தம்மை அறிவிலாத நிலையில் ஆட்கொண்டதாகக் கூறி இருத்தலின், இதற்கு யாது கைம்மாறு செய்யவல்லேன் என்பது பெறப்படுதலால், **கைம்மாறு கொடுத்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "அறிவனே யமுதே" என்றதனாலும், "அறிவிலாமை யன்றே கண்டது" என்றதனாலும், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் தோன்றுதல் அறிக. "அறிவனே அமுதே" என்றதற்குப் பத்தியும், "அறிவிலாமையன்றே கண்டது" என்றதற்கு வைராக்கியமும் ஏதுவாதல் அறிக.

## 6. அநுபோக சுத்தி

அநுபோக சுத்தி என்பது, சிவாநுபவ நிமித்தம் உயிர் தன்னைத் தூயதாக்கிக் கொள்ளுதல் என்னும் பொருள் உடையதாகும். அநுபவம் என்பது அழுந்தி அறிதல். சிவாநுபவம், சிவபிரானை அழுந்தி அறிதல் ஆகும். உலகியலில் மக்கள் அநுபவம் பலதிறப்படும். கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலன் நுகர்ச்சிகளும் அநுபவங்களே. அவ் அநுபவங்கள் எல்லாம் சிறிது பொழுது நின்று அழியும் இயல்பினவாம். மனம், பொறி வழிச் சென்று நுகரும் அநுபவங்கள் எல்லாம் சடப் பொருள்களைப் பற்றின ஆதலின், அழியும் இயல்பு உடையனவாம். புலன் நுகர்ச்சிக்கு மேற்பட்ட அநுபவங்களை, உயிர், தன் இயல்பை அழுந்தி அறிதல், அருளை அழுந்தி அறிதல், சிவத்தை அழுந்தி அறிதல் என முத்திறப் படுத்துக் கூறுவர். [1] "தம்மை உணர்ந்து தமையுடைய தன் உணர்வார்" என்றபடி, உயிர்கள் தம் இயல்பை முதலில் உணர்ந்து, பின் தம்மை உடைமையாக உடைய இறைவன் அருளையும் அவ் அருளோடு வேறறக் கலந்து நிற்கும் இறைவனையும் முறையே உணர்தல் வேண்டும். பட்டினத்து அடிகள், உயிரின் இயல்பை அறிதற்கு முற்பட்டு, [2] "மேவிய புன் மயிர்த் தொகையோ" என்னும் அகவற்பாட்டில், "இன்னது யான் என்று அறியேன் என்னை, எதினும் தேடினேன் யாதினும் காணேன்" என்று கூறிப் பின்னர், "ஞான நாட்டம் பெற்றபின் யானும் நின் பெருந்தன்மையுங் கண்டேன் காண்டலும் என்னையும் கண்டேன்" என்றனர். இந்நிலை உயிர் அநுபவம் ஆகும்.

இதன்பின், சார்ந்த தன் வண்ணம் ஆம் தன்மை உடைய உயிர்க்குச் சிவச் சார்பு இன்றியமையாதது எனக்

1. சிவஞான போதம், அவையடக்கம்.
2. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, செ. 13.

கண்டு, அப்பெருமான் பக்கலில் உயிரை ஈர்த்துச் சிவக் காட்சிக்கு ஆளாக்கும் சிவ சத்தியாகிய அருள் நிலையை அறிந்து வழிபடல் இன்றியமையாததாகும். அருட் பதிவுக்கு உயிர் இலக்கு ஆனல் அன்றிச் சிவக்காட்சி நேர்படல் அரிதாகும். மூல மல ஆற்றலைக் கெடுத்துச் சிவாநுபவத்திற்கு உரிய தகுதியை அளிப்பது அருள் அநுபவமாகும். அதன்மேல், பேரின்பப் பிழம்பாக உள்ள சிவம் இன்ன இயல்பிற்று என்று மெய்யுணர் வினல் உணர்ந்து, ஞானசிரியன் உபதேச வழி ஒழுகி, அச்சிவ பரம்பொருளைத் தான் என, அவன் என வேற்றுமை இன்றி ஒட்டி நின்று பேரின்பத்தில் தலைப்படல் சிவாநுபவம் ஆகும். உயிர் மலப்பிணிப்பு ஒழிந்து, தூய நிலை அடைந்து, சிவன் திருவடி நீழல் எய்தி இன்பம் நுகர்தலே முடிந்த பயன் ஆகும் என்பர். [1] "உயிர் தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கே உரித்து" என்பது சிவஞான சித்தி. இத்துணைச் சிறந்த சிவாநுபவத்திற்குத் தவ முதலிய சாதனங்கள் சிறந்த ஏதுக்கள் ஆகும். அத் தவம் உடலோடு கூடிய வழிச் செயற்பாலதாகும். ஆயினும், உடலோடு கூடிய நிலையிலே, உடல் சடப் பொருள், உயிர் சித்துப் பொருள் என்னும் வேற்றுமை அறிந்து, உடலைக் கருவியாகக்கொண்டு செயற்பாலதாகிய தவத்தை முடித்துக்கொள்ளல் வேண்டுமேயன்றி, அவ் வுடல் ஓம்புதலிலே நாட்டம் செலுத்தல் அறிவின் பயன் ஆகாது என்பது பெரியோர் கண்டது. அந்நிலையில், அடிகள், அழிவுடையதும் அருவருக்கத்தக்கதும் ஆகிய ஊனுடல் உளதாங் காறும் அதன்கட் பற்று வைத்து, அதனை ஓம்புதற்கு வேண்டுவன செய்தலிலே நோக்கம் செல்லும் என்னும் உண்மை உணர்ந்து, அவ்வுடற் பற்று ஒழிப்பதற்கு உடலையே வேண்டாமல் வெறுத்து உரைத்தலை இப்பதிகத்தில் பல திருப்பாட்டுக்களினும் காணலாம். தூய சிவாநுபவத்திற்கு உடற்பற்றுத் தடை என்பது அடிகள் கருத்தாகலின், அத்தடை நீக்கமே ஈண்டுச் சுத்தி எனப் படும் என்க. ஊனுடலின் அருவருப்பை நினைந்து, அதனை

1. சிவஞான சித்தி, சூ. 11, செ. 10

விடுதலில் உள்ள விருப்பமும், இடையருது ஆண்டவனைத் தியானித்தல் முதலியன செய்தலுமே சிவாநுபவ நிமித்தம் செய்யப்படும் தூய்மையாம் என்பது கருதத் தக்கது. இதன் முன்னைப் பதிகத்தில், ஆண்டவன் செய்த அளப்பரிய பேருதவிக்குக் கைம்மாருக, அடிகள் தம் உடல் பொருள் ஆவிகளைக் கொடுக்க எண்ணியும், அவை அவன் உடைமை எனக் கண்டு, அவற்றின் வேருகத் தமக்கு என ஒன்றும் இல்லாமைபற்றி வருந்திக் கூறிய செய்தியைக் கண்டாம். இப்பதிகத்தில் அங்ஙனம் கைம்மாறு கொடுக்க இயலா விட்டாலும், வலிந்து ஆட்கொண்ட அப்பெருமானைச் சார்ந்து அநுபவிக்கவும் இவ்வூன் உடல் தடைப்படுத்து கின்றதே என்று இரங்கி, இவ்வுடற் பற்ருல் உண்டாம் அழுக்கை ஒழித்துத் தம் உயிரைத் தூய்மைப் படுத்துக் கொள்ளு முறையை அருளிச் செய்வார் ஆயினர். இதனுல் பதிக இயைபு புலனுதல் அறிக.

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

51\. ஈச னேயென் எம்மானே
யெந்தை பெருமான் என்பிறவி
நாச னேநான் யாதுமொன்
றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை யாண்டாய்க்கு
நினைக்க மாட்டேன் கண்டாயே
தேச னேயம் பலவனே
செய்வ தொன்றும் அறியேனே.

க-ரை: இதன் முன்னைப் பதிகத்தின் இறுதித் திருப் பாட்டில் இறைவன் தம்மை அறிவிலாப் பருவத்தே புகுந்து ஆட்கொண்ட பேரருள் திறத்தைப் பாராட்டிய அடிகள், இப்பதிகத்தின் தொடக்கத் திருப்பாட்டாகிய இதன்கண், மிக இழிந்தவனுகிய என்னை ஆட்கொண்டு அநுபவிக்கத் தந்த நின்னை இடையருது நினைந்து, என் உயிரைத் தூயதாக்கிக் கொள்ளாமல் இருக்கின்றேனே என்று வருந்துகின்ருர்.

ப-ரை : ஈசனே—யாவர்க்கும் எவைக்கும் இறைவனே, என் எம்மானே — எனக்குச் சிறப்பு முறையில் உள்ள எங்கள் தலைவனே, எந்தை பெருமான்—என் தந்தையாகிய பெரியோனே, என் பிறவி நாசனே— எனக்குப் பிறப்பை ஒழிப்பவனே, தேசனே—ஒளி வடிவினனே, அம்பலவனே —ஞான வெளியை உடையவனே, யாதும் ஒன்று அல்லாப் பொல்லா நாயான—உலகத்துப் பொருள் யாதேனும் ஒன்றிற்படாத பொல்லாமை உடைய நாய் போன்ற, நீசனேனை ஆண்டாய்க்கு—இழிந்தவனாகிய என்னை ஆட்கொண்டருளிய நின்னை, நான் நினைக்க மாட்டேன்—யான் நினையேன், செய்வது ஒன்றும் அறியேன்—இனிச் செய்யத்தக்கது இன்னது என்பதை யும் அறிந்திலேன் என்பது.

வி-ரை: இறைவன், மக்கள் முதலிய யாவர்க்கும், நிலம் மலை கடல் முதலிய எவைக்கும் தலைவன் என்பதை, நூல் அறிவானும் அநுபவ உணர்வானும் அடிகள் அறிந்தவர் ஆதலின், அப் பெருமானது பொதுவான அகண்ட ஐசுவரியத் தன்மையைக் குறித்து, "ஈசனே" எனவும், தமக்குச் சிறப்பு முறையில் தலைவன் ஆவான் என்னும் உரிமையை நினைந்து, "என் எம்மானே" எனவும் கூறினார். பலர்க்கும் தலைவனாக உள்ளான் ஒருவனை, அப் பலருள்ளும் ஒருவன் பணி செய்யும் முறையில் மிக நெருங்கிய தொடர்பு உடையனாக இருப்பின், அத் தலைவனது பொதுமையைப் பாராட்டும் அளவில் நில்லான் என்பதும், சிறப்பு முறையில் என் தலைவன் என்று பாராட்டி மகிழ்வன் என்பதும் உல கியலிற் காணப்படுவன. அக் குறிப்பே ஈண்டும் கருதத் தக்கது. அடிகள் பிறிதோரிடத்து, [1] "எங்கள் நாயகனே என்னுயிர்த் தலைவா" என்று இவ் வுண்மையைப் புலப் படக் கூறியிருத்தலும் அறிக. உலகில் ஒருவற்குத் தலைவன் ஆவானும், தந்தையாவானும் வேறு வேறு ஆவர். தலைவன் ஆட்கொண்டு பணி கொள்ளுபவன். தந்தை, கல்வி முதலி யன நல்கிச் சான்றோன் ஆக்குவோன். ஒருவன் தன்

1. திருவாசகம், அருட்பத்து 5.

தந்தையை நோக்க, அவன் செல்வத்திற்கு உரிய உரிமை தனக்கு உண்டு எனக் கருதுதலும், தலைவனை நோக்க, அடிமைப் பணி செய்து அடங்கி வாழ நினைதலும் இயல்பே. ஈண்டுத் தம்மை யாட் கொண்டு பேரின்பப் பெருஞ் செல்வத்தை அளிக்கும் தலைவனாகவும் தந்தையாகவும் உள்ளான் சிவபெருமானே என்பதை நன்று தெளிந்த அடிகள், "என் எம்மானே எந்தை பெருமான்" என்று கூறினர். தந்தையின் பெருமைக் குணங்களில் ஈடுபட்டு, "எந்தை" என்ற அளவில் ஒழியாது, "எந்தை பெருமான்" என்றனர்.

பெருமை, செயற்கரிய செய்தலால் உண்டாவது. பெருமை மிக்க தந்தையினிடத்து நின்றும் தாம் பெறும் பேறுகளில் முதலாவது பிறப்பறுதல் என்பது குறித்து, "என் பிறவி நாசனே" என்றார். ஞானச் செல்வர்கள் விரும்புவது பிறப்பு இறப்புக்களின் ஒழிவாகும். அங்ஙன மாகவும், அவ் விரண்டன் ஒழிவையும் குறியாது, பிறப்பை மாத்திரம் குறித்ததில் ஓர் உண்மை உண்டு. இறப்பு இயற் கையாகும். எடுத்த உடல் எப்படியும் ஒழிந்தேபோகும். ஆதலின், உடல் ஒழிவில் அடிகளுக்குச் சிறிதும் கவலை யின்று. வினையளவு நின்று ஒழியும் இயல்பினதாகிய உடலைவிட்டு, அழிவில் இன்ப நுகர்ச்சியில் ஈடுபாடு உடைய அடிகளுக்கு, மீண்டும் பிறவாமையே வேண்டத்தக்கது. ஆதலின், அவ் வேண்டுகோளை நிறைவேற்றும் தலைவனைக் குறித்து, "என் பிறவி நாசனே" என்றார். இறப்பிலும் அச்சம் இருக்குமாயின், மரண நாசத்தையும் குறிப்பிட் டிருப்பார். நோயுடை ஒருவனுக்கு, நல் உணவு அளித் துதவுதல் இன்றியமையாதது ஆதல் போல, பேரின்பப் பெருஞ் செல்வத்தை அளிக்கக் கருதும் ஆண்டவன், அதற்குத் தடையாக உள்ள பிறப்பை ஒழித்தன்றோ செய்தல் வேண்டும். இந்நயம் தோன்றவே, எனக்கு இன்பம் தருவோனே என்னாது, "என் பிறவி நாசனே" என்றார் என்பது. இன்ப நுகர்ச்சிக்குத் தடையை விலக் கியவாறு இது.

இனி, தமக்கு ஞானோபதேசம் செய்த ஆசிரிய வடிவத்தை நினைந்து, "தேசனே" எனவும், அங்ஙனம் எழுந்தருளியது வெளியான இடத்தில் என்பார், "அம்பலவனே" எனவும் கூறியருளினர். அம்பலம், தில்லைக்கண் உள்ளதாயினும், திருப்பெருந்துறையில் அன்பர் பலர் சூழ் ஆண்டவன் எழுந்தருளி ஆட் கொண்டான் ஆதலின், அதுவும் உட்கோள் ஆகும் என்க. 1 "தான் என்னை ஆட் கொண்டது எல்லாருந் தாமறிவர்" என்பதும் நோக்குக. ஞானாசிரிய வடிவம் கண் கொள்ளாக் காட்சி உடையதாகலின், ஞான வொளி நிலையமாகவுள்ள அவ்வுருவத்தைக் குறித்து, "தேசனே" என்றார். தேசு — ஒளி. அம்பலம் என்பது பொது இடம், புறவெளி, பரவெளி, ஞானாகாசம் என்னும் பொருள்களை உணர்த்துவதாகும். இது காறும் கூறிய விளிகள் ஆறு. இவ் ஆறு விளிகளாலும் முறையே இறைவன் பொதுவும் சிறப்புமாகவுள்ள தலைவனாதலும், தமக்குப் பேரின்பம் நல்கும் தந்தையாதலும், பிறவிப்பிணி ஒழிக்கும் மருத்துவனாதலும், ஞானோபதேசம் செய்யும் ஞானாசிரியனாதலும், தமக்குப் போலவே பிறர்க்கும் உபகரித்தற்கு உரிய பொது வெளிக்கண் உளனாதலும் புலப்படுக்கப்பட்ட படியாம்.

ஆண்டவன் பெருமையை நோக்க, அப்பெருமானுக்கு ஆட்படும் தகுதி தம்பால் ஒரு சிறிதும் இன்று என்பது தோன்ற, "ஈசனேனை" எனவும், அவ் இழிவுக்கு எடுத்துக் காட்டாக, "நாயான" எனவும், அந் நாய்ப் பிறப்பினும் தீ வினைப் பயன் மிக்கது என்பது தோன்ற, "பொல்லா" எனவும் கூறினர். நாயான என்புழி, ஆதல் உவமப் பொருட்டு. என் இழிந்த நிலைக்கு எடுத்துக் காட்டாக வேறொன்றும் புலப்படாமையால், பொல்லாங்கு மிக்க நாய் உவமை கூறப்பட்டதாயினும், உள்ளவாறு நினையுங்கால், என் பிறப்பு, உலகத்துள்ள அந் நாய் முதலிய இழி பிறப்புக்களுள் ஒன்றன்பாலும் படாதது ஆகும் என்பது தோன்ற, "யாதும் ஒன்றல்லா" என்றார்.

1. திருவாசகம்; திருக்கோத்தும்பி 13.

ஆண்டாய்க்கு என்புழி, நான்கன் உருபை இரண்டன் உருபு ஆக்குக. ஆண்டாய் முன்னிலை வினைப் பெயர். ஆட் கொண்டருளிய நினக்கு வேறு கைம்மாறு செய்யும் ஆற்றல் இல்லேன் ஆயினும், அப் பேருதவியை நினையும் அளவிலாவது நன்றியறிவுடையனுதல் இன்றியமையாத தாகவும், அதுவும் செய்திலேன் என்பார், "நினைக்க மாட்டேன்" என்றார். 1 "போதும் பெறுவிடிற் பச்சிலை யுண்டு புனலுண்டெங்கும், ஏதும் பெறுவிடின் நெஞ்சுண் டன்றே" என்றபடி, செயலளவிற் கைம்மாறு இயற்றல் அரிதாயினும், நெஞ்சத்தாலாவது நினைதல் எளிதாகவும், அதுவும் செய்திலேன் என்று இரங்கியபடியாம். கண் டாய்—முன்னிலை அசை. நினைக்க மாட்டேன் என்பதற்கு, இரண்டாம் அடியில் உள்ள நான் என்பதை எழுவாய் ஆக்குக. நினையும் அளவிலாவது தலைப்படாது ஒழிந்த சிறுமையேன், மேற்செய்யத்தக்கது இன்னது என ஒன்றையும் அறிந்திலேன் என்பார், "செய்வதொன்றும் அறியேன்" என்றார். இதனால், புகல் பிறிது இன்று என்பது குறிப்பு.

இதன்கண், "நீசனேனை ஆண்டாய்க்கு நினைக்க மாட்டேன்" என்றமையால், சிவாநுபவத்திற்கு உரிய உயிரின் தூய்மையில், முதலாவது செயற்பாலது ஆண்டவன் பேருதவியை நினைவு கூர்தலாம் என்பது பெறப்படுதலின், **அநுபோக சுத்தி** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "யாதுமொன்றல்லாப் பொல்லா நாயான நீசனேனை" என்றதனால் வைராக்கியமும், ஆண்டவனை நினைதல்அவசியம் என்பது போதரலின், பத்தியும் தோன்று தலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

52. செய்வ தறியாச் சிறுநாயேன்
செம்பொற் பாத மலர்காணப்
பொய்யர் பெறும்பே றத்தனையும்
பெறுதற் குரியேன் பொய்யிலா

1. பட்டினத்து அடிகள், திருக்கழுமல மும்மணிக்கோவை 12.

மெய்யர் வெறியார் மலர்ப்பாத
மேவக் கண்டுங் கேட்டிருந்தும்
பொய்ய னேன்நான் உண்டுடுத்திங்
கிருப்ப தானேன் போரேறே.

க-ரை: இதன் முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவனை இடையறாது நினைந்து, தம் உயிரைத் தூய்தாக்கிக் கொள்ளாமைக்கு இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில் அங்ஙனம் நினையாமல் இருத்தலே யன்றி, இவ்வுலக வாழ்க்கையின் நிமித்தம் உண்டும் உடுத்தும் உடலோம்பி இருத்தலை நினைந்து வருந்துகின்றார்.

ப-ரை: போர் ஏறே — போரில் அரியேறு போல்பவனே, செய்வது அறியாச் சிறு நாயேன்–செய்யத் தக்கது இன்னதென்று அறிந்து கொள்ள முடியாத சிறுமையை உடைய நாய் போல்பவனும், செம்பொன் பாதமலர் காணாப் பொய்யர் — செம்மையாகிய பொன் போன்ற நின் திருவடி மலரைக் காணும் பேறு இல்லாத பொய்மையாளர், பெறும் பேறு அத்தனையும் பெறுதற்கு உரியேன் —பெறுதற்கு உரிய பேறுகள் எல்லாவற்றையும் ஒருங்கு பெறுதற்கு உரிமை உடையேனும் ஆகிய, பொய்யனேன் நான்—பொய்மையாளனாகிய யான், பொய்யிலா மெய்யர் வெறியார் மலர்ப்பாதம் மேவ — பொய்ம்மை கலவாத மெய்யன்பர்கள் மணம் பொருந்திய மலர் போன்ற நின் திருவடிகளை அடைய, கண்டும் கேட்டு இருந்தும்—நேரிற் கண்டும் அறிவுறுத்தக் கேட்டிருந்தும், உண்டு உடுத்து இங்கு இருப்பதானேன்–உணவு உண்டும் ஆடை உடுத்தும் இவ் வுலகத்தில் வாழ்ந்திருக்கலானேன் என்பது.

வி-ரை: அன்பர்களைக் காம முதலிய அறுபகையாகிய யானைகள் தாக்கா வண்ணம், அவற்றை அழித்து ஒழிக்கும் ஆண் சிங்கம் போல்வான் என்பது குறித்து, இறைவனைப் "போர் ஏறே" என்றார். அருள் வலி மிக்க ஓர் அரசன், தனக்கென வேறு பகை யின்று எனினும், தன் குடிகளைக் கரவில் நலிய முயலும் பகைவரைத் தன் பகைவராகக்

கொண்டு, ஒறுத்து அடக்க முற்படுதல்போல, இறைவன் தனக்கென் வேறு பகை இல்லன் எனினும், தன் அன்பரை நலியும் பகைகளைத் தன் பகை எனக் கொண்டு அழிக்கும் இயல்பு உடையான் என்பது கருத்து.

உலகிற் செய்யத் தக்கன இன்ன, தகாதன இன்ன என்று பகுத்து உணரும் அறிவாற்றல் இல்லாமையால், சிறுமை யுடையேன் என்பார், "செய்வதறியாச் சிறு நாயேன்" என்றார். அவ் வறியாமையே சிறுமைக்கு ஏதுவாயிற்று என்பது. சிறுமை — தகாதன செய்தல். என் தகுதி மிக இழிந்ததாகலின், அதற்கேற்ற பயனையே பெறுதற்கு உரியேன் என்பது தோன்ற, "பொய்யர் பெறும் பேறு அத்தனையும் பெறுதற் குரியேன்" என்றார். பொய்மை, நலம் பயப்பதுஎனவும், தீமை பயப்பது எனவும் இரு திறப்படும் என்பர் நக்கீரர். வெளிப் படையில் பொய்மை போல் காணப்பட்டு, உண்மையில் நலம் பயப்பதை, மெய்மை எனவே கொள்ளுவர் திருவள்ளுவர். 1 "பொய்மையும் வாய்மையிடத்த புரை தீர்ந்த, நன்மை பயக்குமெனின்" என்பது திருக்குறள். ஆகவே, ஈண்டு நலம் பயக்கும் பொய்யை விளக்கி, தீங்கு பயப்பதைப் புலப்படுத்தற்கே, "செம்பொற்பாத மலர்காணு" என்றனர். இறைவன் திருவடித் தாமரையைச் சிறிதும் நினைவு கூராத பொய்யர் என்பதனால், நலம் பயக்கும் பொய்மையின் நின்றும் இது விலக்கப்பட்டது என்பது தெளியலாம். இறைவன் திருவடித் தாமரையை அகத்தே காண விரும் பாமையோடு, புறத்தேயும் காணுதவர் என்றபடி. அத் தகைய பொய் யொழுக்கம் உடையோர் பெறும் துன்பப் பயனைப் பெறும்பேறு என்றது நகைச் சுவை தோன்றற்கு. பொய் யொழுக்கத்தின் எல்லையில் நிற்போர் பெறும் துன்பப் பயன்கள் எல்லாவற்றையும் ஒருங்கு பெறுதற்கு உரியசிறுமையே என்பால் உள்ளதுஎன்பார், "அத்தனையும் பெறுதற் குரியேன்" என்றார். பிறிதோரிடத்து, 2 "விச்சுக் கேடு பொய்க் காகாதென்று இங்கு எனை வைத்தாய்"

1. திருக்குறள் 292. 2. திருவாசகம், திருச்சதகம் 81.

என்று அடிகள் கூறுவர். அதன் கருத்து, அடியேனை நில உலகத்தில் இருக்கச் செய்தற்குக் காரணம், பொய் யொழுக்கம் ஆகிய பயிர் செழித்து விளைதற்கு வித்துக்கேடு இருக்கலாகாது என்னும் குறிக்கோளேயாம் என்பது. நாயேனும் உரியேனும் என்புழி, எண்ணும்மைகள் செய் யுள் விகாரத்தால் தொக்கு நின்றன.

மெய்யர் என்ற அளவிலே, சத்திய சீலர் என்பது பெறப்படுமாயினும், பொய்யிலா மெய்யர் என்றது, பொய் மையை உட்பொதிந்து, புறத்தே வேட முதலியவற்றால் மெய்யொழுக்கம் உடையவர்போலக் காணப்படுவாரை விலக்கற்கு என்க. இதனால், முன்னர்க் கூறப்பட்டார் மெய்யிலாப் பொய்யர் என்பதும் தெளிவாம். மெய்யர்— உண்மை யொழுக்கமுடைய மெய்யன்பர். அடிகள் ஞானோபதேசம் பெறும் காலத்து, ஞானாசிரியனாக எழுந் தருளி இருந்த இறைவன் பக்கலில் தம் கண் காணச் சூழ்ந்து இருந்த பக்குவ முதிர்ந்த மெய்யன்பர்களை உட் கொண்டே, பொய்யிலா மெய்யர் என்றார். அன்னார் எல் லோரும் ஆண்டவன் திருவடி நிழலில் இயைந்து இன்ப நுகர்ந்து இருத்தலை, அப்பெருமான் திருவருள் துணை கொண்டு மெய்ஞ்ஞானத்தால் உணர்ந்தவர் ஆதலின், "வெறியார் மலர்ப்பாதம் மேவக் கண்டும்" என்றார். அங்ஙனம் அம் மெய்யன்பர் எல்லோரும் இறைவன் திரு வடிக்கண் இன்பம் நுகர்ந்து இருத்தலைத் தாம் உண்மூக மாகக் கேட்குமாறு அப் பெருமானே கூறியருளினார் என்னும் உணர்ச்சி தலைப்பட்டவர் ஆதலின், "கேட்டிருந் தும்" என்றார். காட்சியாலும் கேள்வியாலும் மெய்யன் பர்கள் அடைந்த சிறந்த பேறுகளை உணர்ந்து இருந்தும், அப் பேறு பெறுதற்கு உரிய தூய்மையை அடைய முய லாமல், அதற்குத் தடையாக உள்ள உடலை ஓம்புதற் பொருட்டு ஐம்புலன்களும் ஆர உண்டும், ஆடை அணிக லங்களால் புனைந்துகொண்டும், இப் பொய்யுலக வாழ்க் கையை விரும்பி இருக்கின்றேனே என்பார், "உண்டுடுத் திங்கிருப்பதானேன்" என்றார்.

செய்யத்தக்கது இன்னது என்று அறியாத சிறுமை காரணமாகப் பொய்யொழுக்கம் உடையார் பெறும் பேறுகள் எல்லாவற்றையும் ஒருங்கு பெறுதற்கு உரியேன் ஆயினும், மெய்யன்பர் எய்திய சிறந்த பேற்றைக் கண்கூடாகக் கண்டும், தெளியக் கேட்டும் உள்ளேன் ஆதலின், அன்னார் மேற்கொண்ட தவ நெறியில் ஒழுகி நலம் பெற முயலலாம்; அங்ஙனம் முயலாமல், உடல் ஓம்புதலிலே நாட்டம் செலுத்தல் ஆனேனே என்று இரங்கியபடியாம்.

இதன்கண், "பொய்யனேன் நான் உண்டுடுத்திங் கிருப்பதானேன்" என்பதில், சிவாநுபவத்திற்குரிய தூய்மை, உண்டு உடுத்து இருத்தலால் ஏற்படாது என்பதும், அவ்வுடல் ஓம்புதலின் ஒழிவே தூய்மையாம் என்பதும் பெறப்படுதலின், **அநுபோக சுத்தி** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "பொய்யர் பெறும் பேறு அத்தனையும் பெறுதற்குரியேன்" என்றதனால், தொண்டின் பணிவும், "உண்டுடுத்திங் கிருப்பதானேன்" என்றதனால், உடற் சுமையில் வெறுப்பும் தோன்றி நிற்றலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

53. போரே றேநின் பொன்னகர்வாய்
 நீபோந் தருளி யிருள்நீக்கி
வாரே றிளமென் முலையாளோ
 டுடன்வந் தருள அருள்பெற்ற
சீரே றடியார் நின்பாதஞ்
 சேரக் கண்டுங் கண்கெட்ட
ஊரே றாயிங் குழல்வேனோ
 கொடியேன் உயிர்தான் உலவாதே.

க-ரை : முன்னைத் திருப்பாட்டில் இறைவனை நினையாமல், உலக வாழ்க்கையின் நிமித்தம் உண்டு உடுத்து உடல் ஓம்புதலையே கடைப்பிடித்து இருக்கின்றேன் என்று இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில், உடலை யான்

பற்றிக்கொண்டு இருந்தாலும், அவ்வுடலை விட்டு உயிர் தானே கழியலாமே! அங்ஙனமும் கழிந்து இலதே! என்று இரங்குகின்றார்.

ப-ரை: போர் ஏறே—ஆணவப் போரில் அரியேறு போல்பவனே, நின் பொன்னகர்வாய்—நின் சிவபுரத் திருக்கோயிலினின்றும், நீ போந்தருளி—நீ புறப்பட்டு எழுந்தருளி, வார் ஏறு இளமென் முலையாளோடு உடன் வந்து—கச்சு யாத்த இளமை மிக்க மெல்லிய முலைகளை யுடைய அம்மையோடு கூடி இங்கு வந்து, இருள் நீக்கி அருள—ஆணவ மல இருளின் ஆற்றலைக் கெடுத்து அருள் புரிய, அருள் பெற்ற சீர் ஏறு அடியார்—அத் திருவருளைப் பெற்ற சிறப்பு மிக்க மெய்யன்பர்கள், நின் பாதம் சேரக்கண்டும்—நின் திருவடிகளை அடையக் கண்கூடாகப் பார்த்திருந்தும், கொடியேன் உயிர் உலவாது—கொடியவனாகிய என் உயிர் தானே கெட்டு ஒழியாது இருக்க, கண்கெட்ட ஊர் ஏறாய் இங்கு உழல்வேனோ—கண் கெட்டுக் குருடாகிய ஊர்ப்பொலி எருதுபோல இவ்வுலகத்தில் யான் அலைந்து திரிவேனோ? என்பது.

வி-ரை: நீ போந்தருளி உடன்வந்து இருள் நீக்கி அருள எனக் கூட்டுக. போரின் பயனாக இருள் நீக்கம் கூறப்பட்டிருத்தலின், ஈண்டு ஆணவப் போர் என்பது பெற்றாம். மெய்யன்பர்க்கு அருளுங்கால், அவரைப்பற்றி நிற்கும் மூலமலமாகிய ஆணவம் என்னும் யானைகளின் வலியழித்தற்கு ஆண் சிங்கம் போறலின், "போரேறே" என்றார். பொன்னகர்—சிவபுரமும் அங்குள்ள திருக்கோயிலும் ஆம். எங்கும் நிறை பொருளாகிய ஆண்டவனுக்கு, ஓர் ஊரும் ஒரு திருக்கோயிலும் உள எனக் கூறுதல் பொருந்துமா எனின், இறைவன் வியாபகம் எங்கும் உளது எனினும், பசுவின் உடம்பு முழுதும் வியாபித்து ஊறும் பால், அதன் முலை வழிச் சுரத்தல்போல, பக்குவ முதிர்ந்த மெய்யன்பர் நெருங்கிய இடத்தில் சிறப்பாக வெளிப்பட்டு அருளுவன் ஆதலிற்

பொருந்தும் என்க. இக்கருத்துப்பற்றியே, [1] "தில்லை வாழ்கூத்தா சிவபுரத்தரசே" என்பது முதலிய பல இடங்களிலும் சிவபுரத்தரசனுக இறைவனைப் பாராட்டி அருளினர். வாய்—எழனுருபு; ஐந்தனுருபாகக்கொள்க. போந்தருளுதல் — எழுந்தருளுதல்; புறப்படல், ஒரு சொன்னீர்மைத்து.

இந் நில உலகத்துள்ள மெய்யன்பரை ஆட்கொள்ள இறைவன் எழுந்தருளுங்கால், அம்மையை வெளிப்படையாக உடன்கொண்டு வருவான் என்பதும், அம்மை என்றும் ஒரு கூறு பிரியாது உறையும் பெற்றியள் எனினும், சில நிகழ்ச்சிகளில் அவ் அம்மையின் உருவத்தைத் தன்னுட் கரந்து தோன்றுதலும் உண்டு என்பதைக் கேட்கின்றேம்; ஆதலின், "உடன் வந்தருள" என்றூர். உலகம் ஈன்றும் கன்னியாய் இருப்பள் என்பது குறித்து இளமைச் செவ்வி புலப்படுக்கப்பட்டது என்க. அம்மை, தன் மக்களுள் மெய்யன்பு மிக்க பக்குவர்க்கு அருள் ஞானப்பால் சுரந்து அளித்து, அப்பனைக் காட்சிப் படுத்துவள் என்பது அடைமொழிக் குறிப்பு. [2] "அருளது சத்தியாகும்" என்றபடி, அருள் வடிவினளாகிய தாயை வழிபட்டு, அவள் கருணையால் தந்தையைக் காண வேண்டும் ஆதலின், அம்மையுடன் எழுந்தருளி வந்தான் என்பது. உமையம்மையோடு எழுந்தருளி வந்து, மெய்யன்பர்க்குக் காட்சி யளித்து, முதலிற் செய்த நலம், மூல மலமாகிய ஆணவத்தின் ஆற்றலை ஒழித்தது என்பார், "இருணீக்கி" என்றூர்.

கட்டுக் காலத்தில், தெளிவான பளிங்கு அனைய உயிர் அறிவை மறைத்து நிற்பது, திணிந்த இருள் உருவமான ஆணவ மலமே. அம்மலப் பிணிப்பு நீங்கினல் அன்றிச் சிவக் காட்சி புலனுகாது ஆகலின், முதலிற் பாச நீக்கமே வேண்டுவதாயிற்று. பக்குவ முதிர்ந்த உயிரைப்பற்றி நிற்கும் ஆணவ ஆற்றல் கெட்டு ஒழிந்ததும், அவ்வுயிர் சிவன் அருளில் தலைப்படும் என்பது, "இருணீக்கி

1. திருவாசகம், வாழாப்பத்து 4. 2. சிவஞான சித்தி, சூ. 5, செ, 9.

யருள அருள்பெற்ற " என்பதனால் தெளியலாம். ஈண்டு, நீக்கலும் அருளலும், முறையே பாச நீக்கத்தையும், சிவப் பேற்றையும் குறிப்பனவாம். சிவ ஞானபோதம் பத்தாம் சூத்திர அவதாரிகையில், "இனி அச்சாதனத்தானாய பயனி யல்பு வகுத்துக் கூறுவானெடுத்துக் கொண்டார். அப் பயனாவது, பாசவீடும், சிவப்பேறும் என இருவகைப்படும்" என்பர் சிவ ஞான முனிவரர். பத்தாம் சூத்திரத்தில், "மலமாயைதன்னொடு வல்வினையின்றே" என்றதனால், பாச வீடும், பதினோராம் சூத்திரத்தில், "அயரா அன்பின் அரன் கழல் செலுமே" என்றதனால் சிவப்பேறும் கூறப்பட்டன. அவ்விரண்டு பயன்களையும் ஈண்டு மெய்யன்பர் பேறுக ளாக அடிகள், "இருணீக்கியருள" எனவும், "அருள் பெற்ற" எனவும் முறையே கூறியருளினர். பாச விடுதிக்கு உயிரின் சாதனம் ஏதுவாயினும், இறையருள் முக்கியம் என்பது தோன்ற, "இருணீக்கி" என இறைவன் செயலாகவும், அந்நீக்கத்தில் சிவப்பேறு தானே கைகூடும் என்பது தோன்ற, "அருள் பெற்ற" என உயிரின் செய லாகவும் அடிகள் அருளிச் செய்வாராயினர். இத்தகைய தத்துவ நுண்பொருள்கள், உண்மை அநுபவம் உடையார் வாக்கில் எத்துணை எளிமையாக வெளிப்படுகின்றன என்பது உணர்ந்து இன்புறத்தக்கது.

இங்ஙனம் பாச நீக்கமும் சிவப்பேறும் ஒருங்குபெறும் தகுதி உடைய மெய்யன்பரையே இங்கே, "சீரேறடியார்" என்றனர். சீர் ஏறுதலாவது, தவத்தால் மல ஆற்றல் தேயத்தேய, அத்துணை மெய்ஞ்ஞான விளக்கம் மிகுதல். அம் மெய்ஞ்ஞான விளக்கு ஒளியால் நின் திருவடியைக் கண்டு அடைந்தனர் என்பார், "நின் பாதஞ் சேர" என்றனர். பாதஞ்சேரல், தாடலைபோல் இரண்டறக்கலந்து இன்புறல். இதுவே வீடு பேறு ஆகும். இந்நிகழ்ச்சி, தவ முதிர்ச்சி யுடைய அடிகளுக்கு அன்றிப் பிறர்க்குக் காண்டல் அரிதாம் என்க. இத்தகைய சிறந்த காட்சி காணக் கிடைப்பதே அரிதென்பது தோன்ற, "கண்டும்" என்று கூறப்பட்டது. உம்மை அருமை உணர்த்தி நின்றது.

சுவை மிக்க நுகர்பொருள் ஒன்று பொதுவாக, அதனைப் பலரும் பொது உரிமை பற்றிக் கூட்டுண்ண, ஒருவன் மாத்திரம் அருகு இருந்து கண்கூடாகக் கண்டு வைத்தும், அதனைப் பெற இயலாமல் இருப்பதற்கு அவன் கொடுவினையே காரணம் ஆதல் போல, மெய்யன்பர்கள் ஆண்டவன் திருவடி அடைந்து இன்புறுதலைக் கண்டு வைத்தும், அப்பேறு பெறுமல், ஊன் உடலை ஓம்பித் திரிதற்குத் தம் கொடுவினை காரணம் என்பார், அது குறித்துத் தம்மை, "கொடியேன்" என்ருர். இக் கொடுமைக்கு ஆளாகி வாழ்தலில், உயிர் உடலினின்றும் ஒழிதல் இனிதாகவும், அது தானேயும் கழிந்திலதே என்று இரங்குவார், "உயிர்தானுலவாது" என்ருர். உலவாது உழல்வேனே என முடிக்க.

மெய்யன்பர் எய்திய பேறு தமக்கு இல்லாமைபற்றிய இந்நிகழ்ச்சியில், அடிகளுக்குள்ள வருத்தத்தையும் ஆர்வத் தையும், [1] "அருளாரமுதப் பெருங்கடல்வாய் அடியா ரெல்லாம் புக்கழுந்த, இருளார் ஆக்கை இது பொறுத்தே எய்த்துக் கிடந்தேன் எம்மானே" என்னும் பாடற் பகுதி யானும் உணரலாம். ஊர் ஏறு—ஊர்க்குப் பொதுவாக விடப்படும் பொலி எருது அல்லது பொலி காளையாகும். இது, மேய்த்து அடக்குவார் இன்றி, வயிருர உண்ணு தலும், காமநுகர்ச்சியில் தலைப்படுதலும், பிறர்க்குத்துன்பம் செய்தலுமே தொழிலாகக் கொண்டு, தன் மனம்போலக் கட்டுக்கடங்காது அங்கும் இங்கும் அலைந்து திரிவது. இத்தகைய ஊர் ஏறு கண்கெட்டது ஆயின், நெறி தவறிப் பள்ள மேடுகள் அறியாமல் வீழ்ந்து, திரிந்து, துன்புற்று, உழலக் காணலாம். அங்ஙனமே யானும் நெறி பிறழ்ந்து, நன்று தீது அறியாமல் உழல்கின்றேன்; இந் நிலைக்கு என்னை ஆளாக்கல், ஆண்டவனே, தகுமா என்பார், "கண் கெட்ட ஊரேருயிங்குழல் வேனே" என்ருர். ஊரேருய் என்புழி, ஆக்கம் உவமப் பொருட்டு. "கண்டும் கண் கெட்ட" என்ற முரண் அறிந்து இன்புறத்தக்கது. இனி,

1. திருவாசகம், பிரார்த்தனைப் பத்து 8.

ஊரேறு என்பதற்கு, ஊர்ப்பன்றி என்று பொருள் கூறுவாரும் உளர்.

இதன்கண், "ஊரே றுயிங் குழல்வேனே கொடியே னுயிர்தா னுலவாதே" என்றதனால், கொடு வினைக்கு நிலைக் களமாகிய ஊனுடலினின்றும் உயிர் கழியின், அது தூய்மை பெறும் என்பது பெறப்படுதலின், அநுபோக சூத்தி என்னும் பதிகம் நுதலிய பொருளும், உயிர் வாழ்தலை வெறுத்தலின், வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

54. உலவாக் காலந் தவமெய்தி
உறுப்பும் வெறுத்திங் குனைக்காண்பான்
பலமா முனிவர் நனிவாடப்
பாவி யேனைப் பணிகொண்டாய்
மலமாக் குரம்பை யிதுமாய்க்க
மாட்டேன் மணியே உனைக்காண்பான்
அலவா நிற்கும் அன்பிலேன்
என்கொண் டெழுகேன் எம்மானே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் உயிர் தானேயும் கழிந்திலதே என்று இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில் அங்ஙனம் கழியாத நிலையில், மலமயமாக உள்ள இவ்வுடலை ஒழிக்கவும் ஒருப்படாமல் இருக்கின்றேன்; வேறு பற்றுக் கோடாக எதனைக் கொண்டு உய்யக் கடவேன் என்று இரங்குகின்றார்.

ப-ரை: மணியே எம்மானே — மாணிக்க மணிபோல் வானே என் தலைவனே, இங்குப் பலமா முனிவர்—இவ் வுலகத்திற் பல பெரிய முனிவரர் எல்லாம், உன்னைக்காண் பான்—நின்னைக் காண்டற் பொருட்டு, உலவாக் காலம் தவம் எய்தி—எல்லையற்ற காலம் தவம் புரிந்து, உறுப்பும் வெறுத்து — உடலையும் வெறுத்து, நனிவாட — மிகவும் வாட்டம் எய்தா நிற்க, பாவியேனைப் பணி கொண்டாய்— பாவியாகிய என்னைத் தொண்டனாக ஏற்றுக் கொண்டனை,

மலமாக் குரம்பை இது மாய்க்க மாட்டேன்—மலமயமாக வுள்ள இவ் வுடலை ஒழிக்க ஆற்றல் இல்லேன், உனைக்காண்பான்—நின்னைக் காண்டற் பொருட்டு, அலவா நிற்கும் அன்பு இலேன்—துன்புற்று நிற்கும் மெய்யன்பு இல்லேன், என் கொண்டு எழுகேன்—இந்நிலையில் பற்றுக் கோடாக எதனைக் கொண்டு உய்வேன் என்பது.

**வி-ரை:** உலகத்துப் பொருள்களுள் பொன்னும் மணியும் உயர்ந்தன. அவற்றுள்ளும் மணி சிறந்தது ஆகலானும், அதனினும் சிறந்ததாகப் பிறிதொன்று இல்லாமையானும், இறைவனை, "மணியே" எனவும், பின்னர்ப் பணி கொண்டாய் என்று கூறியதற்கு ஏற்ப, ஆட்கொண்டவன் என்பது போதர, "எம்மானே" எனவும் கூறியருளினர்.

செய்தற்கு அரிய கடுந்தவம் புரியும் பக்குவ முதிர்ந்த முனிவரர் பலரையும், இவ் வுலகத்தில் அடிகள் தம் கண் கூடாகக் கண்டவர் ஆதலின், "இங்குப் பலமா முனிவர்" என்றார். இங்கு — இவ் வுலகத்தில். முனிவர் — இறைவனையே இடையறாது நினைபவர் என்னும் பொருட்டு. இன்பத் துன்பங்களில் ஈடுபடாத மனமும், விருப்பு, வெறுப்பு, அச்ச முதலியன நீங்கிய இயல்பும், உறுதியான புத்தியும் உடையார் முனிவர் எனப்படுவார். இத்தகைய பக்குவமுள்ள முனிவரர், ஆண்டவன் திருவடி காண்டற்கு, நீர்நிலை, ஐந்தீ நடு முதலிய பொறுத்தற்கு அரிய தட்ப வெப்பங்களில் நின்று தவம் இயற்றினர் என்பதும், அவ் வரிய தவந்தானும் சிலநாட்கள்வரையோ எனின், அன்று; எண்ணில் அடங்காத காலம் என்பதும் தோன்ற, "உலவாக் காலம் தவம் எய்தி" என்றார். [1] "புற்றுமாய் மரமாய்ப் புனல் காலே உண்டியாய் அண்ட வாணரும் பிறரும், வற்றியாரும் நின் மலரடி காணா மன்ன" என்பதும் அடிகள் திருவாக்கு. உறுப்பு—ஆகு பெயராக நின்று உடலை உணர்த்தும். அத்துணை நெடுங்காலம் தட்ப வெப் பங்களைப் பொறுத்துத் தவம் புரிதற்குக் கருவியாகவுள்ள

1. திருவாசகம், செத்திலாப்பத்து 2.

அத் தவ வுடம்பையும் வெறுத்து நின்றனர் என்பது தோன்ற, " உறுப்பும் வெறுத்து " என்றார். உறுப்பும் என்புழி, உம்மை உயர்வு சிறப்புப் பொருளில் வந்தது. இங்ஙனம் தவம் புரிந்தோர் ஒருவர் இருவர் அல்லர்; பலராகவும், அப் பலர்க்கும் திருவடி, காட்சிப் படாமையால் கவலை எய்தினர் என்பதும், தவத்தின் கடுமையும், கால நெடுமையும், காண்டற்கு அருமையும் காரணமாக, அக் கவலை பெருகிற்று என்பதும் தோன்ற, " நனிவாட " என்றார்.

அடிகள் நிரம்பிய மெய்யன்புடையராயினும், தம் பணியில் தமக்குக் குறையே காணும் இயல்புடையர் ஆதலின், தம்மை, " பாவியேன் " எனவும், பாவ கன்மம் உடையேனாகவும், நின் அருட் பெருக்கம் காரணமாக, " என்னைப் பணிகொண்டாய் " எனவும் கூறினர். ஒரு பொருட் கொடையில், கொள்வோன் தகுதியும், கொடுப் போன் தகுதியும் விரவி நிற்பதாகும். ஈண்டுக் கொடுப் போன் தகுதியே விஞ்சி நின்றது என்றபடியாம். பணி கொண்ட நிலையில், நின் பக்கலில் அணுகி, நின்னைத் தரி சித்துத் தொண்டு செய்தற்குத் தடையாக இருப்பது, இம் மல பாண்டமாகிய ஊனுடலே என்பார், " மலமாக் குரம்பை " எனவும், இதன் ஒழிவில், சிவானுபவத்திற்கு உரிய தூய்மை எய்தும் ஆதலானும், இது தானே ஒழியும் நிலையில் இல்லாமையால், யானே ஒழிக்க வேண்டியது ஆகலானும், அங்ஙனம் ஒழித்தற்குப் பற்று உடைமையால், ஆற்றல் இல்லாதவனாக இருக்கின்றேன் என்பார், " இது மாய்க்க மாட்டேன் " எனவும் கூறினர். 'நின் திருவடிக் காட்சி வேண்டி, உலவாக்காலம் அரிய தவம் புரிவோர் முற்றத் துறந்த புண்ணிய சீலராகிய முனிவரர்; யானோ பாவி; அம் முனிவரர் உடம்போ தவ வுடம்பு; என் உடம்போ மலமாக் குரம்பை. அத் தகைய தவ வுடம் பையும் அம் முனிவரர் பொருட்படுத்தாமல் வெறுக் கின்றனர்; என் மலக்கூடாகிய உடம்பை ஒழித்தற்கு யான் துணிந்திலேன்; இவ் ஏற்றத் தாழ்வான நிலையில்,

அம் முனிவரர் அருந்தவம் புரிந்தும் நின்னைக் காணப் பெருமல் மிகவும் வாட்டம் எய்தி நிற்ப, அவர்களுக்கு அரியனுகிப் பாவியாகிய என்னை வலிய வந்து ஆட் கொண்டனை' என்று இவ்வாறு அடிகள் கருதினர் என்பது இத் திருப்பாட்டின் சொற்பொருள் அமைப்பில் காணப்படும் உண்மையாகும். தவத்திற்குப் பயன்படும் முனிவரர் உடம்பை உறுப்பு எனவும், அங்ஙனம் பயன் படாதது எனக் கொண்டு தம் உடம்பை மலமாக் குரம்பை எனவும் அடிகள் கூறியதும் கருதத்தக்கது. இந்நயம் இலக்கியச் சுவை நுகர் வோர்க்கும் விருந்து ஆதல் அறிக.

அடிகளின் அன்பு முதிர்ச்சியும், சிவாநுபவ நுகர்ச் சிக்கு உரிய தகுதியும் மிகப் பெரியன. அவை நம்மனோர் உள்ளத்தைக் கவரும் பெற்றியுடையன. அங்ஙனமாகவும், அவர் தம்மைப் பல இடத்தும் மிக இழிவாகக் கூறிக் கொள்ளுதல், அடிமை இயல்பு தோன்றற்கு என்க. அடிகள் தம்மை இழிவாகக் கூறியவற்றை எடுத்துக் கூறற்கு எம் உள்ளம் மிகக் கவலுகின்றது. உரை விளக்க நிமித்தம் மேற்கொள்ளும் இக் குற்றம், இறைவன் திரு வருளால் பொறுக்கப்படும் என்னும் உறுதியுடைமை அதற்கு ஆறுதல் அளிப்பதாகும்.

மூன்றும் அடியில், "உனைக் காண்பான்" என்பதை இடைநிலைத் தீவகமாகக்கொண்டு, "உனைக் காண்பான் மல மாக் குரம்பை இது மாய்க்க மாட்டேன்" எனவும், "உனைக் காண்பான் அலவா நிற்கும் அன்பிலேன்" எனவும் இயைத்துக் கொள்க. அலத்தல்—துன்பம் உறுதல். நின்னைக் காண்டற்கு உரிய நெறியறியாது துன்பம் உறு கின்றேன் என்பார், "அலவா நிற்கும்" எனவும், அன்பு நெறி சிறந்தது எனக் கேட்டும், அந் நெறி நிற்றற்கு அன்பு சிறிதும் இல்லேன் என்பார், "அன்பிலேன்" எனவும் கூறினர். இறைவன் காட்சி பெறுமைக்கு வருத்தமும், நெறி நிற்றற்கு உரிய அன்பு இன்மையும் உடையேன் என்பது அடிகள் கருத்து. நெறி பலவற்றுள்ளும் அன்பு நெறி சிறந்ததாகவும், எளிதாக மேற்கொள்ளத்தக்க

தாகவும் இருப்ப, அதனை விட்டு, எதனைப் பற்றுக்கோடாகக் கொண்டு உய்யக் கடவேன் என்பார், "என் கொண்டு எழுகேன்" என்றார். எழுதல் — வீழ்ச்சியினின்றும் மேலேறி உய்தல்.

இதன்கண், "மலமாக் குரம்பை இது மாய்க்க மாட்டேன்" என்றதனால், அதன் ஒழிவே சிவாநுபவத்தின் நிமித்தம் உயிர் எய்தும் தூய்மை என்பது பெறப்படுதலின், **அநுபோக சுத்தி** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "பாவியேனைப் பணி கொண்டாய்", "மலமாக் குரம்பை இது மாய்க்க மாட்டேன்" என்பவற்றால், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

55. மானேர் நோக்கி உமையாள்
பங்கா வந்திங் காட்கொண்ட
தேனே அமுதே கரும்பின்
தெளிவே சிவனே தென்தில்லைக்
கோனே உன்றன் திருக்குறிப்புக்
கூடு வார்நின் கழல்கூட
ஊனார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்ப தானேன் உடையானே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் தம் உடலை மலமாக் குரம்பை என்றும், இதனை ஒழிக்க மாட்டாதவனாக இருக்கின்றேன் என்றும் இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில் ஊனார் புழுக்கூடு என்றும், அப்புழுக்களுக்கு உறையுளாக வுள்ள இதனை, எனது உயிரின் உறையுளாக எண்ணிப் பாதுகாத்திருக்கின்றேனே! எவ்வாறு உய்வேன்! என்றும் இரங்குகின்றார்.

**ப-ரை:** மான் நேர் நோக்கி உமையாள் பங்கா—மான் விழி போன்ற விழியினை யுடையாளாகிய உமையம்மையை ஒரு கூற்றில் உடையவனே, இங்கு வந்து ஆட்கொண்ட— இந் நில உலகத்து வந்து என்னை அடிமை கொண்டு

அருளிய, தேனே அமுதே கரும்பின் தெளிவே — மெய் யன்பர்க்குத் தேனும் அமிர்தமும் கரும்பின் தெளிவான சாறுமாக விளங்குகின்றவனே, சிவனே — பேரின்ப வடிவினனே, தென் தில்லைக் கோனே — தென்திசைக் கண்ணதாகிய தில்லையில் விளங்கும் அரசனே, உடையானே — எல்லாம் உடையவனே, உன்தன் திருக்குறிப்புக் கூடுவார் நின் கழல்கூட — நின் திருவுள்ளக் குறிப்புச் சாரப்பெற்ற மெய்யன்பர்கள் நின் திருவடியை அடைய, ஊன் ஆர் புழுக்கூடு இது காத்து — யான் ஊன் நிறைந்த புழுக் கூடாகிய இவ் வுடலைப் பாதுகாத்து, இங்கு இருப்பது ஆனேன்—இவ் வுடலில் தங்கி இருத்தலை மேற்கொண்டுள்ளேன் (எங்ஙனம் உய்வேன்) என்பது.

வி-ரை; எல்லாம் வல்ல ஆண்டவன், மெய்யன்பர்களை ஆட்கொள்ள, உமை யம்மையோடு இந் நில உலகத்துக்கு எழுந்தருளுங் காலத்து, அம்மை அருள் வடிவினள் ஆதலின், அடிகளைப் போன்ற உள்ளன்பு மிக்க தன் மக்கள் இறைவனாற் புறக்கணிக்கப்படாமல் இருக்கவேண்டுமே என்னும் எண்ணம் காரணமாக, அப் பெருமாட்டி கண்களில் மருட்சி தோன்றிற்றென்று கருதும்படி, "மானேர் நோக்கி யுமையாள்" என்று கூறப்பட்டாள் என்க. நன் மக்களை விரைந்து ஆதரிப்பதில் தாய்மை அருள் முற்பட்டுச் செல்லும் என்பதை உலகியலிலும் காணலாம். அடிகள், அம்மையுடனுகவே ஆண்டவனை நினைவு கூரும் இயல்பினர் என்பதை, [1] "உடையாளுன்றன் நடுவிருக்கும்" என்பது முதலிய திருப்பாடல்களானும் உணரலாம். அடிகள் தம்மைப் பணிகோடற்கு, அம்மையுடனுய அப்பன் வருகையே காட்சிப்பட்டது என்பதைப் புலப்படுத்துவாராய், 'உமையாள் பங்கா" என்றார். ஆட்கொள்ளும் தலைவன் அடிமையைத் தன் இடத்து வரச்செய்தே பணி புரியச் செய்வன் என்பது உலகியலிற் கண்டது. ஈண்டுக் கடவுளர் தலைவனாகிய ஆண்டவன், தன் பேரருள் திறத்தை, உலகு

1. திருவாசகம், கோயில் மூத்த திருப்பதிகம் 1.

அறியக் காட்டுதற்கு, மிக எளியவனாகிய என்னை ஆட்கொள்ள, யான் இருக்கும் இடன் நோக்கி வந்தனன் என்பார், "இங்கு வந்து" என்றார்.

அடிமை கொண்டால், அவ்வடிமையைத் துன்புறுத்தும் பணி புரியச் செய்வாரும் உளர். அங்ஙனம் இன்றி, எனக்கு மிகவும் இனியனாக வுள்ளான் என்பார், "தேன்" முதலியவாகக் கூறினர். அமுதம் என்பதற்குத் தேவர் உணவாகிய அமிர்தம் எனவும், பால் எனவும் பொருள் கொள்ளலாம். பிற இடங்களிலும் அடிகள், [1]"தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்" எனவும், [2]"தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்து" எனவும், இவ்வாறே, இம்மூன்று பொருள்களையும் இம் முறையே கூறியிருக்கின்றனர். இனிமைப் பொருள்களாகிய இம் மூன்றனையும் இம் முறையே கூறியதில் ஓர் உண்மை இருத்தல் வேண்டும். மூன்றனுள்ளும் தேன், வடிகட்டிய அளவில் எடுக்கப்படுவது; நாவிற் பட்டதும் மிக்க இனிமை செய்வது. பால், காய்ச்சப்பட்டபின் ஓர் அளவு இனிமை பயப்பது. கருப்பஞ்சாறு, ஆலையில் இட்டுப் பிழிந்து எடுக்கப்பட்டு, நன்றாகக் காய்ச்சப்பட்ட பின் கட்டியாகி இனிமை செய்வது. இம் மூன்றனுள்ளும், தேன், புழுக்களின் எச்சில் மயமாகவும், பால், ஊனுடலின் சாரமாகவும் உள்ளவை. பயன் விளைப்பதில் தேனினும் பால் சிறந்தது. [3]"பாலொடு தேன் கலந்தற்றே" என்புழி, ஒடு உருபு உயர்பு குறித்து வந்ததும் அறிக. கருப்பங்கட்டி, எச்சில், ஊன் கலப்பு முதலிய அக் குற்றமும் இலதாய், உடலுக்கு நலம் பயப்பதாகும். இம் முறையில் ஆண்டவன் அன்பரை ஆட்கொள்ளுங்கால், தேனைப்போல மிக இனியனாய் வெளிப்பட்டு வயப்படுத்துப் பாலைப்போலப் பின் பயன் விளைத்துக் கருப்பங்கட்டியைப் போலத் தூய இன்பம் அளித்துப் பாது காப்பன் என்பது அறியத்தக்கது. தேன் சுவை எளிமையினும், பாற் சுவை அதனிற் சற்று அருமையினும்,

---

1. திருவாசகம், திருவம்மானை, 16. 2. திருவாசகம், திருவம்மானை 14.
3. திருக்குறள் 1121.

கருப்பங்கட்டிச் சுவை அதனினும் அருமையினும் அறியப் படுதல் போல, ஆண்டவன் அன்பரைஆட்கொள்ளுங்கால், முதலில் எளியனுகவும், பின் அவன் சொரூப நிலையை உணர உணர மேன்மேலும் பெரியனுகவும் காணப்படுவன் என்னும் உண்மையும் பெறப்படுதல் அறிக. " கரும்பின் தெளிவே " என்பது, தெளிந்த சாற்றினுலாகிய கட்டியை உணர்த்தலின் ஆகுபெயர் ஆகும்.

இங்ஙனம் தேன் எனப் பால் எனத் தெளிவு என வெளிப்பட்டு ஆட்கொண்டுஅருளும் ஆண்டவன், முடிவில், அழிவு இல்லாத பேரின்புறுத்தும் இன்ப வடிவினன் ஆவான் என்பது தோன்ற, " சிவனே " எனவும், இவ்வரிய பரம்பொருள், தம் அளவில் அன்றி, உலகத்து உயிர்த் தொகுதிகளுக்கு எல்லாம் பொதுவான வெளியிடத்தில் நின்று, ஐந்தொழில் திருக்கூத்து இயற்றி, எல்லோரையும் விழிப்பித்து அருளும் பெற்றியன் என்பது தோன்ற, " தென் தில்லைக் கோனே " எனவும் அருளிச் செய்வார் ஆயினர். உயிர்கள் செய்யும் தவ முதலிய வெல்லாம், இறைவன் திருவருட் பேற்றிற்கு ஆளாகவே. தட்ப வெப்பங்களைப் பொறுத்து இயற்றும் கடுந்தவம் எல்லாம், மூலமாகிய மெய்யன்பின் வலியளவே பயன் செய்வன. அம் மெய்யன்பு உள்வழியே, ஆண்டவன் திருவுள்ளக் குறிப்பின் சார்புக்குஆளாகலாம். அத்தகைய சார்பு பெற்ற பெரியோர் எல்லாம், ஆண்டவனே, நின் திருவடியை எய்தி இன்புற்றனர் என்பார், "உன்றன் திருக்குறிப்புக் கூடுவார் நின்கழல்கூட" என்றூர். திருவுள்ளக் குறிப்பிற் கூடினூர் திருவடி கூடினூராக, அச் சொல்லளவில் ஒற்றுமை யுடைய ஒரு கூடு எனக்கும் வாய்த்தது என்பார், "ஊனூர் புழுக்கூடு" என்றூர். என்பு, நரம்பு, தசைகளால் ஆக்கப்பட்டுப் புழுக் களுக்கு உறையுளாக வுள்ள இக் கூட்டை, யான் தங்கு தற்கு உரிய உறையுளாக நினைந்து, எனது எனக் கடைப் பிடித்து, இதனைப் பாதுகாத்துக்கொண்டு இருக்கலானேன்; என் அறியாமை இருந்தவாறு என்னே ! என்பார், "ஊனூர் புழுக்கூடு இதுகாத்திங் கிருப்பதானேன்" என்றூர். இதனுல்

கழல் கூடினர், ஊனர் புழுக் கூட்டை ஒழித்துக் கூடினர் என்பதும் போதரும். "புழுக்கூடு இது" என்புழிச் சுட்டு இழிவு கருதிற்று. இங்கு—இவ்வுடலில்; இவ்வுலக வாழ்க்கையில் எனினுமாம்.

இதன்கண், "ஊனர் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்ப தானேன்" என்றதனல், அது சிவாநுபவத்திற்குத் தடையாதலும், அதன் ஒழிவு, அதற்கு உரிய தூய்மை பயப்பது என்பதும் போதரலின், அநுபோக சுத்தி என்னும் பதிகம் நுதலிய பொருளும், தேனே யமுதே என்பன முதலிய விளிகளாலும், புழுக்கூடு என உடலைச் சுட்டியதாலும், பத்தி வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனுதல் அறிக.

56. உடையா னேநின் தனையுள்கி
உள்ளம் உருகும் பெருங்காதல்
உடையார் உடையாய் நின்பாதஞ்
சேரக் கண்டிங் கூர்நாயிற்
கடையா னேன்நெஞ் சுருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்ப தாக முடித்தாயே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில், "ஆண்டவனே, நின் திருவுளக் குறிப்புச் சார்புடையார் நின் திருவடி அடைய, யான் ஊனர் புழுக்கூடு ஆகிய இவ் வுடலைக் காத்திருக்கின்றேன்" என்ற அடிகள், இத் திருப்பாட்டில், உள்ளம் உருகும் பேரன்பு உடையார் நின் திருவடி அடையக் கண்டும், யான் தீ நாற்றம் உடைய புழுக்கூடு ஆகிய இதனைக் காத்திருக்கும்படி செய்தனையோ? என்கின்றனர். உடலைக் காத்தல், முன்னைத் திருப்பாட்டில் தம் செயலாகவும், இதன்கண் ஆண்டவன் கட்டளையாகவும் கொண்டு இரங்கியபடியாம்.

ப-ரை: உடையானே—எல்லாம் உடைய ஆண்டவனே, நின்தனை உள்கி—நின்னை நினைந்து, உள்ளம் உருகும்

பெருங்காதல் உடையார்—நெஞ்சம் உருகும் பேரன்பு உடையார், உடையாய் நின்பாதம் சேரக் கண்டும்—தம்மை உடைமையாக உடைய நின் திருவடிகளை அடைந்து இன்புறக் கண்டுவைத்தும், நெஞ்சு உருகாதேன்—உள்ளம் கரையாதவனும், கல்லா மனத்தேன்—கற்று அறியாத மனம் உடையவனும், கசியாதேன்—உள்ளக் கனிவு இல்லாதவனும் ஆகிய யான், இங்கு ஊர் நாயின் கடையானேன்—இவ்வுலகத்தில் ஊர்க்குப் பொது நாய் போலக் கடைப்பட்டவனாய், முடையார் புழுக்கூடு இது காத்து—தீ நாற்றமுடைய புழுக்கூடாகிய இதனைப் பாதுகாத்துக் கொண்டு, இங்கு இருப்பதாக முடித்தாயே—இந்நில வுலக வாழ்க்கையிலே இருக்கும்படி முடிவு செய்தனையோ? என்பது.

**வி-ரை:** ஒரு பொருளைச் சிறப்பு முறையில் குறிப்பிட்டு, அதனை உடையான் என்னாது, பொதுவாக உடையான் என்றதனால், எல்லாம் உடையான் என்பது பெறப்படும். குறைவற எல்லாம் உடையவன் இறைவன் ஒருவனே ஆவன். உள்ளம் உருகும் பெருங்காதல், [1] "பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ் நெஞ்சே" என்றபடி, காம நிலையில் மகளிரை நினைந்தும் உண்டாவதாகும். அதனை விலக்குதற்கே, "நின்றனையுள்கி" என்றார். இறைவனுடைய உருவம், அருவம், அருவுருவம் என்னும் மூவகைத் திருமேனிகளுள், முதலில் நெஞ்சால் நினைதற்கு உரியது உருவத் திருமேனியே. அவ்வுருவத் திருமேனியின் இயல்பு சிவாகமங்களில் கூறப்பட்டபடியாம். அதனை நெஞ்சத் தாமரை மலர் நடுவண் இருத்தி நினைவு கூர்தல் வேண்டும் என்ப. அதனையே ஈண்டு, "உள்கி" என்றார். உள்கி யுருகுதலாவது, நினைதற்குக் கருவியாகிய உள்ளம், அந் நினைவின் முதிர்ச்சியில் நெகிழ்ந்து கரைதல் ஆகும். உள்ளம் முற்றும் கரைந்த நிலையில், உயிர் சிவ பாவனையில் தலைப்பட்டு, மலநாசமாகிய பயன் எய்துவதாகும். பலகால்

1. திருவாசகம், திருச்சதகம் 19.

நினைந்து நினைந்து உள்ளம் உருகும் நிலையில் உள்ள அன்பே பேரன்பு ஆகும் என்பது குறித்து, "பெருங்காதல்" என்றார். அப் பேரன்பு உடையாரே, [1] "தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்" ஆவர் என்பது தோன்ற, "பெருங் காதலுடையார் உடையாய்" என்று கூறப்பட்டது என்க. தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் என்பதற்கு, உடைமைப் பொருளாகிய தம் இயல்பினை உணர்ந்து, உடையான் ஆகிய தலைவனை உணரும் தத்துவ ஞானிகள் என்பது பொருள் ஆகும். "பெருங் காதலுடையார் உடையாய் நின்பாதம்" என்புழிப் பேரன்புடையார் தம்மை உடைமைப் பொருளாக உடையை ஆகிய நின்னுடைய திருவடிகளை என விரித்தல் வேண்டும். உடையாய் என்னும் குறிப்பு வினைமுற்றுப் பெயரெச்சப் பொருள் பட்டு நின்றது. உடையாய் ஆகிய நின் என விரியும். அத்தகைய பேரன்பு உடையாரே ஆன்மாவின் இயல்பையும், ஆண்டவன் இயல்பையும் உணரும் பெற்றியர் என்பது தோன்றற்கு அவ்வாறு கூறப்பட்டது என்க. அத்தகைய பரிபக்குவம் உடைய மெய்யன்பர், ஆண்டவனே, நின் திருவடியைச் சார்ந்து இன்புறக்கண்டு வைத்தும் என்பார், "நின் பாதஞ் சேரக்கண்டும்" என்றார். கண்டும் என்புழி, உம்மை தொக்கு நின்றது. கண்டும் உருகாதேன் என முடிக்க. ஆண்டவனே, நின்னை நினைந்து உள்ளம் உருகும் பெருங் காதலுடையார் எய்திய பேற்றை அறிந்து இருந்தும், அப் பெருங் காதல் கொள்ளும் தகுதியில்லேன் எனினும், அதற்கு ஏதுவாக உள்ள மனம் உருகும் நிலையாவது எய்தினேனோ எனின்; அதுவும் இன்று என்பார், "நெஞ்சுருகாதேன்" என்றார்.

உள்ளம் உருகும் அநுபவம் இன்று எனினும், நின் பரம்பொருள் தன்மையும், அடிமையாகிய என் இயல்பும், கட்டாகவுள்ள பாசத்தின் இயல்பும் முதலிய சமய உண்மைகளையாவது கற்றுக் கேட்டு மனத் தெளிவு

1. சிவஞான போதம், அவையடக்கம்.

ஏய்ந்திலேனே எனின்; அதுவும் இன்று என்பார், "கல்லா மனத்தேன்" என்றார். ஈண்டுக் கல்லாமை, சமய நூல்களைப் பற்றியதாகும்; பரஞானமாகிய அநுபவ ஞானத்திற்கு ஏதுவாகவுள்ள அபரஞானம் அதுவாகலின் என்பது. நெஞ்சுருகுதல், அநுபவ ஞானமாகிய பரஞானம் ஆகும். கற்றல், சமய நூல் அறிவாகிய அபரஞானம் ஆகும். இரண்டும் இல்லேன் என்றபடி. கல்லா மனத்தேன் என்பதற்கு, கல்லைப் போன்ற நெஞ்சம் உடையேன் என்று உரைப்பாரும் உளர். அது நெஞ்சு உருகாதேன் என்பதனாற் பெறப்படுவதாகும் என்க. கசிதல்—கனிதல், குழைதல் என்னும் பொருள் உடையது; உருகுதற்கு முன் நிகழும் உள்ள நிலையாகும். இவ் வுண்மையை, 1 "கற்றறியேன் கலை ஞானம் கசிந்துரு கேனாயிடினும்" என்னும் பாடற் பகுதியானும் அறிய லாம். இப் பகுதியிற் கூறப்பட்டவை, நூல் அறிவும் அநுபவ உணர்வும் என்பது தெள்ளிதின் விளக்கம் ஆதல் அறிக. முதல் அடியில், பெருங்காதல் உடையார் இயல்பு கூறுங்கால், அவர்க்கு நூலறிவு கூறப் படாமைக்குக் காரணம், அநுபவ உணர்வு விஞ்சி நிற்றல் என்க. சரியை முதல் மேற்கொண்டு, ஞான நிலையடைந் தாரைச் சரியையும் உடையார் என்று கூறுதல் மிகையாம் என்பது ஈண்டு நினைக்கத்தக்கது.

நாய்ப் பிறப்பே இழிவானது. அந்நாயும் ஒருவனுக்கு உரியதாக இருப்பின், உணவு கொடுத்தும், இருப்பிடம் அளித்தும் பாதுகாக்கப்படுவதாகும். அங்ஙனம் இன்றி, ஊர்ப் பொதுவில் உள்ள நாய் ஆயின், பாதுகாப்பார் இல்லாமையான், அங்கும் இங்கும் இடையறாமல் ஓடி அலைந்து, பலராலும் துன்புறுத்தப்பட்டு, ஒரு நிலையின்றித் திரிவது ஆகும். அத்தகைய ஊர்ப் பொது நாய்போல, மனம் ஒரு நிலையின்றி அலைவுறத் திரியும் இழிவுடையேன் என்பார், "ஊர்நாயிற் கடையானேன்" என்றார். மேலே, "ஊரோருயிங் குழல்வேனே" எனவும், இங்கே, "ஊர்

1. திருவாசகம், திருவேசறவு 5.

நாயிற் கடையானேன்'' எனவும் கூறினர். ஆண்டு உழலுதற்கும், ஈண்டுக் கடைப்படுதற்கும் எடுத்துக் காட்டியபடியாம். கடையானேன் என்பது முற்றெச்சம்.

முன்னைத் திருப்பாட்டில், "ஊனார் புழுக்கூடு'' என்றார். அவ் வூனின் பயன் தீ நாற்றம் என்பார், இதன்கண், "முடையார் புழுக்கூடு'' என்று கூறினர். முன்னைப் பாட்டில், "இது காத்து இங்கு இருப்பதானேன்" எனத் தன் செயலாகக் கூறினர். யான் இத் தீ நாற்றம் உடைய புழுக்கூட்டை, அறியாமையால் எனது எனப் பாதுகாத்துக் கொண்டு இருப்பினும், பேரருள் உடைய ஆண்டவனாகிய நீயாவது உண்மை உணர்த்தி, இதனை ஒழித்து விடலாமே? நின் கருணைத் திருவுள்ளத்தில் அவ்வாறு கொண்டால், எனக்கு முடை உடற் கழிவும் பேரின்பப் பேறும் எளிதில் ஆமே? என் தீவினை காரணமாகத் திருவுள்ளத்தில் அக் குறிப்புத் தோன்றாமல், இத் தீயுடலைக் காத்துக் கொண்டு, இவ் வாழ்க்கையிலே நிலைப்படுமாறு செய்தனையோ? என ஆண்டவன் கட்டளையாகக் கூறுவார், "இது காத்திங் கிருப்பதாக முடித்தாயே'' என்றார். முடித்தாயே என்புழி, ஏகாரம் வினைப்பொருளில் வந்தது.

இதன்கண், நெஞ்சுருகாமை முதலியனவும், புழுக் கூடு காத்திருத்தலும், சிவாநுபவத்திற்குத் தடை என்பதும், உருகுதலும், உடலின் ஒழிவும், அதற்குரிய தூய்மை பயப்பன என்பதும் பெறப்படுதலின், **அநுபோக சுத்தி** என்னும் பதிகம் நுதலிய பொருளும், நெஞ்சுருகுதல் வேண்டும் என்னும் குறிப்பினாலும், முடையார் புழுக்கூடு என்னும் வெறுப்பினாலும், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

57. முடித்த வாறும் என்றனக்கே
தக்க தேமுன் அடியாரைப்
பிடித்த வாறுஞ் சோராமற்
சோர னேனிங் கொருத்திவாய்

துடித்த வாறுந் துகிலிறையே
சோர்ந்த வாறும் முகங்குறுவேர்
பொடித்த வாறும் இவையுணர்ந்து
கேடென் றனக்கே சூழ்ந்தேனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டுக்களில், "ஊனார் புழுக் கூடு" எனவும், "முடையார் புழுக்கூடு" எனவும் இழித்துக் கூறப்பட்ட உடலைப் பாதுகாத்துப் பொய்யுலக வாழ்க்கையில் இருக்க நேர்ந்ததே என்று இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில், அவ் வுடற் பற்று அளவில் அன்றி, அது காரணமாக விளையும் காம விளைவிற்கும் ஆளாகி அழிவேன்கொல் என்று வருந்துகின்றார்.

ப-ரை: என் தனக்கு முடித்த வாறும் தக்கதே— எனக்கு இவ் வூன் உடலைக் காத்து இங்கு இருக்கும்படி முடிவு செய்ததும் பொருத்தமே, முன் அடியாரைச் சோராமல் பிடித்த வாறும் தக்கதே—முன்னர் மெய்யன் பரைத் தளரவிடாமல் அணைத்துக் கொண்டதும் பொருத் தமே, சோரனேன்—கள்வனாகிய யான், இங்கு ஒருத்தி வாய் துடித்த வாறும் — இவ்விடத்து ஒரு மாயைப் பெண்ணின் வாய்இதழ் துடித்த விதமும், துகில் இறையே சோர்ந்த வாறும்—ஆடை சிறிது நழுவிய விதமும், முகம் குறுவேர் பொடித்தவாறும்—முகத்தின் நின்றும் சிறு வியர் அரும்பிய விதமும், இவை உணர்ந்து என் தனக்கே கேடு சூழ்ந்தேனே—ஆகிய இவற்றை அறிந்தும் எனக்கே யான் கேடு தேடிக் கொள்ளல் ஆயினேன் என்பது.

வி-ரை: பாசப் பிணிப்புண்டு, பண்டை வினைப் பயன் நுகர வேண்டியதாக இருத்தலான், முடையார் புழுக்கூடு ஆகிய இவ் வுடலைக் காத்துக் கொண்டு, என்னை இங்கு இருக்கும்படி முடிவு செய்ததும், வினை எச்சம் இன்மை யால் பிறவியிற் புகுத்தாது, மெய்யன்பர்களைத் தளர விடாமல் திருவடி நீழலில் சேர்த்துக் கொண்டதும் பொருத்தம் என்றார்.

"முன்" என்பது, அடிகளுக்கு ஆண்டவன் ஞானாசிரியனாக எழுந்தருளி, ஞானோபதேசஞ் செய்த காலத்தைக் குறிக்கும். அப்பொழுது மெய்யன்பர் பலர் சூழ்ந்து இருந்தனர் என்பதும், இறைவன் உருக்கரந்த ஞான்று, அவர் எல்லோரையும் தன் திருவடி நீழலில் சேர்த்துக் கொண்டனன் என்பதும், அடிகள் வரலாற்றானும், [1] "அருளாரமுதப் பெருங்கடல்வாய் அடியாரெல்லாம் புக்கழுந்த" என்னும் பாடற் பகுதியானும் உணரலாம். மலக்கட்டுடையாரை, அது நீங்குங்காறும் கன்மப் பயனாகிய உடலோடு கூடியிருக்கச் செய்தலும், அஃதில்லாத மெய்யன்பரை அழிவில் இன்பத்திற்கு ஆளாக்கிக் கோடலும் இறையருட் செயல்கள் ஆகும். [2] "தன் கடன் அடியேனையுந் தாங்குதல்" என்றபடி, பக்குவ முதிர்ந்த ஆன்மாக்களை, மீண்டும் மல வாதனை பற்றாமல் காத்து அருளுதல் இறைவனுக்குரிய பொறுப்பு ஆகும் என்பது குறித்து, "சோராமற் பிடித்தவாறும்" என்றார். "தக்கதே" என்பதை, "முடித்தவாறும்", "பிடித்தவாறும்" என்னும் ஈரிடத்தும் இயைத்துக் கொள்ளல் வேண்டும்.

வினை யெச்சம் காரணமாக, யான் இவ் வூன் உடலைக் காத்திருக்க முடிவு செய்தனை யாயினும், அம்மட்டில் அமையாமல், இவ் வுடற் பற்றுக்காரணமாக மேன்மேலும் வினை விளைவு கிளைக்கின்றதே! ஆண்டவனே, என் செய்வேன்! என்று அடிகள் வருத்த மேற்கொண்டு, அவ் வினை விளைவுகளுள், ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் காட்டுவார் ஆயினர். அந் நிகழ்ச்சி: ஒரு பெண், தம் முன்னிலையில் நின்று, காமச் செயல்களைக் காட்ட, அச் செயல்கள் தீங்கு பயப்பன என்று அறிந்திருந்தும், சிறிது மனம் சென்றதாகக் கொண்டு இரங்கியதாகும். இத்தகைய நிகழ்ச்சி உலகியலில் எளிதாக நிகழ்வது உண்டு. இங்ஙனம் நிகழுங்கால், உண்மை அறிந்து, அகப்படாமல் விலகி உய்ய வேண்டும் என்று உலகினர்க்கு அறிவுறுத்துதற்பொருட்டு,

1. திருவாசகம், பிரார்த்தனைப் பத்து 3.
2. திருநாவுக்கரசர் தேவாரம், "நங்கடம்பனை"

அடிகள் தம்மேல் ஏறிட்டுக் கூறுவார் ஆயினர். அடிகள் திருவருட் பேற்றிற்கு ஆளான பெருமை அளவிடற் கரியது. அங்ஙனமாகவும், தம்மையும் தம் செயல்களையும் மிக இழிவாகக் கூறிய இடங்கள் பலவாகும். அப்படிக் கூறிய நிகழ்ச்சிகளுக்கு எல்லாம் அடிகளை ஆளாக்கல் நம்மனோர்க்குத் தகுதியன்று. மற்றை அடியார்களும், பொதுவான மக்கள் இயல்புகளை ஒரோவிடங்களில் தம் மேல் ஏற்றிக் கூறியிருப்பதை அறிகின்றோம்.

இனி, ஞானாசிரியனாக எழுந்தருளிய ஆண்டவன், 'இன்னும்சின்னாள் இருத்தி' என உருக்கரந்தபின், அடிகள், இத் தீயுடலை ஒழித்து, ஆண்டவன் திருவடியடைதல் எப் பொழுது கூடுமோ என்று கவன்று இருக்குங்கால், அவர் உள்ளம் உலகவாதனை எதிர்ப்பட்ட நிலையிலும், அதன்கண் ஈடுபடாமல் இருக்க, ஆண்டவன் திருவுளங் கொண்ட குறிப்பின்வழி, மாயையின் படைப்பாக ஒரு பெண் அடிகள் முன்னிலையில் காமச் செயல்களைக் காட்டி நடித்த தாகவும் கொள்ளலாம். [1] "மாயை மயக்கமும் செய்யு மன்றே" என்பது சிவஞான சித்தி. அந் நடிப்புக்களை வஞ்ச நடிப்புக்கள் என்றே அடிகள் உணர்ந்தனர் என்பதை, "இவை யுணர்ந்தும்" என்பதனால் அறியலாம். அங்ஙனம் அறிந்தும், அக் காட்சியில் சிறிது மனஞ் சென்றது குறித்து, "கேடு என்றனக்கே சூழ்ந்தேனே" என்றார் என்க. அம் மாயைப் பெண்ணின் காமச் செயல்கள் பல ஆயினும், ஓரளவிற் சுருக்கிக் கூறத் தொடங்குகின்றார். கரவிற் கவர்ந்த பொருளைப் பிறர் அறியாவாறு அநுபவிக்கக் கருதும் கள்வர் இயல்பை ஒத்துத் தனிமையில் நடித்த அம் மாயப் பெண்ணின் செயல்களைப் பிறர் அறியாத நிலையில் காண நேர்ந்தது பற்றித் தம்மை, "சோரனேன்" என்றார்.

முதலில் அப் பெண் தோன்றி, என்னவோ சில காமச் செய்திகளைக் கூறத் தொடங்கினாளாக, காதல் மிகுதியால் தன் வயம் இழந்ததாக நடித்து, பேச இயலாமல் வாய்

1. சிவஞானசித்தி, சு. 2, செ. 53.

இதழ் துடித்த அளவில் நின்ருள் என்பார், "ஒருத்தி வாய் துடித்த வாறும்" எனவும், பேச இயலாத நிலையில், உடுத்த ஆடையின் ஒரு கூறு சிறிது நெகிழ விட்டதாகக் கொண்டு, "துகில் இறையே சோர்ந்தவாறும்" எனவும் கூறினர். இவ் விரு வகைச் செயல்களாலும் அடிகள் உள்ளம் நெகிழாமை கண்டு, இனி என் செய்வல் என்று வருத்தம் தோன்ற நின்ருளாக, அத்துன்ப நினைவினுல் அவள் முகத்தில் சிறு வியர்வு உண்டாயிற்ரும். அதனையே, "முகங் குறுவேர் பொடித்த வாறும்" என்ருர். நினைவின் வெப் பத்தால் சிறுவியர் அரும்புதல் இயல்பே. பொடித்தல்— அரும்புதல். மன மொழி மெய்களாகிய முக் கரணங் களும் காம வயப்பட்டன என்பதற்கே இம் மூன்று செயல்களும் கூறப்பட்டன என்க. வாய் துடித்தலால் மொழியும், துகில் சோர்தலால் மெய்யும், முகம் வியர் பொடித்தலால் மனமும் காம வயப்பட்டன என்பது.

இப் பாடற் கருத்தையே, துறவறச் செல்வராகிய சிவஞான முனிவரர், கலைசைப் பதிற்றுப் பத்து அந்தாதியில் அமைத்து, [1] "சுரி குழன் மடவார் இள முலைப் பணைப்பும் துகிலிறை சோர்வதும் நகையும், வரி விழித் தொழிலும் சேயிதழ்த் துடிப்பும் மனத்திடை யெழுதி வைத்தழிவேன்." என்ருர். இச் செயல்கள் தீமை விளைவிப்பன என்று அறிந் திருந்தும் என்பார், "இவை யுணர்ந்தும்" என்ருர். உம்மை விகாரத்தால் தொக்கது. இக் காமச் செயல்களில் தாம் அகப்படவில்லையாயினும், இக் காட்சியில் சிறிது மனம் சென்றது குறித்து, அதனுல் விளையும் கேட்டினை யானே தேடிக் கொண்டவன் ஆயினேன் என்பார், "கேடென் றனக்கே சூழ்ந்தேனே" என்ருர். சூழ்தல்—ஆராய்ந்து தேடிக் கொள்ளுதல். ஆண்டவனே, ஊனுடலில் இருக்கச் செய்தால், இத்தகைய காம முதலிய குற்றங்களுக்கு மேன் மேலும் ஆளாக நேருமே, அங்ஙனம் நேராதபடி, இத் தீ யுடலை ஒழித்து, என்னை வன்று கொள்ளல் வேண்டும் என்பதே இத் திருப்பாட்டிற் போந்த கருத்து என்க் கொள்க.

1. கலைசைப் பதிற்றுப் பத்து அந்தாதி, செ. 72.

இதன்கண், "இவையுணர்ந்து கேடென்றனக்கே சூழ்ந்தேனே" என்றதனால், இத்தகைய செயல்களில் ஈடு படாமையே சிவாநுபவத்திற்கு உரிய உயிரின் தூய்மை ஆகும் என்பது பெறப்படுதலின், அநுபோக சுத்தி என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

58. தேனைப் பாலைக் கன்னலின்
தெளியை யொளியைத் தெளிந்தார்தம்
ஊனை உருக்கும் உடையானை
உம்ப ரானை வம்பனேன்
நானின் அடியேன் நீயென்னை
ஆண்டா யென்றால் அடியேற்குத்
தானுஞ் சிரித்தே யருளலாந்
தன்மை யாமென் தன்மையே.

க-ரை: முடையார் புழுக்கூடாகிய ஊனுடலைப்பற்றி நிற்பதோடு அமையாது, காமம் முதலிய குற்றங்களுக்கும் ஆளாகி அழிவேனே என்று முன்னைத் திருப்பாட்டில் வருந்திக்கூறிய அடிகள், அத்தகைய இழிதகவு உடையேன், யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடைய நின் அடிமை என்றால், அஃது எள்ளி நகையாடற்கு உரியதாகும் ஆதலின், ஆண்டான் அடிமைப் பொருத்தம் இன்மையைத் திருவுள்ளம் கொள்ளக்கூடுமோ என, இத் திருப்பாட்டில் இரங்குகின்றார்.

ப-ரை: தேனைப் பாலைக் கன்னலின் தெளியை— தன்னை அடைந்தார்க்குத் தேனும் பாலும் கருப்பஞ் சாற்றின் தெளிவுமாக உள்ளவனும், ஒளியை— பேரொளிப் பிழம்பினனும், தெளிந்தார் தம் ஊனை உருக்கும் உடையானை—தன்னைப் பரம்பொருள் எனத் தெளிந்த மெய்யன்பர்களின் ஊன் உடலை உருக்கும் உடையவனும், உம்பரானை—மேலாகிய சிவபுரத்து அரசனும் ஆகிய ஆண்டவனை நோக்கி, வம்பனேன்— வீணனாகிய யான், நான் நின் அடியேன் நீ என்னை ஆண்டாய் என்றால்—யான் உனக்கு அடிமையாவேன்

நீ எனக்கு ஆண்டவன் ஆவாய் என்று கூறினல், அடியேற்குத் தானும் சிரித்தே அருளலாம் தன்மை ஆம் என் தன்மை—அடியேனைக் குறித்து அப்பெருமான் நகைத்தே அருளலாம் தன்மையாகும் என் இயல்பு என்பது.

வி-ரை: ஆண்டவன் மெய்யன்பரை ஆட்கொள்ளுங் கால், தேனைப்போல எளிமையில் இனிமை பயந்து அவரை வயப்படுத்தும், பின்னர்த் தன்னை உணர்ந்து உணர்ந்து நெருங்குந்தோறும் பாலைப்போலத் தன் அரிய இயல்பையும் பயனையும் அவர்க்குப் புலப்படுத்தும், அதன்மேல் கருப்பஞ்சாற்றுத் தெளிவினல் ஆக்கப்பட்ட கட்டியைப் போல் மிக அரிய தன் இயல்பை உணர்த்தித் தூய இன்பத்தை அருளியும் பாதுகாப்பன் என்பது தோன்ற, "தேனைப் பாலைக் கன்னலின் தெளியை" என்றார். தெளி—தெளிந்த சாற்றினல் ஆக்கப்படும் கட்டியை உணர்த்தலின் ஆகு பெயர் ஆகும். இம் மூன்று பொருள்களையும் இம் முறையிற் கூறிய கருத்தும் பிறவும் 55-ம் திருப்பாட்டின் விளக்கத்திற் காண்க.

இங்ஙனம் இனிமைப் பொருளாக உள்ள அப் பெருமான், தூய ஞானப் பிழம்பாக வுள்ளான் என்பது தோன்ற, "ஒளியை" என்றார். கதிரவன் முதலிய மண்டிலங்களுக்கு எல்லாம் ஒளி உதவும் மூல ஒளியாக உள்ளான் இறைவன் என்று மறை யாகமங்கள் கூறும். [1] "காளத்தி யுள்ளிருந்த ஒளியே" என்பது தமிழ் மறை. ஞானமயமான பொருள்களில் தோன்றும் இன்பம் சிறந்தது என்பது புலப்படுக்கத் தேன் முதலிய இனிமைச் சுவை மிக்க பொருள்களாகவும், ஒளிப் பொருளாகவும் கூறியருளினர்.

தெளிந்தார்—இறைவனைப் பேரின்ப மயமான ஞான வடிவினன் என்று நூல் அறிவினல் ஐயம் திரிபு அற அறிந்து, ஞானசிரியன் உபதேச முகமாக அநுபவ உணர்வினல் தெளிந்த மெய்யன்பர். அங்ஙனம் தெளிந்து,

1. சுந்தரர் தேவாரம், "தளிர்போல்" 9.

தன் அருள் அமுதத்தை உண்ண உண்ண, உள் ஒளியைப் பெருக்கி, ஊனுடலைக் கரையச் செய்பவன் என்பார், "ஊனையுருக்கும் உடையானை" என்றார். ஞானநுபவம் உடையார்க்கு, தவத்தினால் ஊனுடல் சுருங்கச் சுருங்க, உள்ளொளியாகிய ஞானம் மிகும் என்பதை, [1] "ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி" என்னும் அடிகள் திருவாக்கானும் அறியலாம். பிணியின் நலிவினால் ஊனுடல் சுருங்குதலை உலகத்து மக்களிடைக் காணலாம். அதனால் உண்டாம் பயன் துன்பமே அன்றிப் பிறிது இன்று. தவச் செயலினால் ஊனுடல் சுருங்குமாயின், உள் ஒளி பெருகப் பெற்று, அதனால் சிவானந்த அநுபவ மாகிய பயன் எய்துவதாகும். ஒரு மகனுக்கு உடல் இளைப்பு, நோயினால் இல்லாமல் தவத்தினால் உண்டாயின், அது சிறந்தது ஆகும் என்பதை, [2] "விரதம்தனில் இளைத்த மேனி" என்பதனால் அறியலாம். ஊனுடலும் இறைவன் உடைமையாகும் ஆதலின், அதனை உருக்குதற்கு உரிய உரிமையும் அப் பெருமானுக்கே உண்டு என்பதைப் புலப்படுத்த, "உருக்கும் உடையானை" என்றார். ஊன் உருகிய நிலையில், இறைவன் அவ் உயிர்க்கு ஒளிமயமாகிய தன்னை வழங்கும் இயல்பினன் என்பதையும் குறிக் கொண்டே, முன்னர், "ஒளியை" என்று கூறினர் என்பதும் ஒன்று. இந் நிலவுலகத்துள்ள உயிர்த் தொகுதி களையும், பௌதிகப் பொருள்களையும் தனக்கு அடிமை யாகவும், உடைமையாகவும் கொண்டு விளங்கும் தலைவனாகிய சிவ பெருமானே, எல்லா உலகங்களுக்கும், தேவர் முதலியோர்க்கும் தலைவன் என்பது தோன்ற, "உம்பரானை" என்றார். உம்பர்—மேல் உலகமாகிய சிவலோகமும் சிவபுரமும் ஆம். அதற்கு அரசன் என்றதனால், முழு முதல் தலைமை பெறப்படுவதாகும். [3] "உம்பர்கட்கரசே" என்பதும் அடிகள் திருவாக்கு.

---

1. திருவாசகம், பிடித்த பத்து 9. 2. ஔவை பாட்டு. 3. திருவாசகம், பிடித்த பத்து 1.

ஒரு சிறந்த குறிக்கோளை மேற்கொண்டு, அதற்கு உரிய தவச் செயலில் ஈடுபடாமல், உடலை ஓம்பி, இவ்வுலக வாழ்க்கையில் பயன் அற்ற செயல்களை மேற்கொண்டு ஒழுகும் இயல்பினன் யான் என்பார், தம்மை, "வம்பனேன்" என்றார். [1] "தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார், அவஞ் செய்வார் ஆசையுட்பட்டு" என்னும் பொருள் உரைப்படி, தவம் அல்லாத செயல்கள் எல்லாம் பயனற்ற செயல்கள் என்பது தெளிவாம் என்க. சரியை முதலிய தவச்செயல்கள் உடையாரே, ஆண்டவனுக்குச் சிறந்த அடியார் ஆவார். அச் செயல்கள் இன்றி, அவச்செயல்களையுடைய வீணன் ஆகிய யான், அடியாரைப்போலப் பொய்மையாக நடித்து, உயிர்க்கு உயிராக நின்று, அவரவர் நன்று தீதுகளை உணரும் எம் பெருமானை நோக்கி, "நான் நின் அடியேன்" என்றால், அது தவச்செயல் இல்லாமையாகிய குற்றத்தோடு, பொய்மை கூறிய குற்றமும் ஆம் என்பதும், அவ்வளவில் அன்றி, ஆளுதற்கு உரிய தகுதியைப் பகுத்து உணரும் ஆற்றல் இறைவனுக்கு இன்று என்பது பெறப்படுமாறு, "நீ யென்னை யாண்டாய்" என்றால், அதனினும் பெரும் குற்றம் ஆம் என்பதும் அடிகள் கருத்து. இன்னோரன்ன குற்றங்கள் விளையுமாறு அடிகள் ஆண்டவனை நோக்கித் தகுதியில்லாத தம்மைக் குறித்து, "நான் நின் அடியேன்" எனவும், தகுதி உணராது ஆட்கொண்ட குறை தோன்ற, "நீ யென்னை ஆண்டாய்" எனவும் கூறினால், அஃது எள்ளி நகையாடற்கு உரியதாம் என்பார், "சிரித்தே யருளலாம் தன்மை" என்றார். தான் என்பது படர்க்கைப் பெயர்; அப்பெருமான் என்னும் பொருட்டு. உம்—தவிர்வழி வந்த சாரியை. யான் கூறிய பொருந்தா உரைக்கு என்னைக் கடுந் தண்டத்தால் ஒறுத்து அடக்க வேண்டியது இருக்க, பேரருள் உடைமையால் அங்ஙனஞ் செய்யாமல், தந்தையின் முன்னிலையில் அறியாப் பருவத்துக் குழந்தை கூறிய பொருந்தா

1. திருக்குறள் 266.

உரையைக் கேட்டு நகையாடல் போல, அப்பெருமான் சிரித்து அருள்வன் என்பது அடிகள் கருதியது என்க, அடியேற்கு என்புழி, நான்கன் உருபை இரண்டன் உருபாக்கல் வேண்டும். "சிரித்தே" என்புழி, ஏகாரம் தேற்றப் பொருட்டு. இது நகைத்தற்கே இடனாகும் அன்றி, உண்மை ஆகாது என்பது. என் இயல்பு ஆண்டவன் எள்ளி நகையாடற்கு உரியதே அன்றி வேறு பயன் விளைப்பது அன்று என்பார், "சிரித்தே யருளலாம் தன்மையாம் என் தன்மையே" என்றார். அடிகள் தம் பொருந்தா உரையைக் கேட்டாவது ஆண்டவன் வெளிப்பட்டு நகைத்து அருளுவான் ஆயின், அவ்வளவிற் பேறுடையேன் ஆவேன் என்பது அவர் தம் உட்கோள் என இத் திருப்பாட்டில் தெளியலாம். 1 "ஒறுத்தால் ஒன்றும் போதுமே" என்னும் அடிகள் திருவாக்கு ஈண்டு நினைக்கத்தக்கது.

இதன்கண், "சிரித்தே யருளலாம் தன்மையாமென் தன்மையே" என்றதனால், சிவாநுபவத்திற்குரிய தூய தன்மை, மெய்யடிமையால் உண்டாவது என்பது பெறப் படுதலின், **அநுபோக சுத்தி** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

59. தன்மை பிறரால் அறியாத
தலைவா பொல்லா நாயான
புன்மை யேனை ஆண்டையா
புறமே போக விடுவாயோ
என்னை நோக்கு வார்யாரே
யென்நான் செய்கேன் எம்பெருமான்
பொன்னே திகழும் திருமேனி
யெந்தாய் எங்குப் புகுவேனே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவன் பெருமை யையும் தம் சிறுமையையும் நோக்கத் தம்மைப் பொறுத்த

1. திருவாசகம், குழைத்த பத்து 2.

அளவில், ஆண்டான் அடிமைத் திறத்தில் பொருத்தம் இன்மை திருவுள்ளம் பற்றக் கூடுமோ என்று ஐயுற்று இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில், யான் சிறுமையாள ைக இருந்தாலும், ஆட்கொண்ட நீ எங்ஙனம் கைவிடக் கூடும்? அங்ஙனம் கைவிட்டால், இனி எங்குப் புகல் அடை வேன்? என்று இறைவனை முன்னிலைப் படுத்து இரங்கு கின்றார்.

ப-ரை: தன்மை பிறரால் அறியாத தலைவா — தன் இயல்பு பிறரால் அறியப்படாத தலைவனே, பொல்லா நாயான — தீங்கு மிக்க நாய் போன்ற, புன்மையேனை ஆண்டு — சிறுமையுடைய என்னை ஆட்கொண்டு அருளி, ஐயா புறமே போக விடுவாயோ—ஐயனே புறத்தே செல்ல விட்டு ஒழிப்பாயோ, என்னை நோக்குவார் யாரே—(அங்ங னம் விடுவாய் ஆயின்) அடியேனைக் கடைக் கணிப்பார் பிறர் யாரோ? எம்பெருமான் — எங்கள் ஆண்டவனே, நான் என் செய்கேன் — யான் யாது செய்ய வல்லேன், பொன் திகழும் திருமேனி எந்தாய் — பொன் மயமாக விளங்கும் திருமேனியை உடைய என் தந்தையே, எங்குப்புகுவேன்—வேறு எவ்விடத்தைப் புகல் அடைவேன் என்பது.

வி-ரை: இப் பாடலின் தொடக்கத்தில் கடவுள் தலை வன் இலக்கணம் மிகச் சிறந்த முறையில் தெளிவுறுத்தப் பட்டு உள்ளது. உலகத் தலைவன், கடவுள் தலைவன் என இருதிறப்படும் தலைவருள், உலகத் தலைவனாகிய அரசனை, உலகத்துள்ள மற்றை மக்கள் எல்லோரும் நன்கு அறிவர்; அத் தலைவன் குணஞ் செயல்களையும் வரையறுத்து உணர்வர். அத் தலைவன் பிறர் எல்லோரையும் அறியான்; அன்னார் குணம் செயல்களையும் நன்கு உணரான். கடவுள் தலைவனாகிய இறைவனோ, பிறர் எல்லோரையும் ஒருங்கு அறிவன்; அன்னார் குணம் செயல்களையும், [1] "அவனன்றி யோரணுவும் அசையாது" என்றபடி, உயிர்க்கு உயிராக நின்று நன்கு உணர்வன். பிறர்க்கு அப் பெருமான்

---

1. தாயுமானவர், 'எங்கும் நிறைகின்ற பொருள்' 1.

பெற்றி உணர்தல் அரிதாகும். இக்கருத்துக்களை அடக்கியே, "தன்மை பிறரால் அறியாத தலைவா" என்று சிவபெருமான் சிறப்பிலக்கணத்தை அருளிச் செய்வாராயினர். 1 "பெற்றி பிறர்க்கரிய பெம்மான்" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதும் இக் கருத்துப்பற்றியே. அடிகள், தம்மை ஆட்கொண்ட ஆண்டவன், தலைமை இலக்கணம் எல்லாம் நிரம்பப் பெற்றவன் என்பதைக் குறிப்பிட்டு, அப் பெருமான் தகுதிக்கு ஏற்றபடி, அவனால் ஆட்கொள்ளுதற்கு உரிய அடிமை இலக்கணம் தன்பால் சிறிதும் இன்று என்பதைப் புலப்படுத்துவாராய், 'பொல்லா நாயான புன்மையேனை' என்றார். நாய், பிறப்பினால் இழிவும், நன்றியறிவினால் உயர்வும் உடையதாகும். ஈண்டு, உயர்வுக்கு ஏதுவாகிய நன்றியறியும் நலத்தை ஒழித்துப் பிறப்பினால் இழிவுடையது என்பார், "பொல்லா நாய்" என்றார். ஆக்கம் உவமப் பொருட்டு.

அடிமைக்குத் தகாத சிறு குணங்கள் பலவும் உடையேன் என்பார், "புன்மையேனை" என்றார். என் புன்மையை அறிந்தும், நின் பேரருள் காரணமாக என்னை ஆட்கொண்டனை எனவும், அறிந்து ஆட்கொண்ட பின், என்னைப் புறத்தே தள்ளிவிடல் எவ்வாறு அமையும் எனவும் கூறுவார், "ஆண்டு புறமே போக விடுவாயோ" என்றார். இதனால், இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவன், 2"மீளா அடிமை யுனக்கே யாளாய்" என்றபடி, அவ்வடிமையினின்றும் மீட்சி பெற்றுப் பிறிதிடஞ் செல்ல நேராது என்பதும் போதரும். "புறமே போக விடுவாயோ" என்றதனால், 'யான் அடிமைக்கு உரிய தகுதி இல்லேன் எனினும், என்னை அறிந்து ஆட்கொண்ட நின் பெருமை சிறந்தது ஆகலின், அதற்கு இழுக்கு நேராவண்ணம் என்னைப் புறம் செல்லவிட மாட்டாய்' என்னும் அடிகள் உட்கோள் புலனாதலும் அறிக. இவ் வுட்கோள் பற்றியே, ஈண்டு, ஆண்டவனை விளிக்குங்கால், உயர்ந்தோய் என்னும் பொருள்

1. திருவாசகம், திருவம்மானை 20. 2. சுந்தரர் தேவாரம்.

தோன்ற, "ஐயா" என்று அருளிச் செய்தனர். ஒருவாறு என் பொல்லாங்கு குறித்து நின் பெருமையையும் கருதாமல் என்னைப் புறத்தே தள்ளிவிடுவாய் ஆயின், சிறந்த தலைவனுல் ஆட்கொள்ளப்பட்டும், விலக்கப்பட்டவன் என்று கருதில், பிறர் யாரும் என்னைக் கடைக்கணிக்க மாட்டாரே என்பார், "என்னை நோக்குவார் யாரே" என்றார். ஒரு சிறந்த தலைவனுக்கு ஆட்பட்டான் ஒருவன், எக் காரணத்தை முன்னிட்டேனும் விலக்கப்படுவான் ஆயின், அத் தலைவன் பெருமைக்கு அஞ்சிப் பிறர் யாரும் அவ் வடிமையை ஏற்றுக்கொள்ள முற்படார் என்பதும், முற்படினும், சிறந்த தலைவனுக்கு ஆளாய பின், அத் துணைச் சிறப்பில்லாத இழிந்தார்க்கும் ஆளாதல் மிகவும் இழிவு தருவதென்று அவ் வடிமையும் பிறிதிடம் செல்ல ஒருப்படான் என்பதும் உலகியலில் காணப்படுவன. இக் குறிப்பும், "என்னை நோக்குவார் யாரே" என்னும் தொடர் மொழியால் புலப்படுதல் அறிக.

ஆண்டவனே, நீ என்னைக் கை விடுவாய் ஆயின், ஆதரிக்கும் பிறர் யாரும் இன்மையால், இந் நிலையில் யான் செய்யத்தக்கது யாதுளது என்பார், "என் நான் செய்கேன்" என்றார். ஈண்டு, என்னை ஆண்டவனாகிய நீ இருக்க, அடிமையாகிய யான் செய்யத் தக்கது எதுவும் இன்று என்பதைக் குறிக்கொண்டு, "எம்பெருமான்" என்று விளித்தனர்.

இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளி அளித்த திருக்காட்சி, கண்கொள்ளாக் காட்சியாக அடிகள் கண்டு இன்புற்றவர் ஆதலின், ஞானாசிரியனாகிய அப் பெருமான் திருவுருவத்தை உள்ளக் கிழியில் எழுதிக்கொண்டு, "பொன்னே திகழும் திருமேனி" என்றார். அத் திருமேனியைச் சுட்டிக் கூறக் கருதுங்கால், அப் பெருமான் தன் பேரானந்தப் பெருஞ் செல்வத்தை அநுபவிக்குமாறு சிறப்பு முறையில் தமக்கு உபதேசித்த தந்தை எனக் கொண்டு, "எந்தாய்" என்றார். சிறந்த தந்தையின் செல்வத்தை அநுபவிக்கப் பிறந்த மைந்தனாகிய யான்,

அத்தந்தை யிடத்தை விட்டு, வேறு எங்குச் செல்வேன் என்பார், "எங்குப் புகுவேனே" என்றார்.

இத் திருப்பாட்டில் ஒவ்வோர் அடியிலும் குறிப்பிட்ட கருத்துக்கு ஏற்ப இறைவனை விளித்திருத்தல் அறிந்து இன்புறத்தக்கது. "தலைவா", "ஐயா", "எம்பெருமான்", "எந்தாய்" என முறையே நான்கு அடிகளிலும் கூறியிருத்தல் காண்க. அடிகளின் கனிந்த உள்ள நிலையும், அன்பின் பெருக்கமும், ஆண்டவன் இடத்துள்ள பேரார்வமும் இத் திருப்பாட்டில் நன்கு அமைந்துள்ளன. வஞ்சம் அறியாக் குழந்தை, தன்னைப்பெற்ற தாய் தந்தையரிடத்துத் தன் குறையைக் கூறுதல் போல், அடிகள், ஆண்டவனை நோக்கிக் கூறியிருக்கும் செய்திகள் நம்மனோர் உள்ளத்தை உருக்கும் தன்மை யுடையனவாய் இருத்தல் அறிந்து இன்புறத்தக்கது.

இதன்கண், ஆட்கொண்ட சிறந்த தலைவனை அன்றி, வேறு புகல் இல்லையென்று கூறியிருத்தலால், அத் தலைவனுக்குச் செய்யும் தொண்டே சிவாநுபவத்திற்கு உரிய தூய்மை பயப்பதாகும் என்பது பெறப்படுதலின், **அநுபோக சுத்தி** என்னும் பதிகம் நுதலிய பொருளும், அடிகளின் அன்பு மொழி பலவற்றாலும், **பத்தி விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

60\. புகுவேன் எனதே நின்பாதம்
போற்றும் அடியா ருள்நின்று
நகுவேன் பண்டு தோள்நோக்கி
நாணம் இல்லா நாயினேன்
நெகும்அன் பில்லை நினைக்காண
நீயாண் டருள அடியேனுந்
தகுவ னேயென் தன்மையே
எந்தாய் அந்தோ தரியேனே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில், ஆண்டவனை நோக்கி, ஆட்கொண்ட நீ என்னைக் கைவிட்டால், யான் வேறு

எங்குப் புகல் அடைவேன் என்று இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில், யான் அன்பு இலேன் ஆயினும், அடிமை யாக ஏற்றுக் கொண்டமையால், நின் திருவடி எனக்கு உரியது ஆகிவிட்டது ஆகலின், அதன்கண்ணே புகல் அடையக் கடவேன் என்று தம் துணிபு கூறுகின்றார்.

**ப-ரை:** நாணம் இல்லா நாயினேன் — பழி பாவங் களுக்கு நாணுதல் இல்லாத நாயின் தன்மை யுடைய அடி யேன், பண்டு போற்றும் அடியார் உள் நின்று—முன்னர் நின்னை வழிபட்டு நின்ற மெய்யடியார் குழுவின் நடுவே நின்று, தோள் நோக்கி நகுவேன் — என் தோள்களின் பணைப்பைப் பார்த்து இறுமாந்து களித்தேன், நினைக் காண நெகும் அன்பு இல்லை — நின் திருவுருவைக் கண்டு இன்புறுதற்கு உரிய குழைந்த மெய்யன்பு என்பால் இல்லை, நீ ஆண்டு அருள அடியேனும் தகுவனே — இந் நிலையில் நீ அடிமை கொண்டு திருவருள் புரிதற்கு அடிமையாகிய யானும் தகுதி உடையன் ஆவேனோ, எந்தாய் தன்மை என்—என் தந்தையே என் இயல்பு இருந்தவாறு என்னே, அந்தோ தரியேன்—ஐயகோ இவ்வுலக வாழ்வில் பொறுத்து இரேன், எனது நின் பாதமே புகுவேன்—எனக்குரிய நின் திருவடிக்கண்ணே அடைவேன் என்பது.

**வி-ரை:** இழிந்த கருமம் காரணமாக நாணுதல், நன் மக்கள் நாணம் என்பதும், பழி பாவங்களுக்கு நாண வேண்டும் என்பதும் அறநூல் விதி. [1] "நாணாமை நாடாமை" என்னும் திருக்குறளுக்குப் பரிமேலழகர், "நாண வேண்டுமவை பழி பாவங்கள்" என்று எழுதிய உரைக் குறிப்பும் காண்க. ஈண்டு, உண்மை அன்பு இல்லா மல் மெய்யடியார் குழுவில் புகுந்ததும், இறுமாந்து களித் ததும் பழிக்கத்தக்கன ஆகவும், அவை குறித்து நாணம் கொள்ளாமையின், அடிகள் தம்மை, "நாணமில்லா நாயி னேன்" என்றார். நாண வேண்டியதற்கு நாணுமை நேரின், அந்நாண் கெடாமைப் பொருட்டு உயிரை நீத்த லும் தக்கது என்ப. [2] "நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப் பொருட்டால், நாண் துறவார் நாணாள்பவர்" என்னும்

1. திருக்குறள் 833. 2. திருக்குறள் 1017.

பொருள் உரையும், [1] "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" என்னும் சான்றோர் கூற்றும் ஈண்டு நினைக்கத்தக்கன. அங்ஙனம் ஆகவும், இங்கே அடிகள் நாணம் இழந்தும் செருக்கு உற்று வாழ்ந்திருக்கின்றேனே என்று இரங்கிய படியாம்.

"பண்டு போற்றும் அடியார்" என்றது, இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளி அடிகளுக்கு உபதேசித்த காலத்து, அப் பெருமான் பக்கலில் சூழ்ந்து வழிபாடு செய்துகொண்டிருந்த மெய்யன்பரைக் குறிக்கும். சிறிதும் அன்பு இல்லாத யான் ஒதுங்கி நில்லாது, நாணம் இன்றி, அவ்வுண்மை அடியார் குழுவில் நடுவில் நின்றேன் என்பார், "போற்றும் அடியார் உண்ணின்று" என்றார். ஆண்டவன் எல்லோரும் அறிய ஆட்கொண்டனன் ஆதலின், அஃது அறிந்த மெய் அடியார் தம் குழுவில் என்னை ஏற்றுக்கொண்டனர் ஆயினும், அன்பு இன்மை அறிந்த யான் ஒதுங்கி இருத்தலே தக்கது ஆம் என்று அடிகள் கருதினர் என்க. ஆண்டவன் ஆட்கொண்டு உபதேசித்த அளவில், சித்த விருத்தியை அடக்கிப் பணி செய்தல் ஒன்றையே கடப்பாடாகக்கொண்டு ஒழுக வேண்டியவனாகவும், அங்ஙனம் இன்றிப் பலரும் அறிய என் பெருமையை வெளிப்படுத்தி, என் தோள்களின் பூரிப்பை யானே கண்டு இறுமாந்து இருந்தேன் என்பார், "தோள் நோக்கி நகுவேன்" என்றார். மெய்யறிவு இல்லாத மக்கள், [2] "இன்பத்திலிறுமாந்து தோணோக்கி யின்றமத, துன்பத்தில் அழுந்துவார் தொல்லுலகில் அறியாதார்" என்றபடி, இன்பம் நுகரும் காலத்து, இறுமாந்து, தம் தோள் பணைப்பை நோக்குதலும், துன்பம் நுகரும் காலத்துக் கன்றி வாடுதலும் இயல்பாகக் கொள்ளுவர் என்பது உலகியலில் அறியப்படுவது. தோணோக்கி நகுதல்—களித்தல். இங்ஙனம் கொள்ளாது, "தோணோக்கி நகுவேன்" என்பதற்கு, ஆண்டவன் திருத் தோள்களைக்

1. தொல். பொருள், பொருள். சூ. 113. 2. சேது புராணம்.

கண்டு சிரிக்கும் அவ்வளவே உடையேன் என்று பொருள் கூறினரும் உளர். அது பொருட் சிறப்பு இன்மை அறிக.

யான் உண்மை அடியார் குழுவில் நடுநாயகமாக இருக்கும் தகுதி பெற்றேன் என்று இறுமாந்து களித்தேனே அன்றி, ஆண்டவனே, நின்னைக் காண்டற்கு உரிய குழைந்த அன்பு பெற்றிலேன் என்பார், "நெகும் அன்பு இல்லை நினைக்காண" என்றார். இறைவன் அன்பர் உள்ளம் உருகிய நிலையிற் காட்சி அளிப்பவன் ஆவான் என்பதை, [1] "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும் பொன்னார் சடைப்புண்ணியன்" என்னும் தமிழ் மறையானும் உணரலாம். நின்னைக் காண்டற்கே என்பால் அன்பு இல்லையானால், நின் திருவடியைச் சார்ந்து இருத்தற்கு யான் எங்ஙனம் தகுதி உடையனுவேன் என்பது அடிகள் குறிப்பு என்க.

அத்தகைய மெய்யன்பு இல்லாத நிலையில், நீ ஆட்கொள்ளுதற்கு உரிய தகுதி என்பால் எங்ஙனம் அமையும் எனவும், ஆளாந்தகுதியே இல்லாத பொழுது, நின் அருள் பெறுதற்கு எவ்வாறு உரிமை உடையனுவேன் எனவும் அடிகள் அறிவித்துக்கொள்ளுவாராய், "நீ ஆண்டு அருள அடியேனும் தகுவனே" என்றார். தகுவனே என்புழி, ஏகாரம் எதிர்மறை விஞப்பொருளில் வந்தது.

யான் தகுதியற்றவன் ஆயினும், நின் புதல்வன் என்பதை மனக்கொளல் வேண்டும் என்பது குறித்து, "எந்தாய்" எனவும், அன்பு இல்லாத நிலையிலும் ஆட்கொண்டு அருளிய நின் உயர்ந்த இயல்பை நோக்க, என் இழிந்த இயல்பு இருந்தவாறு வருந்தத்தக்கது என்பார், "தன்மையென்" எனவும் கூறினர். அமரர், முனிவரர் முதலியோரும் பல்லாயிரம் ஆண்டு கடுந் தவம் புரிந்தும், காண்டற்கு அரிய ஆண்டவன் எளிவந்து காட்சி அளிப்பவும், காணப்பெறும் பேறு இல்லாத நிலையில் இவ்

1. திருநாவுக்கரசர் தேவாரம்.

வுலக வாழ்க்கை எற்றிற்கு என்பார், "அந்தோ தரியேன்" என்றார். தரித்தல்—பொறுத்தல். இவ்வுலக வாழ்க்கையைப் பொறேன் என்ற அடிகள், முடிவில் ஆண்டவனை நோக்கித் துணிந்து கூறியது யாது எனின், "எனது நின் பாதமே புகுவேன்" என்பது. யான் தகுதி இல்லாதவன் ஆயினும், நின் கருணை காரணமாக என்னை ஆட்கொண்டமையால், நின் திருவடி எனக்கு உரியதாகும். உரிய இடத்தை அடைதற்கு ஏதும் தடை இன்று ஆதலின், அத் திருவடிக் கண்ணே கூடுவேன் என்பார், "எனது நின் பாதமே புகுவேன்" என்றார். எனதே நின் பாதம் என்புழி, ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. துணி பொருளைப் பாட்டின் தொடக்கத்திற் கூறியது, உறுதி இது எனத் தெளிவுறுத்தற் பொருட்டு என்க. இதற்குமுன் உள்ள திருப்பாட்டில், "எந்தா யெங்குப் புகுவேனே" என்று வருந்திக் கூறியதற்கு அமைதி கூறியவாறு இது.

இதன்கண், "புகுவேன் எனதே நின்பாதம்" என்றதனால், திருவடி கூடுதலே சிவாநுபவத்திற்கு உரிய என்றதனால், திருவடி கூடுதலே சிவாநுபவத்திற்கு உரிய தூய்மை பயப்பது என்பது பெறப்படுதலின், **அநுபோக சுத்தி** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "எந்தாய் அந்தோ தரியேனே" என்றதனால், **வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் தோன்றுதல் அறிக.

## 7. காருணியத் திரங்கல்

காருணியத் திரங்கல் என்பது ஆண்டவன் கருணையைக் குறித்து இரங்குதல் என்னும் பொருள் உடையதாகும். சிவாநுபவ நிமித்தம் செய்துகொள்ளப்படும் உயிர்த் தூய்மை முன்னைப் பதிகத்திற் கூறப்பட்டது. பேரின்பப் பிழம்பாகவும், தூய ஞானச் சுடர் ஒளியாகவும் உள்ள இறைவனை அநுபவித்தற்குத் தடையாக உள்ள குற்றங் களைப் போக்கி, சிவானந்தத் தேறலை நிரப்பிக் கொள்ளு தற்குத் தகுதியான கொள்கலனாகி உயிர் இயல்பு தூயதாயபின், வேண்டற் பாலது சிவ பெருமான் திருவருள் விளக்கமே யாகும். பாச நீக்கத்தின் பின் சிவப்பேறு உண்டாம் என்பது சைவ நூற்கொள்கை. அச் சிவப்பேறு ஆனந்தத்து அழுந்தல் முதலிய பின்வரும் மூன்று பதிகங்களாலும் தெளிவு படுத்தப்பட்டுள்ளன. அச் சிவப்பேற்றுக்கு முன்னரும், பாச நீக்கத்தின் பின்னரும் வேண்டற்பாலது இறைவன் திருவருட் பதிவு ஆகும். அவ் அருளே ஈண்டுக் காருணியம் என்று குறிக்கப்பட்டுள்ளது. அவ் அருட்பேறு கருதியே, அடிகள், காத்து அருள்க, வணக்கம் என்னும் பொருள் உடைய போற்றி என்னும் அன்பு மொழியைப் பாடல் தோறும் பலமுறை கூறி இறைவனை வேண்டி இரங்குவார் ஆயினர். அடிகள் இரங்கி வேண்டிய குறிப்பு மொழிகள் ஒவ்வொரு திருப்பாட்டிலும் அமைந்து இருத்தலை, ஆங்கு ஆங்குக் காணலாம். இதனாற் பதிக இயைபு புலனாதல் அறிக.

*அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.*

61\. தரிக்கிலேன் காய வாழ்க்கை
சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி எங்கள்
விடலையே போற்றி ஒப்பில்

ஒருத்தனே போற்றி உம்பர்
தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள்
நின்மலா போற்றி போற்றி.

**க-ரை:** முன்னைப் பதிகத்தின் இறுதித் திருப்பாட்டில், யான் தகுதியற்றவன் ஆயினும், என்னை ஆட்கொண்டமையால் எனக்கு உரிய நின் திருவடிக் கண்ணே புகுவேன் என்று உறுதி கூறிய அடிகள், இத் திருப்பாட்டில், அங்ஙனம் புகுதற்குத் தடையாக உள்ள இவ் ஊன் உடலோடு கூடிய வாழ்க்கையைச் சிறிதும் பொறேன், இதனை ஒழித்து இன்பம் நல்குக என இரங்கி வேண்டுகின்றார்.

**ப-ரை:** காய வாழ்க்கை தரிக்கிலேன்—இவ் ஊன் உடலோடு கூடிய வாழ்க்கையைப் பொறேன், சங்கரா போற்றி—இன்பம் செய்பவனே காத்து அருள்க, வான விருத்தனே போற்றி—நுண்ணிய பரவெளியில் விளங்கும் முதியோனே காத்து அருள்க, எங்கள் விடலையே போற்றி—சிறியேம் ஆகிய எங்கள் திண்ணியோனே காத்து அருள்க, ஒப்பு இல் ஒருத்தனே போற்றி—ஒப்பற்ற தனி முதல்வனே காத்து அருள்க, உம்பர் தம்பிரான் போற்றி—தேவர் தலைவனே காத்து அருள்க, தில்லை நிருத்தனே போற்றி—தில்லை நகரில் அருள் நடம் புரியும் கூத்தப் பெருமானே காத்து அருள்க, எங்கள் நின்மலா போற்றி போற்றி—பாசப் பிணிப்பு உடையேமாகிய எங்கள் தூயோனே காத்து அருள்க காத்து அருள்க என்பது.

**வி-ரை:** சங்கரன்—இன்பம் செய்பவன். இறைவனை இன்பம் செய்பவன் என்று விளித்தமையால், காய வாழ்க்கை துன்பம் செய்வதாகும் என்பது போதரும். துன்பம் செய்வதாகிய இவ்வுடலோடு கூடிய வாழ்க்கையை, 1 "தினைத் துணையேனும் பொறேன்" என்றபடி, "தரிக்கிலேன்" என்றார். செயப்படு பொருள் ஆகிய

1. திருவாசகம், நீத்தல் விண்ணப்பம் 39.

காய வாழ்க்கையைப் பின்னும், முடிக்கும் சொல்லாகிய தரிக்கிலேன் என்னும் வினையை முன்னும் கூறினர்; புழுக்கூடு ஆகிய உடலின் அருவருப்பைப் பொருது, அதனின் நின்றும் வெளிப்படவேண்டும் என்னும் ஆர்வமும் விரைவும் குறிக்கொண்டு என்க. "சங்கரா போற்றி" என்றதனல், அவன் காப்புப் பேரின்பம் செய்வதாகும் என்பது கருத்து. "போற்றி" என்னும் சொல், வணக்கம் என்னும் பொருளும், காக்க என்னும் பொருளும் உடையது ஆகும். சிலப்பதிகாரத்தில், [1] "பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி" என்புழி, "போற்றி" என்பதன் இகரத்தை வியங்கோட் பொருளாகக் கொண்டு, "போற்றுக" என்று அடியார்க்கு நல்லார் பொருள் கூறியதும் காண்க. இறைவனை விளித்துக் கூறிய இடங்களில் எல்லாம், இரண்டு பொருளும் பொருந்தும் ஆயினும், ஈண்டுக் காத்தருள்க என்னும் பொருள் சிறந்த தாகும். ஏனையிடங்களில் வணக்கம் என்று பொருள் கொள்ளலாம்.

வானம், ஈண்டு ஞானகாயத்தை உணர்த்தும். இதனை வடமொழியாளர், தகராகாசம் எனவும் அதன்கண்ணே சிவ பெருமானைக் கண்டு வழிபடல் தகரவித்தை எனவும் கூறுவர். நுண்ணிய ஞானப் பரவெளியில் விளங்கும் பழமை பற்றி, "விருத்தனே" என்றார். இறைவனது முதுமை, கால தத்துவத்தைக் கடந்தது ஆகலின், அளவிட்டு அறிதற்கு அரிது என்ப. திருத் தொண்டர் புராணத்தில், [2]"மொய்த்துவளர் பேரழகு மூத்த வடிவேயோ, அத்தகைய மூப்பெனும் அதன் படிவமேயோ" என்றும் மூப்பு வருணிக்கப்பட்டு இருத்தல் காண்க. சிறியேமாகிய எங்களுக்கு, அம் முதிய நிலை காண்டற்கு அரியது எனக் கொண்டு, காளைப் பருவத்தன் ஆய் என்பார்; 'விடலையே' என்றார். விடலை என்னும் சொல் பதினாறு முதல் முப்பது ஆண்டு வரை உள்ள ஆண் மகனை உணர்த்தும்; யௌவன பருவம் உடையவன் என்பது. மூப்பு, விடலை முதலிய பருவங்கள் இறைவனுக்கும், உளவாயின், மக்களினின்றும்

1. சிலப்பதிகாரம் 13-92 2. பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட. செ. 32.

இறைவனுக்கு வேறுபாடு என்னை எனின், பாலனாகி விடலையாகிக் கிழவனாதல் மக்கள் இயல்பு; இதற்கு மாறாகக் கிழவனாகிப் பின் காளையாய்க் கிஞ்சுகச் செவ்வாய் மழலை ஆதல் இறைவன் திருவிளையாட்டு என்க. அம் முறையில், ஈண்டு விருத்தனாகி விடலை ஆயினான் என்றார். இவ்வேற்றுமையால் இறைவன் உருக்கோடல் நம்மனோர் நலம் குறித்து என்பது போதரும்.

முதுமைப் பருவம், காளைப்பருவம் முதலியவை குறித்து, இறைவனை மக்கள் அளவில் எண்ணிவிடல் ஆகாது என்பதை மீண்டும் வலியுறுத்தற்கு, "ஒப்பில் ஒருத்தனே" என்றார். மக்கள், தேவர் முதலியோருள் ஒப்பு ஆவார் யாரும் இல்லை என்பதோடு, தனி முதல்வனும் ஆவான் என்பது கருத்து. முதுமைப் பருவமும், விடலைப் பருவமும் மக்களுக்கு உரியன. ஆதலின், ஒப்பில் ஒருத்தன் என்பது, மக்களை நோக்கக் கொள்ளத்தக்கது; தேவர்களுக்கு எத்தகையன் எனின், அவர்க்கும் தலைவன் ஆவான் என்பார், "உம்பர் தம்பிரான்" என்றார். "விண்ணோர் முழு முதல்" என்பதும் காண்க.

தேவர்களுக்குத் தலைவன் ஆயினும், அன்னார் காண்டற்கு அரியனாய், மக்களுக்கு எளியனாய்த் தில்லை நகர்க்கண் எழுந்தருளி, ஐந்தொழில் திருக்கூத்து இயற்றும் அருளாளன் என்பது தோன்ற, "தில்லை நிருத்தனே" எனவும், கூத்து இயற்றல் தற்பயன் கருதி அன்று; உயிர்த் தொகுதிகள் கண்டு உய்தற் பொருட்டு என்பது தோன்ற, "எங்கள் நின்மலா" எனவும் கூறினர். நின்மலன்—தற்பயன் கருதுதல் ஆகிய அழுக்கு இல்லாதவன் என்னும் பொருட்டு.

இத் திருப்பாட்டில் ஏழு முறை விளித்து, எட்டு முறை காத்து அருள்க என்றார். ஆண்டவனை அழைக்கும் அளவினும் தமக்குக் காப்பு வேண்டும் அளவில் ஆர்வம் விஞ்சி நிற்றலால் என்க.

இதன்கண், சங்கரன் முதலிய சொற்களால் விளித்து, போற்றி என்று பல முறை வேண்டிக் கொண்டமையின்,

காருணியத்திரங்கல் என்னும் பதிகம் நுதலிய பொருளும், "தரிக்கிலேன் காய வாழ்க்கை" என்றதனால், வைராக்கிய மும், போற்றுக என்றமையால். பத்தியும் தோன்றுதலின், பத்தி வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

62. போற்றியோ நமச்சி வாய
புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய
புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய
புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய
சயசய போற்றி போற்றி.

க-ரை : முன்னைத் திருப்பாட்டில் உடலோடு கூடிய வாழ்க்கையைப் பொறேன் என்ற அடிகள், இத் திருப் பாட்டில் அவ்வுடலைவிட்டுச் செல்லும் இடம் பிறிது இன்று ஆதலின், புறத்தே என்னைப் போக்கல் ஆகாது; நின் திருவடிக்கண்ணே இயைத்துக்கொள்ளல் வேண்டும் என்று இரங்கி வேண்டுகின்றார்.

ப-ரை : ஓம் நமச்சிவாய போற்றி—ஓம் நமச்சிவாயனே காத்தருள்க, புயங்கனே மயங்குகின்றேன் — பாம்பை அணிகலனாக உடையவனே மயங்குகின்றேன், ஓம் நமச் சிவாய போற்றி —, புகலிடம் பிறிது ஒன்று இல்லேன் — யான் புகுதற்கு உரிய இடமாக வேறு ஒன்றும் இல்லா தவன், ஓம் நமச்சிவாய போற்றி—, என்னைப் புறம்போக் கல்—என்னைப் புறத்தே தள்ளிவிடலாகாது, ஓம் நமச் சிவாய போற்றி—, சய சய—வெல்க வெல்க, போற்றி போற்றி—காத்தருள்க காத்தருள்க என்பது.

வி-ரை : திருவைந்து எழுத்தை நகாரம் முதலாக ஓதுதல் மறை வழக்கும், சிகாரம் முதலாக ஓதுதல் ஆகம வழக்கும் ஆம். திருவாசகம், தமிழ்மறை ஆதலின், இதன் தொடக்கத்திலே, "நமச்சிவாய வாழ்க" என்று

கூறப்பட்டுள்ளது. ஏனைய மந்திரங்கள் எல்லாம் பிரணவத்தோடு கூடியே எண்ணப்படுவன ஆம். சிவ பெருமானைப் பற்றிய இத் திருவைந்தெழுத்து மந்திரம், பிரணவம் இன்றியே எண்ணப்படுவதாகும்; காரணம், திருவைந்தெழுத்திற்கும் பிரணவத்துக்கும் வேறுபாடு இன்மையாம் என்க. பிரணவம் ஆகிய ஓம் என்பதன் விளக்கமே திருவைந்தெழுத்து என்பர். அவ்விரண்டும் முறையே தொகையும் விரியுமாகக் கொள்ளப்படுவனவாம். அம் முறையே இத் திருப்பாட்டில் கூறப்பட்டது என்க. "ஓம் நமச்சிவாய போற்றி" என்பதற்குப் பிரணவத்தின் வேறுபாடில்லாத திருவைந்தெழுத்தின் வாச்சியப் பொருளாக உள்ள சிவ பெருமானே காத்தருள்க என்பது பொருள் ஆகும். இத் திருப்பாட்டின் ஏனைய மூன்று அடிகளிலும் உள்ள, "போற்றியோ நமச்சிவாய" என்னும் தொடர்களுக்கும் இவ்வாறே பொருள் கொள்ளல் வேண்டும். அடிகள் தம் திருமறையில் நகார முதலாகக் கூறினும், ஞானாசிரியனாகிய இறைவனிடத்துப் பெற்ற உபதேசம் சிகார முதலாக என்பது, [1] "நானேயோ தவஞ் செய்தேன் சிவாய நம வெனப் பெற்றேன்" என்னும் பாடற் பகுதியால் உணரலாம். இன்னும், திருவைந் தெழுத்தின் தூல சூக்கும காரண முதலிய நிலைகளும், நிற்கு முறை, ஓது முறை முதலிய இயல்களும் பிறவும், திருமந்திர முதலிய நூல்களானும், உபதேச முறையாலும் அறிந்து தெளியத்தக்கன.

புயங்கம்—பாம்பு. நஞ்சு காலும் பாம்பை அணிகலனாக ஏற்றுக்கொண்டிருக்கும் நீ, என்னை ஏன் ஏற்றுக் கொள்ளல் ஆகாது; என் தகுதி, நின்னை அணுகுதற்குப் பேர்தியது ஆகாமைக்குக் காரணம் அறியாமல் கலங்குகின்றேன் என்பார், "புயங்கனே மயங்குகின்றேன்" எனவும், இம் மயக்கத்தின் தெளிவாக வேற்றிடம் செல்லலாம் எனின், என்னை ஏன்று கோடற்கு உரிய புகலிடம் வேறு யாதும் இன்று என்பார், "புகலிடம்

1. திருவாசகம், திருவேசறவு 10.

பிறிதொன்றில்லேன் " எனவும், அத்தகைய ஓரிடத்தை நின்னின் வேறாக அமைத்து, அதன்கட் செல்லுக என்று கட்டளை இடல் ஆகாது என்பார், "புறம் எனைப்போக்கல்" எனவும் கூறினர். போக்கல் என்புழி, அல்லீறு எதிர் மறைப் பொருளில் வந்தது. கண்டாய் என்பது முன்னிலை அசைச் சொல்.

புகலிடம் பிறிதொன்று இல்லேன் எனவும், புறம் எனைப் போக்கல் எனவும் கூறியதால், " புகுவேன் எனதே நின் பாதம் " என்றபடி, எனக்குப் புகலிடமாவது என்னை ஆட்கொண்ட நின் திருவடியே ஆகும் என்பதும், அதன் கண்ணே புகுவேன் என்பதும் குறிப் பெச்சத்தாற் கொள்ளத் தக்கனவாம். "வெல்க வெல்க; காக்க காக்க" என்னும் பொருள் தோன்ற, "சய சய போற்றி போற்றி" என்று அடுக்காகக் கூறப்பட்டன. [1] " வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் " என்றபடி, இறைவனை நோக்கிக் கூறிய வெற்றி தமக்கு உண்டாக வேண்டும் என்பது கருத்து. ஈண்டு அடிகள் கருதிய வெற்றி, " புகு வேன் எனதே நின் பாதம் " என்னும் துணிவின் பயன் ஆகும். அடுக்கு, ஆர்வத்தால் உண்டாய விரைவு தோன்ற நின்றது. சிறந்த தத்துவ உண்மைகளைத் தன்னுள் அடக்கி நிற்கும் திருவைந்தெழுத்தைப் பிரணவத்துடன் பல முறை ஓதுதலால், அழிவில் இன்பப் பேறு உண்டாம் ஆதலின், நான்கு அடிகளினும் நா நலம் கனிய ஓதுவார் ஆயினர்.

இதன்கண், "புகலிடம் பிறிதொன்றில்லேன்", " புறம் என்னைப் போக்கல் " எனவும், " மயங்குகின்றேன் " எனவும் கூறியவாற்றால், ஆண்டவன் திருவருளை வேண்டி இரங்குதல் பெறப்படுதலின், காருணியத் திரங்கல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

63. போற்றியென் போலும் பொய்யர்
 தம்மைஆட் கொள்ளும் வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி
 நாதனே போற்றி போற்றி

1. திருவாசகம், திருச்சதகம் 16.

போற்றிநின் கருணை வெள்ளப்
புதுமதுப் புவனம் நீர்தீக்
காற்றிய மானன் வானம்
இருசுடர்க் கடவு ளானே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில், வேறு புகல் இடம் இல்லாமல் வருந்துகின்ற என்னைப் புறத்தே தள்ளிவிடல் ஆகாது என்று ஆண்டவனை நோக்கி இரங்கிக் கூறிய அடிகள், இத் திருப்பாட்டில் நின் அகத்தே என்னை ஈர்த்து, அருள் வெள்ளமாகிய புதிய தேனை உண்பித்துப் பாது காத்து அருளவேண்டும் என்று விண்ணப்பம் செய் கின்றார்.

ப-ரை: என் போலும் பொய்யர் தம்மை ஆட்கொள் ளும் வள்ளல் போற்றி — என்னைப் போன்ற மெய்யன்பு இல்லாரை அடிமை கொள்ளும் வள்ளற் பெருமானே காத்தருள்க, நின் பாதம் போற்றி போற்றி — நின் திரு வடிக்கு வணக்கம் வணக்கம், நாதனே போற்றி போற்றி— எம்பெருமானே காத்தருள்க காத்தருள்க, புவனம் நீர் தீ காற்று வானம் இருசுடர் இயமானன் கடவுளானே— நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு, இரண்டு ஒளி மண்டிலங் களாகிய கதிரவன் திங்கள், உயிர் என்னும் எண்வகைப் பொருள்களையும் திருமேனியாகக் கொண்டு மூர்த்திமானாக விளங்கும் கடவுளே, நின் கருணைப் புதுமது வெள்ளம் போற்றி—நினது அருளாகிய புதிய தேன் வெள்ளம் என்னைக் காத்தருள்வதாக என்பது.

வி-ரை: பொய்க்கு வித்தாக இவ்வுலக வாழ்க்கையில் என்னை வைத்தாய் என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறுவர் ஆதலின், தன்னைப் பொய்மையாளர்க்கு உவம மாகக் குறிப்பிட்டார். 1 "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" என்றபடி, உவமேயப் பொருளினும் உவமம் உயர்ந்ததாக இருத்தல் வேண்டும் என்பது விதி. அவ் விதிப்படி, ஏனைப் பொய்மையாளரினும் தம் தகுதி உயர்ந் தது எனக் கருதி, "என் போலும் பொய்யர்" என்றார்.

1. தொல். பொருள், சூ. 278.





பொய்யர் என்றது, அகத்தே அன்பு இன்றிப் புறத்தே அன்பு உடையராக நடிப் போரைக் குறிக்கும். [1]"நாடகத்தால் உன் அடியார் போல் நடித்து" என்பது அடிகள் திருவாக்கு. அத்தகைய பொய்யரையும் ஆட் கொள்ளுதலின், இறைவன் வள்ளல் எனப்பட்டான். கொடை மடம் பட்டு, வரையாது வழங்குவோன் வள்ளல் ஆவான். [2] "முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்" வழங்கியது, வரையாது வழங்கற்குச் சான்றாம் என்க. வரையாமையாவது, தகுதி உடையார், தகுதி இல்லார் என்னும் ஏற்றத்தாழ்வு உணர்ந்து, தகுதி இல்லாரை நீக்காமை. மெய்யரையும் பொய்யரையும் ஆட் கொள்ளும் வள்ளல் என்பதினும், தகுதியில்லாரை மாத்திரம் குறிப்பிட்டுப் பொய்யரை ஆட்கொள்ளும் வள்ளல் என்பதே சிறந்ததாகும். என்னை? கொடை மடம் ஆகிய வள்ளன்மையின் முக்கிய நோக்கம் அதுவாதலின் என்க.

"போற்றி நின் பாதம் போற்றி" என்று திருவடியை நடுவண் அமைத்து, முன்னும் பின்னும் வணக்கம் கூறியது, பொய்யர்க்கு உவமமாகவுள்ள தம்மையும் அடிமை கொண்டு, காட்சியளித்த பேருதவி கருதி என்க. திருவடியாகிய அவயவத்திற்கு வணக்கம் கூறி, அவயவியாகிய இறைவனைக் குறித்துக் காப்பு வேண்டுவார், "நாதனே போற்றி போற்றி" என்றார். ஈண்டும் அடுக்கு, ஆர்வம் பற்றிய விரைவுப் பொருளில் வந்தது.

"புவனம் நீர்...இருசுடர்" என்பன, செய்யுள் இயல்பு கருதி முறை பிறழ வைக்கப்பட்டன. ஐம்பெரும் பூதங்களும், கதிரவன், திங்கள் என்னும் ஒளி மண்டிலங்களும், இயமானன் எனப்படும் உயிரும் ஆகிய இவ் எண்வகைப் பொருள்களும் அல்லாமல், காணப்படும் இவ்வுலகம் என்பது பிறிது இன்மையின், இவ்வெல்லாவற்றையும் திருமேனியாகக் கொண்டு, இறைவன் மூர்த்திமானாக விளங்குவன் என்று மறை ஆகமங்கள் கூறும்.

---

1. திருவாசகம், திருச்சதகம் 11. 2. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண் 6.

இதனால், இறைவன் எல்லாமாய் விளங்குவன் என்பதும், "கடவுளானே" என்றதனால், இவை அல்லதுமாய் உள்ளான் என்பதும் பெறப்படும் என்க.

கடவுள் என்பது, எல்லாவற்றையும் கடந்து இருப்போன் என்னும் பொருள் உடையதாகும். இங்ஙனம் ஆகிய இறைவனது அகண்ட நிலைக்கு ஏற்ப, அவன் கருணைத் தேன் வெள்ளமாகக் கூறப்பட்டது. இறைவனது அருட் குணமே அன்பர்க்கு இன்றியமையாத பேரின்பப் பயனை விளைவிப்பதாகும் ஆதலின், குணிப் பொருளாகிய இறைவனை, அகண்ட வடிவத்தில் வைத்து விளித்துக் குணத்தை நோக்கிக் காப்பு வேண்டுவார் ஆயினர். இறைவன் அருட் குணத்தை, 1 "அருளாரமுதப் பெருங்கடல்" என்று பிறிதோரிடத்துக் கூறிய படி, ஈண்டு இனிமை மிக்க பொருள்களுள் சிறந்த தேனைக் கொண்டும், உலகில் சுவைத்து அறிந்த தேனைப் போல் இல்லாமல், என்றும் அறியாத புதிய சுவையுடைய தேனைக் கண்டும், "கருணைப் புது மது" என்றார். உலகப் பொருள்களுள் இனிமை மிக்கதற்கு வேறு உவமம் இல்லாமையால், தேன் எனப் பட்டது. ஆயினும், 2 "புல்லாகிப் பூடாய்" என்றபடி, தாம் எடுத்த பிறவிகளுள், எப் பிறவியினும் அறியப்படாத சுவை யுடைமை கருதிப் புதுமை அடை புணர்க்கப் பட்டது என்க. பிறப்பு அறும் நிலையில் சுவைக்கப்படுவது ஆகலின், அது புது மது ஆயிற்று என்க. அத்தகைய புது மது வெள்ளப் பெருக்குக் கரை புரண்டு ஓடக்கண்டும், கொள்வார் அரியர் ஆயினர் என்பதும், அவ் அருமை நோக்கியே தம்மைப் போன்ற பொய்யரையும் ஆட் கொள்ளும் வள்ளல் ஆகினன் இறைவன் என்பதும் குறிப்பு.

இதன்கண், "போற்றி நின் கருணை வெள்ளப் புதுமது" என்றதனால், ஆண்டவன் கருணைக் குணத்தை நோக்கிக் காப்பு வேண்டி இரங்குதல் பெறப்படுதலின், **காருணியத் திரங்கல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

---

1. திருவாசகம், பிரார்த்தனைப் பத்து 3. 2. திருவாசகம், சிவபுராணம், அடி 26.

64. கடவுளே போற்றி யென்னைக்
கண்டுகொண் டருளு போற்றி
விடவுளே உருக்கி யென்னை
ஆண்டிட வேண்டும் போற்றி
உடலிது களைந்திட் டொல்லை
உம்பர்தந் தருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த
சங்கரா போற்றி போற்றி.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில், ஆண்டவனே, 'நின் கருணை வெள்ளம் ஆகிய புதிய தேனை நுகர்வித்து என்னைக் காத்து அருள வேண்டும்' என்று விண்ணப்பம் செய்து கொண்ட அடிகள், இத் திருப்பாட்டில், அதனை உண்டற்கு யான் தகுதி உடையனாக அருட் பார்வை நல்கியும், அகப் புறப்பற்றை ஒழித்தும் அருள் புரியவேண்டும் என்கின்றார்.

ப-ரை: கடவுளே போற்றி—எல்லாவற்றையும் கடந்து நிற்கும் இறைவனே காத்து அருள்க, என்னைக் கண்டு கொண்டு அருளு போற்றி — அடியேனை அருணோக்கம் நல்கி ஏற்றுக் கொண்டு அருளுக வணக்கம், விடஉள் உருக்கி என்னை ஆண்டிட வேண்டும் போற்றி—புறப்பற்று ஒழிய என் உள்ளத்தை உருக்கி அடியேனை ஆட்கொள்ளல் வேண்டும் வணக்கம், உடல் இது களைந்திட்டு—உடலாகிய இவ் அகப் பற்றையும் ஒழித்து, ஒல்லை உம்பர் தந்தருளு போற்றி—விரைவில் மேலாகிய வீட்டு இன்பத்தைத் தந்து அருளுவாயாக வணக்கம், சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி—சடையின் கண்ணே கங்கையை வைத்து உலகைக் காத்து அருளிய சங்கரனே வணக்கம் வணக்கம் என்பது.

வி-ரை: மெய்யுணர்வினால் அன்றி, மக்களுடைய மன மொழி மெய்களுக்கு எட்டாதவன் என்பது தோன்ற, "கடவுளே" என்றார். இதனால், யான் நின்னை அறிந்து அணுகும் ஆற்றல் இல்லாதவன் என்பது பெறப்படுதலின், நீயே என்னை அருட்பார்வை நல்கி ஏற்றுக் கொள்ளல்

வேண்டும் என்பார், "கண்டு கொண்டருளு" என்றார். இறைவன் அருளேக்கமே நயன தீக்கை என்ப. [1] "அருளேக்கில் தீர்த்த நீராட்டிக் கொண்டாய்" என்பது தமிழ் மறை. யாரையும், எவற்றையும் கடந்து நிற்கும் பொருளை, ஓர் உயிர் அணுகி அறிதல் அரிது ஆகலின், அவ் விறைவனே தன் அருட்பார்வைக்கு இலக்கு ஆக்கித் தூய்மைப் படுத்து ஏற்றுக் கொள்வன் என்பது கருத்து.

"விட" என்பது, புறப்பற்று ஒழிய என்னும் பொருளதாம். பின்னர், அகப்பற்றாகிய உடல் ஒழிவு கூறப்படுதலின், ஈண்டு, ஏனைய புலனுகர் பொருள்கள் ஆகிய புறப்பற்று என்பது வருவித்து உரைக்கப்பட்டது. தான் அல்லாத உடம்பை யான் என்றும், தன்னோடு இயைபு இல்லாத பொருளை எனது என்றும் கருதி, அவற்றின்கட் பற்றுச் செய்தல், முறையே அகப் பற்றும் புறப் பற்றும் ஆகும் என்ப. யான் வந்தேன்; போனேன் என்புழி, வருதல் போதல் உடம்பின் செயல்களாகவும், அச் செயல்களுக்கு வினை முதலாக உயிர் யான் எனத் தன்னைக் குறித்தலான், அஃது அகப்பற்று ஆயிற்று. [2] "பிறப்பறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை" என்பது பொருளுரை. ஐம்புல நுகர்ச்சி நிமித்தம் படைக்கப்பட்ட பொருள் எல்லாம் தன்னோடு இயைபு இல்லனவாகவும், எனது எனது என்று கருதிப் பற்றுச் செய்யப்படுதலின், அது புறப்பற்று ஆகும். புறப்பற்று, மனம் பொறிவழிச் சென்று, புலனுகர்ச்சியில் ஈடுபடுதலான் உண்டாவது. [3] "அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை" என்பது திருக்குறள். ஆகவே, புறப்பற்று ஒழிவிற்குப் பொறிவழிச் செல்லும் மனவலி குறைய வேண்டும் என்பது போதரும். இது குறித்தே, ஈண்டு, "உள் உருக்கி" என்றார். மனம் வலிதாக நின்று புலன் நுகர்விற் செல்லாமைப் பொருட்டு, அதனைக் கரைத்து, அன்பு மயம் ஆக்கவேண்டும் என்பது கருத்து. புறப்பற்று எல்லாம் ஒழிய, எனது என்பதற்குப் பொருளாக உள்ளது, "புகுவேன் எனதே நின்பாதம்"

1. அப்பர் தேவாரம், தனித்திருத்தாண்டகம் 8, "அத்தாவுன் அடியேனை"
2. திருக்குறள் 345. 3. திருக்குறள் 343.

என்று அருளியபடி, தம்மை ஆட்கொள்ளுதற்கு உரிய இறைவன் திருவடியே ஆம் என்பார், " என்னை ஆண்டிட வேண்டும் " என்றார்.

புலனுகர் பொருள்களில் உள்ள பற்று ஒழிந்த அளவில், வீட்டின்பம் பெற இயலாதாகலின், யான் என்பதற்குப் பொருளாக உள்ள உடலைப்பற்றிய அகப்பற்றும் ஒழிய வேண்டும் என்பார், " உடலிது களைந்திட்டு " என்றார். இது என்பது அகப்பற்று என்னும் பொருட்டு. இதனையும் என்று விரித்துக் கொள்ளல் வேண்டும். உடலைப்பற்றிய பற்று ஒழிதற்கு, உடலையே ஒழித்தல் வேண்டும் என்பது அடிகள் கருத்து. " பிறப்பறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை " என்புழி, " இவ் வுடம்புகளால் துன்பம் இடையறாது வருதலை உணர்ந்து, இவற்றை ஏய கட்டினை இறைப் பொழுதும் பொறாது, வீட்டின் கண்ணே விரைதலின், உடம்பு மிகை யென்றார் " என்று பரிமேலழகர் எழுதிய உரைப் பகுதியும் ஈண்டு நினைக்கத் தக்கது. "உம்பர்" என்பது மேலாகிய வீட்டின்பத்தைக் குறிப்பதாகும். [1] " தினைத் துணையேனும் பொறேன் " என்பதனால், அடிகள் புழுக் கூடாகிய ஊனுடலை விட்டு ஒழிப்பதற்கு விரைகின்றார் என்பது அறியப்படுதலின், ஈண்டும், " ஒல்லை உம்பர் தந்தருளு " என்றார்.

இத் திருப்பாட்டின் முதல் அடியில், நயன தீக்கையால் என் உயிரைத் தூய்மைப் படுத்து, என்னை ஏற்றுக் கொள்ளல் வேண்டும் எனவும், இரண்டாம் அடியில், புறப்பற்றை ஒழித்து, வலிய நெஞ்சை உருக்கி ஆட்கொள்ளல் வேண்டும் எனவும், மூன்றாம் அடியில், அகப்பற்றையும் ஒழித்து, வீட்டின்பம் நல்கவேண்டும் எனவும் அடிகள் கருதிக் கூறியபடியாம். [2] " யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்கு, உயர்ந்த உலகம் புகும் " என்பதும் காண்க. திருவள்ளுவ தேவர், உயர்ந்த உலகம் என்று வீட்டு நிலையைக் கூறியபடியே, இத் திருப்பாட்டில், " உம்பர் " என்று அருளிச் செய்யப்பட்டது என்க.

---

1. திருவாசகம், நீத்தல் விண்ணப்பம் 39. 2. திருக்குறள், 346.

இறைவன் தன்னைச் சார்ந்தாரைத் துன்பம் ஒழித்து இன்புறுத்தும் இயல்பினன் என்பது தோன்ற, "சடையுளே கங்கை வைத்த சங்கரா" என்றார். வான் யாற்றின் பெருக்கால் உலகத்திற்குக் கேடு நேராவாறு, தன் சடையின் ஒருகூற்றில் அடக்கி இன்புறுத்தினன் என்பது புராண கதை. சங்கரன் — இன்பம் செய்வோன். அங்ஙனமே, அகப்புறப் பற்றுக்களால் ஆகிய துன்பத்தை ஒழித்து, விரைவில் வீட்டின்பம் அருளி, என்னைக் காத்து அருளல் வேண்டுமென்று இறுதி அடியில் உள்ள விளியாலும் குறிப்பிட்டு அருளினார் என்பது. ஈரிடத்தும் அருளுக என்பவற்றின் ஈறு தொக்கு நின்றன.

இதன்கண், "உள் உருக்கி யென்னை ஆண்டிட வேண்டும்" எனவும், "ஒல்லை உம்பர் தந்து அருளுக" எனவும் ஆண்டவன் கருணையை வேண்டி இரங்குதலின், **"காருணியத்திரங்கல்"** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "உடலிது களைந்திட்டு" என்றதனால், **வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாயவாறு அறிக.

65. சங்கரா போற்றி மற்றோர்
சரணிலேன் போற்றி கோலப்
பொங்கரா அல்குற் செவ்வாய்
வெண்ணகைக் கரிய வாட்கண்
மங்கையோர் பங்க போற்றி
மால்விடை யூர்தி போற்றி
இங்கிவாழ் வாற்ற கில்லேன்
எம்பிரான் இழித்திட் டேனே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் அகப் புறப் பற்றுக்களை ஒழித்து, விரைவில் வீட்டின்பம் அருள வேண்டும் என்று இரங்கி வேண்டிய அடிகள், இத் திருப் பாட்டில், அப் பற்றுக்கள் விளைதற்கு உரிய ஊனுடல் வாழ்க்கையைப் பொறேன்; இழிவு உடையதென வெறுத்து நிற்கின்றேன் என்று தம் உள்ளக் கருத்தை வெளிப்படுத்துக் கூறுகின்றார்.

ப-ரை : *சங்கரா போற்றி—இன்பம் செய்வோனே காத்தருள்க, ஓர் சரண் மற்று இல்லேன் போற்றி—ஒரு புகல் இடம் பிறிது இல்லேன் காத்தருள்க, பொங்கு அரா கோல அல்குல்—சினம் மிக்க பாம்பின் படம் போன்ற அழகிய அல்குலையும், செவ்வாய் வெள்நகை கரியவாள் கண்—சிவந்த வாயினையும் வெள்ளிய பற்களையும் கருமை நிறம் பொருந்திய ஒளி மிக்க கண்ணினையும் உடைய, மங்கையோர் பங்க போற்றி—உமையம்மையாரை ஒரு கூற்றில் உடையவனே காத்தருள்க, மால்விடை ஊர்தி போற்றி—திருமால் ஆகிய எருதினை ஊர்தியாக உடையவனே காத்தருள்க, எம்பிரான்—எங்கள் தலைவனே, இங்கு இவ் வாழ்வு ஆற்ற கில்லேன் இழித்திட்டேன்—இவ்வுலகில் இவ்வூன் உடலோடு கூடிய வாழ்க்கையைப் பொறுக்கமாட்டேன் ; இகழ்ந்து வெறுத்துளேன் என்பது.*

வி-ரை : *நின்னை, இன்பம் செய்வோன் என்று அறிந்து இருந்தும், பிறிது ஒரு புகலிடம் நாடுவேனோ? நாடேன் ; நாடினும், நின்னைப்போல அழிவில்லாத இன்பம் பயக்கும் ஒரு தலைவனைப் பெற எங்ஙனம் இயலும்? இயலாது என்பார், "சங்கரா" என விளித்து, "மற்றோர் சரணிலேன்" என்றார். மற்றைத் தேவர், முனிவர் முதலிய அனைவர்க்கும் முடிவான புகலிடமாக உள்ளான் சிவ பெருமானே என்பதை மறையாகமங்கள் ஆகிய நூலறிவானும், அநுபவ வுணர்வானும் அடிகள் தெளிந்தவர் ஆதலின் இங்ஙனம் கூறினார் என்க.*

*பொங்கல்—வெகுளல். பாம்பு, சின முற்றுச் சீறும் நிலையிலே படம் விரியும் ஆதலின், "பொங்கரா" எனப் பட்டது. அரா, ஆகுபெயராக நின்று படத்தை உணர்த்தும். "செவ்வாய் வெண்ணகைக் கரிய வாட்கண்" என்பது முரண் அணி. இதனால், புன்முறுவல் பூத்த முகமும், அருள் ஒழுகும் விழியும் உடையவள் உலக அன்னையாகிய உமையம்மை என்பது போதரும் ;*

தன் மக்களாகிய மெய்யன்பர்களை இனிய முகத்தோடு வரவேற்றுக் கருணை பாலிப்பவள் என்பது கருத்து.

அத்தகைய அன்னை உடனுறை அத்தனாக விளங்கும் நின்னை அன்றி வேறு புகல் இல்லேன் என்பார், "மங்கையோர் பங்க" என்றார். "மால் விடையூர்தி" என்றதனால், திருமால் முதலிய தேவர்களும் சிவ வழிபாடும் சிவத் தொண்டும் உடையவர் ஆவர் என்பதும், அன்னாரையும், சைவ சீலம் உடையார் அம் முறையில் வெறாது போற்றல் வேண்டும் என்பதும் போதரும்.

திருமால் முதலிய தேவர்களும் தம் பதங்களைச் சிறந்தனவாக எண்ணாமல் நின் தொண்டில் ஈடுபடுவார் ஆயின், சிறியேன் ஆகிய யான், நிலையற்ற இவ் வுலகத்தில் ஊனுடலோடு கூடிய இழிந்த இவ்வாழ்க்கையை எவ்வாறு பொறுப்பேன் என்பார், "இங்கு இவ்வாழ்வு ஆற்றகில்லேன்" எனவும், இவ்வாழ்க்கை துன்பமிக்கது என அறிந்துளேன் ஆதலின், வெறுத்து இகழ்ந்தனன் என்பார், "இழித்திட்டேன்" எனவும் கூறினார். இவ் வாழ்வு என்புழிச் சுட்டு இழிவு தோன்ற நின்றது. இன்பம் செய்யும் பெருமானும், அருண் மிக்க பெருமாட்டியும், என்றும் பிரியாது, தம் உயிர்க்குத் தந்தையும், தாயுமாகச் சிறந்த ஊர்தி முதலிய செல்வங்களுடன் ஆதரிக்க இருக்கும் நிலையில், அவர்களுடன் கூடி வாழ்தலைவிட்டு, அழியும் இயல்பினது ஆகிய இவ்வுடற்கு உரிய தாய், தந்தையரோடு எங்ஙனம் வாழ்வேன் என்பார், "இங்கி வாழ் வாற்ற கில்லேன்" என்றார் எனினுமாம்.

இதன்கண், "சங்கரா போற்றி மற்றோர் சரணிலேன்" என்றதனால், நீயே புகலிடமாவாய் என்பது பெறப் படுதலின், **காருணியத் திரங்கல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "இழித்திட்டேனே" என்றதனால், **வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

66. இழித்தனன் என்னை யானே
எம்பிரான் போற்றி போற்றி
பழித்திலேன் உன்னை என்னை
ஆளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை எல்லாம்
பெரியவர் கடமை போற்றி
ஒழித்திடிவ் வாழ்வு போற்றி
உம்பர்நாட் டெம்பி ரானே.

**க-ரை :** முன்னைத் திருப்பாட்டில், இவ் வுலகத்து, இவ் வாழ்க்கையை இழித்திட்டேன் என்ற அடிகள், இவ் வாழ்வும் கன்மத்திற்கு ஈடாக இறைவன் தந்தது அன்றே, இதனை இழித்தற்கு உரிய சுதந்திரம் தானும் நமக்கு ஏது? என்று அஞ்சினராய், என்னை யானே இழித்தனன்; அதனால் நின்னைப் பழித்திலேன்; ஆயினும், அவ்வளவிற் சிறியேன் செய்த பிழையைப் பொறுத்து அருளி, நீயே இவ் வாழ்க்கையை ஒழித்திடவேண்டும் என்று இத் திருப்பாட்டில் மீண்டும் வேண்டுகின்றார்.

**ப-ரை :** எம்பிரான் போற்றி போற்றி—எம்பெருமானே வணக்கம் வணக்கம், யானே என்னை இழித்தனன்—யானே அடியவனாகிய என்னை இழிவுபடுத்தல் ஆனேன், உன்னைப் பழித்திலேன்—ஆண்டவனாகிய நின்னை இகழ்ந்திலேன், என்னை ஆளுடைப் பாதம் போற்றி—என்னை ஆட்கொண்டு அருளிய நின் திருவடிக்கு வணக்கம், பிழைத்தவை எல்லாம் பொறுக்கை—செய்த குற்றங்கள் அனைத்தையும் பொறுத்து அருளல், பெரியவர் கடமை போற்றி—பெரியார் ஆயினார்க்குக் கடமையாகும் வணக்கம், உம்பர் நாட்டு எம்பிரானே போற்றி—மேலாகிய சிவலோகத்துள்ள எங்கள் தலைவனே வணக்கம், இவ் வாழ்வு ஒழித்திடு—இவ்வூன் உடலோடு கூடிய வாழ்க்கையை ஒழித்து அருள்வாயாக என்பது.

**வி-ரை :** என் அன்பு இன்மையை உயிர்க்கு உயிராக விளங்கும் ஆண்டவன் அறிந்து இருந்தும், கருணை

காரணமாக யாவரும் அறிய என்னை ஆட்கொண்டு பெருமைப்படுத்தினன் ஆயினும், என் இயல்பை யான் அறிந்தவன் ஆதலின், என்னை யானே கீழ்மைப்படுத்தல் ஆனேன் என்பார், "இழித்தனன் என்னை யானே" என்றார். இதனால், அடிகள் தம் இயல்பு குறித்துத் தம்மைக் கீழ்ப்படுத்தனர் ஆயினும், அவரை ஆண்டவன் ஆட்கொண்டதை எல்லோரும் அறிந்து உளர் ஆதலின், பிறர் எல்லாம் மேன்மைப்படுத்து மதிக்கலானார் என்பது பெறப்படும். அகத்து அன்பு இன்மை குறித்து, என்னை யான் இழித்தனன் ஆயினும், யான் நின் உடைமை யாதலின், அவ்விழிவு நின் உடைமையைப்பற்றி நிற்றலின், அப் பிழையைப் பொறுத்து அருளல் வேண்டும் என்பாராய், "எம்பிரான் போற்றி, போற்றி" என வணக்கத்தை அடுக்கிக் கூறினர்.

என்னை இழித்துக் கூறுமுகமாக, நின்னை ஒரு சிறிதும் குறைவாகக் கருதிலேன் என்பார், "பழித்திலேன் உன்னை" எனவும், என்னை யாவரும் அறிய ஆட்கொண்ட திருவடியை எப்பொழுதும் நினைவுகூர்ந்து வணக்கம் செலுத்தும் கடப்பாடு உடையேன் என்பார், "என்னை ஆளுடைப்பாதம் போற்றி" எனவும் கூறினர்.

இறைவன், அடிகளை ஆட்கொண்டது உண்மை. இதனை அடிகளே உணர்ந்து பல விடத்தும் கூறியிருக்கின்றனர். ஆட்கொண்டு உபதேசித்த, காலை, அடிகளுடைய உடல், பொருள், ஆவி மூன்றும் ஞானாசிரியனாகிய அப்பெருமானுக்கு உரியவாயின. [1] "அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமை யெல்லாமும், குன்றேயனையா யென்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ" என்று அடிகள் கூறுமாற்றானும் அறியலாம். அங்ஙனம் இறைவன் உடைமையாகிய தம்மை அடிகள் இழித்துக் கூறியதற்குக் காரணம், [2] "நான் தனக்கன்பின்மை நானுந் தானும் அறிவோம்" என்று கூறியபடி, தம் அகத்து மெய்யன்பு இல்லாமை என்கின்றார். அடிகள், 'யாவர்க்கும் கீழாம் அடியேனை'

1. திருவாசகம்: குழைத்த பத்து 7. 2. திருவாசகம் திருக்கோத்தும்பி 13.

என்றபடி, உலகியலில் வைத்து, அடிமை நிலைகருதி அங்ஙனம் கூறினர் ஆயினும், அடிகளுடைய அன்பு அளவிட்டு உரைக்க இயலாதது ஒன்று. அன்புருவமாகி அருள் உருவம் எய்தினவர் என்ப. அவர் ஒரு காரணம் கருதி, உலகியலில் வைத்துப் பலவிடத்தும் தம்மை இழித்துக் கூறினர் ஆயினும், பின்னர், ஆண்டவன் உடைமையைப் பழித்த பெரும்பிழை செய்ததாக முடியுமே என அஞ்சி, அது பொறுக்க வேண்டுவார், " பிழைத்தவை பொறுக்கை யெல்லாம் பெரியவர் கடமை" என்றார். பொறுப்பவர் பெரியவர் என்றதனால், பிழை செய்தவர் சிறியர் என்பது பெறப்படும். அடிகள் செய்த பிழை, இறைவன் உடைமையாகிய தம்மை இழித்துக் கூறியது அன்றி, வேறு இன்று என்பது, [1] " செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதேன்" என்பதனாலும் அறியலாம்.

உம்பர் நாடு என்பது மேல் உலகத்தைக் குறிக்கும். எல்லா உலகங்களுக்கும் மேலாகிய சிவலோகம் என்பது பொருள். எல்லா உலகங்களுக்கும் தலைவனாகிய பெருமானே தமக்கும் தலைவன் ஆனமை பற்றி உண்டாகிய உவகையால், " உம்பர் நாட்டு எம்பிரானே" என்றார். இவ்வூன் உடல் வாழ்க்கை, திருவடி இன்பத்திற்குத் தடையாக இருத்தலான், இதனை ஒழித்தற்கு, ஆக்கிய நீயே அதிகாரி ஆவை என்பார், " ஒழித்திடிவ் வாழ்வு" என்றார்.

ஆண்டவனே, யான் என் இயல்பு குறித்து என்னை இழித்தனன் அன்றி, அதன் மூலம் நின்னைப் பழித்திலேன்; பழித்ததாக முடியுமாயின், அப்பிழையைப் பொறுத்து அருளல் வேண்டும்; மேலும், என் வேண்டுகோள் இவ் வாழ்க்கையை ஒழித்தல் வேண்டும் என்பது. இதுவே இத் திருப்பாட்டில் அடிகள் புலப்படுத்திய கருத்து என்க.

இதன் கண், " பிழைத்தவை பொறுக்கை யெல்லாம் பெரியவர் கடமை" என்றதனால், **காருணியத்திரங்கல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், " இழித்தனன்

1. திருவாசகம், திருவெண்பா 3.

என்னை," "ஒழித்திடு இவ் வாழ்வு" என்பன வைராக்கி யத்தையும், "என்னை யாளுடைப்பாதம் போற்றி" என்பது பத்தியையும் புலப்படுத்தலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் தோன்று தல் காண்க.

67. எம்பிரான் போற்றி வானத்
தவரவர் ஏறு போற்றி
கொம்பரார் மருங்குல் மங்கை
கூறவெண் ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத்
திருச்சிற்றம் பலவ போற்றி
உம்பரா போற்றி என்னை
ஆளுடை ஒருவ போற்றி.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் இவ் வாழ்க்கையை ஒழித்திட வேண்டுமென்று வேண்டிய அடிகள், இதன் ஒழிவின்பின் எய்தும் பேறு குறித்திலர்; இத் திருப்பாட்டில் அப் பேறு அளித்தற்குரிய தகுதியுடைமை பல்லாற்றானும் நின் கண்ணதே என, ஆண்டவனுடைய பெருமைக் குணங்களை விளக்கிக் கூறுகின்றார்.

**ப-ரை:** எம்பிரான் போற்றி—எங்கள் தலைவனே காக்க, வானத்து அவர் அவர் ஏறு போற்றி—விண்ணுலகத்துள்ள பதவிகளில் இருக்கும் அவ்வத் தேவர்களுக்கும் ஏறு போல் பவனே காக்க, கொம்பர் ஆர் மருங்குல் மங்கை கூற — பூங்கொம்பு போன்ற இடையினையுடைய உமையம்மை யாரை ஒரு கூற்றில் உடையவனே, வெள்நீற போற்றி — வெள்ளிய திருநீற்றினை யுடையாய் காக்க, செம்பிரான் போற்றி—செம்மேனியுடைய பெருமானே காக்க, தில்லை திருச்சிற்றம்பலவ போற்றி—தில்லை நகர்க்கண் உள்ள அழகிய நுண்ணிய ஞானப் பரவெளியில் திகழ்பவனே காக்க, உம்பரா போற்றி — சிவலோகத் தலைவனே காக்க, என்னை ஆள் உடை ஒருவ போற்றி—சிறியேனாகிய என்னை ஆட்கொண்ட தனி முதல்வனே காத்தருள்க என்பது.

வி-ரை: அடிகள் மக்கட் பிறப்பினர் ஆகலான், அவர், "எம்பிரான்" என்ற அளவில், இறைவன் மக்களுக்குத் தலைவன் ஆவான் என்பது பெறப்படும். அடுத்துத் தேவர் உலகங்களில் உள்ள இந்திரன், பிரமன் முதலிய பதங்களில் உள்ளார் எல்லோர்க்கும் தனித்தனியே தலைவன் ஆவான் என்பது தோன்ற, "வானத்தவரவரேறு" என்றார். ஏறு போல்வானை ஏறு என்றது உபசார வழக்கு. மண்ணுலகும் விண்ணுலகும் கூறவே, ஏனைய உலகும் அடங்கும் என்பது. அங்ஙனம் தலைவனாகிய சிவபெருமான், [1] "போகியாயிருந் துயிர்க்குப் போகத்தைப் புரிபவன்" என்பது தோன்ற, "மங்கை கூற" என்றார். கொம்பரார் என்புழி, அர் போலியீறு. ஆர் உவமப் பொருட்டு. "வெண்ணீற" என்று, யோகியாய் யோக முத்தி உதவுதற்கு உரிய குறியீடு கூறினர். உமையொரு கூறனாய காலத்தும், திருவெண்ணீறு பூசிய திருமேனி உடையன் ஆயினும், அதனோடு சந்தனக் கலவை முதலிய மணப் பொருள்களும் பூசப்படுவனவாம். யோக நிலையில் திருவெண்ணீறு தனிச் சிறப்பாகப் பூசப்படுதலின், "வெண்ணீற" என்ற விளி, யோக நிலையைக் குறிக்கும் என்பது.

மக்கள், தேவர் முதலியோர்க்குத் தலைவனும், போக யோகங்களை அளிப்பவனும் ஆகிய சிவபெருமான், நம்மனோர் பொருட்டுக் கருணை கூர்ந்து திருமேனி கொள்ளுங்கால், செந்நிறமான திருமேனி உடையன் ஆவன் என்பது தோன்ற, "செம்பிரான்" என்றார். [2] "சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்" என்பது தமிழ் மறை. [3] "ஈசற்கு யான் வைத்த" என்னும் திருக்கோவைச் செய்யுளில், "பூசத் திரு நீறெனை வெளுத்து" என்புழிச் செம்மை திருமேனியாற் பெறப் படும் என்று பேராசிரியர் கூறியதும் அறிக.

அங்ஙனம் கொண்ட திருமேனிகளுள், ஆக்கல் முதலிய ஐந்தொழிற்கும் தலைவன் தானே என்பதைப் புலப்படுத்துத்

1. சிவஞான சித்தி, சூ. 1, செ. 50. 2. திருநாவுக்கரசர் தேவாரம்.
3. திருக்கோவை, செ. 109.

திகழ்வது கூத்தப் பெருமானாகி விளங்கும் நிலையே. அத் திருவுருவம் தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் சிறந்து திகழ்வது என்பது குறித்து, அதனையே குறிப்பிட்டுள்ளார். தில்லை—நகர்ப் பெயர்; திருச்சிற்றம்பலம்—கோயிற் பெயர். இதனைச் சித்ம்பரம் என்பர் வடமொழியாளர். சிதம்பரம் என்பது சித் அம்பரம் எனப் பிரிக்கப்பட்டு, ஞானாகாசம் என்னும் பொருள் உடையதாகும். தமிழில் சிற்றம்பலம் என்பதே பண்டைய வழக்கு. சிறுமை அம்பலம் என்று பிரிக்கப் பட்டு, நுண்ணிய ஞானப் பரவெளி என்னும் பொருள் உடையதாகும். வடமொழி மறை முடிவில் கேட்கப்படும் தகராகாசம் என்பதற்கும் நுண்ணிய வெளி என்பதே பொருள். [1] "சிற்பர வியோமம் ஆகுந் திருச்சிற்றம்பலம்" என்பர் சேக்கிழார் அடிகள். "அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது" என்றபடி, அப் பெருமானுடைய அசைவாகிய திருக்கூத்தினாலே அண்டங்கள் எல்லாம் சுழன்று நிலை பெறுவன என்பதும், உயிர்த் தொகுதிகள் இயங்குகின்றன என்பதும், பிறவும் பெரியார் கண்ட உண்மைகள். ஆங்குத் திருக்கூத்து இயற்றும் நிகழ்ச்சியில், இன்னும் பல அரிய நுண்பொருள்கள் உள்ளன என்பர் பெரியார். விரிப்பிற் பெருகும்.

செம்மேனி எம்மான், நம்மனோர் பொருட்டு, இம் மண் உலகில் இங்ஙனம் எளி வந்து காட்சி அளித்தனன் ஆயினும், அப் பெருமானுடைய சிறப்பிடம் எல்லா உலகங்களுக்கும் மேலாகிய சிவலோகம் அல்லது சிவபுரம் என்பார், "உம்பரா போற்றி" என்றார். "உம்பரான்" என்பதில் ஆன் விகுதியில் உள்ள னகர ஈறு விளிப் பொருளிற் கெட்டது. மேற் குறிப்பிட்ட தலைமை முதலிய இலக்கணம் எல்லாம் நிரம்பிய ஒப்பற்ற பரம்பொருளே என்னை ஆளாக்கிக் கொண்டான் என்னும் உவகை தோன்ற, ஈற்றில், "என்னை ஆளுடை யொருவ" என்றார். ஒருவன், தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன் என்னும் பொருட்டு.

1. பெரிய புராணம், தில்லைவாழ் அந்தணர் புராணம், செ. 2.

இதன்கண், இறைவனுடைய பலவகைப் பெருமைக் குணங்களையும் எடுத்து விளக்கிக் காத்தருள்க என்று வேண்டினமையின், காருணியத் திரங்கல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

68. ஒருவனே போற்றி ஒப்பில்
அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள்
கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி
தமியனேன் தனிமை தீர்த்தே.

**க-ரை :** முன்னைத் திருப்பாட்டில் மெய்யன்பர்க்குப் பேரின்பம் அளித்தற்கு உரிய தகுதி பலவகையானும் சிவ பெருமானுக்கு உண்டு என்று விளக்கிய அடிகள், இவ் வூனுடலோடு கூடிய வாழ்க்கை ஒழிவில் தமக்கு வேண்டிய பேறு திருவடிச் சார்பு பற்றிய இன்பம் ஆகும் என்பதை இத் திருப்பாட்டில் உணர்த்துகின்றார்.

**ப-ரை :** ஒருவனே போற்றி—தனி முதல்வனே வணக்கம், ஒப்பில் அப்பனே போற்றி—நிகரற்ற என் தந்தையே வணக்கம், வானோர் குருவனே போற்றி—தேவர்களின் ஞானாசிரியனே வணக்கம், எங்கள் கோமளக் கொழுந்து போற்றி—அடியேங்களது மெல்லிய இளந் தளிரே வணக்கம், என்னை நின்பால் வருக என்று வாங்கிட வேண்டும் போற்றி—அடியேனை நின் பக்கலில் வருக என்று கட்டளை இட்டு ஏற்றுக்கொள்ளல் வேண்டும் வணக்கம், தமியனேன் தனிமை தீர்த்து—உறுதுணையில்லாதேனைத் தனிமை ஒழித்து, நின் பாதம் தருக போற்றி—நின் திருவடியைத் தந்து அருளல் வேண்டும் வணக்கம் என்பது.

வி-ரை : இறைமை இலக்கணம் எல்லாவற்றினுஞ் சிறந்தது, [1] "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்றபடி, ஒருவன் ஆதலாம். இரண்டாம் அவனுக மற்றொரு தலைவனும் உள்ள் எனின், முழு முதல் தலைமை இயல் சிதைந்துவிடும் என்க. [2] "சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை" என்றபடி, மறையாகமங்களின் ஆராய்ச்சியாலும், அநுபவ ஞானிகளின் உபதேசத்தாலும் சிவ பெருமான் ஒருவனே கடவுள் இலக்கணம் எல்லாம் நிரம்பப் பெற்றவன் என்பது தெளியப்படும் என்க. அத்தகைய பரம் பொருளாகிய நீயே என் தந்தை ஆயினை என்பார், "ஒப்பில் அப்பனே" என்றார். "ஒப்பில்" என்னும் அடையை, "ஒருவன்" என்பதனோடும் கூட்டுக. நிகரற்ற தந்தை என்றதனல், தம் பேரின்ப வாழ்க்கைக்கு வேண்டும் செல்வங்களுள் எதற்கும் வேறு யாரையும் எதிர்பார்க்க வேண்டுவது இல்லை என்பது அடிகள் கருத்து என்க. உடற்காப்புச் செய்யும் அவ்வளவில் ஒழியும் உலகியல் தந்தை போலாது, ஞான நெறியை உபதேசித்து, உயிர்க் காப்புச் செய்யும் ஞானசிரியனும் ஆவான் என்பது, "ஒப்பில்" என்னும் அடை மொழியால் உணரத்தக்கது.

தம் அளவினும், ஏனை மெய்யன்பராகிய மக்கள் அளவினும் ஞானசிரியன் ஆவான் என்பது அன்றி, பக்குவ முதிர்ந்த தேவர் முதலியோர்க்கும் ஞான குரு ஆவான் என்பது தோன்ற, "வானோர் குருவனே" என்றார். மெய்யன்பு உடைய அடியார் குழுவை உளப்படுத்து, "எங்கள்" என்றார். கோமளம்—மென்மை. கொழுந்து என்பது, செடி கொடிகளின் நுனியில் உள்ள தளிர் ஆகும். மெய்யடியார் கூட்டமாகிய பூஞ்செடி கொடிகளின் கொழுந்தாக இறைவனைக் கூறியது, அச்செடி கொடிகளின் வேர்க்கு ஏற்படும் நலந்தீங்குகளால் உண்டாம் மலர்ச்சியும் வாட்டமும் முதலிற் கொழுந்திற்கு உளவாதல்போல, மெய்யன்பர்க்கு ஏற்படும்

1. திரு மந்திரம், செ. 2104. 2. திரு மந்திரம், செ. 5.

நலந்தீங்குகளை முதலில் இறைவன் தன்னுடையவாக உணர்ந்து கோடல் பற்றி என்க. வேர்க்கு ஏற்படும் தீங்கை முதலிற் கொழுந்தால் உணர்ந்து, மற்றைப் பகுதிகளுக்கு அத் தீங்கு பற்றுமுன் விரைந்து பரிகரிக்கப் படுதல்போல, மெய்யடியார்க்குப் பண்டை வினையால் ஒரோவழிக் கலக்கம் நேரத் தொடங்குங்கால், அஃது அவரைப் பற்று முன்னரே, ஆண்டவன் அறிந்து பரிகரிப்பன் என்பது கருத்து. இறைவனே கொழுந்தாகக் கூறப்பட்டமையாலும், அவனின் வேருகப் பரிகரிப்பான் ஒருவன் இல்லாமையானும், ஈண்டு, அறிபவனும் பரிகரிப்போனும் அவனே என்பது அறியத்தக்கது. இறைவனைக் கோமளக் கொழுந்து என்றது ஏகதேச வுருவகம்.

மாயா காரியமாகிய தநுகரண புவன போகங்களில் அகப்பட்டுத் தவிக்கும் என்னை, அவற்றினின்றும் விடுவித்து, நின் பக்கலில் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பார், "என்னை நின்பால் வாங்கிடவேண்டும்" என்றார். அடிகள் தமக்கு மாயா காரியங்களால் ஏற்பட்ட துன்பத்தை, ஆண்டவன் கோமளக் கொழுந்தாக இருந்து, அறிந்து இருப்பான் என்னும் துணிவினல், "வருக" என்று இன் சொற்கூறி அழைத்துக்கொள்ளல் வேண்டும் என்றார் என்க. துன்பத்தாற் பற்றப்பட்டான் ஒருவனைக் காப்பாற்றப் புகுவோன், முதலில் இன்சொற் கூறிப் பின் செயல் அளவில் ஆதரித்தல் உலகியலிற் காணலாம். அவ்வாறே, ஈண்டு "வருக" என்று இன்சொற் கூறிப் பின் வாங்கிட வேண்டும் என்று வேண்டுவார் ஆயினர். துன்பச் சேற்றிற் பதிந்து கிடப்பவனை, இன்சொற் கூறிக் கை தூக்கி எடுத்தபின், அவன் களைப்புத் தீர, வேண்டுவன செய்து, நல்லிடன் அளித்து இன்புறுத்தல் அருள் வண்மையுடையார் இயல்பு ஆகும் அன்றோ? அங்ஙனமே, அடியேனைப் பாசப் பிணிப்பினின்றும் விடுவித்தபின், தனிமை தீர்த்து, இன்பம் நுகருமாறு நின் திருவடியை அளித்தல் வேண்டும்

என்பார், "தருக நின் பாதம்" என்றார். இறைவன் திருவடித் துணை பெறுங்காறும் பற்றுக்கோடு இல்லாதவன் என்பார், "தமியனேன்" எனவும், அத் திருவடிப் பேறு ஒன்றே பேரின்புறுத்துவது அன்றித் துணையாக நின்று அத்தனிமையையும் தீர்ப்பதாகும் என்பார், "தனிமை தீர்த்து" எனவும் அருளிச் செய்வார் ஆயினர்.

இதன்கண், "வருகவென்றென்னை நின்பால் வாங்கிட வேண்டும்," "தருக நின் பாதம்" என்பவற்றால் இறைவன் கருணை குறித்து வேண்டுதல் பெறப்படுதலின், **காருணியத் திரங்கல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலன்தல் அறிக.

69. தீர்ந்தஅன் பாய அன்பர்க்
கவரினும் அன்ப போற்றி
பேர்ந்தும்என் பொய்மை யாட்கொண்
டருளிடும் பெருமை போற்றி
வார்ந்தநஞ் சயின்று வானோர்க்
கமுதம்ஈ வள்ளல் போற்றி
ஆர்ந்தநின் பாதம் நாயேற்
கருளிட வேண்டும் போற்றி.

**க-ரை :** முன்னைத் திருப்பாட்டில் என்னை வருக என்று அழைத்து, நின் திருவடியைத் தரல் வேண்டும் என்று வேண்டிய அடிகள், அங்ஙனம் தருதற்குத் தடையாகவுள்ள குற்றம் தம் பாலதாக, அதனைப் பொறுத்து நலம் செய்தல் நின் இயல்பு ஆம் என ஆண்டவனுடைய பெருமை, வண்மை முதலிய உயர் குணங்களை இத் திருப்பாட்டில் பாராட்டி வேண்டுகின்றார்.

**ப-ரை:** தீர்ந்த அன்பாய அன்பர்க்கு — முதிர்ந்த மெய்யன்பு வடிவமான அடியார்க்கு, அவரினும் அன்ப போற்றி—அவர் அளவினும் மிகுதியான அன்புடையவனே வணக்கம், என் பொய்மை பேர்ந்தும்—சிறியேனது பொய் ஒழுக்கத்தை ஒழித்தும், ஆட்கொண்டும்—என்னை அடிமை

கொண்டும், அருளிடும் பெருமை போற்றி—அருள் புரிந்த பெருமைக் குணம் உடையோனே வணக்கம், வார்ந்த நஞ்சு அயின்று—பாற் கடலில் ஒழுகிப் பரந்த நஞ்சை உண்டு, வானோர்க்கு அமுதம் ஈ வள்ளல் போற்றி—தேவர் களுக்கு அமுதம் கொடுத்து அருளிய வள்ளலே வணக்கம், ஆர்ந்த நின் பாதம்—அழிவில் இன்பம் நிறைந்த நின் திருவடியை, நாயேற்கு அருளிட வேண்டும் போற்றி—நாயின் தன்மையுடைய சிறியேனுக்குத் தந்தருள வேண்டும் வணக்கம் என்பது.

வி-ரை: தீர்ந்த அன்பு—முதிர்ந்த தலையன்பு; கண்ணப்ப நாயனார் அன்பு போல்வது. அன்பாய அன்பர் என்றதனால், அன்பைக் குணமாகக் கொண்டு, அதனை உடைய அன்பர் குணிப் பொருளாக இல்லாமல், முதிர்ந்த அன்பாகிய குணமே உருக்கொண்டால் ஒத்த மெய்யடியார் என்பது போதரும். அத்தகைய தலையன்பு உடையார்க்கு என அடிகள் படர்க்கையில் வைத்துக் கூறினும், நம்மனோர் கொள்ளற்பாலது அதற்குத் தகுதியுடையார் அடிகளே யாவர் என்பதாம். ஆண்டவனுக்கு மெய்யன்பர் செய்யும் தொண்டுகள் வரலாற்று முகமாக அறியப்படுவன. "அன்பர்க்கு அவரினும் அன்ப" என்றதனால், அத்தகைய பேரன் பாளர்க்கு ஆண்டவன் செய்த பணிகளும் பலவாகும். அதற்கும் சான்றாக அடிகள் வரலாற்று நிகழ்ச்சிகளையே கொள்ளலாம். [1] "மண் சுமந்து கூலி கொண்டு அக்கோவால் மொத்துண்டு, புண் சுமந்த பொன் மேனி" உடையன் ஆனமையும் பிறவும் ஈண்டு உணரத் தக்கன. "பெயர்த்தும்" என்பது பேர்த்தும் என்றாகி, எதுகை நோக்கி மெலிந்து நின்றது. என் பொய்ம்மையை பெயர்த்தும் என்றபடி. நாடகத்தால் உன் அடியார் போல் நடித்த என் பொய் ஒழுக்கத்தை ஒழித்தும் என்பதாம். நோயினாற் பற்றப்பட்ட உடல் உடையானுக்கு, அந் நோய் நீக்கம் செய்தலே பேருதவியாகும். அவ்வளவன்றி, அவன் உடல் வன்மையுடன் நெடுங்காலம் இருக்கும்படி காய

1. திருவாசகம், திருவம்மானை 8.

கற்பமும் ஈதல் மிகப் பேருதவி ஆகும் அன்றோ? அங்ஙனமே, என் பொய் ஒழுக்கத்தை ஒழித்ததோடு அமையாது, தகுதியில்லாத என்னை யாவரும் காண ஆளாகவும் கொண்டனையே என்று உள்ளம் உருகிப் பாராட்டுவார், 'ஆட்கொண்டும்' என்றார். ஆட்கொண்டும் என்புழி, எண்ணும்மை விகாரத்தால் தொக்கது. [1] "பொறுப்பர் அன்றே பெரியோர் சிறு நாய்கள்தம் பொய்யினையே" என்றபடி, பொய்மை பொறுத்தலே பெருமையாக, மேலும் அதனைப் பெயர்த்தும், ஆட்கொண்டும், அருள் புரிதல் எத்துணைப் பெருமையாம் என்பது நினைக்கத் தக்கது. பெருமைக் குணத்தின் இலக்கணம் இங்ஙனம் ஆம் என்பது. இக் குறிப்புத் தோன்றவே, "அருளிடும் பெருமை" என்றார். பெருமை, ஆகு பெயராக நின்று, குணிப் பொருளாகிய ஆண்டவனை உணர்த்தும்.

வார்தல் — ஒழுகுதல். திருப்பாற் கடல் கடைந்த ஞான்று, அமுதம் தோன்றுதற்கு முன்னரே கடை கயிறாக மேற்கொண்ட பாம்பின் வாயினின்றும் நஞ்சு ஒழுகி யாண்டும் பரவியதாக, அது கண்டு அஞ்சிய தேவர்களைக் காத்தற் பொருட்டு, அந்நஞ்சைத் தான் உண்டு, பின்னர்த் தோன்றிய அமுதத்தை தேவர் உண்ணக் கொடுத்தனன் என்பது புராண கதை. இவ் வரலாறு ஒன்றே சிவ பெருமானுடைய பேராற்றலையும், பேரருளை யும் புலப்படுத்துவதாகும். உலகத்து வள்ளல் ஆவார், தமக்குக் கிடைத்த அரிய பொருளைப் பிறர்க்கு வழங்கும் பெற்றியர் ஆவர் என்ப. அதியமான் நெடுமான் அஞ்சி என்னும் தமிழ் நாட்டு வள்ளல், ஒளவைப் பிராட்டிக்கு நெல்லிக் கனி ஈந்த வரலாறு இதற்குச் சான்றாம் என்பது. உண்டாரைப் பல்லாண்டு வாழச் செய்யும் நெல்லிக்கனி ஒன்று அரிதிற் கிடைத்ததாக, அதனைப் பெற்ற அதியமான், தான் உண்டு நெடுங்காலம் வாழ்தலினும், சிறந்த தமிழ்ப் புலமை சான்ற ஒளவைப் பிராட்டி உண்டு, நீடு வாழ்தல்

1. திருவாசகம், நீத்தல் விண்ணப்பம் 6.

உலகத்தவர்க்குப் பெரும் பயன் விளைப்பதாகும் எனக் கண்டு, அதனைப் பாது காத்து வைத்திருந்து, தன் பால் ஔவையார் வந்ததும், அந்நெல்லிக் கனியின் அருமையை யும், அதனால் விளையும் பயனையும் வெளிப்படுத்தாமல் தன் உள்ளே அடக்கிக் கொண்டு, அப்பிராட்டிக்குக் கொடுத்து உண்ணச் செய்தானும். பின்னர், அதன் அருமையையும் பயனையும் அறிந்து, ஔவையார் அவ் வள்ளலைப் பாராட்டி வாழ்த்திய பாடல் அறிந்து இன்புறத் தக்கது. அப் பாடலில், [1]"நீலமணி மிடற்றொருவன் போல மன்னுக பெரும நீயே...சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது, ஆதல் நின்னகத்தடக்கிச், சாதனீங்க எமக் கீத்தனையே" என்னும் பகுதி மிகவும் பாராட்டத்தக்கது. தீங்கனி குறியாது என்பதற்குப் பெறுதற்கு அரிது என்று கருதாமல் எனவும், ஆதல் நின்னகத் தடக்கி என்பதற்கு, அதனால் விளையும் பயனை எனக்குக் கூறாமல் நின்னுள்ளே அடக்கி எனவும் பொருள் கொள்ளல் வேண்டும். அருமை யும் பயனும் உண்ணுதற்கு முன்னரே கூறினால், ஔவை யார் வாங்கி, அவ் வள்ளல் வாயிலே செலுத்தி விடுவார் என்பது கருத்து. தன் சாவைப் பொருட் படுத்தாமல், ஔவை சாவாமையைக் குறித்து இங்ஙனம் வழங்கிய வள்ளலை, அப் பிராட்டி வாழ்த்துங்கால், சாதற்குக் காரண மாகிய நஞ்சுண்டும் இறைவன் நிலை பெற்று இருந்தாற் போல, நீயும் சாவாது இருத்தல் வேண்டும் என்னும் கருத்துத் தோன்ற, "நீல மணி மிடற்றொருவன் போல மன்னுக பெரும" என்றாராம். இந் நிகழ்ச்சியில், அதிய மான், நலம் விளைப்பதை ஔவைக்கு ஈந்தனன் என்ப தன்றிக் கேடு விளைப்பதொன்றைத் தான் உண்டான் என்பதில்லை. இறைவன் செய்தியில், ஒழுகிய பெரு நஞ்சைத் தான் உண்டு, தேவர்க்கு அமுதம் ஈந்தான் என்பது நினைக் கத்தக்கது. [2]"விண்ணோர் அமுதுண்டுஞ் சாவவொருவரும், உண்ணாத நஞ்சுண்டிருந்தருள் செய்குவாய்" என்பது சிலப்பதிகாரம். இத்தகைய பெரு வண்மை, இறை வனிடத்து அன்றி, மக்கள் பால் எதிர் பார்க்கத்தக்கது

1. புறநானூறு. செ. 91. 2. சிலப்பதிகாரம், வேட்டுவ வரி.

அன்று. வண்மைக் குணத்தின் முடிந்த எல்லை இது எனக் கொண்டு, "நஞ்சயின்று அமுதமீ வள்ளல்" என்றார். ஈ வள்ளல் வினைத் தொகை. 1 "பெயக்கண்டும் நஞ் சுண் டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டு பவர்" என்னும் திருக்குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய உரையில், மக்களில் இந் நிகழ்ச்சி காணப்படாமையானும், சிவ பெருமான் எல்லா ஆற்றலும் உடையன் ஆதலின், அவற்கு இஃது எளிது ஆகலான், அச்சரித நிகழ்ச்சியை எடுத்துக் காட்டுதல் வேண்டாவென்னும் கருத்தானும், வரலாற்றுப் பகுதி எடுத்துக் காட்டாது ஒழிந்தனர் போலும்.

ஆர்தல்—நிறைதல்; சார்ந்தார் எய்துதற்கு உரிய அழிவு இல்லாத பேரின்ப நிறைவைக் குறிக்கும். நஞ்சுண்டு அமுதம் ஈந்த வள்ளல் ஆதலின், சிறியேன் பிழைகள் எல்லாவற்றையும் அடக்கிப் பேரின்ப நிறை வாகிய திருவடிகளைத் தந்து அருளுவை என்னும் துணிவு மேற்கொண்டு, வேண்டுவன் என்பார், "நாயேற்கு ஆர்ந்த நின் பாதம் அருளிட வேண்டும்" என்றார். இழிந்த நிலையில் பல குற்றங்களுக்கும் ஆளானவன் என்பது தோன்ற, "நாயேற்கு" எனவும், நின் வண்மைக் குணத் தால், அக் குற்றங்களைக் கருதாமல் எனக்கு அருளத்தக்கது பேரின்ப நிறைவாகிய திருவடி இன்பம் என்பார், "ஆர்ந்த நின் பாதம்" எனவும் கூறினார்.

இத் திருப்பாட்டின் முதல் அடிக் கருத்து, இரண்டாம் அடியிற் கூறப்பட்டதற்கும், மூன்றும் அடிக் கருத்து, நான்காம் அடியிற் கூறப்பட்டதற்கும் ஏதுவாக அமைந் திருத்தல் அறிந்து இன்புறத்தக்கது.

இதன்கண், என் பொய்மை ஒழித்து என்னை ஆண்டருள வேண்டு மெனவும், நாயேற்கு நின் பாதம் அருளிட வேண்டும் எனவும், இறைவனை நோக்கி வேண்டு தல் காணப்படுதலின், காருணியத்திரங்கல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனுதல் அறிக.

1. திருக்குறள் 580.

70. போற்றியிப் புவனம் நீர்தீக்
காலொடு வானம் ஆனாய்
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்றம்
ஆகிநீ தோற்ற மில்லாய்
போற்றியெல் லாவு யிர்க்கும்
ஈறாயீ றின்மை யானாய்
போற்றியைம் புலன்கள் நின்னைப்
புணர்கிலாப் புணர்க்கை யானே.

க-ரை:—முன்னைத் திருப்பாட்டில் இறைவன் மெய்யன்பர் பொருட்டு மேற்கொண்ட அருள், பெருமை, வண்மை என்னும் உயர் குணங்களின் சிறப்பைப் பாராட்டிய அடிகள், இத் திருப்பாட்டில் எல்லாமாய்த் தோற்ற வொடுக்கமின்றிப் புலனறிவிற்கு எட்டாமல் நிற்கும் அவ் இறைவனுடைய ஒப்புயர் வற்ற தன்மைகளை எடுத்துக் கூறிப் பாராட்டுகின்றார்.

ப-ரை: இப் புவனம் நீர் தீ காலொடு வானம் ஆனாய் போற்றி—இந் நிலம் நீர் நெருப்புக் காற்று விண் என்னும் ஐம்பெரும் பூதங்களும் ஆயினாய் வணக்கம், எவ் உயிர்க்கும் தோற்றம் ஆகி நீ தோற்றம் இல்லாய் போற்றி—எல்லா உயிர்களும் தோன்றுதற்குக் காரணன் ஆகி நீ ஒன்றில் தோன்றுதல் இலன் ஆனாய் வணக்கம், எல்லா உயிர்க்கும் ஈறாய் ஈறு இன்மை ஆனாய் போற்றி—எல்லா உயிர்களும் ஒடுங்கும் இடனாய் நீ ஒன்றில் ஒடுங்குதல் இலன் ஆனாய் வணக்கம், ஐம்புலன்கள் நின்னைப் புணர் கிலாப் புணர்க்கையானே போற்றி — மனத்தோடு இயைந்து ஐம்பொறிகளும் நின்னைச் சார்தல் இல்லாதபடி சார்ந்திருப்பவனே வணக்கம் என்பது.

வி-ரை:—நம்மாற் காணப்படும் இவ் வுலகம் மண்ணுலகம் ஆதலின், “இப்புவனம்” என்று முதலிற் சுட்டிக் கூறப்பட்டது. முதலில் நிலம் கூறப்பட்டமையால், ஒடுக்க முறைபற்றி, முறையே புவனம், நீர், தீ, கால், வானம்

என்றார். ஐம் பெரும் பூதங்களும் வெளிப்படக் கூறப் பட்டமையால், தீயின் கூறு ஆகிய ஞாயிறு திங்களும், இங்ஙனம் கூறுதற்கு வினை முதலாகிய உயிரும் ஆகிய மூன்றும் கொள்ளப்படும் என்க. இவ் வெண்வகைப் பொருள்களும் இறைவனுக்குத் திருமேனியாகும் என்பது. இதனால், இறைவன் உலகெலாம் ஆவான் என்பது பெறப்படும்.

உலகத் தோற்றத்திற்குக் காரணன் ஆதல் பரம் பொருள் இலக்கணங்களுட் சிறந்த தொன்று என மறை யாகமங்கள் கூறும். ஆதலின், "எவ்வுயிர்க்கும் தோற்ற மாகி" என்றார். தோற்றம், இலக்கணைச் சொல்லாக நின்று, காரணன் ஆதலை உணர்த்தும். உயிர்களின் பிறப் பிற்கு மாயையினின்றும் உடல் முதலியன கிடைப்பதால், மாயை காரணம் ஆகாதோ எனின், மாயை தனக்கு ஆதாரமாக உள்ள சிவ சத்தியின் கண் நின்று, அச்சத்தி இயக்கிய வழியே அவ்வக் காரியங்களைப் பயக்கும் ஆற்றல் உடையதாகும் ஆதலின், மாயா காரிய மாகிய உலகம் சிவ சத்தியினின்றும் தோன்றியதே யாம் என்ப. அதனால், உலகத் தோற்றத்திற்குக் காரணன் சிவபெருமானேயன்றி மாயை உண்மைக் காரணம் ஆகாது என்க. இவ்வுண் மையை, [1] "வித்துண்டா மூல முளைத்த வாதாரகமாம்" என்னும் சிவஞான போத வெண்பாவின் பேருரையில் சிவஞான முனிவர் விளக்கி உரைத்தமையானும் உணர்க. உலக ஒடுக்கத்திற்கும் இவ்வாறே கொள்க. "எல்லா உயிர்க்கும் ஈறாய் ஈறின்மையானாய்" என்றது, எல்லா உயிர்களும் ஒடுங்குதற்கு முடிவு இடனாகு வுள்ளவன் மகா ருத்திரனாகிய பரம சிவனே என்ப. [2] "அந்தமாதி" என் புழி, அந்தத்தைச் செய்யும் மகா சங்கார காரணன் பரம சிவனே என்பது தெளிவிக்கப்பட்டமை அறிக. எல்லாம் முடிவில் தன்பால் ஒடுங்கத் தான் ஒன்றினும் ஒடுங்குதல் இன்றி, அழிவில் பொருளாகத் திகழ்பவன் சிவபிரானே யாவான் என்பது, [3] "ஓதத்தொலி மடங்கி........வேதத் தொலி கொண்டு வீணை கேட்பார் வெண்காடு மேவிய

1. சிவஞான போதம், வெண்பா, சூ. 1. 2. சிவஞான போதம், சூ. 1.
3. திருநாவுக்கரசர் தேவாரம், "பாதந்தனிப்பார்மேல்."

விகிர்தனுரே" என்னும் தமிழ் மறையானும் அறிக. உலகம் எல்லாம் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் காரணன் ஆகி, தான் தோன்றுதலும் ஒடுங்குதலும் இல்லாத தனி முதல் வன் ஆவன் என்னும் இவ் இயல்பால், இறைவன் உலகின் வேறு ஆவான் என்பது பெறப்படும் என்க.

புலன்கள் என்பது, ஈண்டு வாயிலாகவுள்ள பொறிகளை உணர்த்தும். மனம், பொறி வழிச்சென்று நுகரும் புலன்கள் எல்லாம் சடப் பொருள்களைப் பற்றின ஆதலானும், ஞான வடிவமாகிய இறைவன் மெய்யுணர்வினுல் அன்றி அறியப் படாதவன் ஆதலானும், ஐம்பொறிகளுக்கும் எட்டாத நிலையினன் என்பது தோன்ற, "ஐம்புலன்கள் நின்னைப் புணர்கிலா" என்றுர். ஐம்பொறிகளும் இறைவனைப் பற்றுவாயினும், வினைக்கு ஈடாகப் பிறந்த உயிர்கள் எல்லாம் அவ் வினைப் பயன்களை நுகர்ந்து, வினை யொழிவு பெற்று நலம் அடைய வேண்டும் என்னும் கருணை காரணமாக, இறைவன், அவ்வுயிர்கள் கன்மப் பயன்களை அநுபவிக்குங்கால், அவற்றோடு உடனுக நின்று உதவி புரிவன் என்னும் உண்மை தோன்ற, அவ் ஐம்பொறிகளோடு சார்ந் திருப்பன் என்பார், "புணர்க்கையானே" என்றுர். ஐம்பொறிகளும் ஆண்டவனைப் பற்ற. ஆண்டவன் அவ் ஐம்பொறிகளையும் சார்ந்து நிற்பன் என்பது கருத்து. ஐம்பொறிகளால் பற்றப் படுவான் ஆயின், மீள முடியாத நிலை ஏற்படும். உயிர்களுக்கு உபகரித்தல் கருதி, இறைவன் புணர்ந்து இருப்பான் ஆயின், வினை ஒழிவின் பின், தானும் அவற்றை விட்டு, அவ்வுயிரையும் விடுவித்துத் தன் திருவடி இன்பத்தில் இயைப்பன் என்பது கருத்து. இதனுல் ஆண்டவன் உலகத்தோடு உடனுதல் பெறப்படும் என்க. இங்ஙனம் இறைவனுக்கும் உலக உயிர்களுக்கும் உள்ள இயைபு, [1] "எட்டுத் திசைதானுய் வேருயுடன் ஆனுன் இடம் வீழிம் மிழலையே" என்று தமிழ் மறையும், [2] "உலகெலாமாகி வேருயுடனுமாய்" என்று ஆகம

1. திருஞான சம்பந்தர் தேவாரம், "ஈருய் முதலொன்ருய்."
2. சிவஞான சித்தி, சூ. 2. செ. 1.

முடிவும் கூறியபடி, உலகெலாம் ஆதல், வேறாதல், உடனா தல் என்னும் முத்திறப் படுத்து உரைக்கப்படும் என்பது. இம் முத்திறமும் இத் திருப்பாட்டின் முதல் அடியிலும், இரண்டாம் மூன்றாம் அடிகளிலும், நான்காம் அடியிலும் அமைந்து இருத்தல் அறிந்து இன்புறத்தக்கது.

இதன்கண், உலகெலாமாகி, வேறாயுடனுமாய் விளங் கும் இறைவனை ஐம்புலன்களாலும் பற்றப்படாதவன் என்று கூறியிருத்தலின், ஐம்புலன் அளவில் அன்றி, மேற் செல்லாத சிறியேனைக் கருணை காட்டி ஆட் கொள்ளல் வேண்டும் என்று இரங்கிக் கூறியது பெறப் படுதலின், காருணியத்திரங்கல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலதனால் அறிக.

## 8. ஆனந்தத் தழுந்தல்

ஆனந்தத்து அழுந்தல் என்பது இன்பத்தில் அழுந்தி நிற்றல் என்னும் பொருளதாம். இன்பம், ஈண்டு அழிவில் இன்பம் ஆகிய பேரின்பம் ஆகும். உடல் அளவில் உயிர் நுகரும் இன்பம் ஐம்பொறிகளின் வாயிலாக அநுபவிக்கப் படும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தும் ஆம். பொறிவழி மனம் சென்று, ஒரு புலனை அறியுங்கால், பொது முறையில் இல்லாமல், சிறப்பு முறையில் அறிதல் அநுபவம் ஆகும். அநுபவம் என்பது அழுந்தி அறிதல் ஆகும் என்ப. எடுத்துக் காட்டாக ஒன்றை நினையலாம். நாவாகிய பொறியால், ஒரு பழத்தைச் சுவைக்குங்கால், அச்சுவை இன்ன இயல்பினது என்று அழுந்தி அறியின் அஃது அநுபவம் ஆகும்.

பொறி வழி அநுபவிக்கப்படும் இன்பங்கள் எல்லாம் விரைவில் அழியும் இயல்பினவாம். மேலும், அவ் இன்பங்கள், அளவின் மிகும் ஆயின், கேடு விளைவிக்கவும் கூடும். ஈண்டு, அடிகள் இன்பம் எனக் கண்டது, பொறிகளின் வாயிலாக இன்றி, மெய்யுணர்வின் வாயிலாக நுகரத்தக்க சிவானந்தம் ஆகிய அழிவில் இன்பத்தையேயாம். [1] "உணர் வினோர் பெற வருஞ் சிவபோகம்" என்பர் சேக்கிழார். இவ் இன்பத்தையே அடிகள், [2] "உலப்பிலா ஆனந்தம்" எனவும், [3] "அந்த மொன்றில்லா ஆனந்தம்" எனவும் கூறுவர். மாயா காரியமாகிய உலகப் பொருட் காட்சி ஒழிந்து, பேரின்ப வடிவமான சிவக் காட்சியில் தலைப்படு வோர்க்கே இவ் இன்பம் புலன் ஆம் என்பது. பாசப் பிணிப்பிற் சிக்குண்டு கிடக்கும் உயிர், பண்டை நல்வினை வயத்தால் அப் பிணிப்பினின்றும் விடுதலை பெற வேண்டு மென்னும் முயற்சி மேற்கொண்டு, அதற்கு உரிய தவத்தில் தலைப்பட்டு, மன மொழி மெய்களைத் தூயனவாக்கிக் கொள்ளல் வேண்டும். அத் தூய்மை நெஞ்சத்தால்

1. பெரிய புராணம், திருஞான சம்பந்தர் புராணம், செ. 161.
2. திருவாசகம், பிடித்த பத்து 9. 3. திருவாசகம், கோயில் திருப்பதிகம் 10.

இறைவனை இடையறாது நினைதலானும், மொழியால் அவன் புகழைப் பாராட்டுதலானும், காயத்தால் வழிபாடு செய்தலானும் உண்டாவதாகும். அத் தூய்மை விளக்கம் மேற்பட மேற்பட, மல இருள் நீங்கி மெய்யுணர்வு கைகூடும். அவ்வுணர்வு முதிர்ச்சியிலே, பொறி புலன்களின் நுகர்வு சுருங்கிச் சிவானந்த விளைவு உண்டாம். அவ் இன்பத்தில் சிறிது தலைப்பட நேருமாயினும், அது கிடைத்தற்கு அரியது எனக் கண்டு, மேன் மேலும் அச் சாதனங்களையே நழுவ விடாமல் பற்றி, அவ் இன்பப் பதிவில் ஆர்வம் வைத்து ஒழுகல் வேண்டும் என்பது இப் பதிகம் நுதலிய பொருளாம். இவ் இன்ப நுகர்வின் பொருட்டு, உயிரைத் தூய்மைப் படுத்துக் கொண்டு, ஆண்டவன் கருணை குறித்து இரங்கிய செய்தி முன்னைப் பதிகத்திற் கூறப்பட்டது. அக் கருணையின் பயனாகவுள்ள சிவானந்த விளைவில் திளைத்தல் இதன்கட் கூறப்படுதலால், பதிக இயைபு உண்மை புலனாதல் அறிக.

எழுசீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்

71. புணர்ப்ப தொக்க எந்தை யென்னை
யாண்டு பூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்ற போது
நின்னொ டென்னொ டென்னிதாம்
புணர்ப்ப தாக அன்றி தாக
அன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக அங்க ணாள
புங்க மான போகமே.

க-ரை : முன்னைப் பதிகத்தின் இறுதித் திருப்பாட்டில் உலகு எலாம் ஆகி, வேறாய் உடனுமாய் நிற்கும் இறைவனுடைய ஒப்பு உயர்வு அற்ற தன்மைகளை எடுத்துப் பாராட்டிய அடிகள், இத் திருப்பாட்டில், அப் பெருந்தகை ஆகிய நீ என்னை ஆட்கொண்டும், சாத்தியமாகிய நின் திருவடி இன்பத்தில் இயைத்துக் கொள்ளக் கால

இடையறவு தடை ஆம் ஆயின், சாதனமாகிய மெய்யன்பே வேண்டும் என்று இரக்க விண்ணப்பம் செய்கின்றார்.

ப-ரை: எந்தை—என் தந்தையே, புணர்ப்பது ஒக்க—நின் திருவருட் பேற்றில் என்னை இயைவிப்பதாகிய காலம் பொருந்துவதாக, என்னை ஆண்டு பூண நோக்கினாய்—அடியேனை ஆட்கொண்டு யான் அடிமைத் தன்மையை மேற்கொள்ளுமாறு அருள் நோக்கம் செய்தாய், நின்னொடு என்னொடு இது புணர்ப்பது அன்று என்ற போது—பின்னர் உன்னை என்னோடு இக் காலம் இயைவிப்பது அன்று என்று நீ திருவுளங்கொண்டு புறக்கணித்த பொழுது, இது என் ஆம்—இது குறித்து யான் செய்யத் தக்கது யாது ஆம்? இது புணர்ப்பதாக அன்றாக—இக் காலம் நின்னோடு என்னை இயைவிப்பதாக அல்லதாக, அங்கணா—அழகிய கண்ணோட்டம் உடையவனே, நின் கழற்கண் அன்பே—நின் திருவடிக்கண் உள்ள மெய்யன்பே, புங்கம் ஆன போகம் புணர்ப்பதாக—உயர்ந்த தாகிய சிவானந்தத்தை விளைவிப்பதாக என்பது.

வி-ரை: இறைவனது பேரின்பப் பெருஞ் செல்வத்தை அநுபவித்தற்கு உரிய மைந்தன் எனத் தம்மைக் கண்டு, "எந்தையே" என்று விளித்தார். அடிகள் திருப்பெருந் துறை சென்ற பொழுது, அவர் பாசக் கட்டினின்று விடுதலை பெறுதற்கு உரிய கால எல்லையை எதிர்பார்த்து, இறைவன் ஞானாசிரியனாகக் குருந்த மரத்து நீழலில் எழுந் தருளி இருந்தான் என்று கூறுவர் வரலாற்று ஆசிரியர். [1] "பந்தம் அறும் எல்லையது பார்த்தினி திருந்தான்" என்பது காண்க.

பண்டைப் பிறப்புகள் பலவற்றினும் செய்து போந்த அரிய தவத்தின் பயனாக, ஞானாசிரியனாக எழுந்தருளி யிருந்த அவ் இறைவன் அருட் பார்வைக்கு இலக்காகும் காலம் தமக்கு வாய்த்தது என்பார், "புணர்ப்பது ஒக்க"

1. வாதவூரடிகள் புராணம், திருப்பெருந்துறைச் சருக்கம், செ. 17.

என்றார். புணர்ப்பது—கூட்டுவிப்பது; அது காலத்தைக் குறிக்கும். ஆண்டவன் அருட் பார்வைக்குத் தம்மை இலக்காக்கிய அரிய அந் நற்காலத்தையே கடவுள் தன்மை வாய்ந்தது எனக்கொண்டு, இறைவனைக் கால தத்துவத்தில் வைத்து, [1] "ஞாலமே விசும்பே இவை வந்து போம், காலமே உனை என்று கொல் காண்பதே" என்று போற்றி இருத்தலும் அறிக. "ஒக்க" என்பதற்கு, அந் நற்காலம் வந்து பொருந்தியதாக என்பது பொருள். "ஆண்டு பூண நோக்கினாய்" என்றார் ஆயினும், அருணோக்கம் முன்னரும், ஆட்கோடல் பின்னரும் நிகழ்வன ஆதலின், நோக்கி ஆட்கொண்டாய் என்பதே கருத்தாகக் கொள்க. பின்னர், "அங்கணாளா" என்பதற்கு ஏற்ப, "நோக்கினாய்" என்றார். நோக்குதல் நயன தீக்கை ஆகும். ஆண்டவனது அருட்பார்வையே ஆன்மாக்களின் மல இருளைக் கெடுத்துத் தூய்மைப் படுத்துவதாகிய கருவியாகும் என்ப. "கண்ணால் நோக்கிக் கண்ணப்பர் பணியுங்கொள் கபாலியாரே" என்பது தமிழ் மறை. நோக்கிய பின்னரே பணிகோடல் என்பது ஈண்டும் அறியத் தக்கது. நயன தீக்கையால், அடிகள் நல்லுயிரைத் தூய்மைப்படுத்து, இறைவன் பணிகொண்டனன் ஆக, அப் பணியையே சிறந்த அணிகலனாக அடிகள் பூண்டனர் என்பது, "பூண" என்னும் சொல்லால் அறியலாம். "பூண நோக்கினாய்" என்புழி, பூண என்னும் செயவென் எச்சம் காரியப் பொருட்டு; அருணோக்கு ஆகிய காரணத்தால் நிகழ்வது பணி பூணுதல் ஆதலின் என்க.

இறைவன் அருணோக்கால் அடிகளை ஆட்கொண்ட பின்னர்த் தினைத்துணைக் காலமும் காய வாழ்க்கையைப் பொறேன் என்று அடிகள் திருவடி இன்பத்தில் தலைப்பட விரைந்தனர் ஆக, "இன்னும் சின்னாள் இருந்து பின்னர்த் தில்லையம்பதிக்கு வந்து காண்க" என்று இறைவன் கட்டளையிட்டு உருக்கரந்தனன் என்பது வரலாறு.

1. திருவாசகம், திருச்சதகம் 43.

[1] " நாயினேனை நலமலி தில்லையுட், கோலமார்தரு பொது வினில் வருகென, ஏலவென்னை யீங்கொழித்தருளி" என்னும் அடிகள் திருவாக்கும் ஈண்டு நினைக்கத்தக்கது.

இரண்டாம் அடியில், "இது" என்னும் சுட்டு, "ஈங்கு ஒழித்தருளி" என்றபடி, ஆட்கொண்டும் திருவடியில் இயைவித்துக் கொள்ளாமல் நிலவுலகத்து இருத்தற்கு ஏது வாகிய காலத்தைக் குறிப்பதாகும். "இது நின்னொடு என்னொடு புணர்ப்பதன்று" என்பது ஆண்டவன் கட்டளை மொழியாகும். "நின்னொடு" என்புழி, மூன்று வதை இரண்டாம் உருபு ஆகக்கொண்டு, நின்னை எனவும், "என்னோடு" என்பதற்கு, ஆண்டவன் தன் திருவடி நீழ லோடு எனவும் கொள்ளல் வேண்டும். "புணர்ப்பதன்று" என்பது, இது என்னும் சுட்டால் உணர்த்தப்படும் காலம் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாகும்; சேர்ப்பிப்பதன்று என்பது பொருள். ஆகவே, ஆண்டவன் அடிகளை நோக்கி, "நின்னை நம் திருவடி இன்பத்தில் இயைத்துக் கொள்ளு தற்கு இது காலம் அன்று" என்று அருளிச் செய்தனர் என்பது கருத்து ஆகும். அருட் பார்வையால் தூய்மைப் படுத்து ஆட்கொண்ட ஆண்டவனே இப்பொழுது திருவடி யில் இயைத்துக் கொள்ள இயலாது என்றால், அடிமை யாகிய சிறியேன் செய்யத்தக்கது யாது ஆகும் என்பார், "இது என்னும்" என்றார். இது என்பது ஈண்டு, ஆண்ட வன் திருவுள்ளக் குறிப்பை உணர்த்தும். "என் ஆம்" என்பது, யாது ஆகும் (ஒன்றும் இன்று) என்னும் பொருள் உடையது ஆதலின், அதற்கு ஏற்ப, யான் செய்யத்தக்கது என்பது வருவித்து உரைக்கப்பட்டது.

"புணர்ப்பதாக அன்றிதாக" என்புழி, இது என்பது திருவடியில் இயைத்துக் கொள்ளாமைக்கு ஏதுவாகிய காலத்தைச் சுட்டுவதாகும். புணர்ப்பது ஆக — நின் திரு வடியில் இயைவிப்பதாக, அல்லது அன்றாக—இயைவிப்பது அல்லது ஆக என்பது. அடிகள் ஆண்டவன் கட்டளையை

1. திருவாசகம், கீர்த்தித் திருவகவல் 127.

ஏற்றுக்கொண்டு, "ஆண்டவனே, நின் திருவடி அடைதற்கு இக்காலம் பொருந்தியது ஆயினும், அன்றிப் பொருந்தாதது ஆயினும் ஆகுக. என் முடிவான வேண்டுகோள் ஒன்று உண்டு; அதனை மறுமல் ஏற்று அருளுவை என்னும் துணிவுடைமைக்கு ஆதரவு உண்டு என்பார், "அங்கணா" என்று விளித்தார். அங்கணன் என்பதற்குக் கண்ணோட்டம் உடையவன் என்பது பொருள். கண்ணோட்டம் என்பதற்கு, [1] "தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. இஃது அவர்மேற் சென்ற வழி நிகழ்வது ஆகலின் அப் பெயர்த்தாயிற்று" என்று பரிமேலழகர் விளக்கம் கூறியுள்ளார். கண்ணோட்டத்தையே நாகரிகம் எனவும் கூறுப. [2] "முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்" என்பதும் காண்க. ஈண்டு, ஆண்டவன் புற உருக்கரந்த நிலையாயினும், அடிகள் தம் உள்ளத்துள்ளே உருவிழைத்து முன்னிலைப்படுத்துக் கூறுகின்றார் ஆதலின், கண்ணோட்டத்தின் பயன் குறித்து இவ்வாறு விளித்தனர் என்பது.

இனி, அடிகள் தம் வேண்டுகோளை அருளிச் செய்கின்றார். அது :—"காலம் உதவினும் உதவுக, உதவாது ஒழியினும் ஒழிக. சிறந்த வீட்டின்பத்தைப் பயக்கும் மெய்யன்பே வேண்டற் பாலது" என்பதாம். "அன்பு நின் கழற்கணே" என்புழி, ஏகாரத்தைப் பிரித்து, அன்பு என்பதனோடு இயைத்து, நின் கழற்கண் அன்பே என இயைக்கவேண்டும். ஏகாரம் தேற்றப் பொருட்டு. இதனையே அடிகளும், [3] "பெறவே வேண்டு மெய்யன்பு" எனப் பிறிதோரிடத்துத் தெளிவு படுத்துக் கூறியிருத்தலும் அறிக.

புங்கம்—சிறந்தது என்னும் பொருட்டு. சிறந்தது என்னும் அடை மொழியால் போகம் ஈண்டுச் சிவானந்த அநுபவத்தை உணர்த்தும். திருவடிக்கண் உள்ள

---

1. திருக்குறள், கண்ணோட்டம், அவதாரிகை. 2. நற்றிணை 355.
3. திருவாசகம், பிரார்த்தனைப்பத்து 6.

மெய்யன்பே என்னைச் சிவானந்த நிறைவில் இயைவித்து அருளல் வேண்டும் என்பார், "அன்பே புங்கமான போகம் புணர்ப்பதாக" என்றார். இதனால், சிறந்த சிவானந்தத்தை விளைக்கும் மெய்யன்பே நின் திருவடி பற்றியதாக அருளல் வேண்டும் என்பது போதரும். அழிவில் இன்பம் பயப்பது மெய்யன்பு என்பதை, [1]"இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார்" என அம்மையார் வேண்டுகோளாகச் சேக்கிழார் கூறியதனாலும் அறிக. அழிவில் இன்பப்பேறு ஆகிய சாத்தியத்தைப் பயப்பது மெய்யன்பு ஆகிய சாதனம் ஆகும். "என் கடன் பணி செய்து கிடப்பதே என்றபடி, சிறந்த சாதனப்பேறே சாத்தியமாகிய பயனை எளிதிற் பயக்கும் என்னும் துணிவு உடையராய் இங்ஙனம் வேண்டுவார் ஆயினர் என்க. இத் திருப்பாட்டு, சொற் பொருட் பின்வரும் நிலை என்னும் அணியுடையதாகும்.

இதன்கண், "நின் கழற்கண் அன்பே புங்கமான போகத்தைப் புணர்ப்பதாக" என்றதனால், ஆனந்தத் தழுந்தல் என்னும் பதிகம் நுதலிய பொருளும், "இது புணர்ப்பதாக அன்றாக" எனக் காலத்தை வெறுத்து மெய்யன்பே வேண்டும் என்றமையால், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

72. போகம் வேண்டி வேண்டி லேன்பு
ரந்த ராதி யின்பமும்
ஏக நின்க ழலி ணைய
லாதி லேனென் எம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து
குஞ்சி யஞ்ச லிக்கணே
ஆக என்கை கண்கள் தாரை
யாற தாக ஐயனே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவன் திருவடிப் பேற்றிற்குச் சாதனம் ஆகிய மெய்யன்பே

1. பெரிய புராணம், காரைக்கால், செ. 60.

வேண்டும் என்று தெரிவித்துக்கொண்ட அடிகள், இத் திருப்பாட்டில், அவ் வேண்டுகோளுக்குக் காரணம் கூறி, அம் மெய்யன்பின் விளைவாக உள்ள செயல்களையும் பெறவேண்டும் என்று விண்ணப்பம் செய்கின்றார்.

ப-ரை: ஏக — ஒப்பற்ற தனி முதல்வனே, என் எம்பிரான் — என் தலைவனே, ஐயனே—ஞானாசிரியனே, போகம் வேண்டி—உலக போகத்தை விரும்பி, புரந்தர ஆதி இன்பமும் வேண்டிலேன்—இந்திரன் முதலிய தேவர் உலக இன்பங்களையும் விரும்புகின்றிலேன், நின் கழல் இணை அலாது இலேன்—நின் திருவடித்துணையல்லாது வேறு பற்றுக்கோடு இல்லேன், ஆகம் விண்டு கம்பம் வந்து—உடல் வேறுபட்டு நடுக்கம் தோன்ற, என் கை குஞ்சி அஞ்சலிக் கண்ணே ஆக—என் கைகள் தலைமேற் குவித்துத் தொழுதல் ஆகிய செயலின் கண்ணே நிகழ்வனவாக, என் கண்கள் தாரை ஆறு அது ஆக—என்னுடைய கண்களின் நீர் ஒழுக்கு ஆறாகப் பெருகு வதாக என்பது.

வி-ரை: இறைவன் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனி முதல்வன் ஆவான் என்பது தோன்ற, ஏகன் எனப்பட்டான். அத் தனிப்பெரு முதல்வனே தமக்குத் தலைவனாகவும் ஞானசிரியன் ஆகவும் ஆயினான் என்பார், முறையே, "என் எம்பிரான்," "ஐயனே" என்று அருளிச்செய்தனர்.

இந்திரன், பிரமன் முதலிய தேவர்களின் பதங்கள் பலவற்றுள்ளும், போக நுகர்ச்சிக்குச் சிறந்தது இந்திரன் பதம் ஆகும். ஆதலின், "புரந்தராதி இன்பமும்" என்றார். உம்மை, சிறப்புப் பொருளில் வந்தது. அத்துணைச் சிறந்த இன்பத்தையும், போக நுகர்ச்சி நிமித்தம் விரும்பேன் என்பார், "போகம் வேண்டி வேண்டிலேன்" என்றார். "புரந்தராதி" என்புழி, ஆதி என்னும் சொல்லால் சிவ போகம் அல்லாத ஏனைய வெல்லாம் கொள்ளல் வேண்டும். "போகம் வேண்டி வேண்டிலேன்" என்றதனால், சிவ வழி பாடு செய்தற்கு அப் பதங்கள் வாய்ப்பு உடையனவாக

இருக்குமாயின், அது குறித்துத் திருவருளாலே அப் பதங்களைப் பெற நேரினும் வெறுப்பேன் அல்லேன் என்று அடிகள் கருதினர் என்பது குறிப்பிற் பெறப்படுவதாகும். [1] "நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே இருக்கப் பெறின்" என்றபடி, திருவருள் வழியன்றி, அடிகள் தாமாகப் போக நிமித்தம் அவ் இன்பங்களைச் சிறிதும் விரும்பாத இயல்பினர் என்பது கருத்து.

அடிகளுக்குச் சிவபெருமான் திருவடித் துணையே புகல் இடம் ஆகும். ஆதலின், "நின் கழலிணையலாது இலேன்" என்புழி, இல்லேன் என்பதற்குப் புகல் இடம் அல்லது பற்றுக்கோடு என்பதை வருவித்து இயைத்துக் கொள்ளல் வேண்டும். அல்லாது, இல்லேன் என்பன, அலாது இலேன் எனச் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன. இனி, "ஏக" என்பதற்குச் செல்ல எனப் பொருள் கொள்ளுவாரும் உளர். ஆண்டவன் திருவடியன்றித் தமக்குப் புகல் இடம் பிறிதின்று என்னும் உறுதி உடைமையால், தனி உரிமை பற்றி, "எம்பிரான்" என்ற அளவில் அன்றி, "என் எம்பிரான்" என்றார்.

இனி, வேண்டாமைக்குச் செயப்படு பொருளாகப் புரந்தராதி இன்பத்தைக் கூறிய அடிகள், வேண்டும் என ஆண்டவன் இடத்து விண்ணப்பம் செய்து கொள்ளப் பட்டவை யாவை எனின், மெய்யன்பின் காரியங்களாக உள்ள தொழுதல் முதலிய நிகழ்ச்சிகளேயாம். காரணம் உள் வழியன்றே காரியம் நிகழ்வது; அதனால், காரிய நிகழ்ச்சியை வேண்டவே, காரணம் ஆகிய மெய்யன்பு வேண்டும் என்பது கூறாமலே அமையும் என்பது. அன்பு, புறத்தே தோன்றும் மெய்ப்பாடுகளான் அன்றிப் பிழம்பு உணர்த்திக் காட்டற் பாலது அன்று. உள் நிகழும் அன்பளவில் அன்றி, அதனால் விளையும் புறச் செயல்களும் வேண்டும் என்று அடிகள் விரும்பியதற்குக் காரணம், அகம், புறம் எல்லாம் அன்பு மயமாக நிகழ வேண்டும்

1. திருவாசகம், திருச்சதகம் 2.

என்பதே. மேலும் மெய்யன்பின் விளைவு ஆகிய புறச் செயல்கள் இல்லையாயின், அரசன் முதலிய உலகியலார், அடிகளின் உண்மை இயல்பை அறியாமல், அவரைத் தம்மவர் என்று நெருங்கி, உலகியற் செயல்களில் ஈடுபடுத்தக் கூடும் என்பதும் ஆம். கண்ணீர் ஒழுகல் முதலிய புறச் செயல்களைக் கண்டதும், 'இவர் இயல் வேறுபட்டது; நமக்கு ஒவ்வார்' என அன்னார் எல்லாம் விட்டு அகல்வர் என்பது. அன்பின் விளைவாகவுள்ள செயல்கள், "மெய்தானரும்பி" என்னும் திருப்பாட்டில் முன்னரும் கூறப்பட்டன. வேண்டாமையைக் குறிப் பிட்டு, வேண்டுவன கூற நேர்ந்ததால், ஈண்டும் கூறு வார் ஆயினர்.

அன்பின் முதிர்ச்சியில் தன்னையும் மறக்கும் தன்மை உண்டாம். அந்நிலையில், உடலில் ஒரு வகை வேறுபாடு உண்டாகும். ஆதலின், "ஆகம் விண்டு" என்றார். விள்ளல்—வேறுபடுதல். அவ் வேறுபாட்டோடு நடுக்கமும் நிகழ்தல் குறித்து, "கம்பம் வந்து" என்றார். வந்து என்னும் செய்தென் எச்சத்தைச் செயவென் எச்சமாகக் கொள்ளல் வேண்டும். வந்து—வர; தோன்ற என்பது. உடல் வேறுபாடும் நடுக்கமும் அன்பின் விளைவாக அன்றி, அச்சத்தின் விளைவு ஆகவும் ஏற்படும் ஆதலின், அதனை விலக்கி, அன்பின் விளைவு எனக் கோடற்கு, "என்கை குஞ்சி யஞ்சலிக் கணேயாக" என்பது முதலியன கூறப்பட்டன. [1] "உச்சிக்கூப்பிய கையினர்" என்பது முதலியன முனிவர்களின் செயல்களாகக் கூறப்பட்டன. ஈண்டு, அச் செயல்கள் தாமே நிகழவேண்டும் என்பார், "அஞ்சலிக்கணேயாக; ஆறதாக" என வியங்கோள் வாய்பாடாகக் கூறப்பட்டன. கூப்பிய கை தலைக் கண்ணதாக என்பதோடு அமையாது, கண்ணீர்ப்பெருக்கு ஆறதாக என்றார், "அழுதால் உன்னைப் பெறலாமே" என்னும் குறிக்கோள் உடையர் ஆதலின். ஆறது என்புழி, அது பகுதிப்பொருள் விகுதி.

1. திருமுருகாற்றுப்படை, அடி 185.

இதன்கண், ஆண்டவன் திருவடி இன்பத்தில் ஈடுபடுதற்கு உரிய மெய்யன்பும், அதன் விளைவு ஆகிய மெய்ப்பாடுகளும் கூறப்பட்டமையால், **ஆனந்தத் தழுந்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், புரந்தராதி இன்பமும் வேண்டிலேன் என்றமையால் வைராக்கியமும், கை கூம்புதல், கண்ணீர் பெருகல் முதலியவற்றால், பத்தியும் புலப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் தோன்றுதல் அறிக.

73. ஐய நின்ன தல்ல தில்லை
மற்றோர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை
பொய்மை யேனென் எம்பிரான்
மைக லந்த கண்ணி பங்க
வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த அன்ப ரன்பெ
னக்கும் ஆக வேண்டுமே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் மெய்யன்பையும், அதன் விளைவு ஆக உள்ள செயல்களையும் பெறவேண்டும் என்று ஆண்டவன் இடத்து விண்ணப்பம் செய்து கொண்ட அடிகள், அப்பேரன்பைப் பெறுதற்கு உரிய தம் இயல்பையும், அஃது யாருடைய அன்பு போன்றதாக இருக்கவேண்டும் என்பதையும் இத் திருப்பாட்டில் தெரிவித்துக்கொள்ளுகிறார்.

**ப-ரை:** ஐய என் எம்பிரான்—ஐயனே என் தலைவனே, மை கலந்த கண்ணி பங்க—அஞ்சனம் தோய்ந்த கண்களை உடைய உமையம்மையை ஒரு கூற்றில் உடையவனே, வஞ்சனேன்—வஞ்சகனாகிய எனக்கு, நின்னது அல்லது மற்று ஓர் பற்று இல்லை—நின்னையல்லாமல் பிறிதொரு பற்றுக்கோடு இல்லை. (அங்ஙனமாகவும்), பொய்மை யேன்—பொய் ஒழுக்கம் உடையவனாகிய யான், கலந்தது பொய் அல்லது இல்லை—சேரப்பெற்றது பொய்மையாகிய அன்பேயல்லாது வேறு இன்று (ஆதலின்), நின் கழல்

க்ண் வந்து கலந்த மெய் அன்பர் அன்பே—நின் திருவடி நீழலில் வந்து இரண்டற்ற நிலையில் இயைந்து இன்புறும் மெய்யன்பரது சிறந்த அன்பே, எனக்கும் ஆகவேண்டும்— பொய்மையாளனாகிய எனக்கும் உண்டாதல் வேண்டும் என்பது.

வி-ரை: ஐயன் என்றது ஈண்டு, உயர்ந்தோன் என்னும் பொருட்டு. ஆண்டவனை உயர்ந்தோன் எனத் தெளிந்தே பற்றுக்கோடாகக் கொண்டமை தோன்ற, "ஐய" என்று விளித்தார் என்பது. நினது என்பது விரித்தல் விகாரத்தால் நின்னது என்று ஆயிற்று. அது என்னும் ஆறன் உருபை இரண்டன் உருபு ஆக்கி, நின்னை எனக்கொள்க. "அல்லது இல்லை" என்றது துணிவு தோன்றற்பொருட்டு. இரண்டாம் அடியிற் கூறியதற்கும் ஈது ஒக்கும். ஆண்டவனே, நின் அளவு சிறந்த ஆதரவு பிறிது இல்லை ஆயினும், நின்னிற் சிறிது குறைந்த அளவினதாவது ஒன்று உளதோ எனின், அங்ஙனம் ஒன்றும் கண்டிலேன் என்பார், "மற்று ஓர் பற்று இல்லேன்" என்றார்.

வஞ்சகன் என்னும் சொல், நெஞ்சம் அறிந்தது ஒன்றைச் சொல்லினாலும், செயலினாலும் மறைத்து மாறுபடச் சொல்லியும், செய்தும் ஏமாற்றுவோன் என்னும் பொருள் உடையதாகும். அம்முறையில் அடிகள், தம் இயல்பு உண்மையில் வஞ்சிப்பதாக இருக்குமாயின், அதனை மாற்றி உரைத்து இருப்பர். அங்ஙனம் கூறாது, "வஞ்சனேன்" என்று தம்மை வெளிப்படக் கூறியிருத்தலின், அவர் வஞ்சம் இன்மை புலனாகும் என்பது. அங்ஙனம் ஆகவும், தம்மை இவ்வாறு ஏன் தாழ்த்துக் கூறவேண்டும் எனின், பிறழ்தல் ஆகிய இயல்பு, ஒரு சிறிதும் இல்லாது, நேர்மையின் தூய்மையில் தலை சிறந்து நிற்கும் கடவுளின் முன்னிலையில் வைத்துத் தம் இயல்பைக் கூறுங்கால், யாவர்க்கும் கீழாம் அடியேனை என்னும் அடிமைப் பண்பு தோன்றற்கு என்க. அதற்கு இயைய உலகியலில் வைத்துக் கூறியபடியாம் என்பது. யான் இழி குணம் உடையேன் ஆயினும், நின்னை அல்லாது வேறு

ஒரு பற்றுக்கோடும் இல்லாதவன் ஆதலின், என்னைக் கைதூக்கி ஆளுதல் நின் கடன் ஆம் என்பது குறிப்பிற் பெறப்படும் கருத்து ஆகும். இரண்டாம் அடியில் பொய்மையேன் என்றதற்கும் இதுவே கருத்தாகக் கொள்ளல் வேண்டும்.

யான் பொய்யொழுக்கம் உடையேன் ஆதலின், அதற்கு ஏற்ப என் அன்பும் பொய் ஆகும் என்பார், "பொய் கலந்தது அல்லது இல்லை" என்றார். பிறிதோரிடத்தில், [1] "யானே பொய் என் நெஞ்சம் பொய் என் அன்பும் பொய்" என்று அடிகள் தம்மைக் கூறியிருத்தலும் அறிக. யான் பொய்யொழுக்கம் உடையேனாக இருப்பினும், என் உயிர்க்கு உயிராக நின்று, என் பொய்மை அன்பை அறிந்தும் என்னை ஆட்கொண்ட தலைவன் ஆயினாய் என்பார், "என் எம்பிரான்" என்று சிறப்புரிமை தோன்ற விளித்துக் கூறுவார் ஆயினர். யான் வஞ்சகன் ஆயினும், பிறிதொரு பற்றுக்கோடு இல்லாமையால், எனக்கு நீயே ஆதரவாக அருள் செய்ய வேண்டும் என்று முதல் அடியில் கூறியது போலவே, ஈண்டும், என் அன்பு பொய்மையாயினும், அஃது அறிந்தும் ஆட்கொண்ட தலைவனாக இருத்தலின், ஆட்பட்ட என்னைப் பாதுகாக்க வேண்டும் கடமை நின் பாலதாகும் என்பது குறிப்பிற் பெறப்படும் கருத்தாகக் கொள்ளல் வேண்டும்.

தன்னை அடைந்த மெய்யன்பரைத் தன் திருவடி நீழலில் இயைத்துக்கொள்ள முற்படுங்கால், ஆண்டவன், அருள் உருவினள் ஆகிய அம்மையுடன் காட்சியளித்தல் இயல்பு ஆதலின், அக் கருத்துத் தோன்ற, "மை கலந்த கண்ணி பங்க" என்றார். அம்மையின் அருட் குணம், அவள் திருநோக்கின் முகமாக வெளிப்படுதல் குறித்து, "மை கலந்த கண்ணி" என்றார்.

"கழற்கணே" என்புழி, ஏகாரத்தைப் பிரித்து, நான்காம் அடியில் உள்ள அன்பு என்பதனோடு இயைத்து,

1. திருவாசகம், திருச்சதகம் 90.

"அன்பே" எனத் தேற்றப்பொருட்டாகக் கொள்ளல் வேண்டும். வந்து என்னும் செய்தென் எச்சம், "கலந்த" என்னும் பெயரெச்ச வினையைக்கொண்டு முடியும். "மெய்" என்பதை அன்பர்க்கு அடையாகக்கொண்டு, "கலந்த மெய்யன்பர் அன்பே" என இயைத்துக்கொள்ளல் வேண்டும். பக்குவ முதிர்ந்த மெய்யன்பர், இறைவன் திருவடி நீழலை அடைதற்கு, அப் பெருமான் அருட்குணம் சிறந்த ஏதுவாகும் என்பதை, "மை கலந்த கண்ணி பங்க" என்னும் தொடரும், அம் மெய்யன்பர், தொடக்க முதல் மேற்கொண்டு வந்த சரியை முதலிய தவங்களும் அதற்குச் சாதனம் ஆகும் என்பதை, "வந்து கலந்த" என்னும் சொற்களும் புலப்படுத்தி நிற்றல் அறிக. [1] "என்னை நினைந்து அடிமைகொண்டு என் இடர் கெடுத்துத், தன்னை நினையத் தருகின்றான்" என்று பெரியோர் கண்ட மரபும் ஈண்டு நினைக்கத்தக்கது. ஒரு காரியம் நிறைவேறு தற்கு இறைவன் திருவருளும், அத் திருவருளால் தூண்டப் பட்ட உயிர் முயற்சியும் ஒத்து இயைதல் வேண்டும் என்பதை உலகியலிலும் வைத்து அறியலாம். மெய்மை யான அன்பு இன்றி, அஃது உடையான்போல நடிக்கும் பொய்மையாளனாகிய எனக்கு இனி வேண்டுவது மெய்யன்பர் அன்பே யாகும். அஃது இதுகாறும் இல்லாமல் இருந்தபடியால், இனி நின் அருளுக்கால் உண்டாதல் வேண்டும் என்பார், "எனக்கும் ஆக வேண்டும்" என்றார். "எனக்கும்" என்புழி, உம்மை இழிவு சிறப்புப் பொருட்டு ஆம். இத் திருப்பாட்டில் கூறப்பட்ட பொருள்கள் மூன்று; அவற்றிற்கு ஏற்ப, விளி நிலையும் மூன்றாக அமைந்து இருத்தல் ஆராய்ந்து இன்புறத்தக்கது.

இதன்கண், "மெய்கலந்த அன்பர் அன்பு எனக்கும் ஆக வேண்டும்" என்றது, ஆனந்தத்தில் அழுந்துதற்குக் கருவியாதலின், ஆனந்தத் தழுந்தல் என்னும் பதிகம் நுதலிய பொருளும், "மற்றோர் பற்று இல்லை," "அன்பு எனக்கும்

1. பதினோராம் திருமுறை, விநாயகர் திருவிரட்டை மணிமாலை 1.

ஆக வேண்டும்'' என்பவற்றால், முறையே வைராக்கியமும், பத்தி நிலையும் பெறப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

74. வேண்டும் நின்க ழற்கண் அன்பு
பொய்மை தீர்த்து மெய்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை
ஆவ வென்ற ருளுநீ
பூண்டு கொண்ட டிய னேனும்
போற்றிபோற்றி யென்றும் என்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து
மன்ன நின்வ ணங்கவே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் மெய்யன்பின் பயனாகிய அழிவில் இன்பத்தை அருளுதற்கு உரிய ஆண்டவன் இடத்து அப்பயனை வேண்டாமல், அதற்குக் கருவியாகிய மெய் கலந்த அன்பர் அன்பே வேண்டும் என்ற அடிகள், இத் திருப்பாட்டில் அங்ஙனம் வேண்டியதற்கு ஏதுக் கூறுகின்றார்.

**ப-ரை:** மன்ன—தெய்வ அரசே, நீ—, நாயினேனை—நாயைப் போன்ற இழிந்தவனாகிய என்னை, பொய்மை தீர்த்து–பொய் யொழுக்கத்தை ஒழித்து, ஆண்டுகொண்டு ஆவ என்று அருளு — ஆட்கொண்டு இரக்கக் குறிப்புத் தோன்ற ஆறுதல் மொழி கூறி அருள் செய்வாயாக, அடியனேனும் — அடிமையாகிய யானும், பூண்டு கொண்டும் — அவ்வடிமைத் தன்மையை மேற்கொண்டும், மாண்டு மாண்டு வந்து வந்தும்–பலகால் இறந்து பிறந்தும், போற்றி போற்றி என்றும்—வணக்கம் வணக்கம் என்று கூறியும், என்றும் நின் வணங்க — எக்காலமும் நின்னை வணங்குதற் பொருட்டு, நின் கழற்கண் — நின் திருவடிக் கண்ணே, மெய்மை அன்பே வேண்டும்—மெய்ம்மையாகிய அன்பே எனக்கு வேண்டுவதாகும் என்பது.

**வி-ரை:** மன்னன் என்னும் சொல் ஈண்டுத் தெய்வங்களுக்கு அரசன் என்னும் பொருட்டு. ஒரு நாட்டிற் பிறந்தவன், அப் பிறப்பில், அந்நாட்டு அரசனையே அரசுரிமையில்

வைத்துப் போற்றுவன். அவனே இறந்து பிறிதொரு நாட்டில் பிறப்பான் ஆயின், முன்னை அரசனை விட்டு, மீண்டு பிறந்த நாட்டு அரசனையே உரிமை கொள்ளக் கடவன். இஃது உலகியலிற் காணப்படுவது. தெய்வ அரசின் உரிமை அங்ஙனம் அன்று. ஒருவன் எவ் எவ் வுலகில் எத்துணைப் பிறவி எடுப்பினும், ஆண்டெல்லாம் தெய்வ அரசாகத் திகழ்வோன் ஒருவனே யாவன். இவ் வுண்மை குறித்தே, பலகால் இறந்து பிறந்து வரும் நிலையி னும் நீயே அரசாவாய் என்பார், ஈண்டு, "மன்ன" என விளித்து உரைப்பார் ஆயினர்.

ஆண்டவன் அன்பரை ஆட்கொள்ளுங்கால், அவர் தூயநிலை யுணர்ந்தே ஆட்கொள்ளுவன். பொய்யொழுக்கம் உள்வழிப் பணிபுரியும் அன்பர் ஆதல் இயலாத தொன்று. அங்ஙனம் ஆகவும், என் பொய்மை தீர்த்து ஆட்கொள்ளல் வேண்டும் என்று அடிகள் வேண்டியது, ஆண்டவன் அளப்பரிய பேரருள் வள்ளல் ஆதலின், அவ்வருள் வண்மை காரணமாகத் தம் பொய்மை தீர்த்தற்கு முன் னரே ஆட்கொள்ளுதற்கு முற்படவுங் கூடும் என்னும் கருத்தான் என்க. நோய்வாய்ப்பட்ட ஒரு மகனுக்கு மருந்து கொடுத்து, அந் நோயைத் தீர்த்தற்கு முன்னரே, கனிந்த அன்பு காரணமாகத் தாய் இனிய உணவு கொடுக்க முற்படுதலை உலகியலிலும் காண்கின்றோம் அன்றோ? அடிகள் சிறந்த மெய்யன்புடையராயினும், அளப்பரும் பெருமை மிக்க ஆண்டவன் முன்னிலையில், தம்மைச் சிறுமையுடையர் ஆகவே காணும் இயல்பினர் ஆதலின், பலவிடத்தும் இவ்வாறே கூறுவாராயினர். "ஆவ" என்பது, இரக்கம் பற்றிய குறிப்பு மொழியாகும். அங்ஙனம் கூறி இரக்கங் காட்டவேண்டும் என்றது, செயற் பயனினும் இன்சொற்பயன் விரைவின் முற்பட்டு ஆறுதல் அளிக்கும் என்பது பற்றியாம். "அருளுக" என்புழி, முன்னிலை வியங்கோள் ஈறு தொக்கு, "அருளு" என்று ஆயிற்று. அடியனேனும் என்புழி உம்மை, "நீ என்னை ஆண்டு அருளுக; யானும் அவ்வடிமைத் தன்மையைப்

பூண்டு கொண்டு வணங்க" என்று கொள்ளக் கிடப்ப தால் எச்ச வும்மையாகும். பூண்டு கோடல் — இறைவன் பணியை அணிகலனாக மேற்கொள்ளல். அடிகள் தம்மைப் பொய்மை தீர்த்து ஆண்டு கொள்ள வேண்டுங்கால், "நாயினேனை" என இழித்தும், அவ்விறை பணியை மேற் கொள்ளக் குறிப்பிடுங்கால், "அடியனேன்" என உயர்த் தும் கூறியிருத்தல் அறிந்து இன்புறத்தக்கது. "பூண்டு கொண்டும்" என்புழி, எண்ணும்மை தொக்கு நின்றது.

"என்றும் என்றும்" என்புழிப் பின்னது காலத்தை உணர்த்துவதாகும். கொண்டும், வந்தும், என்றும் என்றும் நின்வணங்க அன்பு வேண்டும் என முடிக்க. இப் பிறப் பிலே வீட்டின்பம் எய்துதற்கு வினை யெச்சம் தடையாகு மாயின், அவ்வினை யொழிவு பெறுங்காறும் இறந்து இறந்து பிறக்க நேரும் ஆதலின், அப் பிறவிகளில் எல்லாம் நின் அடிமைப் பணியை அணிகலனாக மேற்கொண்டு வணக்கம் வணக்கம் என்று நாவாரக் கூறி, ஆண்டவனே, நின்னை வணங்கவேண்டும் ஆதலின், அதன் நிமித்தம் எனக்கு நின் திருவடிக்கண் மாறாத மெய்யன்பே தந்து அருளல் வேண்டும் என்பது, இத் திருப்பாட்டின் முகமாக அடிகள் கருதிக் கூறியது என்க. அழிவில் இன்பம் ஆகிய முடிவான பயனையே வேண்டும் என இரந்தால், அது பெறுதற்குப் பக்குவம் இன்று என ஆண்டவன் திரு வுள்ளம் கொள்ளின், பேறு ஒன்றும் இன்றாய்விடும் என் னும் ஐயத்தால், அப் பயனை உறுதியாகப் பயக்கும் மெய் யன்பாகிய சாதனத்தை வேண்டுவார் ஆயினர். இச் சாதனப்பேறு ஒருமுறை ஆண்டவன் அருளால் கிடைத்து விட்டால், பிற்றைப் பிறவிகளிலும் தொடர்ந்து பயன் செய்யும் என்னும் உறுதியுடையராய், "மாண்டு மாண்டு வந்து வந்து மன்ன நின் வணங்க" என்றார். வருதல்— பிறத்தல்.

அரசனிடத்துக் குறையிரப்பான் ஒருவன், முடிவான பெரும் பயனைக் குறிப்பிட்டு வேண்டுதலும், அத் துணை பெறுதற்கு ஏதும் தடை ஏற்படுமாயின், அதனிற் சிறிது

குறைந்த அளவிலாவது தரல் வேண்டும் எனத் தெரிவித்துக் கொள்ளுதலும் உலகியலிற் காண்கின்றோம். அங்ஙனமே, முன்னர்ச் சிறந்த பயனாகிய வீட்டின்பத்தை வேண்டிய அடிகள், அது பெறுதற்கு ஒருவாறு பக்குவம் இன்று எனக் கொள்ள நேரின், அப் பயனைக் காலாந்தரத்திலாவது விளைக்கும் மெய்யன்பே வேண்டும் என நினைந்து இரப்பார் ஆயினர். நின்னை வணங்க அன்பு வேண்டும் என்ற அளவே அமைவதாக, "நின் கழற்கண் அன்பு வேண்டும்" என்றது, [1] "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன் அடி யென் மனத்தே, வழுவா திருக்க வரந்தர வேண்டும்" என்றபடி, ஒருகால் தம் நிலை பிறழினும், திருவடிப்பதிவு அதற்கு இடம் தராது செம்மைப் படுத்தும் என்னும் குறிக்கோள் பற்றி என்க. ஈண்டு, ஆளுடைய அரசு, ஆண்டவன் திருவடியைப் பற்றிக் கொள்ளுதற்கு உரிய ஆற்றல் தம் மனத்திற்கு இல்லாமை உணர்ந்து, "என் மனம் உன் அடிக்கண் வழுவா திருக்க" என்னாது, "உன்னடி என் மனத்தே வழுவா திருக்க" என்று அருளிச் செய்தமை அறிந்து இன்புறத்தக்கது.

இதன்கண், "மன்ன நின் வணங்க ... நின் கழற்கண் அன்பு வேண்டும்" என வீட்டின்பத்திற்கு ஏதுவாகிய மெய்யன்பு வேண்டப்பட்டிருத்தலானும், அது பிறவிகள் தோறும் தொடர்ந்து, முடிவில் அவ் இன்பத்தில் இசைக்கும் என்னும் உறுதி பெறப்பட வைத்தமையானும், **ஆனந்தத் தழுந்தல்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

75. வணங்கு நின்னை மண்ணும் விண்ணும்
வேத நான்கும் ஓலமிட்
டுணங்கு நின்னை யெய்த லுற்று
மற்றொ ருண்மை யின்மையின்
வணங்கி யாம்வி டேங்க ளென்ன
வந்து நின்ற ருளுதற்
கிணங்கு கொங்கை மங்கை பங்க
என்கொ லோநி னைப்பதே.

---

1. திருநாவுக்கரசர் தேவாரம்.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் சாதனமாகிய மெய்யன்பை வேண்டியது, ஆண்டவன் திருவடியை எக்காலமும் வணங்குதற்கு என்பது கூறப்பட்டது. இத் திருப்பாட்டில், அவ் வணக்கத்தின் இன்றியமையாமையும், அதனைக் கடைப்பிடித்து நெருங்குவோர்க்கு ஆண்டவன் திருவருள் பாலிக்கத் தடையாகக் கருதுவது யாதாக இருக்கலாம் என்பதும் கூறப்படுகின்றன.

ப-ரை: இணங்கு கொங்கை மங்கை பங்க—நெருங்கிய கொங்கைகளையுடைய உமையம்மையை ஒரு பங்கில் உடையவனே, மற்று ஓர் உண்மை இன்மையின்—நின்னையன்றி வேறாக ஒரு மெய்ப் பொருள் இல்லாமையால், நின்னை மண்ணும் விண்ணும் வணங்கும்—உன்னை நிலவுலகமும் விண்ணுலகமும் வணங்குவன, வேதம் நான்கும் நின்னை எய்தல் உற்று ஓலம் இட்டு உணங்கும்—நான் மறைகளும் உன்னை அணுக முயன்று (இயலாமையால்) ஓலம் இட்டு இளைத்து நிற்கும், யாம் வணங்கிடேங்கள் என்ன—அடியேமாகிய யாங்களும் நின்னை வணங்கி விடமாட்டேம் என்று விண்ணப்பம் செய்யவும், வந்து நின்று அருளுதற்கு—வெளிப்பட்டு நின்று அருள் புரிதற்கு, நினைப்பது என்கொல்—தடையாகத் திருவுள்ளம் கொள்வது என்னையோ? என்பது.

வி-ரை: மண், விண் என்பன ஆகுபெயராக நின்று, ஆண்டுள்ள மக்களையும், தேவரையும் உணர்த்தும். உலக மூன்றனுள், மண்ணுலகமும் விண்ணுலகமும் வணங்கும் என்றார்; ஆண்டுள்ளார், முறையே புண்ணிய பாவ கன்மங்கள் காரணமாகவும், புண்ணிய கன்மங் காரணமாகவும், மக்களாகவும், தேவராகவும் பிறந்து, இறைவனை வழிபடுதற்கு உரிய ஞானம் பெறும் தகுதி வாய்ந்து இருத்தலின். கீழ் உலகத்தவர், பாவ கன்மம் காரணமான பிறப்புடையர் ஆதலின், இறை வணக்கத்திற்கு உரிய தகுதி பெறல் அரிது எனக் கருதி உடன் கூறப்பட்டிலர். மண்ணுலகத்தவர், கலப்பு வினைப்பயன் நுகர்ச்சி உடையர் ஆதலின், தொண்டில் ஈடுபட்டு, உயிர் முனைப்பு அடங்கி,

ஆண்டவனை நினைந்து வழிபடும் இயல்பு உடையவர் என்பதும், நல்வினைப் பயன் ஒன்றே நுகர்ந்து இன்பத்தில் இறுமாக்கும் தேவர், ஒரோ வழிக் கடவுள் நினைவையும் புறக்கணிக்கும் இயல்புடையர் என்பதும் கருதி, " மண்ணும் விண்ணும் " என்று முறைப்படுத்து உரைப்பார் ஆயினர். இவ்விரு திற உலகத்தவரும் முடிவான வணக்கத்திற்கு உரிய கடவுள் யாராக இருக்கலாம் என நூல் அளவையானும், அநுபவ உணர்வானும் நெடிது ஆராய்ந்து, மக்கள், தேவர் முதலிய யாவரும் ஒடுங்கிய பேரூழிக் காலத்து, அவ்வெல்லோரையும் எல்லாவற்றையும் தன்னுள் ஒடுக்கி, அழிவு இன்றி நிற்பவன் பரம சிவனே என்னும் உண்மை உணர்வு கைவரப் பெற்றவர் என்பார், "மற்று ஓர் உண்மையின்மையின் மண்ணும் விண்ணும் வணங்கும் " என்றார். " உண்மை " இறைவனைக் குறித்தலின் ஆகு பெயர். எல்லோரானும் வணங்கப்படுபவன் சிவபெருமானே என்பதும், அப் பெருமானால் வணங்கப்படும் தெய்வம் பிறிது ஒன்றும் இல்லை என்பதும் மறை முடிவுகளின் ஆராய்ச்சியாற் கண்ட உண்மையாகும். [1] " செய்யானை வெண்ணீறணிந்தானைச் சேர்ந்தறியாக், கையானை " என்று அடிகள் பிறிதோரிடத்து அருளிச் செய்து இருத்தல் இதனை உறுதிப்படுத்துவதாகும். " மற்றோர் உண்மையின்மையின் " என்பதை, மண், விண் வணக்கம், மறைகளின் உணக்கம், அடியார் வணக்கம் ஆகிய எல்லாவற்றிற்கும் ஏது வாக்கிக் கொள்ளல் வேண்டும்.

ஓலம்—அபயம் அளிக்க வேண்டும் என்னும் குறிப்பு மொழி. மறைகள் அணுகுதற்கு முயன்று, இயலாமையால் ஓலம் இட்டு இளைத்து நிற்கும் என்றது, இறைவன் பெருமையை அளவிட்டுக் கூற இயலாமல், கீழ்ப்பட்ட தெய்வங்களை வருணித்துப் பரம் பொருள் இது வன்று; இது வன்று என்றே கூறி ஒழிந்தன என்பது பற்றியாம். [2] "அல்லை யீதல்லை யீதென மறைகளும் அன்மைச், சொல்லினால் துதித்து இளைக்கும் " என்ற பௌராணிகர் உரையும்

1. திருவாசகம், திருவம்மானை 13. 2. பரஞ்சோதியார் திருவிளையாடல், அவையடக்கம் 4.

ஈண்டு நினைக்கத்தக்கது. மறைகள் தம் சொற் பெருக்காற் காண்டற்கு எத்துணை விரிந்து செல்லினும், இறை இயல் அப்பாற்பட்டு நிற்றலின், மேற் சேறற்கு இயலாமையால், அச்சமுற்று இளைத்து நிற்றலின், "ஓலமிட்டு உணங்கும்" என்றார்.

சொல்லுலகும், பொருளுலகும் (சத்தப் பிரபஞ்சம் அருத்தப் பிரபஞ்சம்) என இரு கூற்றில் அடக்குவர் உலகம் எல்லாவற்றையும். ஈண்டு, "மண்ணும் விண்ணும்" என்பது பொருள் உலகமாகும். "வேதம் நான்கும்" என்பது சொல் உலகம் ஆகும். சொல்லுலகினும் பொருளுலகு இறைவனை அணுகுதற்குத் தகுதி சிறந்ததாகலின், "மண்ணும் விண்ணும் வணங்கும்" எனவும், அத்துணைத் தகுதி யின்மையால், "வேத நான்கும் ஓலமிட்டுணங்கும்" எனவும் கூறப்பட்டன.

அடியார், பொருளுலகில் அடங்குவர் ஆயினும், தகுதியின் பொதுச் சிறப்பு முறை பற்றி வேறாகக் கூறப் பட்டனர் என்க. அடியார் தகுதி, மற்றைத் தேவர், மக்கள் தகுதியினும் சிறப்பு உடையது என்பது கருத்து. அதனாலே, அடிகள், மற்றை அடியாரையும் உளப்படுத்து, "வணங்கியாம் விடேங்கள் என்ன" என்றார். மண்ணுல கத்தவரும் விண்ணுலகத்தவரும் உண்மை அறிந்து வணங் கிய அளவில் நின்றனர் எனவும், அடியேம் ஆகிய யாங்கள் வணக்கத் தளவில் ஒழியாது, விடாமல் தொடர்ந்து பற்றி னேம் எனவும் கூறியது, பொதுச் சிறப்பு முறையை வலி யுறுத்துவதாகும். ஆண்டவனை விடாமற் பிடித்தற்கு, அடிகள் தம் அளவில் ஒழியாது, மெய்யன்பர் பலரையும் துணையாக்கிக் கொள்வாராய், "யாம்" என உளப்பாட்டுப் பன்மையிற் கூறினர். மேலும், வணக்கம் என்ற அளவில் ஒழியாது, "சிக்கெனப் பிடித்தேன்" என்றாங்கு, விடமாட் டேம் என்று கூறவும் என்றார். இனி, "விடேங்கள் என்ன" என்பதற்கு, 'நின் திருவடி இன்பம் பெறுங்காறும் எம் கடமையாகிய இவ் வணக்கத்தைக் கைவிட மாட்டேம்

என்று விண்ணப்பம் செய்து கொள்ளவும்' என்று பொருள் கோடலும் அமையும். யாமும், என்னவும் என்புழி, உம்மைகள் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன. விடேங்கள் என்புழி, கள் என்பது விகுதி மேல் விகுதி யாகும்.

வந்து நின்று அருளுதல்—வெளிப்பட்டுத் தோன்றி நின்று அருள் புரிதல். எங்கும் நிறை பொருளாகிய இறைவன், மெய்யன்பர் வேண்டுகோளுக்கு இரங்கி, அவர் நினையும் வடிவில் வெளிப்பட்டு அருள்புரிதலைத் திருத் தொண்டர் புராண முதலியவற்றானும் அறியலாம். யாங்கள் மனமொழி மெய்கள் ஒன்றுபட்டு வணங்கவும், ஆண்டவனே, நீ வெளிப்பட்டு அருளுதற்குத் தடையாகத் திருவுள்ளம் கொள்ளுவது என்னையோ என்புழி, அருள் உருவினள் ஆகிய அம்மையோடு இயைந்த நின்னால் தடை நேர்ந்து இராது; எம் வினையெச்சத்தால் நேர்ந்து இருக்கலாம் என்று அடிகள் கருதினர் என்பது குறிப்பிற் பெறப்படும். இதனை, "மங்கை பங்க" என்ற விளி நிலையும் உறுதிப்படுத்துவதாகும். திருவுள்ளத்தில் தடையாகக் கருதியது இன்னது என அறியச் செய்யின், திருவருட்டுணை கொண்டு, அத்தடையை ஒழித்தற்கு உரிய தவத்தில் தலைப்படலாம் என்பதும் உட்கோளாகக் கொண்டு, "என் கொலோ நினைப்பது" என்றார் என்பது.

இதன் கண், "மற்றொருண்மை இன்மையின்," "வணங்கியாம் விடேம்" என்றமையால், பரம் பொருள் இன்னது என்னும் தெளிவும், அதனை வழிபட்டு நெருங்கிப் பற்றும் நெறியும், அந்நெறி நின்று அருள் அமுதம் நுகரலாம் என்னும் துணிவும் பெறப்படுதலின், ஆனந்தத் தழுந்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

76. நினைப்ப தாக சிந்தை செல்லும்
எல்லை யேய வாக்கினால்
தினைத்த னையும் ஆவ தில்லை
சொல்ல லாவ கேட்பவே

அனைத்து லகும் ஆய நின்னை
ஐம்பு லன்கள் காண்கிலா
எனைத்தெ னைத்த தெப்பு றத்த
தெந்தை பாதம் எய்தவே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் வணக்கம் செய்து விடுவேம் அல்லேம் என்னும் எம்மனோர்க்கு அருள் புரியத் தடையாகக் கருதுவது என்னையோ என்று கூறிய அடிகள், அத் தடைகள் எம்மனோர் மனமொழி முதலியவற்றால் ஆய வெனினும், அவற்றை ஒழித்தற்குத் திருவருள்துணை அன்றி எம்மால் செய்யத்தக்கது யாதும் இன்று என்னும் உட்கோள் புலப்பட, இத்திருப்பாட்டில் அருளிச்செய்கின்றார்.

ப-ரை: எந்தை—என் தந்தையே, சிந்தை செல்லும் எல்லை நினைப்பது ஆக—என் மனம் செல்லும் அளவும் நினைவதாக, சொல்லல் ஆவ கேட்பவே—சொல்லுதற்கு உரியன எல்லாம் கேட்கப்படுவனவே (ஆதலின்), ஏய வாக்கினால் தினைத்தனையும் ஆவது இல்லை—பொருந்திய சொற்களால் தினையளவும் பயன் விளைதல் இன்று, அனைத்து உலகும் ஆய நின்னை—உலகெலாம் ஆய நின்னை, ஐம்புலன்கள் காண்கிலா—ஐம்பொறிகளும் காணும் ஆற்றல் இல்லாதன ஆகும், பாதம் எய்த—நின் திருவடி அடையவோ, அது எனைத்து எனைத்து—அத் திருவடி எத்துணை எத்துணை அளவு உடையதோ, எப்புறத்தது — எவ்விடத்ததோ? (அறிந்திலேன்) என்பது.

வி-ரை: "எந்தை" என்றது ஈண்டு மைந்தனாகிய சிறியேனால் செய்யப்படும் சிறு பணியைத் தந்தையாகிய நீ மனம் உவந்து ஏற்று அருளல் கடமையாம் என்னும் குறிப்புத் தோன்ற நின்றது. அடிகள் தம் மனம் மொழி பொறிகளால் இறைவனைக் காண்டற்கு இயலாமையைக் குறிப்பிடத் தொடங்கி, முதலில் மனத்தின் இயல்பைத் தெரிவிக்கலானார். எல்லாக் கருவிகளினும் மனமே கட்டிற்கும் வீட்டிற்கும் சிறந்த ஏதுவாம் என்ப. மனத்தின் இயைபு இன்றேல், மொழிகள் வெற்றுரை

ஆகும்; பொறிகள் புலனுகர்ச்சியின்றி வறியனவாம். மனம், பொறி வாயிலாகச் சென்று புறப் பொருள்களை அறிதலோடு, உண் முகமாகவும் நின்று, கண்டவை கேட்டவைகளை நினைந்து உணரும் இயல்பினது ஆகும். சிவாகமங்களின் வாயிலாக இறைவன் திருவுருவங்களைக் கேட்டும், புறத்தேயுள்ள திருக் கோயில்களில் அம்முறையில் அமைக்கப்பட்ட திருவுருவங்களைக் கண்டும், உள்ளத்து அமைத்து நினைதலைச் சகுணோபாசனை என்பர். சகுண உபாசனையாவது, இறைவனைத் திருவுருவில் வைத்து வழிபடுதல். இவ் வுருவ வழிபாடு, மனம் கட்பொறிவழிச் சென்று, புற வுருவத்தைக் காண்டலானும், செவிப் பொறி வழிச்சென்று சிவாகமத்திற் கேட்டலானும், பொறிவழிச் செல்லாது ஒருங்கு இயைந்து நினைதலானும் நிகழ்வது. உருவ வழிபாடு முதிர முதிர, நினைதற்குக் கருவியாகிய சித்த விருத்தி ஒடுங்கி, முடிவில் மனோலய சித்தி உண்டாம். மனம் இறந்த நிலையில், இறைவனுடைய உண்மை இயல்பை உயிர் உணர்ந்து இன்புறுவதாகும். அவ்வுணர்வு நிலை நிர்க்குணோபாசனை ஆகும். நிர்க்குண உபாசனையை அருவ வழிபாடு என்ப. ஆகவே, புறத்தும் அகத்தும் வைத்துத் திருவுருவ வழிபாட்டில் தலைப்படும் அவ்வளவே மனத்தால் இயல்வதாகும். இவ்வுண்மை புலப்படவே, "செல்லும் எல்லை சிந்தை நினைப்பதாக" என்றார். இறைவனது உண்மை இயல்பை மனம் காண்டற்கு இயலாது எனக்கொண்டு, இயன்ற அளவு திருவுருவை நினைதற்கும், அதனைச் செல்ல விடாது இருத்தல் பெருங் குற்றமாம் என்ப. இது கருதியே, [1] "செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை" என்பர் திருமூலர்.

அடிகள், சிந்தை தம் வயத்தது அன்றிச் செல்லும் இயல்புண்மை குறித்தே, "செல்லும் எல்லை சிந்தையால் நினைப்பேன்" என்று சிந்தையைக் கருவியாகக் கொண்டு, தம்மை வினை முதலாகக் கூறாமல், "நினைப்பதாக சிந்தை" என், நினைத்தற்கு வினை முதலாக மனத்தையே கூறுவார்

1. திருமந்திரம், செ. 2103.

ஆயினர். மனம் தம் வயப்படாமல் செல்லும் நிலையிலும், பழம் நழுவிப் பாலில் வீழ்ந்தது போல, அதன் செலவு இறைவனைப் பற்றியதாக நேர்ந்தது திருவருளாற் பெற்ற உதவி என்பது குறிப்பு.

நூல்கள் முகமாகக் கேட்கப்பட்ட செய்திகளே பேச்சுக்கு உரியன என்பது தோன்ற, "சொல்லலாவ கேட்பவே" என்றார். இது, "வாக்கினால் தினைத்தனையும் ஆவதில்லை" என்பதற்கு ஏதுவாகும். இறையருளின் அநுபவம், பேச்சு இறந்த நிலை ஆதலின், வாக்கினாற் சிறிதும் பயன் இன்று என்று கூறப்பட்டது. தினைத்தனை — தினையளவு. தினை — சிறுமை குறிக்கும் ஓர் அளவை. ஏய வாக்கு—அக் கேள்வியோடு பொருந்திய சொல். செவிப் பொறி வாயிலாகக் கேட்கப்படுவன எல்லாம் ஓசை என்னும் புலன் ஆதலானும், அப் புலன் உணர்வு ஏதுவாக வெளிப்படும் சொற்களால் மெய்யுணர்விற்குப் புலன் ஆகும் இறை இயலை உணர இயலாது ஆதலானும், "ஏய வாக்கினால் தினைத்தனையும் ஆவதில்லை" என்றார். இறைவன் உலகு எலாம் ஆகி, வேறாய், உடனும் ஆய் நிற்கும் இம் மூவகை நிலைகள் உள்ளும், வேறு ஆதல், உடன் ஆதல் ஆகிய இரண்டும் பொறிகளால் அறியப்படுவன அல்ல. உலகு எலாம் ஆகி நிற்கும் நிலை அறியப்படுவது ஆம் அன்றோ? அவ் அளவிலாவது ஐம் பொறிகளாலும் நுகர்ந்து இன்புறலாம் எனின், அதுவும் இயலாது என்பார், "அனைத்துலகு மாய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா" என்றார். "உலகெலாமாகி" என்புழி, உலகம் என்பது உயிரை உணர்த்தும். கலப்பினால் உடலின் உயிர் போல அவ் வுயிர்களேயாய் நிற்பன் என்பது கருத்து. இந் நிலையை, மாயா காரியமாகிய புற வுலகில் வைத்து எங்ஙனம் அறிய முடியும் என்பது. [1] "அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது" என்றபடி, அனைத்து உலகும் அப் பெருமானால் ஆயது எனினும், அவற்றை இயக்கி, அவற்றின் உள்ளும் புறமும் எள்ளில் எண்ணெய் போல நிறைந்து

1. தாயுமானவர், 'எங்கும் நிறைகின்ற பொருள்' 1.

நிற்கும் அவ் இறை இயல்பை மெய்யுணர்வினல் அன்றிப் பொறிகளாற் காண்டற்கு இயலாது என்பார், "ஐம்புலன்கள் காண்கிலா" என்ருர். ஈண்டுப் புலன் என்பது பொறி என்னும் பொருட்டு. முதல் அடியில், "வாக்கு" என்றது செயற் கருவியும் (கன்மேந்திரியம்), ஈண்டு ஐம்புலன்கள் என்றது அறிவுக் கருவியும் (ஞானேந்திரியம்) ஆதலால், இவை புறக் கருவிகளுக்கும், மனம் அகக் கருவிக்கும் உபலக்கணம் ஆகும். ஆகவே, உயிர்களின் அகப்புறக் கருவிகளுக்கு இறைவன் எட்டாதவன் என்பது தெளிவுறுத்தப் பட்ட படியாம்.

இனி, ஆண்டவனே, நின் இயல்பு முற்றும் அறிய இயலாதது ஆயினும், நின் திருவடியின் பக்கலாவது அணுகலாம் என்ருல், அத் திருவடி, "பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்" என்றபடி, அதன் அளவும் முடிவு இடனும் அளந்து அறிய வொண்ணு என்பார், "பாதம் எய்த அது எனைத்து எப்புறத்தது" என்ருர். "எனைத்து எனைத்து" என்னும் அடுக்கு, அடியின் அகலத்தையும், "எப்புறத்தது" என்பது நீளத்தையும் குறிப்பனவாம். இவ் வுண்மையை, [1] "அகலம் அளக்கிற்பா ரில்லா அடி" எனவும், [2] "எழுவாயிறு வாயிலாதன ... ஐயாறன் அடித் தலமே" எனவும் போந்த ஆளுடைய அரசர் அருண் மொழிகளானும் உணரலாம். "எந்தை" என்பது அண்மை விளி.

இத் திருப்பாட்டின் திரண்ட கருத்து:—ஆண்டவனே, நின் இயல்பு ஞானேந்திரிய கன்மேந்திரியங்களால் அளந்து அறிய இயலாததொன்று; மனத்தால் நினைந்து உணர என்ருலோ, ஓர் அளவில் அன்றி அது செல்லாது. நின் திருவடியை அணுகலாம் என்ருலோ, அதன் அகலமும் நீளமும் அளப்பரியன. ஆதலால், நின் திருவருள் துணை இன்றி, உயிர் முயற்சி மாத்திரம் பயன் விளையாது என்பது தெளியப்படுதலின், நீயே ஏழைக்கு இரங்கி அருளல் வேண்டும் என்று அடிகள் கருதினர் என்பது.

1. திருநாவுக்கரசர் தேவாரம். 2. திருநாவுக்கரசர் தேவாரம்.

இதன்கண், மனம், வாக்கு, பொறி, புலன்கள் யாவும் இறைவனைக் காண்டற்குப் போதிய ஆற்றல் உடையன அல்ல என்றதனுல், ஆண்டவன் திருவருளே துணையாக நின்று, வீட்டின்பத்தில் தலைப் படுத்துவதாகும் என்பது பெறப்படுதலின், ஆனந்தத் தழுந்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனுதல் அறிக.

77. எய்த லாவ தென்று நின்னை
 யெம்பி ரானிவ் வஞ்சனேற்
குய்த லாவ துன்கண் அன்றி
 மற்றொ ருண்மை யின்மையின்
பைத லாவ தென்று பாது
 காத்தி ரங்கு பாவியேற்
கீத லாது நின்கண் ஒன்றும்
 வண்ணம் இல்லை யீசனே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவனை அடைதற்குத் தம் மனம் மொழி முதலியவற்றால் இயலாமை கூறு முகமாக, அப் பெருமானே இரங்கி அருளல் வேண்டும் என்னும் உட்கோளைக் குறிப்பிற் பெற வைத்த அடிகள், இத் திருப்பாட்டில், அவ்வுட்கோள் குறிப்பை எதுக்காட்டி வற்புறுத்து, வெளிப்பட அருளிச்செய்கின்றார்.

**ப-ரை:** எம்பிரான்—எங்கள் ஆண்டவனே, நின்னை எய்தலாவது என்று — (யான்) நின்னை அடைந்து இன்புறுதல் எப்பொழுது? இவ் வஞ்சனேற்கு—இவ் வஞ்சகனுகிய எனக்கு, உன் கண் அன்றி உய்தல் ஆவது — நின் பற்றுக்கோடு அல்லாமல் உய்தி கூடுதற்கு, மற்று ஓர் உண்மை இன்மையின் — பிறிதொரு மெய்யாகிய பற்றுக்கோடு இல்லாமையான், பைதல் ஆவது என்று பாதுகாத்து இரங்கு — (கை விடின்) துன்பம் விளையும் என்று திருவுள்ளம் கொண்டு காப்பாற்றி இரங்கி அருள்வாயாக, ஈசனே—, ஈது அல்லாது நின் கண் ஒன்றும் வண்ணம் இல்லை — இங்ஙனம் நீயே இரங்கி அருளுதல் ஆகிய இஃது அல்லாமல் நின் திருவடி நீழலில் இயையும் வகை பிறிது இல்லை என்பது.

**வி-ரை:** எம்மை ஆட்கொள்ளும் தலைவன் என நின்னை முன்னரே தெளிந்துளேன் என்பார், "எம்பிரான்" என்றனர். எய்தல்—அல்லீற்றுத் தொழிற் பெயர். ஆண்டவன் உருக்கரந்த நிலையில், அப்பிரிவு பொருது, அடிகள் உள்ளம் வருந்தி, அவ் இறைவனை அடைய விரைதலின், "எய்தலாவது என்று நின்னை" என்றனர். எய்துதல் ஆகிய வினையையும், என்று எனக் காலக் குறிப்பையும் செயப்படுபொருளாகிய நின்னை என்பதற்கு முன்னர்க் கூறியது, அடையப்படும் பொருள் துணியப்பட்டமையானும், ஏனை இரண்டும் அங்ஙனம் துணியப்படாமையானும், துணிந்த பொருளில் அமைதியும், துணியப்படாதவற்றில் விரைவும் தோன்றியமையான் என்க.

"இவ் வஞ்சனேற்கு" என்புழிச் சுட்டு இழிவு குறித்து நின்றது. "உன் கண்" என்புழி, கண்—பற்றுக்கோடு என்னும் பொருட்டு. "உன் கண் அன்றி" என்னும் தொடர்க்கு, உன் பற்றுக்கோடு அல்லாமல் என்பது பொருளாயினும், பற்றுக்கோடு உன்னையன்றி என்பது கருத்தாகக் கொள்ளல் வேண்டும். உண்மை என்பது ஆகு பெயராக நின்று, பற்றுக்கோடு என்னும் பொருளை உணர்த்தும். உலக வாழ்க்கைக்கு ஆதரவாகக் கருதப் படுவன பல உள. அவை எல்லாம் எடுத்த உடம்பு பற்றி உண்டானவை யாதலின், அவ்வுடல் ஒழிவில் ஒழிந்துவிடும் இயல்பினவாம். [1] "தந்தை தாய் தமர்தார மகவெனு மிவை யெலாஞ் சந்தையிற் கூட்டம்" என்பர் தாயுமானார். ஆதலின், உயிர்க்கு உறுதி பயக்கும் உண்மையான பற்றுக் கோடாக வுள்ளவன் ஆண்டவன் ஒருவனே என்பது தெளிவு. இத் தெளிவு கைவரப் பெற்றவர் அடிகள் ஆதலின், "மற்றொரு ருண்மை யின்மையின்" என்றார். "பாதுகாத் திரங்கு" என்பதற்கு இஃது ஏதுவாகும். "பாதுகாத் திரங்கு" என்பதை, இரங்கிப் பாதுகாத்து அருள வேண்டும் எனக் கொள்ளல் வேண்டும். பாது காத்தல்—பேணிக் காத்தல். பைதல்—துன்பம். ஆண்டவனே, நின்னை யன்றி என் உயிர்க்கு உண்மையான

1. தாயுமானவர், 'தேசோமயானந்தம்' 3.

பற்றுக்கோடு பிறிது இல்லாமையால், நீயே என்னை மீண்டும் பிறவாமல் விரைந்து பேணிக் காத்தருளல் வேண்டும். புறக்கணிப்பாய் ஆனல், பிறப்பினுல் விளையும் துன்பத்திற்கு ஆளாவேன். அத் துன்பம் உண்டாம் என்பது திருவுள்ளம் அறியுமே என்று அடிகள் விண்ணப் பம் செய்துகொள்வாராய், "பைதலாவ தென்று பாது காத்திரங்கு" என்ருர். ஈண்டுப் பாவியேன் என்றது துன்ப வினைவிற்கு ஏதுக்காட்டிய படியாம்.

உயிர்களின் முயற்சியும் தவமும் ஆண்டவன் அருள் அமுதத்தை நிறைவித்துக் கொள்ளுதற்குத் தம் உள்ள மாகிய கொள் கலனைத் தூய்மைப் படுத்துக்கொள்ளும் அவ்வளவே பயன் செய்வனவாம். வீட்டின்பப் பேற்றிற்கு ஆண்டவன் கருணையே சிறந்த காரணம் ஆகும். இவ்வுண்மை கருதியே, "ஈதலாது நின்கண் ஒன்றும் வண்ணம் இல்லை" என்ருர். ஈது என்பது இறைவன் கருணையைச் சுட்டும். ஒன்றுதல்—இரண்டறக் கலத்தல்; வீட்டு நிலையைக் குறிப்பதாகும்.

இத் திருப்பாட்டில், எய்துதல், உய்தல், ஒன்றுதல் என்னும் மூன்று செயல்கள் உயிர்க்கு வேண்டுவன என்று கூறப்பட்டன. எய்துதல்—அரிய தவம் கிடந்து, இறைவன் பக்கல் அடைந்து, சிவத்தொண்டில் தலைப் படுதல். உய்தலாவது, இறைவனை அகத்தும், புறத்தும் வைத்து வழிபட்டுக் கட்டறுத்துச் சிவப்பேற்றிற்கு உரிய தூய்மை பெறுதல். ஒன்றுதலாவது, இறைவனேடு இரண்டறக் கலந்து சிவானந்தத்தில் திளைத்தல். இம் மூன்றனுள், எய்துதற்குச் சரியையும், உய்தற்குக் கிரியை யோகங்களும், ஒன்றுதற்கு ஞானமும் சாதனங்களாம். எய்துதற்குக் கால தத்துவமாகவும், உய்தற்குப் பற்றுக் கோடாகவும், ஒன்றுதற்கு அருள் உருவம் ஆகவும் நின்று ஆண்டவன் உபகரிப்பன் என்பதும் இத் திருப்பாட்டிற் பெறப்பட்டவாறு அறிக.

இதன்கண், எய்தல், உய்தல், ஒன்றுதல் ஆகிய செயல்கள், படி முறையிற் கூறப்பட்டு இருத்தலானும்,

முடிவாகக் கூறப்பட்ட ஒன்றுதலால் இன்பத் தோய்வு உண்டாம் என்பது பெறப்படுதலானும், ஆனந்தத் தழுந்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்றுதல் அறிக.

78. ஈச னேநீ யல்ல தில்லை
யிங்கும் அங்கும் என்பதும்
பேசி னேனொர் பேதம் இன்மை
பேதை யேனென் எம்பிரான்
நீச னேனை யாண்டு கொண்ட
நின்ம லாவொர் நின்னலால்
தேச னேயொர் தேவ ருண்மை
சிந்தி யாது சிந்தையே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் இறைவன் திருவடிக்கண் இயைந்து இன்புறுதற்கு அப் பெருமான் திருவருள் துணை புரியின் அல்லது உயிர் முயற்சியளவில் இயலாது என்பது கூறப்பட்டது. அங்ஙனமாயின், உயிர் முயற்சியாக, "வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும்" தந்த இறைவனைக் குறித்து, உயிர் செய்யத்தக்க கடமைகள் வேண்டாவோ எனின், "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்றபடி, உயிர் தூய்மை எய்துதற்கு மன மொழி மெய்கள் இடையறாது இறை பணியில் தலைப்பட வேண்டும் என்பது இத் திருப்பாட்டில் கூறப்படுகின்றது.

ப-ரை: ஈசனே—, இங்கும் அங்கும் நீ அல்லது இல்லை யென்பதும்—இம்மை உலகத்தும் மறுமை உலகத்தும் தலைமைப் பொருள் நீ அல்லாமல் பிறிதொன்று இல்லை என்பதையும், பேதம் இன்மை—உயிர் வேறுபாடற்று ஒன்றும் வீட்டு நிலையையும், ஓர் பேதையேன் பேசினேன் —ஓர் அறிவிலியாகிய யான் பாராட்டிப் பேசியது உண்டு, என் எம்பிரான்—எனக்குச் சிறப்புரிமை உடைய எங்கள் தலைவனே, நீசனேனை ஆண்டுகொண்ட நின்மலா—இழிந்தவனாகிய என்னை ஆளாகக்கொண்ட தூயோனே, தேசனே—பேரொளிப் பிழம்பாகவுள்ள வனே, ஓர் நின் அல்லால்—ஒப்பற்ற நின்னையல்லாமல்,

ஓர் தேவர் உண்மை—அறிதற்கு உரிய தெய்வம் பிறிதொன்றன் உண்மையை, சிந்தை சிந்தியாது—என் மனம் நினையாது என்பது.

வி-ரை: "நீ அல்லது இல்லை" என்புழி, இல்லை என்னும் முற்றிற்கு வினை முதலாக, ஈசத்துவம் உடைய பிறிதொரு பொருள் என்று கோடற்கு, "ஈசனே" என்று அழைக்கலாயினர். நீயே உள்ளாய் என்று கூறுதலினும், "அல்லது இல்லை" என்றது, தெளிவின் துணிவை வலியுறுத்துவதாகும். இம்மை, மறுமை, வீடு என்னும் மூன்றனுள், முன்னைய இரண்டும் உலக நிலையாகக் கொள்ளப்படுதலின், ஆண்டு உள்ள உயிர்த் தொகுதிகளை ஆளும் தலைமைத் தன்மை சிவ பெருமானுக்கே உள்ளது என்பது, "நீ யல்லது இல்லை" என்பதனுல் தெளிவுறுத்தப் பட்டபடியாம். இம்மை, மறுமை என்னும் இரண்டையும் கடந்த வீட்டு நிலையை, "பேதம் இன்மை" என்னும் தொடராற் புலப்படுத்துள்ளார். பேதம்—வேறுபாடு; இறை, உயிர் என்னும் இரண்டையும் பற்றியது. உயிர், கட்டொழிந்து, திருவருள் சார்பாக இறையடி நீழலில் இரண்டறக் கலந்து இயைதலையே, "பேதம் இன்மை" என்னும் தொடர் குறிப்பதாகும். ஆகவே, இம்மை மறுமைகளை, "இங்கும் அங்கும்" என்னும் சொற் களாலும், வீட்டு நிலையை, "பேதம் இன்மை" என்னும் தொடராலும் புலப்படுத்து அருளினர் என்பது.

வீட்டு நிலையைக் கூறிய இடத்து, மெய்யன்பர் எல்லோர்க்கும் தலைவனுயினும், தமக்குச் சிறப்புரிமை தோன்ற, "என் எம்பிரான்" என்று அடிகள் குறிப் பிட்டது, இம்மை மறுமைப் பிறவி ஒழிந்து, வீட்டு நிலை எய்தும் விருப்பம் தமக்கு விஞ்சி நிற்றலான் என்க. "பேதம் இன்மையும்" என்புழி, எண்ணும்மை தொக்கு நின்றது. அடிகளுக்கு இம்மைப் பயனுகிய புகழினும், மறுமை இன்பம் ஆகிய இந்திரன் முதலியோர் பதங்களினும் விருப்பம் இல்லை என்பதை, [1] "வேண்டேன் புகழ்" என்பதனுலும், [2] "கொள்ளேன் புரந்தரன்

1. திருவாசகம், உயிருண்ணிப் பத்து 7. 2. திருவாசகம், திருச்சதகம் 2.

மாலையன் வாழ்வு" என்றமையானும் நன்கு உணரலாம். [1] "நன்றறிவாரிற் கயவர் திருவுடையர்" என்புழி, நன்று என்பதற்கு, "இம்மை, மறுமை, வீடுகட்கு உரிய வாய புகழ், அற ஞானங்கள்" என்று பரிமேலழகர் கூறிய உரை நயம் ஈண்டுக் கருதற்பாலது. புகழை வேண்டாமையால், இம்மை விருப்பம் இன்று என்பதும், அறத்தை மறுமை நோக்கு இன்றிச் சிவ புண்ணிய நோக்காக மேற்கொண்டமையின், மறுமை விருப்பமும் இன்று என்பதும் போதரும். யான் ஓர் அறிவிலி ஆயினும், இம்மை, மறுமை, வீடுகளைப்பற்றிய செய்திகளையும், அம் மும்மைக்கும் உரிய தலைவன் நீயே என்பதையும், மறை ஆகமங்களின் வாயிலாக அறிந்து பேசுதலாகிய மொழிப்பணியை மேற்கொண்டுள்ளேன் என்பார், "ஓர் பேதையேன் பேசினேன்" என்றார். [2] "பற்பல பொருளாய் உள்ள பாசமும் அதனை மேவி, உற்பவ பேதமான உடம்புயிரொடுங்குமாறும், அற்புத புத்தி முத்தி யளித்தருளாலே மேலாந், தற்பரனடாத்து மாறும் உணர்ந்தனர் சைவ நூலில்" என்று அடிகள் வரலாறு கூறுதலும் ஈண்டுக் கருதற்பாலது. அடிகள், மெய்யன்பு நிறைவும், ஆண்டவன் அருள் பெறுதற்கு உரிய பக்குவ முதிர்ச்சியும் நன்கு உடையவரேயாயினும், அவர், தம்மை ஆண்டவன் முன்னிலையில் யாவர்க்கும் கீழாம் அடிமை இயல்பு தோன்ற, "நீசனேனை" என்றார். அவர் அங்ஙனம் கூறியதுகொண்டு, நாமும் அங்ஙனம் கருதல் ஆகாது. ஆண்டவன் முன்னிலையில் ஓர் அடிமை எப்படிப் பேசவேண்டும் என்பதை, அம்முறையில் வைத்து அறிந்துகொள்வதே அறிவுடைமை ஆகும் என்க. ஆண்டு கொண்ட என்பதற்கு, ஆளாக ஏற்றுப் பணி கொண்ட என்பது பொருள் ஆகும். நோயுடை ஒருவனுக்கு, அந் நோய் நீக்க, நோய்த் தொடர்பு இல்லாத மருத்துவனே வேண்டும். மற்றொருவன் கண்ணுக்கு அறுவை மருத்துவம் செய்யப் புகுவோன், தன் கண்ணிலும் படல நோய்

---

1. திருக்குறள் 1072. 2. வாதவூரடிகள் புராணம், மந்திரிச் சருக்கம் 19.

உடையனுயின், எங்ஙனம் செய்யக்கூடும்? அங்ஙனமே, பாசப் பிணிப்பு ஒரு சிறிதும் இல்லாத ஆண்டவனே, அப் பிணிப்புடைய என்னை ஆட்கொண்டனன் என்பார், இறைவனை, "நின்மலன்" என்றும், தம்மை, "நீசன்" என்றும் கூறுவாராயினர். நின்மலன் — அழுக்கற்ற வன்; இயல்பாகவே பாசங்களினீங்கினவன் என்னும் பொருட்டு. நீசன்—பாசப் பிணிப்பால் இழிந்தவன். "ஆண்டு கொண்ட" என்றதனுல், தொண்டு செய்தலாகிய மெய்ப்பணி உடைமையும் பெறற்படுவதாகும். இனி, உள்ளப் பணியைக் குறிப்பிடுவாராய், "ஓர் நின் அல்லால் .........ஓர் தேவர் உண்மை சிந்தியாது சிந்தை" என்ருர். ஓர் இரண்டனுள், முன்னது ஒப்பற்ற என்னும் பொருள் உடையது. பின்னது ஓர்தல் என்னும் தொழிற் பெயரின் விகுதி குன்றி, "ஓர் தேவர்" என வினைத் தொகையாக நின்றது. ஓர் தேவர் உண்மை என்பது, நூலறிவானும், அநுபவ உணர்வானும் அறிதற்கு உரிய தெய்வம் பிறிதொன்று உள்ளதாக என்னும் பொருளது. மனம் பிறிதொன்றைச் சிந்தியாது என்றதனுல், உள்ளப் பணி புலப்படுக்கப்பட்டவாறும். நின்னை யல்லாமல் என்ற விடத்து, "தேசனே" என்ற விளி கொள்ளப்பட்டது. தேசன்—ஒளி வடிவினன். மற்றைத் தேவரும் ஒளியுடம் பினர் ஆதலின், அவ்வொற்றுமையால் அன்னுரையும் பரம்பொருள் எனக் கருதுவாரும் உளர் எனக்கொண்டு, என் உள்ளம் பேரொளிப் பிழம்பாக உள்ள நின்னை அன்றி வேறு கருதாது என்னும் குறிப்புத் தோன்ற நின்றது, "தேசன்" என்னும் அவ் விளிச் சொல் என்க.

இத் திருப்பாட்டில், அடிகள் தம் மன மொழி மெய்கள் இறை பணியில் தலைப்பட்டிருத்தலைக் குறிப்பிட் டிருப்பதால், உயிர் முயற்சியிற் குறைவின்று என்பதும், இனி, ஆண்டவன் திருவருட் பதிவுதான் வேண்டுவது என்பதும் குறிப்பெச்சமாகக் கொள்ளக் கிடப்பனவாம்.

இதன்கண், ஆண்டவனைக் குறித்து, என் அகப்புறக் கரணங்கள் நின்னையே பற்றி நிற்பன என்று அடிகள்

கூறி இருத்தலின், உயிர் தூய்மை நிலை எய்தியதும், திருவருட்பேற்றை எதிர்பார்த்து இருத்தலும், அப்பேறு காரணமாக வீட்டின்பத்தில் தலைப்படலாம் என்னும் துணிவும் பெறப்படுதலின், ஆனந்தத் தழுந்தல் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

79. சிந்தை செய்கை கேள்வி வாக்குச்
சீரில் ஐம்பு லன்களால்
முந்தை யான காலம் நின்னை
யெய்தி டாத மூர்க்கனேன்
வெந்தை யாவி ழுந்திலேன் என்
உள்ளம் வெள்கி விண்டிலேன்
எந்தை யாய நின்னை யின்னம்
எய்த லுற்றி ருப்பனே.

**க-ரை:** உயிர் எய்தும் தூய்மைக்கு, மன மொழி முதலிய அகப்புறக் கரணங்கள் எல்லாம் இறை பணியில் தலைப்படவேண்டும் என்று முன்னைத் திருப்பாட்டில் கூறிய அடிகள், அக்கரணங்கள் அவ்வாறு பண்டைப் பிறப்பில் தலைப்படாமையால், அத் தூய்மையும் திருவருட் பதிவும் பெறாமல், இப் பிறப்பிலும் வீட்டின்பப் பேறு குறித்து உயிர்வாழ்ந்து இருக்கலானேன் என்று இரங்குகின்றார்.

**ப-ரை:** ஐயா—, சிந்தை செய்கை கேள்வி வாக்கு சீர் இல் ஐம்புலன்களால்—மனம் செயல் கேள்வி மொழி என்னும் இவற்றோடும் சிறப்பில்லாத ஐம்பொறிகளாலும், முந்தையான காலம்—பழமையான காலத்தில், நின்னை எய்திடாத மூர்க்கனேன்—நின்னை அடையப் பெறாத அறிவிலியாகிய யான், வெந்து விழுந்திலேன்—தீயில் வீழ்ந்து வெந்திலேன், என் உள்ளம் வெள்கி விண்டிலேன்—என் மனம் நாணி உடையப்பெற்றேன் இல்லை, எந்தை ஆய நின்னை—என் தந்தையாகிய நின்னை, இன்னம் எய்தல் உற்று இருப்பனே—இன்னமும் அடைதற்கு விருப்பமுற்று வாழ்ந்து இருக்கலானேன் என்பது.

வி-ரை : இறைவன் திருவருட்பேறு குறித்து, உயிர்கள் மேற்கொள்ளும் தவங்கள், சிந்தை முதலியவாக இங்கே கூறப்பட்ட அகப்புறக் கரணங்களால் நிகழ்வனவாம். இக் கருவிகள் எல்லாவற்றுள்ளும் மனமே சிறந்ததாகும். மனம் இல்வழி, நிகழும் செயல் முதலிய வெல்லாம் பயன் விளைப்பன ஆகா. மனமொழி மெய்களாகிய முக்கரணங்களுள், மொழிப்பணி ஒருவற்குப் பிறர் கூறக் கேட்டலும், தான் கூறலும் என இரு திறப்படும். ஆதலின், "கேள்வி வாக்கு" என்றார். ஐம்புலன்களால் என்புழி, ஆல் என்னும் மூன்றனுருபைச் சிந்தை முதலியவற்றோடும் இயைத்து, எண்ணும்மைகளை விரித்துரைத்துக்கொள்ளல் வேண்டும். சிந்தையால் ஆண்டவன் திருவுருவை நினைவு கூர்தலும், உடற் செயல்களால் தொழுதல், வணங்குதல் முதலியன செய்தலும், இறைவன் புகழ் மொழிகளைப் பிறர் கூறக் கேட்டலும், அவற்றை நாவாரப் பாராட்டிக் கூறலும் ஆகிய இவை முக்கரணங்களாலும் நிகழும் தவச் செயல்கள் ஆகும். இத் தவ முதிர்ச்சி உடையார்க்கு, ஐம்பொறிகளின் வாயிலாக நுகரப்படும் புலன்கள் எல்லாம் சிவமயமாகவே நிகழும் என்பது பெரியார் அநுபவத்திற் கண்டது. இந் நிகழ்ச்சி, சித்தம் சிவமாகப் பெற்றோர்க்கு அன்றி, மற்றையோர்க்கு இயல்வது அன்று. ஐம்பொறிகளின் வாயிலாக உலகியற் புலன்களை நுகர்தற்கே மனம் செல்லும் இயல்பினதாகும். அவ் இயல்பை, அறிவினால் தடைப்படுத்துத் தன்வயம் ஆக்கல் வேண்டும். அஃது அரிதிற் செயற்பாலதாகும்.

உலகியற் பொருள்களைப் பற்றிக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலன்களின் இயல்பு குறித்தே, "சீரில் ஐம்புலன்கள்" என்று கூறப்பட்டன. இவ் ஐம்புலன்களையும் சிவமயமாகக் கண்ட பெரிய அன்பின் வரகுண தேவர் வரலாறு ஈண்டுக் கருதத்தக்கது. உதிர்ந்து கிடந்த வேப்பங்கனிகளைச் சிவலிங்க வடிவமாகக் கண்டதும், நீர் நிலையில் உள்ள தவளைகளின் ஒலியை ஈசனைப் பாடினதாகக் கேட்டதும் முதலிய சிவாகாரமான

புலன் நுகர்ச்சிகளைத் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில், 1 "காம்பவிழ்ந் துதிர்ந்த கனியுருக் கண்டு, வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும், குவளைப் புன விற் றவளை யரற்ற, ஈசன் றன்னை யேத்தினவென்று, காசும் பொன்னும் கலந்து தூவியும்" என்பன முதலியவாகப் பட்டினத்து அடிகள் கூறியவாற்றான் உணரலாம். இங்ஙனம் வரகுண தேவர் சிவாகாரமாகப் புலன்களை நுகர்ந்ததோடு அமையாது, உலகியற் பொருள் மூலமாக நுகரப்படும் ஐம்புலன்களையும் தமக்கு எனக் கொள்ளாமல், சிவார்ப் பணம் செய்தனர் என்பதும், "விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று, புரிகுழல் தேவியைப் பரிவுடன் கொடுத்த, பெரிய அன்பின் வரகுண தேவரும்" என்னும் அப்பாடற் பகுதியான் அறியலாம். ஒரு சிவ ஞானி, உலகியலில் நுகரப்படும் ஐம்புல இன்பங்களைச் சிவார்ப் பணம் செய்யவேண்டும் என்பது, சிகார முதலாக வைத்து ஓதப்படும் திருவைந் தெழுத்தின் பொருளாக, அப்பைய தீக்கிதர், சிவார்ச்சனா சந்திரிகையில் விளக்கி இருத்தலா லும் அறியத்தக்கது. சிவாய நம: என்பதற்கு, நுகர் பொருள் எல்லாம் சிவனுக்கே; எனக்கு இல்லை] என்பது அவர் விளக்கிய பொருள்களில் ஒன்று. இங்ஙனம் உலகியல் பற்றிய ஐம்புலன்களையும் இறைவனுக்குச் சமர்ப்பித்து விட்டுச் சிவமயமாக அப் புலன்களை மாற்றிக் கொள்ளுதலே ஐம்புலன்களால் இறைவனை அடைதல் ஆகும் என்பது.

முந்தையான காலம் — பண்டைப் பிறப்புக்களைக் குறிப்பதாகும். பழம் பிறப்புக்களிற் சிந்தை முதலிய கரணங்களால் இறைவனைப் பற்றியிருந்தால், இப் பிறப்பில் திருவடி இன்பம் எளிதில் கிடைத்திருக்கும் என்பதும், அங்ஙனம் பற்றி ஒழுகாமையால், இப் பிறப்பில் அரிதா கின்றது என்பதும் அடிகள் கருத்து. பண்டைப் பிறப்புக் களில் உண்மைப் பொருள் இன்னது எனத் தெளிந்து, சாதனங்களை மேற் கொள்ளுதற்கு உரிய அறிவு கைவரப் பெற்றிலேன் என்பார், தம்மை, "மூர்க்கனேன்" என்றார்.

1. திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, செ. 28.

"வெந்து விழுந்திலேன்" என்பதை, விழுந்து வெந்திலேன் என மாற்றிக்கொள்ளல் வேண்டும். வெந்திலேன் என்றமையால், வீழ்தற்கு இடன் தீ ஆயிற்று என்க. எல்லாக் கரணங்களுக்கும் மூலமாக வுள்ள மனம், இறைவனைத் தானும் பற்றி, மற்றைக் கரணங்களையும் செலுத்த வேண்டிய கடமை உள்ளதாகவும், அக் கடமை செய்யாமை பற்றி நாணம் எய்த வேண்டும் என்பதும், அக் கடமைக்கு மாறாக, உலகியலில் தானும் சென்று, மற்றைக் கரணங்களையும் செலுத்திக் கேடு விளைத்தலின், உடைந்து அழிதல் வேண்டும் என்பதும் கருத்து. அங்ஙனம் மனம் நாணமுற்று அழியாமல் இருக்கப் பெற்றேன் என்று இரங்குவார், "என் உள்ளம் வெள்கி விண்டிலேன்" என்றார். உடலை நெருப்பில் வீழ்த்தற்கு, உடற்பணியாகிய தொழுதல், வணங்குதல் முதலியன செய்யாமையும், உள்ளம் வெள்கி விள்ளுதற்கு, நினைவு கூர்தலாகிய உள்ளப்பணி புரியாமையும் ஏதுக்களாம். உடல் வீழ்ச்சியையும், உள்ளம் விள்ளுதலையும் பற்றி இங்ஙனம் கூறியது, புறக் கரணமும் அகக் கரணமும் உரிய கடைமைகளுக்குப் பயன்படாமை குறித்துச் செய்யப்படும் கழுவாயாம் என்பது.

"எந்தையாய நின்னை" என்றதனால், ஒரு குழந்தை தன் தந்தையை அணுகுதற்கு இத்துணை இடர்ப்பாடு நேரலாமா என்பது குறிப்பு. ஆண்டவனே, நின்னை இன்னமும் அடையலாம் என்னும் ஒரே குறிக்கோள் பற்றிய அவாக் காரணமாகவே இவ் வுடலைத் தீயில் வீழ்த்து இறவாமல் உயிர் வாழ்ந்து இருக்கலானேன் என்பார், "நின்னை யின்னம் எய்தலுற்றிருப்பனே" என்றார்.

இதன்கண், மன முதலிய கரணங்களால் பண்டு நின்னை அடைந்திலேன் என்று அடிகள் இரங்கிக் கூறியிருத்தலின், பல பிறப்புக்களில் இறை பணியில் தலைப்பட்டு ஒழுகுதலே அழிவில் இன்பம் நுகர்தற்குச் சாதனம் ஆகும் என்பது பெறப்படுதலின், ஆனந்தத் தழுந்தல் என்னும் பதிகம் நுதலிய

பொருளும், "எந்தையாய நின்னை இன்னம் எய்தலுற்றிருப்பன்" என்றதனால் பத்தியும், "வெந்தையா விழுந்திலேன்" என்றதனால், வைராக்கியமும் அறியப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

80. இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை
  ஆண்டு கொண்ட நின்னதாட்
கருப்பு மட்டு வாய்ம டுத்தெ
  னைக்க லந்து போகவும்
நெருப்பும் உண்டு யானும் உண்டி
  ருந்த துண்ட தாயினும்
விருப்பம் உண்டு நின்கண் என்கண்
  என்ப தென்ன விச்சையே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில், பண்டைப் பிறப்பில் தம் கரணங்கள் இறை பணியில் தலைப்படாமையால் திருவருட் பதிவு பெறாமைக்கு இரங்கிய அடிகள், இத் திருப்பாட்டில், அங்ஙனம் முன்னைத் தவம் இல்லாத நிலையிலும், ஆண்டவன் கருணைகூர்ந்து ஆட்கொண்டு, இன்ப நிலையின் இயல்பு உணர்த்தினமையை அறிந்தும், அப் பெருமான் பிரிவைப் பொறுத்து, உயிர் வாழ்ந்து இருக்கலானேனே என்று இரங்குகின்றார்.

**ப-ரை:** இரும்பு நெஞ்ச வஞ்சனேனை—இரும்பு போன்ற வலிய நெஞ்சத்தை உடைய வஞ்சகனாகிய என்னை, ஆண்டுகொண்ட நின்னதாள்—ஆட்கொண்டு அருளிய நின்னுடைய திருவடிகள், கரும்பு மட்டு வாய் மடுத்து—கருப்பஞ்சாறு போன்ற அருள் அமுதத்தை உண்பித்து, எனைக்கலந்து போகவும்—என் உயிரிற் கலந்து பிரிந்து செல்லவும், நெருப்பும் உண்டு—தீயும் உள்ளது, யானும் இருந்தது உண்டு—சிறியேனும் உயிருடன் இருந்தது உண்டு, உண்டது உண்டு—நல்ல உணவுகளை வயிறார உண்டதும் உண்டு, ஆயினும்—அங்ஙனம் உண்டு உயிருடன் இருந்தும், நின்கண் என்கண் விருப்பும் உண்டு

என்பது—நின்னிடத்து எனக்கு அன்பும் உளது என்று கூறுதல், என்ன விச்சை—என்ன மாய வித்தையோ? என்பது.

வி-ரை: அன்பினுற் குழைந்து, இறைவனை நினையாமையால், "இருப்பு நெஞ்சம்" என்னப்பட்டது. இரும்பு, கரும்பு என்பன எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றன. நெஞ்சம் குழையாமையால், அதனுற் பெறும் பயன் இழக்கப்பட்டதாகும் அன்றித் தீங்கு விளைதற்கு இடன் இன்றாம். [1] "நல்லது செய்தல் ஆற்றீராயினும், அல்லது செய்தல் ஓம்புமின்" என்றபடி, இருப்பு நெஞ்சம் படைத்த அவ்வளவில் நல்லதே; அம்மட்டில் அமையாது, வஞ்சித்தலாகிய தீமை பயக்கும் குணமும் உடையனுயினேன் என்பார், "இருப்பு நெஞ்ச வஞ்சனேனை" என்றார். நெஞ்சத்திற் குழைவு இன்மையால், நன்மை இன்மையும், வஞ்சம் கலந்தமையால், தீமை உண்மையும் பெறப்படும் என்க. அத்தகைய தீயவன் என அடிகள் தம்மைக் கூறிக்கொண்டமையாலும், அஃது உணர்ந்தும், இறைவன், கருணை காரணமாகத் தம்மை ஆட்கொண்டு அருளினன் என்றமையாலும், ஆண்டான் அடிமைத் திறத்தில் அடிமை இயல்பு பிழை பட்டது என்றும், ஆண்டான் இயல்பு மிகச் சிறந்தது என்றும் குறிப்பிற் புலப்படுத்தவாறும். "நின" என்புழி, அகரம் ஆறும் வேற்றுமைப் பன்மை உருபு ஆகும்; விரித்தல் விகாரத்தால் "நின்ன" என்று ஆயிற்று. தாள், கலந்து போதற்கு வினை முதலாகும்.

மட்டு—சாறு. கருப்பு மட்டு, அடையடுத்த உவம ஆகு பெயராக நின்று, அது போன்ற இனிமைச் சுவை மிக்க திருவருள் அமுதத்தை உணர்த்துவதாகும். உவமம் உயர்ந்ததாக இருக்கவேண்டும் என்னும் விதி பிழைபடுகின்றதே எனின், உலகியற் பொருள்களுள் இனிமைச் சுவையிற் சிறந்தது ஆதலானும், ஈடும் எடுப்பும் இல்லாத

1. புறநானூறு, செ. 195.

தெய்விகப் பொருளுக்கு எடுத்துக் காட்டப் பிறிதொன்று இல்லாமையானும், ஓர் அளவு சுவை இனிமை ஒப்பு நோக்கிக் "கருப்பு மட்டு" என்றார். வாய் மடுத்தல்— வாயுட் கொள்ளல்; உண்டல். வாய் மடுப்பித்து என்பது, பிறவினை விகுதி குன்றி வாய்மடுத்து என்று ஆயிற்று. நின்தாள் மடுப்பித்து, என்னைக் கலந்து போகவும் என்று ஆம். நின் திருவடி அருள் அமுதத்தை உண்ணச்செய்து, என்னைக் கலந்து பிரிந்து செல்லவும் என்பது பொருள். இறைவன் தாளை அருட்சத்தி என்று ஆகமங்கள் கூறும். தாள் கலத்தலாவது, உயிரிற் சிவ சத்தியாகிய ஞான ஒளி விரவுதல் ஆகும். இறைவன், யான் தகுதியற்றவன் என்பதை உணர்ந்தும், தன் அருட்குணம் காரணமாக என்னை வலிய ஆட்கொண்டு, தன் அருளமுதத்தைத் துய்ப்பித்து, தன் அருள் ஒளியை என் உயிரில் விரவச் செய்து, நெடிது நில்லாது பிரிந்து செல்லவும், யான் உடலைப் பேணிப் பொறுத்து இருக்கின்றேனே என்பார் இங்ஙனம் கூறினர்.

இறைவன் திருவருட் கலப்பு ஒருகால் நேரினும், பிரியும் இயல்பினது அன்று. அங்ஙனம் ஆகவும், பிரிந்து செல்லவும் என்றது என்னை எனின், அடிகளை ஆட்கொண்ட பின், அவர் தித்திக்கும் மணி வார்த்தைகளை உலகத்துள்ள மக்கள் அறிந்து இன்புற வேண்டும் என்று இறைவன் திருவுளம் கொண்டு, அடிகளை இந்நில உலகத்து இருத்திப் பிரிந்தனன் என்பது வரலாறு ஆதலின், அவ்வாறு கூறியது என்க.

திருவருள் தோய்வு, அடிகள் உயிரிற் கலந்து பிரிந்திலது எனினும், உடனே ஊனார் புழுக்கூட்டை நீத்துத் தம் உயிர், வீட்டின்பத்தில் தலைப்படாமல் இன்னும் சின்னாள் அவ்வுடலோடு கூடியிருக்க நேர்ந்ததுபற்றிப் பிரிவு நேர்ந்ததாகக் குறிக்கொண்டு, "எனைக்கலந்து போகவும்" என்று கூறுவார் ஆயினர். அரிதிற் கிடைத்த திருவடிப் பேறு பிரிவுற்றது அறிந்தும், அத் திருவடிக்கண் இயைந்து

இன்பம் நுகர வேண்டிய தம் உயிர், இம்முடையார் புழுக் கூட்டில் அகப்பட்டு வருந்துவதாயிற்றே என இரங்கி, அங்ஙனம் வருந்துதற்கு ஏதுவாக உள்ள உடலைத் தீவாய்ப் படுத்துச் சுட்டு ஒழிக்க வேண்டுவது இன்றியமையாத தாகவும், அங்ஙனம் செய்யத் துணிவு பிறவாமை பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்: உடலைச் சுட்டு ஒழித்தற்கு, " நெருப்பும் உண்டு " என்றார். நெருப்பிற்பட்டு விரைவில் அழிந்து சாம்பர் ஆதல்போல் ஆகாது என்று கருதி, நீர் மூழ்குதல் முதலியவற்றைக் கூறார் ஆயினர். எரிப்பதற்கு நெருப்பு உளதாதல் அன்றி, எரிக்கப்படு பொருளாக யானும் உயிர் வாழ்ந்திருக்கின்றேன் என்பார், " யானும் இருந்ததுண்டு " என்றார். தீயில் வீழ்தற்கு மனம் ஒருப் படாவிட்டாலும், உணவு கோடலை நிறுத்தி, உடம்பை உலர்த்தலாமே எனின், அதுவும் செய்திலேன் என்பார், " உண்டது உண்டு " என்றார். " யானும் உண்டிருந்தது " என்னும் தொடரை, " யானும் இருந்ததுண்டு " எனவும், ஆண்டுள்ள " உண்டு " என்னும் குறிப்பு வினை முற்றை, "உண்டது" என்பதன் பின்னும் கூட்டி, "உண்டதுண்டு" எனவும் கொள்க. எரிக்கும் கருவியும், எரிக்கப்படு பொருளும் யாரும் தடைப்படுத்தாத நிலையில் எளியனவாக இருந்தும், மனம் துணியாமையோடு, கருவியாகிய நெருப்பை உணவு ஆக்குதற்குச் சாதனமாகவும் கொண்டு, நல்ல உணவுகளை ஆக்கி, எரிக்கப்படு பொருளாகிய உடலை ஓம்பு தற்கு வயிறார உண்டேன் என்பார், " உண்டதுமுண்டு " என்றார். " உண்டதும் " என்புழி, உம்மை தொக்கு நின்றது.

இங்ஙனம் பிரிவு பொறுத நிலையில், உடலைத் தீயில் வீழ்த்தாமலும், உணவினால் வளர்த்துக்கொண்டு இருந்தும், நின்பால் எனக்கு அன்பு உண்டு என்று யான் கூறுதல் என்ன வித்தையோ என்பார், " விருப்பும் உண்டு நின்கண் என்கண் என்பதென்ன விச்சையே " என்றார். என்கண் என்புழி, ஏழாம் வேற்றுமை உருபை எனக்கு என நான் காவது ஆக்குக. " நின்கண் விருப்பும் உண்டு " என்புழி,

என் உடம்பில் அன்பு உளதாதலே யன்றி, நின் கண்ணும் அன்பு உண்டு என்றும் பொருள் தரலால், உம்மை எச்சப் பொருட்டாம். என்பது — என்று கூறுதல். இதனால், பேச்சு அளவில் அன்றி, உள்ளத்தில் மெய்யாக அன்பு இல்லை என்பது போதரும். உண்மையில் இல்லாமல், பேச் சளவில் உண்டு என்று கூறுதல் உயிர்க்கு உயிராக விளங்கும் ஆண்டவனை ஏமாற்ற முயன்றது ஆகும் எனக் கொண்டு, "என்ன விச்சையே" என்றார். விச்சை—மாய வித்தை. இல்லதை உள்ளதாகவும், உள்ளதை இல்லதா கவும் காட்டுதல். இவ் விருதிறத்துள், இஃது, இல்லதை உள்ளதாகக் கொண்டு கூறியதாகும். என் அவிச்சை எனப் பிரித்துப் பொருள் கூறுவாரும் உளர். பாட்டின் பொருட் கிடக்கையை நோக்க, அப் பொருள் சிறப்பின் றுதல் அறிக.

இதன்கண், "நின்ன தாள் கருப்புமட்டு வாய்மடுத் தெனைக் கலந்து போகவும்" என்றதனால், ஆனந்தத் தழுந்தல் என்னும் பதிகம் நுதலிய பொருளும், "இருப்பு நெஞ்ச வஞ்சனேனை யாண்டு கொண்ட நின்னதாள்" என்றத னால் பத்தியும், "நெருப்பும் உண்டு யானும் உண்டு" என்ற தனால் உடல் ஒழிவு முகமாக வைராக்கியமும் பெறப்படு தலின், பத்தி வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

## 9. ஆனந்த பரவசம்

ஆனந்தம் என்பது மெய்யுணர்வின் வாயிலாக இறை அருளைப்பற்றி நின்று, பக்குவ முதிர்ந்த உயிர் நுகரும் பேரின்பம் ஆகும். இதன் இயல்பு, இதன் முன்னைப் பதிகம் நுதலிய பொருளாகிய ஆனந்தத் தழுந்தல் என்பதற்கு எழுதிய குறிப்பில் விளக்கப்பட்டுள்ளது. பொறி வாயிலாக நுகரப்படும் புலன்கள் ஆகிய உலகியல் இன்பத்தை உவர்த்து, மெய்யுணர்வு கருவியாக அநுபவிக்கப்படும் சிவானந்தத்தில் தோயும்படி உயிர்க்கு ஒரு சிறிது இடங்கிடைப்பினும் நழுவ விடாமல் பற்றிக் கோடற்கு ஆண்டவனை வேண்டுதல் முன்னைப் பதிகம் நுதலிய பொருளாகும். அங்ஙனம் ஆனந்தத்து அழுந்தல் ஆகிய அநுபவத்தில் தலைப்படக் கிடைத்ததும், அதன்கண் மேன் மேலும் ஈடுபட்டுத் தன்வசம் அழிதல் ஆனந்த பரவசம் ஆகும். பரவசம் என்பதற்குப் பிறர் வயப்படல் என்பது பொருள் ஆயினும், ஈண்டுத் தன்வசம் அழிதலே கருத்து ஆகும். நுகரப்படும் அழிவில் இன்பத்திற்கு நம் அறிவு கருவியாகும் என்று எண்ணும் மன நிலையின் ஒழிவே தன்வசம் அழிதல் ஆகும். அங்ஙனம் இன்றித் தன் அறிவுக்கு முதன்மை நினைய நேருமாயின், யான் என்னும் உயிர் முனைப்பு முற்பட்டு, இன்பத் தோய்விற்குப் புறம்பாக நேரும். திருவருளால் நிகழ்தலை மறந்து, கருவிகளைக் கொண்டு நான் செய்கின்றேன் என்று எண்ணும் உயிர் முனைப்பு அறவே ஒழிதல் வேண்டும். நன்றாக உறங்குகின்றவன் ஒருவன் அவ்வுறக்க நிலையில், தன்மெய்யை மறத்தல், ஆண்டுத் தன்வயம் இழத்தல் ஆகும். இஃது அஞ்ஞான நிலையில் நிகழ்வது. சிவானந் தத்தில் தன் வயம் இழத்தல் ஞான நிலையில் நிகழ்வது. 1 "தூங்காமல் தூங்கிச் சுகப் பெருமான் நின் நிறைவில், நீங்காமல் நிற்கும் நிலை பெறவுங் காண்பேனோ" என்னும்

---

1 தாயுமானர், 'காண்பேனோ', கண்ணி 10.

அநுபவமொழி ஈண்டு நினைக்கத்தக்கது. உலகத்தில் மக்கள் பகல் முழுதும் வேலை செய்து உழைத்து, அவ்வுழைப்பினால் ஏற்படும் இளைப்பை ஒழித்தற்கு, இரவில் கருவி கரணங்கள் எல்லாம் அறிவு இன்றி ஒடுங்கிய நிலையில் தூங்கி, அதனால் உடலுக்கு உறுதி பெறுவர். இவ்வுலகியலைக் கடந்து, திருவருளில் தலைப்படுவோர் பற்பல பிறப்புக்களிலும் ஏற்பட்ட இளைப்பு ஒழியப் பெற்றுக் கருவி கரணங்கள் எல்லாம் அறிவோடு ஒடுங்கிய நிலையில் அமைதி பெற்றுப் பேரின்பத்தில் தலைப்பட்டுத் தம் உயிர்க்கு உறுதி பெறுவர். உலகியலில் மக்கள், உறக்கம் நீங்கி விழிப்பு ஏற்பட்டதும், வினையெச்சம் இருத்தலான், மீண்டும் உண்டு, உடுத்து, வாழ்தற்கு உரிய வேலையில் தலைப்படுவர். திருவருளில் தோயப் பெறுவோர், வினையெச்சம் இன்மையால், மீண்டு பிறத்தலின்றி, உலப்பிலா இன்ப நுகர்ச்சியுடையராய் அழிவில்லாத வாழ்க்கையில் தலைப்படுவர். இதுவே தூங்காமல் தூங்கி எய்தும் சுகப் பேறு ஆகும் என்க. இந்நிலையில், 1 " சிந்தனை போய் நான் எனல் போய்த் தேக்க இன்ப மாமழையை, வந்து பொழிந்தனை " என்றபடி, உயிர், கருவி கரணங்களின் சார்பு உண்மை குறியாது, அவ் வின்பத்தில் தன் வசம் இழந்து தோய்தல் வேண்டும் என்பதும், எக்காரணத்தாலும் அந் நிலையினின்றும் நழுவுதல் கூடாது என்பதும் இப்பதிகம் நுதலிய பொருள் ஆகும். ஆனந்தத் தழுந்தலின் பின் உண்டாவது பரவச நிலையாதலின், இஃது அதன் பின் வைக்கப் பட்டது. இதனால் பதிக இயைபு உண்மை புலன் ஆதலும் அறிக.

கலிநிலைத்துறை

81. விச்சுக் கேடுபொய்க் காகா தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானார் எல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்

1, தாயுமானார், பராபரக் கண்ணி 137,

அச்சத் தாலே ஆழ்ந்திடு கின்றேன்
ஆரூரெம்
பிச்சைத் தேவா என்னான் செய்கேன்
பேசாயே.

க-உரை: முன்னைப் பதிகத்தின் இறுதித் திருப் பாட்டில் ஆண்டவன் கருணை கூர்ந்து ஆட்கொண்ட உதவியை அறிந்தும், அப் பெருமான் பிரிவைப் பொறுத்து உயிர் வாழ்ந்திருக்கலானேன் என்று இரங்கிய அடிகள், அங்ஙனம் உயிர் வாழ்ந்திருத்தலும் ஆண்டவன் திருவுள்ளக் குறிப்பின் வழி யென்பதும், அதற்குக் காரணமாகத் தாம் கருதியதும் இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

ப-உரை: ஆரூர் எம் பிச்சைத் தேவா—திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் ஐயம் ஏற்கும் திருவுருக்கொண்ட எங்கள் தெய்வமே, பொய்க்கு விச்சுக் கேடு ஆகாது என்று இங்கு என்னை வைத்தாய்—பொய்மைக்கு வித்து அழிவு நேர்தல் கூடாது என்று இவ்வுலக வாழ்க்கையில் அடியேனை இருத்தினாய், இச்சைக்கு ஆனார் எல்லாரும்—அன்புடன் செய்யும் தொண்டிற்கு உரியராயினார் அனைவரும், வந்து உன் தாள் சேர்ந்தார்— நின்பால் வந்து நின் திருவடி நிழலை எய்தினர், அச்சத்தால் ஆழ்ந்திடுகின்றேன்—பிறப்புப்பற்றிய அச்சம் காரணமாக வருந்துகின்றேன், நான் என் செய்கேன்—யான் என்ன செய்வேன்? பேசாய்—சொல்லி அருள்வாயாக என்பது.

வி-உரை: திருவாரூர்த் திருத்தலம், நில மடந்தையின் நெஞ்சத்தாமரை மலர் ஆகும். [1] "மேதினிக், காதன் மங்கை யிதய கமலமாம், மாதொர் பாகனார் ஆரூர் மலர்ந்ததால்" என்பர் சேக்கிழார். அண்டத்தில் உள்ளபடியே பிண்டத்திலும் ஆம் என்பராதலின், இஃது உயிர்களின் இதய கமலத்தையும் குறிப்பின் உணர்த்து

1. பெரிய புராணம், திருமலைச் சருக்கம் 33.

வது ஆகும். ஆண்டுத் திருக்கோயில்கொண்டு எழுந் தருளியிருக்கும் இறைவன் திருப்பெயர் தியாகராசன் என்பதாம். புறத்தே திருவாரூர் திருக்கோயிலின் கண்ணும், அகத்தே உயிர்களின் நெஞ்சத்தின் கண்ணும் வீற்றிருந்து உயிர்களுக்கு வேண்டுவன வழங்கும் பெரு வள்ளல் ஆவான் என்பதை அத் திருநாமம் உணர்த்தும். தன் இடத்தில் இரப்போர்க்கு எல்லாம் தன் அருள் அமுதைக் குறைவற வழங்கும் அவ் வள்ளற் பெருமானை, "பிச்சைத் தேவா" என்றார்; அருட் கொடையால் அன்பரை இன்புறுத்துதல் போல, அவர் அன்பை ஏற்றும் இன்புறுத்துதல் பற்றி. உலகியலில் ஓர் அரசன் குடி மக்களுக்குப் பாதுகாப்பு அளித்து, அவர் இடத்தினின்றும் இறைப்பொருள் பெறுதல் போல, ஆண்டவனும் தன் அருள் அமுதை மெய்யன்பர்க்கு வழங்கி, அவர் அன்பை ஏற்றுக்கொள்ளும் இயல்பு உடையனாவன். ஆனால், அரசன் இறைப்பொருள் பெறுதல் தன் நலங் குறித்தாம். இறைவன், அன்பர் அன்பைப் பெறுதல் அவர் நலங் குறித்தாம். இதனால், ஈதலும் ஏற்றலும் இறைவனுக்கு உள்ளன என்பது அறியப்படும். ஆரூர் என்றமையால், தியாகராசனாக ஈதலும், பிச்சைத் தேவா என்றமையால் ஏற்றலும் பெறப் பட்டவாறு அறிக. உலகத்தில் ஒரு பயிர் தோன்றி வளர்தற்கு நல்ல வித்தை ஆராய்ந்து, அதனைப் பாதுகாத்துப் பேணி வைப்பது போல, பொய்மையாகிய பயிர் தோன்றிச் செழித்துப் பயன் செய்தற்கு வித்தாக ஊன் உடம்பில் என்னை இருத்தி வைத்தாய் என்பார், "விச்சுக்கேடுபொய்க்காகா தென்றிங்கெனை வைத்தாய்" என்றார். ஆகவே, உலகத்துள்ள பொய்மை எல்லா வற்றிற்கும் மூலம் தாமே என்றபடியாம். ஆண்டவன், மற்றை அன்பர்கள் எல்லோர்க்கும் தன் திருவடிச் சார்பை நல்கி, அடிகளை ஊன் உடலில் இருக்கச் செய்த தற்கு, அடிகள் கருதிய காரணம் இதுவாம் என்க. இச்சை என்பது ஆகு பெயராக நின்று, அன்புடன்

செய்யும் தொண்டை உணர்த்துவது ஆகும். [1] "எனை நினைந்தாட் கொண்டாய்க்கு என்னினியான் செயும் இச்சைகளே" என்பது தமிழ் மறை. ஆதல்—உரியர் ஆதல். அத் தொண்டிற்கு உரிய மெய்யன்பர் என்பது கருத்து. இங்ஙனம் அன்றி, இச்சைக்கானார் என்பதற்கு, ஆண்டவன் விருப்பத்திற்கு உரியர் என்று பொருள் கொள்ளுவாரும் உளர். மற்றை அடியார்கள் எல்லோரும் ஆண்டவனை அடைதற்குத் தகுதி உடையர் ஆயினர் என்பதும், தமக்கு அத் தகுதி இலதாயிற்று என்பதுமே அடிகள் கருத்து ஆதலானும், இப் பதிகத்து மூன்றும் திருப்பாட்டில், இங்ஙனமே, "அடியாரானார் எல்லாரும் வந்துன் தாள் சேர்ந்தார்" என்று தொண்டு பற்றியே கூறியிருத்தலானும், அவ்வுரை பொருந்தாது என்க.

இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளி இருக்குங்கால், அவன் அருகிற் சூழ்ந்து இருந்த அடியார் அனைவரும் அப்பெருமானோடு மறைந்து அருளினமையை நேரிற் கண்டவர் ஆதலின், "இச்சைக் கானாரெல்லாரும் வந்துன் தாள் சேர்ந்தார்" என்றார். வந்து சேர்தல்—இறைவனோடு வெளிப்பட்டு வந்து அடைதல். தொண்டராகக் காணப் பட்டமையால், "இச்சைக்கானார்" எனவும், வெளிப்பட்டு வந்தமையால், "வந்து" எனவும் கண்கூடாக மறைந் தமையால், "உன்றாள் சேர்ந்தார்" எனவும் கூறி யருளினர். "தொண்டர் எல்லாம் நின் திருவடி இன்பம் எய்த, ஆண்டவனே, என்னை மாத்திரம் ஈங்கு இருக்கப் பணித்தது, பொய்க்கு வித்துக்கேடு உண்டாதல் ஆகாது என்பது திருவுள்ளம் ஆயின், யான் என் செய்வேன்? பொய்மை நீங்கி மெய்யன்பு உடையனாகி நின் அருட்கு இடனாகும் காலம் என்றோ? அக்காலம்வரை, பிறந்து, இறந்து துன்பம் உறுவேன்கொல்" என்று அடிகள் நினைந்து, பிறவித் துன்பத்திற்கு அஞ்சுவாராய், "அச்சத்தாலே யாழ்ந்திடுகின்றேன்" என்றார். ஆழ்தல்— வருந்துதல்; அழுந்துதலும் ஆம். அச்சம் காரணமாக

---

1. திருநாவு. திருநாகை. தேவா. 6.

வருந்துகின்றேன் எனவும், அச்சத்தில் அழுந்துகின்றேன் எனவும் கூறலாம். பின்னதற்கு மூன்றனுருபை ஏழாவதாகக் கொள்ளல் வேண்டும். இத் துன்ப நிலையில் யான் செய்யத்தக்கது இன்னது என்று எனக்குத் தோன்றவில்லை; நீயே திருவுளம் பற்றி அருளல்வேண்டும் என்பார், "என் நான் செய்கேன் பேசாயே" என்றார். கருவிகளை இயக்குவோனும், பயன் விளைப்பவனும் இறைவன் ஆதலின், வீட்டின்பப் பேறு குறித்து மேற் கொள்ள வேண்டிய சாதனங்கள் இன்னவெனத் தெரிந்து கொள்வதற்கும் இறைவனையே வினவுவார் ஆயினர்.

இதன்கண், 'மெய்த் தொண்டர் எல்லாம் நின் திருவடி சார்ந்து ஆனந்த பரவச நிலை எய்தினராக, என்னைப் பொய்மைக்கு மூலமாக ஈங்கு இருத்தினாய்; என் செய்வல்' என்று அடிகள் கூறியிருத்தலான், அப் பரவச நிலை தமக்கும் எய்தவேண்டும் என்பது பெறப் படுதலின், **ஆனந்த பரவசம்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "பிச்சைத் தேவா என்னான் செய்கேன்" என்றதனாற் பத்தியும், பொய்க்கு மூலமாக வைக்கப் பட்டேன் என்றதனால் வைராக்கியமும் பெறப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

82. பேசப் பட்டேன் நின்னடி யாரில்
திருநீறே
பூசப் பட்டேன் பூதல ரால்உன்
அடியானென்
றேசப் பட்டேன் இனிப்படு கின்ற
தமையாதால்
ஆசைப் பட்டேன் ஆட்பட் டேன்உன்
அடியேனே.

**க-ரை:** ஆண்டவன் பிரிந்த நிலையில், அப் பிரிவைப் பொறுத்துத் தாம் உடலோடு கூடி வாழ்ந்திருத்தற்குக் காரணம், பொய்க்கு வித்துக் கேடு உண்டாகாமைப்

பொருட்டு, அப் பெருமான் தம்மை வைத்ததாகும் என்று முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், அங்ஙனம் பொய்க்கு மூலமாக வைக்கப்பட்டேனாயினும், அடியாராலும் உலகத்தவராலும் சிவனடியாருள் ஒருவனாக எண்ணப்பட்டமையால், அவ் எண்ணத்தின் பயனாக வீட்டின்பத்தில் தலைப்பட விரும்பலானேன் என்று இத் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்.

ப-ரை: நின் அடியாரில் பேசப்பட்டேன்—உன் மெய்யடியாருள் ஒருவனாக வைத்து மெய்யன்பராற் பாராட்டிப் பேசப்பட்டேன், திருநீறு பூசப்பட்டேன்—ஞானாசிரியனாக எழுந்தருளிய நின்னால் திருநீறு பூசப் பட்டேன், பூதலரால் உன் அடியான் என்று ஏசப் ப்பட்டேன்—உலகத்தவரால் உன் அடியவன் என்று இகழப்பட்டேன், இனிப்படுகின்றது அமையாது—இனித் துன்பப்படுதல் பொருந்தாது, ஆசைப்பட்டேன்—வீட் டின்பப் பேறு குறித்து அவாவுடையேன், உன் அடியேன் ஆட்பட்டேன்—உன் அடியவனாக ஆளாயினேன் என்பது.

வி-ரை: பேசப்படுதல் — பாராட்டிப் பேசப்படுதல். பின்னர்ப் பூதலரால் என்றதனால், ஈண்டு மெய்யன்பரால் என்பதும், ஏசப்பட்டேன் என்றதனால் பாராட்டப்பட் டேன் என்பதும் பெறப்படும். இம்மை மறுமைகட்கு உரிய புகழ், பொருள், அற முதலியவற்றால் பெரியர் எனப் பிறர் பாராட்டுதல் அடிகளுக்கு உவந்தது அன்று என் பதும், சிவனடியாருள் ஒருவர் என்று பேசப்படுதலும், அப் பேச்சும் உலகத்து உள்ள அரசர், செல்வர் முதலியோ ரால்அன்றி, மெய்யன்பராற் கூறப்படுதலுமே அடிகளுக்கு உவப்பு ஆவன என்பதும் குறிப்பிற் பெறப்படுவனவாம். விருப்பு வெறுப்பு அற்ற நிலையில், ஒன்றை உவத்தலும், ஒன்றை வெறுத்தலும் பொருந்துமோ எனின், உலகியற் பொருள்களுள் நல்லன தீயன குறித்து உண்டாம் விருப்பு வெறுப்புகளைப் பற்றியது அதுவாகலின், ஈண்டுக் கருதத் தக்கதன்று. ஆண்டவன் அருட்கு இடன் ஆதலில் அடிகளுக்கு உண்டாம் மகிழ்ச்சியை, [1] “பூமேலயனொடு

1. திருவாசகம், திருக்கோத்தும்பி 20.

மாலும் புகலரிதென், றேமாறி நிற்க அடியேன் இறுமாக்க" என்பது முதலியவற்றான் அறியலாம்.

ஆண்டவன் குருந்த மரத்து நீழலில் ஞானாசிரியனாக எழுந்தருளி அடிகளை ஆட்கொள்ளுங்கால், திருநீற்றால் அவர் உடலையும், அருள் நோக்கால் அவர் உயிரையும், பாசப் பிணிப்பு ஒழித்துத் தூய்மைப்படுத்தனன் ஆதலின், "திருநீறே பூசப்பட்டேன்" என்றார். திருநீற்றுப் பூச்சை அங்கியிற் குளித்தல் என்று சிவாகமங்கள் கூறும்.

பூதலர் என்பது, ஈண்டு நில வுலகத்துள்ள திருவருட் பண்பு அறியாதாரைக் குறிக்கும். அடிகள் அரசியலில் அமைச்சராக இருந்து, சிறப்பு எய்தியதை விட்டுச் சிவனடியாராய் ஒடுங்கி இருத்தலைக் கண்டு, அவர் எள்ளி நகையாடியதை அடிகள் காட்சி யளவையிற் கண்டவர் ஆதலின், "பூதலரா லுன் அடியானென்று ஏசப்பட்டேன்" என்றார். இறைவனை முன்னிலைப்படுத்து, "உன் அடியான் என்று ஏசப்பட்டேன்" என்றது, தம்மைப் பாதுகாக்கும் உரிமைப் பொறுப்பு அவ் இறைவனுக்கு மிகுதற் பொருட்டாம் என்க. இங்ஙனம் சிவனுக்கு அடியன் ஆயினன் என்று பிறர் இகழ்ந்து உரைத்தது, அடிகளுக்கு அப் பெருமானது அரிய சார்பை வலியுறச் செய்து மகிழ்வித்தது என்பதை, [1] "நாடவர் பழித்துரை பூணதுவாக" என்னும் அடிகள் திருவாக்கானும் உணரலாம். உலகத்தவர் இகழ்ந்து உரைத்ததை வெளிப்படக்கூறி, மெய்யன்பர் பாராட்டுரையைக் குறிப்பிற் பெறவைத்தது, அடிகளின் பெருமையைப் புலப்படுத்துவதாகும். மேலும் இக் கருத்தானே, "ஏசப்பட்டேன்" என்பதற்கு வினை முதலாகப் "பூதலரால்" என்று வெளிப்படக் கூறியபடி, "பேசப்பட்டேன்" என்பதற்கும், "பூசப்பட்டேன்" என்பதற்கும் முறையே வினை முதல்களாகிய "மெய்யன்பரால்" என்பதும், "நின்னால்" என்பதும் வெளிப்படக் கூறாது ஒழிந்தமையும் ஈண்டு நினைக்கத்தக்கது. திருவருள் நாட்டம் உடைய பெரியார், தம்மைப் பிறர் கூறும் பாராட்டுரை

1. திருவாசகம், போற்றித் திருவகவல் 69-70.

களைத் தம் நாவினால் அநுவதித்துக் கூற ஒருப்படார் என்பதும், தம்மைப் பிறர் பழித்து உரைத்தலை அணிகலனாக ஏற்றுக் கொள்ளுவர் என்பதும், தம்மைப் பிறரிடம் அறிவிக்க நேர்ந்த இடத்துச் சிறுமை தோன்றக் கூறுவர் என்பதும் திருத்தொண்டர் புராண முதலிய மெய்யன்பர் வரலாற்று நிகழ்ச்சிகளில் வைத்து அறியப்படுவனவாம்.

இத் திருப்பாட்டில், அடிகள் தாம் பெற்ற பேறுகளாகக் குறிப்பிட்டவை மூன்று. திருநீற்றினால் தூய்மை பெற்றதும், மெய்யன்பரால் சிவனடியாருள் ஒருவராகப் பேசப்பட்டதும், உலகத்தாரால் சிவனடியான் என ஏசப்பட்டதும் ஆம். இவற்றுள், உலகத்தவர் வெறுப்பு இன்றேல், ஒரோவழி உலகப்பற்றிற்கு ஆளாகவும் நேரலாம். ஆதலின், அதுவும் அடிகளுக்கு உவப்புச் செய்யும் பேறுகளில் ஒன்று ஆயிற்று என்க. படுகின்றது என்பது தொழிற் பெயர் அளவில் நின்றது. படுதல்.— துன்பப் படுதல். ஆண்டவனாலும் அவன் அடியாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு, உலகத்தவரால் வெறுக்கப் பட்டபடியால், இனிப் பிறப்பு இறப்புக்களிற்பட்டுத் துன்பம் உறுதல் பொருந்தாது என்பார், "இனிப்படுகின்றதமையாது" என்றும், மேற் குறிப்பிட்ட ஆதரவுகளைக் கருவியாகக் கொண்டு வீடுபெற விரும்புகின்றேன் என்பார், "ஆசைப் பட்டேன்" என்றும் கூறியருளினர்.

முடிவாக, ஆண்டவனே, பொய்க்கு மூலமாக என்னை இருத்தினாய் ஆயினும், வேறு புகல் இல்லாமையால், நின்னையே புகலிடமாக அடைந்து, மீளா அடிமையாக உனக்கே ஆளாயினேன்; என்னை நின் கருணை காரணமாக ஏற்றுக் காத்து அருளவேண்டும் என்பார், "உன் அடியேன் ஆட்பட்டேன்" என்றார். இனி, "ஆட்பட்டேன் உன்னடியேனே" என்பதற்கு, ஆளாயினேன்; எவ்வாற்றானும் உன் அடியவனே, வேறு அல்லேன் என்று கூறுதலுமாம். இப் பொருட்கு ஏகாரத்தைத் தேற்றப் பொருளாகக் கொள்ளல் வேண்டும்.

இதன்கண், "ஆசைப் பட்டேன்" என்று இன்ப நிலையில் தன் வயம் இழந்து கூறியதால், **ஆனந்த பரவசம்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், பேசப்பட்டேன்," "பூசப்பட்டேன்" என்றமையால் **பத்தியும்,** "ஏசப்பட்டேன்" என்றமையால் **வைராக்கியமும்** பெறப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனுதல் அறிக.

83. அடியேன் அல்லேன் கொல்லோ தானெனை
ஆட்கொண் டிலைகொல்லோ
அடியார் ஆனார் எல்லாரும்
வந்துன் தாள்சேர்ந்தார்
செடிசேர் உடலம் இதுநீக்க
மாட்டேன்எங்கள் சிவலோகா
கடியேன் உன்னைக் கண்ணாரக்
காணுமாறு காணேனே.

**க-ரை:** ஆண்டவனை நோக்கி, வீட்டின்பத்திற்கு ஆசைப்படலானேன் என்று முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், இத் திருப்பாட்டில் அடியார் எல்லாரும் நின் திருவடி அடைய, என் அவா நிறைவேறாமல் இருத்தற்குக் காரணம் என் அடிமைப் பிழையா? அன்றி நீ ஆட்கொள்ள வில்லையா என்றும், நின்னைக் கண் குளிர மீண்டுங் காணும் நெறி அறியாமல் இருக்கின்றேனே என்றும் இரங்குகின்றார்.

**ப-ரை:** எங்கள் சிவலோகா—எங்கள் சிவலோக நாதனே, அடியார் ஆனார் எல்லாரும் வந்து உன் தாள் சேர்ந்தார்—மெய்யடியார் ஆயினார் அனைவரும் நின்னை அணுகி நின் திருவடி நிழலை அடைந்தனர், கடியேன்—கடியவனாகிய யான், செடி சேர் உடலம் இது நீக்க மாட்டேன்—துன்பம் தரும் ஊனுடலாகிய இதனை ஒழிக்கவுமாட்டேன், உன்னைக் கண் ஆரக் காணும் ஆறும் காணேன்— இன்பந்தரும் நின்னைக் கண் நிறையக் காணும் நெறியையும் அறிந்திலேன், அடியேன் அல்லேன்

கொல்லோ—(இந் நிகழ்ச்சியை நினையுங்கால்) யான் தான் அடியேன் அல்லேனோ, தான் எனை ஆட்கொண்டிலை கொல்லோ—நீ தான் என்னை ஆட் கொண்டதில்லையோ? (இன்னதென்று அறிந்திலேன்) என்பது.

வி-ரை: மெய்யன்பரின் அழிவில் வாழ்க்கைப் பொருட்டு ஆண்டவன் சிவலோக ஆட்சியைச் சிறப்புரிமையாகக் கொண்டனன் என்பார், "எங்கள் சிவலோகா" என்றார். பின்னர், "வந்துன்றாள் சேர்ந்தார்" என்புழி, வருதற்குச் சிவலோகம் இடனாதல் பற்றியுமாம் என்க. அடியாரானார் என்புழி, ஆக்கச் சொல், சரியை முதலிய தவங்களால் ஆண்டவன் அருள் பெறுதற்கு உரிய தகுதி படைத்தவர் என்பதைக் குறிக்கும். எல்லாரும் என்றதனால், தம்மைப் போலத் தனிமைப்பட்டார் பிறர் யாரும் இலர் என்பதைப் புலப் படுத்த வாறும். வந்து சேர்ந்தார் என்பதில், வருதல் சாலோக முதலிய பத முத்திகளையும், சேர்தல் இரண்டறக் கலத்தலையும் புலப்படுப்பனவாம்.

கடியேன்—கடுமையான இயல்புடையேன்; நெஞ்சம் குழையாதவன் என்னும் பொருட்டு. [1] "கள்வன் கடியன் கலதி" என்று பிறிதோரிடத்தும் அடிகள் தம்மை இங்ஙனங் கூறியிருத்தல் அறிக.

செடி—பாவமும் அதன் பயனாகிய துன்பமுமாம். இது என்பது, இறைவன் திருவடிப் பேற்றிற்குத் தடையாகவுள்ளது என்னும் பொருட்டு. தடையாக உள்ள பாவ யாக்கையை ஒழித்தற்கு உரிய உபாயமும் அறிந்திலேன் என்பது கருத்து. யாக்கையை ஒழித்தற்குத் துணிந்திலேன் ஆயினும், அதனோடு கூடிய நிலையில் முன் ஞானாசிரியனாக எழுந்தருளிக் காட்சியளித்த திருக்கோலத்தை மீண்டும் கண் நிறையக் காண்டற்கு உரிய நெறியையும் அறிந்திலேன் என்பார், "உன்னைக் கண்ணாரக் காணும் ஆறு காணேன்" என்றார். ஆர்தல்—நிறைதல். நீக்கவும் காணுமாறும் என்னும் இடங்களில், உம்மைகள்

1. திருவாசகம், திருக்கோத்தும்பி 19.

தொக்கு நின்றன. இனி, "கண்ணாரக் காணுமாறு உன்னைக் காணேன்" எனக் கொண்டு, ஆண்டவனே, நின் அருள் நிறைந்த திருவிழிகளால் அடியேனைக் கடைக் கணிக்குமாறு யான் தரிசித்திலேன் எனக் கோடலுமாம். [1] "தொண்டனேன் நினையுமா நினையே" என்றபடி, மெய் யன்பர் காண்டற்கு இறையருள் நோக்கம் முதற்கண் நிகழ வேண்டும் என்பதும், அவ்வருள் நோக்கம் பெறுதற்கு உரிய தவத்தை உயிர்கள்மேற்கொள்ளவேண்டும் என்பதும் கருத்து. நீ என்னைக் காணும்படி யான் உன்னைக் காணேன் என்றது, நின் அருட் பார்வைக்கு இலக்காதற்கு உரிய தவஞ் செய்திலேன் என்பது பற்றியாம். இக் கருத்திற்கு ஏற்ப, அத்தொடர்க்குப் பொருள் கொள்ளுங்கால், கண் ஆர என்பதற்குக் கண்ணோட்டம் பொருந்த எனவும், காணுமாறு என்பதற்கு, நீ யென்னைக் காணும்படி எனவும் பொருள் கொள்ளல் வேண்டும்.

இத் திருப்பாட்டின் திரண்ட கருத்தாவது:— ஆண்டவனே, நின் அடியாராகிய மெய்யன்பர் அனைவரும் நின்னுடன் சிவலோகம் வந்து, நின் திருவடியில் இயைந்து இன்புறுகின்றனர்; கொடியவனுகிய யான் அங்ஙனம் வந்து எய்தும் பேறு இல்லாமையோடு, பாவப் பயனுகிய துன்பம் தரும் இவ்வுடற் சுமையையும் ஒழிக்கமாட்டேன் ஆயினேன். மேலும் இவ்வுடலைப் பற்றி நின்ற நிலையிலாவது நின்னைக் கண்கள் குளிரக் காணும் பேருவது பெற்றேனே எனின், அதுவும் இன்று. இந் நிகழ்ச்சிகளை எல்லாம் நன்கு சூழ்ந்து நோக்குங்கால், யான் தான் நினக்கு அடியனுயது உண்மையில்லையோ? அன்றி நீ தான் என்னை ஆட்கொண்டிலையோ? இன்னது என்று துணிந்திலேன், என் செய்வேன் என்பதாம். இக்குறிப்புத் தோன்றவே,

> [2] "கனவில் வருங் காட்சி யெனக் கருணை மூர்த்தி
> காட்டி மறைத்தலும் அன்பர் கலக்கத் தாழ்ந்து
> நனவு கொல்லோ கனவு கொல்லோ"

1. திருவிசைப்பா, "மறைகளும் அமரர்." 2 பரஞ்சோதி, திருவிளையாடற் புராணம், வாதவூரடிகளுக்கு உபதேசித்தது, செ. 54.

என்று அடிகள் எண்ணுவாராயினர் என்பர் பரஞ்சோதி முனிவர். உலகியலில் ஒரு செல்வனை நோக்கிப் பரிசு பெறாத புலவன் வருந்திப் பாடுங்கால், யான் பரிசு பெறாமைக்குக் காரணம் என்பால் புலமைத் தகுதி யில்லாமையோ? அன்றி நின்பால் என்னை ஆதரிக்கும் தகுதியில்லாமையோ? என்று கூறலாம். ஆண்டவனை நோக்கி, அருள் பெறாத நிலையில், ஓர் அன்பன் அங்ஙனம் பாடுங்கால், நின் அருள் பெறாமைக்குக் காரணம் என்பால் தொண்டன் ஆம் தன்மை இல்லாமையா என்று கூறலாம். நின்பால் என்னை ஆட்கொள்ளும் தகுதி இல்லையா என்று கூறுதல் கடவுட் பெருமைக்குப் பொருந்துவது அன்று. அதனாலே, அடிகள், யான் உண்மை அடியேன் அல்லேனோ? அன்றி நீ என்னை ஆட்கொண்டிலையோ? என்று இறைவன் பெருமைக்குச் சிறிதும் குறை நேராவாறு கூறியருளிய நயம் நினைந்து இன்புறத்தக்கது.

இதன்கண், "அடியாரானாரெல்லாரும் வந்துன்றாள் சேர்ந்தார்" என்றதனால், அவர் எய்திய ஆனந்தம் எனக்கு இல்லையே என்று கூறப் புகுந்த அடிகள், தம்மை, "அடியேனல்லேன் கொல்லோ" எனவும், இறைவனை நோக்கி, "ஆட்கொண்டிலை கொல்லோ" எனவும் தன் வயம் இழந்து கூறியிருத்தலின், ஆனந்த பரவசம் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

84. காணு மாறு காணேன் உன்னை
அந்நாட் கண்டேனும்
பாணே பேசி யென்றன்னைப்
படுத்ததென்ன பரஞ்சோதி
ஆணே பெண்ணே ஆரமுதே
அத்தாசெத்தே போயினேன்
ஏணாண் இல்லா நாயினேன்
என்கொண் டெழுகேன் எம்மானே.

—கரை: முன்னைத் திருப்பாட்டில், மற்றை அடியாரைப் போல ஆண்டவன் திருவடியை அடையப் பெறாமைக்குக்

காரணம், யான்தான் உண்மை அடியேன் அல்லேனே, அன்றி நீ தான் ஆட்கொள்ள வில்லையோ என்று கூறிய அடிகள், இத்திருப் பாட்டில், நீ என்னை அடிமை கொண்டது உண்மையாயினும், அந்நாளில் யான் நின்னைப் புகழ்ந்து பாராட்டியவெல்லாம் இச்சகப் பேச்சாக முடிந்து, பயன் விளைவிக்க வில்லைபோலும்; அங்ஙனமாயின் எங்ஙனம் உய்வேன் என்று இரங்குகின்றார்.

ப—ரை: பரம் சோதி ஆணே பெண்ணே ஆர்அமுதே அத்தா எம்மானே—மேலான ஒளிப் பிழம்பாக வுள்ளவனே ஆணாகவும் பெண்ணாகவும் நிறைந்த அமுதமாகவும் உள்ளவனே தந்தையே எங்கள் தலைவனே, காணும் ஆறு காணேன்—இப்பொழுது உன்னைக் காணும் நெறி யறியாதவனாகிய யான், உன்னை அந்நாள் கண்டேனும்—நின்னை அக்காலத்திற் கண்டுவைத்தும், பாணே பேசி என் தன்னைப் படுத்தது என்ன—இச்சகமே பேசி எனக்கு யான் செய்துகொண்ட நலம் யாது, ஏண் நாண் இல்லா நாயினேன்—ஆற்றலும் நாணமும் இல்லாத நாயனையேன், செத்தே போயினேன்—பயனின்றி இறந்துபோம் நிலையிலுள்ளேன், என் கொண்டு எழுகேன்—இனி எதனைப் பற்றுக் கோடாகக் கொண்டு உய்யக் கடவேன்? என்பது.

வி—ரை: இத்திருப்பாட்டில் இறைவனைப்பற்றி விளியேற்ற பெயர்கள் ஆறு ஆகும். முதலில் இறைவன் எங்கும் நிறை பொருளாகவுள்ள இயல்பைக் குறிக் கொண்டு, "பரஞ்சோதி" என்றார். அவயவப் பகுப்பு இல்லாத அருவ நிலையில் ஒளிப் பிழம்பாகப் பெரியோர் கூறுவர். [1] "ஒளிவளர் விளக்கே உலப்பிலா வொன்றே" எனத் திருவிசைப்பாவும், [2] "கற்பனை கடந்த சோதி கருணையே யுருவமாகி" எனத் திருத்தொண்டர் புராணமும் கூறுதல் அறிக. பூதங்களுள் ஒன்றாகிய தீயின் ஒளியை விலக்குதற்குப் "பரம்" என்ற அடை புணர்க்கப் பட்டதென்க.

---

1. திருவிசைப்பா. 2. பெரிய புராணம், தில்லைவாழந்தணர் புராணம்—2.

எப்பொருட்கும் அப்பாலாய்த் தத்துவங் கடந்த நிலையில் அருவமாகவுள்ள பரம்பொருளாகிய இறைவன் உயிர்களின் நலங்குறித்துத் திருவுருக் கொண்டு வெளிப்படுங்கால், ஆண் உருவாகப் பெண்ணுருவாக அவ்விரண்டும் இயைந்த உருவாகக் காட்சியளிப்பன் என்பது குறித்து, "ஆணே பெண்ணே" என்றார். ஆணும் பெண்ணும் இயைந்த வடிவமாகிய உமையொரு கூறன் என்பதை, "ஆணே பெண்ணே" என்பதனை இரட்டித்துக் கூறுமுகமாக அமைத்துக் கொள்ளல் வேண்டும். இங்ஙனம் காட்சி யளித்து ஆட்கொள்ளப்பட்ட மெய்யன்பர்க்கு உலப்பிலா இன்பம் அளிக்கும் இயல்பு பற்றி, "ஆரமுதே" என்றார்.

இறைவனுடைய அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூன்று நிலைகளும், முறையே, "பரஞ்சோதி", "ஆணே பெண்ணே", "ஆரமுதே" என்பவற்றாற் புலனாதலும் அறிக. அமுதம், கை கான் முதலிய உறுப்புக்களின்மையால் அருவத் தன்மையும், பொறிகளால் நுகரப்படும் இயல்புடைமையால் உருவத் தன்மையும் உடையதாய், அருவுருவ நிலையில் எண்ணப்பட்ட தென்க. அருவ நிலைக்குக் கூறிய சோதியும் கட்புலனால் பற்றப்படும் இயல்பினதேயெனின், பூத வொளியன்று என முன்னரே கூறப்பட்டமையால், அத்தடைக்கு இடன் இன்று என்க.

இத்துணைப் பெருமைகளும் உடைய அப் பெருமான், தமக்குச் சிறப்பு முறையில் ஞானாசிரியனாகவும், தந்தையாகவும் உள்ளான் என்பது தோன்ற, "அத்தா" எனவும், அடிமை கொண்டமையால் தமக்கும் மற்றை மெய்யன்பர்க்கும் தலைவனாதல் பற்றி, "எம்மானே" எனவும் கூறுவாராயினர்.

"காணுமாறு காணேன்" என்பதற்கு, முன்னைத் திருப்பாட்டில் உரைத்தாங்குப் பிறிதொரு பொருளும் உரைத்துக் கொள்க. "காணேன்" என்பதை வினையாலணையும் பெயராகவும், "கண்டேன்" என்பதை முற்றெச்சமாகவும் கொள்ளல் வேண்டும். காணேனாகிய யான்,

கண்டும் பேசி யென்னைப் படுத்த தென்ன என முடிக்க "அந்நாள்" என்பது குருந்த மர நீழலில் இறைவன் ஞானு சிரியனுக எழுந்தருளிய காலத்தைக் குறிக்கும்.

நேரில் நின் திருக்கோலத்தைத் தரிசித்தும், யான் புகழ்ந்து பாராட்டிய எல்லாம் உள்ளன்போடு நிகழாமல் இச்சக மொழி ஆயின என்பார், "பாணே பேசி" என்ருர். பாண்—இச்சகம்; முகமன். என்தன்னை என்புழித் தன் அசைச் சொல். இரண்டனுருபை நான்காவதாக்கி, எனக்குச் செய்துகொண்ட நலம்தான் என்னவோ என் பார், "படுத்ததென்ன" என்ருர். படுத்தல்—செய்தல். என்ன என்னும் வினு மொழியால், படுத்தது நலம் எனக் கொள்ளப்பட்டது. அடிகள் ஆண்டவனைப் பண்டு கண் டதுபோல் மீண்டும் காணப் பெருமையால், கண்ட காலத் துப் பாராட்டிப் பேசியவெல்லாம் பயன் விளைக்கவில்லை எனக்கொண்டு, அவ்வுரைகள் உண்மையாக இல்லாமல் உபசாரமாயினவோ என ஐயுறுவார் ஆயினர் என்பது கருத்து.

திருவருட் பேற்றிற்கு உரிய தவ வன்மையும், காண் டற்கு அரிய பொருளைக் கண்டும், பயன் பெருமல் அடியார் குழுவில் எண்ணப்பட்டமை குறித்து நாணமும் மேற் கொள்ள வேண்டியனவாகவும், கொள்ளாமையால், "ஏண் நாண் இல்லா நாயினேன்" என்ருர். ஏண்—வலிமை. இனிப் பிறவாமைக்கு உரிய திருவருட் பதிவு இல்லாமை யால், இவ்வுடல் பயன் இன்றி இறந்து ஒழியும் நிலைமையில் உள்ளது என்பார், தெளிவு பற்றி இறந்தகால வாய்பாட் டால், "செத்தே போயினேன்" என்ருர்.

"ஆண்டவனே, நின்னைக் காணும் நெறியும் அறிந்தி லேன்; முன் கண்ட காலத்துப் பாராட்டியதும் முகம னுகப் பயன் செய்திலது; தவ வன்மையும் இல்லாதவனுய் வறிதே இறந்துபோம் நிலையில் உள்ளேன். இந்நிலையில் எனக்கு ஆதரவாக மேற்கொள்ளத் தக்கது யாதுளது? இனி எவ்வாறு உய்வேன்" என்று அடிகள் இரங்குவாராய், முடிவில், "என் கொண்டெழுகேன்" என்ருர்.

இதன்கண், இறைவனை, "ஆரமுதே" என விளித்து, "உன்னைக் காணுமாறு காணேன்" என்றமையால், அமிர்த வடிவாகவுள்ள இறைவனை, நெறி அறிந்து இயைதலே இன்பம் என்பது தெளிந்தும், அதனைப் பெருமையில் வைத்து, "பாணே பேசிப் படுத்ததென்ன" என்று தன் வயம் இழந்து கூறியமையால், **ஆனந்த பரவசம்** என்னும் பதிகம் முதலிய பொருள் புலனாதல் அறிக.

85. மானேர் நோக்கி யுடையாள்பங்கா
மறையீ றறியா மறையோனே
தேனே அமுதே சிந்தைக்கரியாய்
சிறியேன் பிழைபொறுக்குங்
கோனே சிறிதே கொடுமைபறைந்தேன்
சிவமா நகர்குறுகப்
போனார் அடியார் யானும்பொய்யும்
புறமே போந்தோமே.

**க-ரை :** முன்னைத் திருப்பாட்டில், 'ஆண்டவனே, அந்நாளில் நின்னைக்கண்டு பாராட்டியதால் யான் பெற்ற பயன் என்னவோ எனக் கூறிய அடிகள், அங்ஙனங் கூறியது நின் அருள் வண்மைக்குத் தகாத கடுஞ் சொல்லாகும்; யான் புறம்பானது பற்றி அவ்வாறு கூறலானேன்' பிழை பொறுக்கும் பெருமை நின் கண்ணதே' என இத் திருப்பாட்டில் விண்ணப்பம் செய்து கொள்ளுகின்றார்.

**ப-ரை:** மான் நேர் நோக்கி உடையாள் பங்கா—மான் விழி போன்ற விழிகளையுடையாளாகிய எம்மையுடைய அம்மையை ஒரு கூற்றிலுடையவனே, மறை ஈறு அறியா மறையோனே—மறைகளும் மறை முடிவுகளும் உணர முடியாத மறை பொருளாக வுள்ளவனே, தேனே அமுதே—, சிந்தைக்கு அரியாய்—மனத்திற்கு எட்டாதவனே, சிறியேன் பிழை பொறுக்கும் கோனே—சிறுமையுடையேனாகிய என் குற்றங்களைப் பொறுத்தருளும் பெரியோனே, அடியார் சிவமாநகர் குறுகப் போனார்—

அடியார் எல்லோரும் பெருமை மிக்க நின் சிவபுரம் அணுகப் போயினர், யானும் பொய்யும் புறமே போந்தோம்—யானும் என் பொய்யும் புறம்பாகச் சென்றோம், சிறிது கொடுமை பறைந்தேன்—அதனாற் சிறிது கடுஞ்சொற் கூறலாயினேன் (ஆதலாற் பொறுத் தருள வேண்டும்) என்பது.

வி-ரை: "மான் நேர் நோக்கி" என்றதனால் தெய்வ இள நலமும், 'உடையாள்' என்றதனால் தாய்மையும் பெறப்படும். உடையாள்—உலகம் எல்லாம் தனக்கு உடைமையாகப் பெற்றவள். இறைவனையும், இறைவி யையும் உடையான் எனவும் உடையாள் எனவும் அடிகள் கூறுவர். அருள் வடிவினள் ஆகிய அன்னையை ஒரு கூற்றிலுடையவன் என்றது, அருளாளனாய் அன்பர் காட்சிக்கு எளியனாவன் என்பது குறித்தாம். மறையீறு என்பது உம்மைத் தொகை. மறை, கன்மப் பகுதியையும், அதன் ஈறு ஞானப் பகுதியையும் விளக்குவனவாம். மறைகளாலும் அதன் முடிவுகளாலும் அறியப் படாமையால், மறை பொருள் ஆயினான் என்பது. 1 "நூலுணர் வுணரா நுண்ணியோன்" என்பதும் அடிகள் அருண்மொழி. நுண்ணியன் என்பது பற்றியே ஈண்டு மறையோன் என்றனர். கன்ம யோகம், ஞான யோகங்களால் இறைவன் அறியப்படுபவனாகவும், அவற்றை உணர்த்தும் மறையீறுகளால் அறியப்படாதவன் என்று ஈண்டுக் கூறியது எங்ஙனம் பொருந்தும் எனின், மறையும் அதன் ஈறும் முறையே கன்ம ஞானங்களை உணர்த்துவனவேனும், அவை நூல் உணர்வாகிய அபர ஞானமாக முடிதலின், அவற்றால் அறியப்படாதவன் என்பது தெளிவாம் என்க. 2 "மறைத்திறம் நோக்கி வருந்தினர்க் கொளித்தும்" என்பதும் காண்க.

தன்னை அடைந்தார்க்கு இனிமைச் சுவை பயந்து நிற்றலின், இறைவனை, "தேனே அமுதே" என்றனர்.

1. திருவாசகம், திருவண்டப் பகுதி, அடி 49.
2. திருவாசகம், திருவண்டப் பகுதி, அடி 130.

அமுதம்—தேவர் உணவு. இவ்விரண்டனுள் ஒன்று கூறிய அளவில் அமையுமே எனின், பெறுதற்கு எளிமையும் அருமையும் பற்றி இரண்டு கூறப்பட்டன என்க. அம்மையப்பனாக மெய்யடியார்க்கு எளிவந்து இன்புறுத்தலின், "தேனே" எனவும், மறைத்திறம் நோக்கி வருந்தினர்க்கு நுண்ணியனாய், அரிய பொருளாக இருத்தலின், "அமுதே" எனவும் கூறினர். நூலுணர்வுக்கு அரியன் ஆயினும், அவ்வுணர்வு, அநுபவ நிலைக்கு ஆகுங்கால், பேரின்புறுத்த வல்லன் என்பது குறித்து, "அமுதே" என்றது பொருத்தமே. [1] "மாற்றம் மனங் கழிய நின்ற மறையோன்" என்னும் இறை இலக்கணத்துள், மாற்றங்கழிய நின்றமை, "மறையீறறியா மறையோனே" என்பதனாலும், மனங்கழிய நின்றமை, "சிந்தைக் கரியாய்" என்பதனாலும் பெறப்பட்டவாறு அறிக.

சிறுமை, பெருமை ஆகிய இரண்டு குணங்களும் முறையே குற்றஞ் செய்தற்கும், அதனைப் பொறுத்தற்கும் ஏதுவாகும் ஆதலின், சிறியேனாகிய எனக்குப் பிழை செய்தலும், பெரியோனாகிய நினக்கு அதனைப் பொறுத்தலும் இயல்பாம் என்பார், "சிறியேன் பிழை பொறுக்குங்கோனே" என்றார். கோன்—பெருமைக் குணமுடையோன். [2] "வெறுப்பனவே செய்யும் என் சிறுமையை நின் பெருமையினாற் பொறுப்பவனே" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதுங் காண்க. [3] "பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன் பிழைத்தக்கால், பழியதனைப் பாராதே படலம் என்கண் மறைப்பித்தாய்" என்று தம்பிரான் தோழர் கூறியதும் ஈண்டு நினைக்கத்தக்கது.

இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளித் தமக்கு உபதேசித்து மறைந்த பின், அப் பெருமான் கட்டளைப்படி, திருப்பெருந்துறையில் உள்ள ஒரு பொய்கையில் ஒளிப் பிழம்பு

---

1. திருவாசகம், சிவபுராணம், அடி 45. 2. திருவாசகம், அடைக்கலப் பத்து, செ. 2. 3. சுந்தர மூர்த்திகள் தேவாரம்.

காணப்பட்டதாக, அதன்கண் அடியார் பலர் மூழ்கி இறையருளிற் கலந்த நிகழ்ச்சியை அடிகள் கண்கூடாகக் கண்டவராதலின், "சிவமாநகர் குறுகப் போனாரடியார்" எனவும், ஆண்டவன் உலகத்தவர் நலங்குறித்து அடிகளைச் சிலகாலம் நில வுலகத்திருக்கப் பணித்தமையால், "யானும் பொய்யும் புறமே போந்தோமே" எனவும் கூறினர். அடிகளை இருக்கப் பணித்தது ஆண்டவன் கட்டளையாயினும், 1 "அருளாரமுதப் பெருங்கடல்வாய் அடியார் எல்லாம் புக்கழுந்த, இருளார் ஆக்கை யிது பொறுத்தே யெய்த்துக் கிடந்தேன்" என்றபடி, மெய்யடியார்க்குக் கிடைத்த பேறு தமக்கு அப்பொழுதே கிடையாமையால் உண்டாகிய வருத்தம் பொறாது, தம்மைப் பொய்யோடு சேர்த்துப் புறம்பானோம் என்று கூறினர். சிவமாநகர் மெய்ம்மையின் இருப்பிடன் ஆகும். ஆதலின், பொய்மைக்கு அங்கு இடனின்று. பொய்க்கு வித்தாக ஆண்டவன் தம்மை வைத்ததாக அடிகள் கூறியுள்ளார் ஆதலின், பொய், சிவமாநகருக்குப் புறம்பாகுங்கால், அதனோடு பிணைக்கப்பட்டுத் தாமும் புறம்பானதாகக் கூறியுள்ளார்.

இங்ஙனம் அடியாரெல்லாம் சிவமாநகர் அணுகப் போய் இன்புறவும், தாம் பொய்யோடு பிணைக்கப்பட்டுப் புறம்பாகித் துன்புறவும் நேர்ந்தமைபற்றி உண்டாகிய வருத்தம் பொறாது, தம்மைப் பாசப்பிணிப்பு ஒழித்து ஆட்கொண்டருளிய அருள் வள்ளலாகிய ஆண்டவன் பேருதவியையும் எண்ணாமல், அப் பெருமான் முன்னிலையில், "பாணே பேசி யென்றன்னைப் படுத்ததென்ன" என்பது முதலிய கடுஞ் சொற்களைப் பேச நேர்ந்ததென்று தெரிவித்துப் பொறுக்க வேண்டுவாராய், "சிறிதே கொடுமை பறைந்தேன்" என்றார். கொடுமை—கடுஞ்சொல். பறைதல்—பேசுதல். 2 "கேள்வியினும் வினையினும் கடியவாய சொல்லைக் கடுஞ்சொல்" என்பர் பரிமேலழகர். ஈண்டு அடிகள் கூறியதாகக் குறித்த கடுஞ்சொல், கேள்வியளவில் கடுமை யுடையதே யன்றிச் செயற்கடுமை இன்று.

1. திருவாசகம், பிரார்த்தனைப் பத்து 8, 2. திருக்குறள் 386, உரை.

இது கருதியே, "சிறிதே கொடுமை பறைந்தேன்" என்று குறிப்பிடுவாராயினர். ஆதலிற் பொறுத்தருள வேண்டு மென்பது குறிப்பெச்சமாக வருவித்துரைத்துக் கொள்ளல் வேண்டும். அடிகள், ஆண்டவன் முன்னிலையில் ஒரோவ மயம் இங்ஙனம் சொல்லளவில் வெறுப்புத் தோன்றக் கூறுதல், தந்தையின் முன்னிலையில் அறியாப் பருவத்து இளங்குழவி பேசுதல் போல்வதாகும் என்க. அடிகள் அருளிச் செய்த திருப்பாட்டுக்களில், முன்னும் பின்னும் இங்ஙனம் வருவனவற்றிற் கெல்லாம் இஃதொக்கும்.

இதன்கண், "தேனே யமுதே" என்றதனால், இறைவன் ஆனந்த வடிவினன் என்பதும், "சிவமாநகர் குறுகப் போனாரடியார்" என்றதனால், அதுவே பெறத்தக்கது என்பதும், அப்பேறின்மை குறித்து, "சிறிதே கொடுமை பறைந்தேன்" என்றதனால், தன்வயம் இழந்த நிலையும் பெறப்படுதலின், ஆனந்த பரவசம் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

86. புறமே போந்தோம் பொய்யும் யானும் மெய்யன்பு
பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன்யான்
அறவே நின்னைச் சேர்ந்த அடியார்மற்றொன் றறியாதார்
சிறவே செய்து வழிவந்து சிவனேநின்றாள் சேர்ந்தாரே.

க-ரை: அடிகள் ஆண்டவன் பெருமைக்குப் பொருந்தாத முறையிற் சிறிது பிழைசெய்ய நேர்ந்ததற்கு முன்னைத் திருப்பாட்டிற் கூறப்பட்ட ஏதுவை, மீண்டும் இத் திருப்பாட்டில் விளக்கிக் கூறுகின்றார்.

ப-ரை: சிவனே—, நின்னையே அறச்சேர்ந்த அடியார் — உன்னையே முழுதும் உரிமையாகச் சார்ந்த அடியார், மற்று ஒன்று அறியாதார்—பிறிதொன்றனையும் அறியாதவராய், சிறவு செய்து வழி வந்து நின்தாள் சேர்ந்தார் —

சிறந்த செயல்களைச் செய்து செந்நெறிக்கட் போந்து நின் திருவடிக்கண் இயைந்தனர், யானும் பொய்யும் புறமே போந்தோம் — யானும் பொய்மையும் புறம்பானோம், யான்—அவ்வளவினன்றி யானே, மெய்யன்பு பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன்—மெய்மையாகிய அன்பைப் பெறுதற்கே வன்மை யுடையேன் அல்லாத தன்மையையும் பெற்றுளேன் (என் செய்வல்! காத்தருள்க) என்பது.

வி-ரை: சார்ந்தாரை இன்புறுத்தும் மங்கல வுருவினன் என்னும் பொருள் தோன்ற, 'சிவனே' என்றனர். அறவே என்புழி, ஏகாரத்தைப் பிரித்து, நின்னை என் பதனோடு இயைத்துத் தேற்றப் பொருட்டாகக் கொள்க. அறவென்னுஞ் சொல், முழுதும் என்னும் பொருளுடையதாகும். தம் உடல், பொருள், ஆவி எல்லாம் ஆண்டவனுக்கே உரிமையாக்கிய அடியவர் என்பார், "அறவே நின்னைச் சேர்ந்த அடியார்" என்றார். நின்னைச் சேர்ந்த என்றதனால், பண்டைக் குலம் ஒழிந்து, தொண்டக் குலம் உடையராயினர் என்பது போதரும்.

உலகத்தில் தக்கான் ஒருவன் ஆதரவைப் பற்றி நிற்கும் மற்றொருவன், அந் நிலையிலே, அவ்வாதரவினுஞ் சிறந்த பயன் பெறுதற்குரிய பிறிதோர் ஆதரவை நாடுதலும் இயல்பாம். அம் முறையில், இறைவனையே எல்லா வகையிலும் உரிமையாகப் பெற்ற அடியார், அந்நிலையில் பிறிதொன்றைப் பற்றுக்கோடாக எண்ணும் இயல்பினரோ என்பார்க்கு விடையாக, "மற்றொன்றறியாதார்" என்றார். உலகியலில் ஒன்றை நோக்கப் பிறிதொன்று உயர்வாக அன்றித் தாழ்வாகக் காணப்படலாம். எல்லாம் வல்ல ஆண்டவனை நோக்கப் பிறிதொரு பொருள் சிறந்ததாக இல்லாமையாலும், அப் பெருமானையே முற்றிலும் உரிமையான பற்றுக் கோடாகப் பெற்றமையாலும், மற்றொன்று அறியாதார் ஆயினர் என்பது.

சிறவு—சிறப்பு. பிறப்பு இறப்புக்களை, பிறவு இறவு என்றாற் போலச் சிறப்பைச் சிறவென்றார். [1] "பிறவினை

1. தேவாரம் 447—1.

டிறவுமானன்" என்பது தமிழ் மறை. சிறந்த செயல் களாவன, சரியை முதலிய தவங்கள் ஆகும். வழி, ஞான நெறியும் அன்பு நெறியுமாகிய செந்நெறிகளாம். ஞானத்தால் தெளிதலும், மெய்யன்பினால் இறைவனோடு கலத்தலும் உளவாமென்பது பெரியார் அநுபவமாகும். சரியை, கிரியை, யோக மூன்றும் ஞானத்தைப் பெறு தற்குச் சாதனமாகிய தவங்கள் ஆம் என்பதும், ஞானம், இறைவனைத் தெளிதற்கு ஏதுவாகிய செந்நெறி என்பதும், மெய்யன்பு, இறைவனோடு இரண்டறக் கலத்தற்கு உரிய நன்னெறி என்பதும் நுண்ணிதின் ஆராய்வார்க்குப் புலனும். ஆகவே, அந் நெறிக்கட் சென்றால், சேரும் இடன் இறைவன் திருவடியாம் என்பார், "நின்றாள் சேர்ந்தார்" என்றார்.

மெய்யடியார் அங்ஙனம் திருவடிக்கண் இயைந் தனராக, யானும் என் பொய்யும் சிறிதும் அணுகப் பெறாமல் புறம்பாயினேம் என்றார். பொய்மையைக் குணப் பொருளாகவும், அதனையுடைய தம்மைக் குணிப் பொருளாகவும் கொண்டு, "பொய்யும் யானும்" என்றார். குண குணிகள் என்பன, பண்பும், பண்புடைப் பொருளு மாகிய பண்பியுமாம். பண்பும் பண்பியும் பிரிக்கப் படாதனவாயினும், பண்புக்கு ஆற்றல் மிக்க இடத்து, அதனையுடைய பண்பியைப் பண்பாகத் தனிப்படுத்துக் கூறுதல் கவி மரபு. எடுத்துக் காட்டாக ஒன்று கூறுதும். அன்பு குணமாக, அதனையுடைய அன்பன் குணிப் பொருள் ஆவன். அவ்வன்பனிடத்துள்ள அன்பாகிய குணம் சிறந்திருக்குமாயின், என் அன்பே என்று அழைத்தல் உண்டு. [1] "நாணனும் அன்பு முன்பு நளிர் வரையேற" என்று சேக்கிழார் கூறியதும் ஈண்டு நினைக்கத்தக்கது. இவ் வுண்மை கருதியே, அடிகள் குணிப் பொருளாகிய தம்மினும், தம்மிடத்துள்ள குணமாகிய பொய்மை வலியுடையது எனக்கொண்டு, "பொய்யும் யானும்" என்று பிரித்துக் கூறுவாராயினர்.

1. பெரிய புராணம், கண்ணப்பர், செ. 108.

"மெய்யன்பு பெறவே" என்புழி, ஏகாரம் சாதன சாத்தியப் பேறுகள் இரண்டனுள், சாதனப்பேறு பிரித்துக் கூறப்பட்டமையின், பிரிநிலைப் பொருட்டாதல் அறிக. வல்லேன் அல்லா வண்ணம்—வல்லுநன் அல்லாத தன்மை. வண்ணமும் என்புழி, உம்மை தொக்கு நின்றது. பொய்யும் யானும் புறம் போந்த தன்றிக் குண குணிகளாகிய அவ் விரண்டனுள் குணியாகிய யானே, சாத்தியமாகிய திருவடி இயைபேயன்றிச் சாதன மாகிய மெய்யன்பைப் பெறுதற்கே தவ வன்மை யில்லாத தன்மையையும் பெற்றுள்ளேன், எங்ஙனம் உய்வேன் என்பார், "மெய்யன்பு பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன்யான்" என்று கூறினர். வண்ணம் —ஒரு குணம் ஆகும். பொய்மையாகிய குணமேயன்றித் தவ வன்மைக்கு உரியதல்லாத தன்மையையும் பெற்றேன் என்பது கருத்து. என் செய்வல், காத்தருள்க என்பன குறிப்பெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன.

இத் திருப்பாட்டின் திரண்ட கருத்தாவது :— ஆண்டவனே, நின்னை முழுதும் உரிமையாகப் பெற்ற மெய்யடியார், பிறிது ஒன்றையும் எண்ணுதவராய்ச் சரியை முதலிய தவச் செயல்களைச் செய்து, நெறி நின்று நின் திருவடி யடைந்தனராக, யானோ பொய்யொடு புறம்பானதன்றிச் சாதனமாகிய மெய்யன்பைப் பெறு தற்கு உரிய தகுதியும் பெருத நிலையில் உள்ளேன். எங்ஙனம் உய்வேன்? காத்தருளல் வேண்டும் என்பதாம்.

இதன்கண், "அடியார் மற்ருென் றறியாதார், சிறவே செய்து வழிவந்து நின்தாள் சேர்ந்தார்" என்ற தனல், இம் முறைப்படி அடைதலே அழிவில் இன்பம் என்பதும், அது பெருமையோடு சாதனமாகிய மெய் யன்பையும் பெற்றிலேன் என்றதனல், அது குறித்துத் தன் வயம் இழத்தலும் பெறப்படுதலின், ஆனந்த பரவசம் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனுதல் அறிக.

87. தாராய் உடையாய் அடியேற் குன்தாள்
இணையன்பு
பேரா வுலகம் புக்கார் அடியார் புறமே
போந்தேன்யான்

ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்தாங்குன் தாள்
இணையன்புக்
காரா அடியேன் அயலே மயல்கொண்
டழுகேனே.

க-ரை: தம் பிழைக்கு ஏதுவாகவுள்ளவற்றை முன்னைத் திருப்பாட்டில் விளக்கிக் கூறிப் பொறுத்தருள வேண்டிய அடிகள், அப்பிழை பொறுத்தலோடு தமக்கு இன்றியமையாது வேண்டிய சாதனத்தை அருளுமாறு இத்திருப் பாட்டில் குறிப்பிட்டு வேண்டுகின்றார்.

ப-ரை: உடையாய்—ஆண்டவனே, அடியார் பேரா உலகம் புக்கார்—மெய்யடியார் மீளா வுலகமாகிய வீட்டு நிலையை எய்தினர், யான் புறமே போந்தேன்—யானே அதற்குப் புறம்பாகிய இடத்தையே அடைந்தேன், ஊர் ஆ மிலைக்கக் குருடு ஆ மிலைத்து ஆங்கு—ஊர்ப்பசுக்கள் கனைக்கக் குருட்டுப் பசுவும் கனைத்ததுபோல, உன் தாள் இணை அன்புக்கு ஆரா அடியேன்—நின் திருவடித் துணைக்கட் செலுத்தும் அன்பு குறித்து அநுபவம் பெறாத அடியேன், அயலே மயல்கொண்டு அழுகேன்—மெய் அடியார்க்குப் புறம்பாக இருந்து ஆசைப்பட்டு அழா நின்றேன், அடியேற்கு உன்தாள் இணை அன்பு தாராய்— ஆதலின் அடியவனாகிய எனக்கு நின் திருவடித் துணை பற்றிய மெய்யன்பைத் தந்தருள்வாயாக என்பது.

வி-ரை: "உடையாய்" என்றது, அடிமை உடைமைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு நின்பாலது என்னும் குறிப்புத் தோன்ற நின்றது. பின்னர், "அன்புக்கு ஆரா அடியேன்" என்று தம்மைக் குறிப்பிட்டமையால், ஈண்டு, அடியார் என்றது, அன்பு அநுபவம் மிக்க மெய் அடியார் எனப் புலப்படுக்கப்பட்டபடியாம். பெயர்தல்— பேர்தல்; மீளல். மீளா வுலகம்—அடைந்தார் திரும்பாமைக்கு ஏதுவாகிய வீட்டு நிலை. வீட்டு நிலையை உலகம் என்றது உபசார வழக்கு. "மீண்டு வாரா வழி," "மறிவறியாச் செல்வம்" என்பனவும் அது. புறம் போந்தார் ஓரோவமயம் உட்புகுதலும் உண்டு. யானே

உட்புகுதற்கு வழியற்றுப் புறத்தே செல்லல் ஆனேன் என்பார், "புறமே போந்தேன்" என்றார். புறமே என்புழி, ஏகாரம் தேற்றப் பொருட்டு. மெய்யடியார் திரும்பா நிலையில் உட்புக்கார் எனவும், யான் உட்புகா நிலையில் புறம் போந்தேன் எனவும் அடிகள் கருதியபடியாம்.

"ஊர் ஆ" என்பது, ஓர் ஊரில் உள்ள பசுக்கூட்டங்களை உணர்த்தும். மிலைத்தல்—கனைத்தல். கன்றைக் கண்டதும் தாய்ப்பசு கனைத்து ஒலித்தல் இயல்பு. கண் தெரியாத பசு, மற்றைப் பசுக்கள் கனைத்து ஒலித்தலைக் கேட்டுத் தானும் ஆங்குக் கன்றைக் கண்டதாகக் கனைத்தல் போல என்பதாம். "மிலைத்திங்கு" என்னும் பாடம், எச்சத்திற்கு முடிபின்மையால் சிறந்ததன்று. இவ்வுவமை, மெய்யன்பு மிக்க அடியார் பேரா வுலகம் புக்கார் எனக் கொண்டு, அத்தகைய அன்பில்லாத யானும் அங்ஙனம் புகுதற்கு ஆசைப்பட்டுப் புறம்பாக நின்று அழா நின்றேன் என்னும் உவமேயப் பொருளைத் தெளிவுறுத்துவதாகும். [1] "கோவுடனே கூடியதோர் குருட்டாவும் ஊர் புகுதும்" என்று உமாபதி சிவாசாரியார் கூறியதும் ஈண்டு நினைக்கத்தக்கது.

நின் திருவடிக்கட் செலுத்தும் மெய்யன்பு பெறுதற் பொருட்டு மேற்கொள்ளப்படும் சரியை முதலிய தவ ஒழுக்கமாகிய அநுபவம் இல்லாமற் பெயரளவில் அடியவன் ஆகிய யான் என்பார், "உன் தாளிணை அன்புக்கு ஆராவடியேன்" என்றார். ஆர்தல்—அநுபவித்தல். இனி, ஆராயடியேன் எனப் பாடங்கொண்டு, ஆராய் என்பதற்கு, எத்தன்மையனாய் எனவும், எவ்வுரிமையுடையேனாய் எனவும் பொருள் கூறுவாரும் உளர்.

அயல்—வேற்றிடம். மெய்யடியார் பேரா வுலகம் புகுதற்கு அடியிட்ட செந்நெறிக்குப் புறம்பான இடம் என்பதாம். மயல்—அவா. மெய்யன்பர் எய்திய வீட்டு நிலையை அடைதற்குத் தகுதி பெறாத நிலையில், அவாக் கொண்டு முயன்றமையால், கருதியது பெறாமல் வருந்த

1. திருத்தொண்டர் புராண வரலாறு, செ. 10.

லானேன் என்பார், " மயல் கொண்டழுகேன் " என்றார். இந்நிலையில் யான் வேண்டுவது மெய்யடியார் புக்க பேரா வுலகம் புகுதலையன்று, அதற்குச் சாதனமாகிய மெய்யன் பேயாம் என்பார், " உன்றாளிணையன்பு " என்றார். சாதன சாத்தியமாகிய மெய்யன்பு, வீட்டு நிலை என்னும் இரண்டனுள், வீட்டு நிலை பெறுதற்குத் தகுதியில்லே னாயினும், அதற்கு ஏதுவாகிய மெய்யன்பு பெறுதற்கு அன்று ஆட்கொண்ட முறையில் அடியவன் ஆயினேன் ஆதலின், அதனைத் தந்தருள வேண்டுமென்பார், " அடியேற்கு " எனவும், " தாராய் " எனவும் கூறி யருளினர். " தாராய் " முன்னிலை உடன்பாட்டு வினை.

இத் திருப்பாட்டில், " பேராவுலகம் " என்பதை, மோனை நோக்கிப் "போராவுலகம்" எனப் பாடங்கொண்டு, சொல்லுதற்கரிய எனப் பொருத்தமில் பொருள் கூறியும், " மிலைக்க " என்னும் சொற்கு, மேய்ந்திட எனவும், போர் செய்ய எனவும் இல்லாத பொருள்களை இயைபின்றிக் கூறியும், " அழுகேனே " என்பதை, " எழுகேனே " என அந்தாதித் தொடை சிதையப் பாடங்கொண்டும், திருப் பாட்டின் அமைப்பையும், சொற்பொருள் ஆற்றலையும், கருத்து நயத்தையும் ஆராயாமற் பொருள் கூறி இடர்ப் படுவாரும் உளர். அவையெல்லாம் பொருந்தாமை யறிக.

இதன்கண், " பேராவுலகம் புக்காரடியார் " என்ற தனால், அழிவில் இன்ப நிலை அதுவென்பதும், " ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்தாங்கு " என ஒப்புமை காட்டி, " அயலே மயல் கொண்டழுகேனே " என்றதனால், அவ் வின்பம் பற்றித் தன்வயம் அழிதலும் பெறப்படுதலின், **ஆனந்த பரவசம்** என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

88. அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய்
அழல்சேர்ந்த
மெழுகே யன்னார் மின்னார் பொன்னார்
கழல்கண்டு

தொழுதே யுன்னைத் தொடர்ந்தா ரோடுந்
தொடராதே
பழுதே பிறந்தேன் என்கொண் டுன்னைப்
பணிகேனே.

**க-ரை:** முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவன் திருவடியடைதற்கு இன்றியமையாத சாதனம் மெய்யன்பு எனக் கண்டு, அதனைத் தந்தருள வேண்டும் என வேண்டிய அடிகள், இத் திருப்பாட்டில் அஃதன்றி வேறு எதனைப் பற்றுக் கோடாக மேற் கொள்ளக் கடவேன் என்று மீண்டும் வற்புறுத்து இரக்க விண்ணப்பம் செய்கின்றார்.

**ப-ரை:** நின்பால் அன்பு ஆம் மனமாய்—நின்னிடத்து அன்பு மயமான உள்ளம் உடையாராய், மின் ஆர் பொன் ஆர் கழல்கண்டு—ஒளி பொருந்திய நின் பொன் போன்ற திருவடிகளைத் தரிசித்து, அழல் சேர்ந்த மெழுகு அன்னார்—தீயிடைப்பட்ட மெழுகை ஒத்தவராய், தொழுதே உன்னை தொடர்ந்தாரோடும் தொடராது — வணங்கிய நிலையிலே நின்னைப் பற்றித் தொடர்ந்து அடைந்த மெய்யன்பரோடும் தொடர்ந்து வாராமல், அழுகேன்—தனிமைப்பட்டு அழுவேனாயினேன், பழுது பிறந்தேன் — ஆதலிற் பயனின்றிப் பிறந்தவனாகிய யான், என் கொண்டு உன்னைப் பணிகேன் —எதனைப் பற்றுக் கோடாகக் கொண்டு நின்னை வழிபடுவேன் என்பது.

**வி-ரை:** ஆண்டவனைத் தொடர்ந்து அடைந்த மெய்யன்பர்களின் பக்குவ முதிர்ச்சியை அடிகள் கண் கூடாகக் கண்டவராதலின், இத் திருப்பாட்டில் சற்று விளக்கமாகக் கூறத் தொடங்குகின்றார். அம் மெய்யடியார் உள்ளமெல்லாம் குழைந்த அன்பு மயமாயின என்பார், "அன்பாம் மனமாய்" எனவும், அத்தகைய அன்பும் உலக வாழ்க்கையில் மனை மக்கள் முதலியோரைப் பற்றியதன்று; அழிவில் பொருளாகிய நின்னைப் பற்றியது என்பார், "நின்பால்" எனவும் கூறினர். மனம் ஆகுபெயராக நின்று, அதனை யுடையாரை உணர்த்தும்.

அங்ஙனம் குழைந்த அன்புருவமான உள்ளம் உடைமைக்குப் பயன் கூறுவார், "மின்னார் பொன்னார் கழல் கண்டு" என்றார். ஆண்டவன் திருவடியைச் சிவஞானம் என ஆகமங்கள் கூறும் ஆதலானும், ஞானத்தை ஒளியாகக் கூறுதல் மரபு ஆகலானும், "மின்னார்" எனவும், உலகப் பொருள்களில் வைத்துப் போற்றத்தக்க பொருளாக உவமை கூறுதற்குப் பிறிது இன்மையின், "பொன்னார்" எனவும் கூறினர். [1] "பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்" என்பது தமிழ் மறை. உள்ளம் அன்பு மயமாகக் குழைந்த நிலையில் உண்டாம் பயன், ஆண்டவன் திருவடிக் காட்சி என்பது போதர, "கழல் கண்டு" என்றார். பெறுதற்கு அரிய அக் காட்சியின் பின்னர், அம் மெய்யன்பரின் உள்ளம் எவ்வாறு ஆயிற்று என்பதற்கு விடையாக, "அழல் சேர்ந்த மெழுகே யன்னார்" என்றார். தீயிடைப்படுதற்கு முற்பட்ட நிலையில் குழைவுடைய மெழுகுபோல, ஆண்டவன் திருவடிக் காட்சிக்கு முற்பட்ட நிலையில் அவ் விறைவனை நினைந்த துணையானே குழைவுடைய மெய்யன்பர் உள்ளம், அக் காட்சியின் பின்னர்த் தீயிடைப்பட்ட மெழுகு உருகி வடிதல் போல உருகிக் கரையும் என்பது கருத்து.

அங்ஙனம் உள்ளம் உருகப்பெற்ற மெய்யன்பர், அவ் அன்பிலே விளைந்த ஆரமிர்தமாகிய இறைவன் அருட் பார்வையாற் கவரப்பட்டு, அப் பெருமான் அருள் நிறைவில் தோய்ந்து இன்புற்றனர் என்பது புலப்பட, "தொடர்ந் தார்" என்றார். தொடர்தல் — விரைந்து செல்வாரைப் பின் பற்றிச் சேறல். எங்கும் நிறை பொருளாகிய இறைவனுக்குப் புடை பெயர்ச்சியின்மையால், பக்குவமுள்ள உயிர், உலகப் பார்வை ஒழிந்து, இறைவன் அருள் இயல்பு அறிந்து இயைதலையே அங்ஙனம் கூறினார் என்பது. [2] "யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறியதும் இக் கருத்துப் பற்றியே. அங்ஙனம் தொடருங்கால், வணக்க நிலையிலே

1. திருநாவுக்கரசர் தேவாரம் 2. திருவாசகம், பிடித்த பத்து 9.

உள்ளார் என்பது தோன்ற, "தொழுதே யுன்னைத் தொடர்ந்தார் என்றார். தொழுதலும் தொடர்தலும் ஒருங்கு நிகழ்ந்தன என்பது அறியத்தக்கது. இக் கருத்துத் தோன்றவே, [1] "கொழுநற் றொழு தெழுவாள்" என்பதற்குப் பரிமேலழகர், "தொழாநின்று என்பது தொழுதெனத் திரிந்து நின்றது" என்று உரைக் குறிப்பு எழுதலானர்.

இதுகாறுங் கூறிய மெய்யன்பர் இயல்பிற் புலனாகும் பிறிதோர் உண்மையும் ஈண்டு அறிந்து இன்புறத்தக்கது. அஃதாவது, இத் திருப்பாட்டில் மெய்யடியாரின் அறிவு, இச்சை, செயல்கள் இறைவனைப்பற்றி நின்றன என்பதாம். "கழல் கண்டு" என்றதனால் அறிவும், "அன்பாமனமாய்" என்றதனால் இச்சையும், "தொழுதே தொடர்ந்தார்" என்றதனால் செயலும் பற்றி நின்றமை புலனாயவாறு அறிக. [2] "அயரா அன்பின் அரன் கழல் செலுமே" என்னும் சிவ ஞான போத நூற்பாப் பகுதியும், அதற்கு மாதவச் சிவஞான முனிவரர், "அறிவிச்சை செயல்களின் நிகழ்ச்சியாகிய அயராமையும் அன்பும் செலவும் முறையே காரண காரியங்களாய், அவ்வொரு பொருள் மேல் ஒருங்கு நிகழும் என்பார், 'அயராவன்பின் அரன் கழல் செலுமே' என்றார்" என்று நுண்ணிதின் ஆராய்ந்து எழுதிய உரைக் குறிப்பும் ஈண்டு உணரத்தக்கன.

இத்தகைய மெய்யன்பரோடு தொடர்ந்து வரும் தவ வலி இன்மையால், தனிப்பட்டு வருந்தலானேன் என்பார், "தொடாராதே அழுகேன்" என்றார். திருவருட் பேற்றிற்கு உரிய தவம் புரிதற்கு இவ்வுடல் பயன் படாமையால், "பழுதே பிறந்தேன்" என்றார். "பிறந்தேன்" என்பது வினையால் அணையும் பெயராய்ப் பணிகேனே என்னும் பயனிலைக்கு எழுவாயாயிற்று. உன்னைத் தொடர்ந்தாரோடும் தொடர்தற்கு உரிய மெய்யன்பாகிய சாதனத்தை விட்டு, வேறு பற்றுக் கோடாக எதனைக் கொண்டு நின்னை வழிபடுவேன் என்பார், "என் கொண்டுன்னைப் பணிகேனே" என்றார்.

1. திருக்குறள் 55. 2. சிவஞான போதம், சூ. 11.

இதன்கண், மெய்யன்பரின் அறிவு, இச்சை, செயல்கள் எல்லாம் ஆண்டவனைப் பற்றி நிகழ்ந்தன என்றமையால், அங்ஙனம் நிகழ நுகரும் இன்பமே ஆனந்தம் என்பதும், அது பெருமையால், "அழுகேன்," "பழுதே பிறந்தேன்" என்றமையால் தன் வயம் அழிதலும் பெறப்பட்டமையால், ஆனந்த பரவசம் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

89\. பணிவார் பிணிதீர்த் தருளிப்
பழைய அடியார்க்குன்
அணியார் பாதங் கொடுத்தி
அதுவும் அரிதென்றால்
திணியார் மூங்கில் அனையேன்
வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்தொல்லை
தாராய்பொய்தீர் மெய்யானே.

க-ரை: இறைவன் திருவடி வணக்கத்திற்கு அன்பு நெறியல்லாது வேறு எதனைத் துணைக்கொள்ளக் கடவேன் என்று முன்னைத் திருப்பாட்டிற் கூறிய அடிகள், அச் செந்நெறிச் செலவிற்குத் தடையாகவுள்ளது தம் பண்டை வினை என்றும், அதனை அறவே ஒழித்து விரைந்து திருவடிப் பேறு அளித்தல் வேண்டும் என்றும் இத் திருப் பாட்டில் வேண்டுகின்றார்.

ப-ரை: பொய் தீர் மெய்யானே — பொய்மையின் நீக்கத்திற்கு ஏதுவாகிய மெய்ப் பொருளாக வுள்ளவனே, பணிவார் பழைய அடியார்க்குப் பிணி தீர்த்து அருளி— வழிபடுவோராகிய பண்டை அடியார்க்குப் பிறவி நோயை ஒழித்தருளி, உன் அணியார் பாதம் கொடுத்தி— நின் அழகு மிக்க திருவடியைக் கொடுக்கின்றாய், அது அரிது என்றாலும்—அங்ஙனம் தருதல் எனக்கு அரியது ஆம் என்றாலும், திணி ஆர் மூங்கில் அனையேன்—திட்பம் பொருந்திய மூங்கிலை ஒத்தவனாகிய என்து, வினையைப் பொடி ஆக்கி—கன்மத்தை நீறாக்கி, ஒல்லை வந்து தணி

ஆர் பாதம் தாராய்—விரைவில் வந்து குளிர்ச்சி பொருந்திய நின் திருவடியைத் தந்தருளுவாயாக என்பது.

வி-ரை.: "பொய் தீர் மெய்யான்" என்புழி, தீர் மெய்யான் என்பது வினைத்தொகை. அழியும் இயல்பின வாகிய மாயா காரியப் பொருள்கள் எல்லாம் பொய்ப் பொருள்களாம். அப் பொருள்களின் வைத்து ஆய்ந்து ஆய்ந்து செல்லுங்கால், அவ்வெல்லாம் சென்று சென்று, அணு அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒழிய, அவற்றின் நீக்கத்தில் அவ்வெல்லாவற்றையும் கடந்து நிற்கும் அழிவில் பொருளாகிய மெய்ப் பொருள் உண்மை பெறப்படும். இக் கருத்துப் பற்றியே, "பொய் தீர் மெய்யானே" என்றார். "பொய் தீர்" என்னாது, "மெய்யானே" என்ற அளவில் இக் கருத்து அமையாதோ எனின், மக்கள் ஆராய்ச்சி காணப்படும் நிலையுதல் இல்லாத பொருளைப் பற்றியே முதலில் நிகழும் இயல்பினது ஆகலின் அமையாது என்க. [1] "காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின், உலகின்மேல் வைத்துக் கூறினார்" என்னும் பரிமேலழகர் உரைக் கருத்தும் ஈண்டு நினைக்கத்தக்கது. பிணி தீர்த் தற்கும் வினையைப் பொடியாக்குதற்கும் உரிய தகுதி இறைவனிடத்து உண்மை குறித்து இங்ஙனம் கூறப் பட்டது என்பதும் குறிப்பிற் பெறப்படுவதாகும்.

பழைய அடியார் என்றதனால், அவர் வணக்கமும் தொன்று தொட்டு ஏற்பட்டது என்பது போதரும். ஆகவே, பற்பல பிறப்புக்களிலும் ஆண்டவனை வழிபட்டு வழிபட்டுத் திருவருளால் தூய்மை எய்தி ஆட்பட்ட மெய்யன்பர்களே பழைய அடியார் எனப்படுவார் என்பதாம். அங்ஙனம் தொன்று தொட்டு வழிபாட்டை விடாமல் மேற்கொண்டு வரும் பழைய மெய்யன்பர்க்கு, அநாதியே பற்றிய பாசப் பிணிப்பை எளிதின் ஒழித்துத் தன் திருவடிகளை, ஞான வொளி மிக்க பேரெழில் வாய்ந்த நிலையிற் காட்சிப் படச் செய்து இன்புறுத்துகின்றாய்

1. திருக்குறள் 1, உரை.

என்பார், " பணிவார் பழைய அடியார்க்குப் பிணி தீர்த்து உன் அணியார் பாதம் கொடுத்தி " என்றார். இதனால், பழைய மெய்யன்பர்க்குப் பாச நீக்கமும் சிவத்துவப் பேறும் அருளிய உண்மை புலனும் என்பது. " பிணி தீர்த்து " என்றதனாற் பாச நீக்கமும், " அணியார் பாதம் கொடுத்தி " என்றதனாற் சிவத்துவப் பேறு அளித்தலும் பெறப்பட்டவாறு அறிக. நோயுடை ஒருவனுக்கு முதலில் நோய் நீக்கத்திற்கு மருந்தும், பின்னர் உடல் வன்மைக்கு உரிய உணவும் கொடுக்கப்படுதல் உலகியலிற் காண்கின்றோம். அங்ஙனமே, பிணி தீர்த்தல் முதற் கண்ணும், திருவடி கொடுத்தல் பின்னரும் கூறப்பட்டன. அணியார் பாதம் என்றது, ஈண்டு, இறைவனை அறிதற்கு உரிய சிவ ஞானத்தைக் குறிக்கும்.

" அதுவும் " என்புழி, உம்மையைப் பிரித்து, " அரி தென்றால் " என்பதனோடும் இயைத்து, அது அரிது என்றாலும் எனக்கொண்டு பொருள் கூறப்பட்டது. அங்ஙனமின்றிச் சொற்கிடந்த படியே பொருள் கூறின், " மெய்யன்பர்க்குப் பிணி தீர்த்து அணியார் பாதம் கொடுத்தது அரிதன்று " என்று அடிகள் கருதினர் என்பது பெறப்படும். பாச நீக்க முகமாக உண்டாம் சிவத்துவப் பேறாகிய அதுவன்றி முடிந்த பயன் பிறிதொன்று இன்மையின், அடிகள் அங்ஙனம் எளிதாகக் கருதினர் எனக் கொள்ளுதல் பொருந்தாது என்பது. அப் பேறு தமக்கு அரிதாம் என்பதை உடன்பட்டு, அத்துணைப் பெறுதற்குத் தமக்குத் தகுதி யின்றாயினும் என்பார், " அது அரிது என்றாலும் " என்றார். அத்துணை அரிதாகிய முடிந்த பயனைப் பெறுதற்குத் தகுதி யில்லேன் ஆயினும், இப்பொழுது இன்றியமையாது வேண்டப்படும் கன்ம நாசத்தை விரைந்து அருளல் வேண்டும் என்பது பற்றிப் பின் வருமாறு வேண்டுகின்றார்.

திணியார் மூங்கில்—வன்மை மிக்க மூங்கில்; அதனைக் கெட்டி மூங்கில் என்பர். மூங்கில் உள்ளும் புறமும் கசிவு இல்லாதது ஆகும், மேலும், குழாய் மூங்கிலி

னின்றும் வேறு ஆகிய திணியார் மூங்கில் ஆனதால், பிறர் வளைத்தால் அன்றி வளையாததுமாம். அது போல், உள்ளும் புறமும் முறையே குழைந்த அன்பும், அது பற்றி யுண்டாம் மெய்ப்பாடும் பணிவும் இல்லாதேன் என்பார். "திணியார் மூங்கில் அனையேன்" என்று மூங்கிலைத் தமக்கு உவமம் கூறுவார் ஆயினர். "மூங்கில் அனையேன் வினையை" என்புழி, ஆறும் வேற்றுமை தொக்கதாகக் கொண்டு, "அனையேனது" என விரித்துக் கொள்ளல் வேண்டும். இதனால், மெய்யன்பர் உள்ளே குழைந்த அன்பும், புறத்தே அதன் விளைவு ஆகிய செயலும் பணிவும் உடையார் என்பது பெறப்படும். மேலும், அடிமைக்குப் பழமை கூறியமையால், அன்புண்மையும், பணிவார் என்றதனால் வணக்கம் உண்மையும் உணரத்தக்கன. அடிகள், தம்பால் உள்ளன்பும் வணக்கமும் இல்லாமைக்கு ஏதுவாக வுள்ளது பண்டை வினையெச்சம் எனக் கண்டு, முதலில் அதனை முளைத்தல் இல்லாவாறு ஞானத் தீயால் சுட்டு எரித்தல் வேண்டும் என்பார், "வினையைப் பொடியாக்கி" என்றார். பொடியாக்குதல்—நீறாக்கல். [1] "வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப், பொய்யும் பொடியாகாதென் செய்கேன்" என்னும் அடிகள் அருண்மொழியும் ஈண்டு நினைக்கத்தக்கது.

வினையைச் சுட்டு எரிக்குங்கால், அவ்வினையிலே கிடக்கின்ற தம் உயிர்க்கும் அவ் வெப்பம் தாக்கும் ஆதலின், அவ் வெம்மையின் தணிவு நிமித்தம் நின் திருவடியைக் குளிர்ந்த நிலையில் தரல் வேண்டும் என்பார், "தணியார் பாதம்" எனவும், அது தருதற்குக் காலம் தாழ்ப்பின் பொறேன் ஆதலின், விரைவில் தரவேண்டும் என்பார், "ஒல்லை" எனவும், யான் அவ் வெம்மையைத் தாங்கி நின்பால் அணுகுதற்கு ஆற்றல் இல்லேன் ஆதலின், நீயே என்பால் அருள்கூர்ந்து வரல் வேண்டும் என்பார், "வந்து" எனவும் கூறியருளினர். தணி—தண்மை; குளிர்ச்சி. [2] "தணி புனலாடுந் தகைமிகு போர்க்கண்" என்புழி, அப்பொருட்டாதல் அறிக. வினை யெச்சம்

1. திருவாசகம், திருவெண்பா 1. 2. பரிபாடல், பா. 6, அடி 29.

இல்லாமையால் மெய்யன்பர்க்குத் திருவடியை எழில் மிக்க ஞான நிலையில் கொடுத்து இன்புறுத்துகின்றாய் எனவும், யான் அங்ஙனம் பெறுதற்குத் தகுதி இல்லாமல் வினையோடு பிணிப்புண்டு இருத்தலின், அதனை எரித்து ஒழித்து, அவ்வெம்மை தாக்காமல் எனக்குத் திருவடியை விரைவில் குளிர்ந்த நிலையில் அருளிக் காக்கவேண்டும் எனவும் அடிகள் வேண்டியவாறும்.

இதன்கண், "பணிவார் பிணி தீர்த்தருளிப் பழைய அடியார்க்குன் அணியார் பாதம் கொடுத்தி" என்றதனால், அழிவில் இன்ப நிலை இவ்வியல்பிற்று என்பதும், அது பெருமையால், "திணியார் மூங்கிலனையேன்" எனத் தன்வயம் அழிதலும் பெறப்படுதலின், ஆனந்த பரவசம் என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்றுதல் அறிக.

90. யானே பொய்யென் நெஞ்சும் பொய்யென்
அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப்
பெறலாமே
தேனே அமுதே கரும்பின் தெளிவே
தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனைவந்
துறுமாறே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் வீட்டின்பப் பேற்றிற்குத் தடையாகவுள்ள வினையை நீறாக்கித் திருவடி நீழலை அருளவேண்டும் என்று கூறிய அடிகள், அப்பேறு குறித்துத் தம் கருவி கரணங்களையும் ஈடுபடுத்தற்கு அவை நேர்மையுடையனவாக இல்லாமையானும், வேறு பற்றுக்கோடு காணப்படாமையானும், தாயின் உதவி குறித்துக் குழந்தை மேற்கொள்ளும் செயலைக் கடைப் பிடிக்கலாமா என்று இத் திருப்பாட்டில் குறிப்பிடுகின்றார்.

ப-ரை: தேனே அமுதே கரும்பின் தெளிவே—தேனும் அமிழ்தமும் கரும்பின் தெளிந்த சாறுமாக உள்ளவனே,

தித்திக்கும் மானே—இனிப்புச் சுவை மிக்க பெரியோனே, யானே பொய்—யான் பொய்யனே, என் நெஞ்சும் பொய்—என் உள்ளமும் வஞ்சமுடையது, என் அன்பும் பொய்—என் அன்பும் போலியாக வுள்ளது, ஆனால்—அங்ஙனமாயின், வினையேன்—கன்மத்தையுடையேனாகிய யான், அழுதால் உன்னைப் பெறலாமே—வருந்தி அழுதால் நின்னை அடையலாமா? அடியேன் உனைவந்து உறும் ஆறு அருளாய்—அடியேன் நின்னை வந்து எய்துமாறு அருள் புரிவாயாக என்பது.

வி-ரை: தேனே, அமுதே, கரும்பின் தெளிவே என்று இறைவனை இனிமைச் சுவை மிக்க பொருள்களாக இம் முறையில் விளித்தலைப்பற்றித் திருச்சதகம் 55-ஆம் திருப் பாட்டு உரையில் விளக்கம் கூறப்பட்டுள்ளது. ஆண்டுக் காண்க. பேரின்பப் பிழம்பாக வுள்ள இறைவன், சார்ந் தார்க்கு இனிமை பயந்து நிற்கும் இயல்பு கருதி, உலகப் பொருள்களில் இனிமைச் சுவை மிக்க தேன் முதலிய வாகக் கூறப்பட்ட அளவில் அமையாமை கண்டு, மீண்டும், "தித்திக்கும் மானே" என்றார். மான்—மகான்; வட சொற்றிரிபு. மனம், பொறி வழிப் புறத்தே சென்று நுகரும் பொருள்களுள், தேன் முதலியன போல அகத்தே நினையுந்தோறும் இனித்தல் குறித்து, "தித்திக்கும்" எனவும், மக்களாற் சுவைக்கப்படும் உலகியற் பொருள்கள் எல்லாம் சுவைப்போனில் தாழ்ந்தனவாக அன்றி, ஒத்தனவாக உள்ளன ஆதலின், அவற்றின் வேறாக, ஆண்டவன் மிக்கோன் ஆவான் என்பது தோன்ற, "மானே" எனவுங் கூறுவாராயினர். [1] "கனியினுங் கட்டிபட்ட கரும்பினும்......இனியன்" என்னும் தமிழ் மறையும் ஈண்டு நினைக்கத் தக்கது.

அடிகள் ஆண்டவன் திருவடிப் பேறு எய்த இயலா மையின், தம் ஒழுக்கம் புரைபட்டது எனக் கொண்டு, "யானே பொய்" என்றார். ஏகாரம் தேற்றப் பொருளது. தம்மைப் பொய்யன் என்ற அளவிலே, தம் நெஞ்சும்

1. திருநாவுக்கரசர் தேவாரம்.

அன்பும் பொய்மையுடையன என்பது பெறப்படுமாயி னும், ஆண்டவனை அடைதற்கு உரிய கருவி கரணங்களுள் நெஞ்சம் சிறந்தது ஆகலானும், அன்பு இன்றியமையாதது ஆகலானும், அவ்விரண்டனையும் வேறாகப் பிரித்து ஓதினார். இங்ஙனம் கூறுதல் ஆன்றோர் வழக்கு என்பதை, [1] "நாணை னும் அன்பு முன்பு நளிர் வரை யேற" எனவும், [2] "செம் பொற்றோளே சார்வான திருமனமும்.........தாமுமாகி" எனவும் சேக்கிழாரடிகள் கூறுமாற்றான் அறிக. மன மொழி மெய்கள் மூன்றனுள், நெஞ்சம் பிரித்து ஓதப்பட்ட மையால், ஏனைய மொழி மெய்களின் பொய்மை, "யானே பொய்" என்றதனாற் பெறவைத்தார் என்பதாம். பேச் சளவில் நிகழும் போலிப் பாராட்டும், உடலளவில் நிகழும் போலி வணக்கமும் பொய்மையுடையன என்பது கருத்து. அவ்விரண்டற்கும் மூலமாக வுள்ளது நெஞ்சம் ஆதலின், அதன் வஞ்சகம், கேடு பயப்பதில் அவற்றினும் சிறந்தது எனக் கொண்டு, தனித்து எடுத்து, "என் நெஞ்சும் பொய்" என்றார். அன்பு என்னும் உயிர்க்குணம் முதிர்ந்த நிலையில் ஆண்டவனை அடைதற்கு உரிய சிறந்த நெறியாக முடித லின், அஃது இன்றியமையாதது ஆகவும், அதுவும் போலி யாயிற்று என்பார், "என் அன்பும் பொய்" என்றார். "என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்" என ஈரிடத்தும் "என்" என்பதை இயைத்துக் கூறியது, உல கத்தில் என் அளவில் இப்படிப் போலி ஆயினவே என அடிகள் இரங்கியமை புலப்படுத்தற்கு என்க.

இங்ஙனம் தம் மனம் மொழி மெய்களும் அன்பும் பொய்மை உடையன ஆதற்கு ஏது, தம் தீவினை என்பார், "வினையேன்" என உடம்பொடு புணர்த்து ஓதினார். உடம்பொடு புணர்த்தலாவது, சொல்லப்பட்ட இலக்கியத் திலே சொல்ல வேண்டியது ஒன்றை உய்த்துணர வைத்த லாகும். இதனை, [3] "சுவையொளி யூறோசை நாற்ற மென் றைந்தின், வகைதெரிவான் கட்டே யுலகு" என்னுங்

1. பெரிய புராணம், கண்ணப்பர் புராணம், 103. 2. பெரிய புராணம், திருநாவுக்கரசர் புராணம், செ. 225. 3. திருக்குறள் 27.

குறளில், "வகை தெரிவான் கட்டென உடம்பொடு புணர்த்ததனால், தெரிகின்ற புருடனும், அவன் தெரிதற் கருவியாகிய மான் அகங்கார மனங்களும், அவற்றிற்கு முதலாகிய மூலப் பகுதியும் பெற்றும்" என்று பரிமேலழகர் எழுதிய உரையானும் உணர்க. ஈண்டு, யான் எனக் கூற வேண்டிய இடத்தில் வினையேன் என்றதனால், வினை ஏதுவாமென்பது உய்த்துணர வைக்கப்பட்டவாறு அறிக. என் நெஞ்சும் அன்பும் பொய் பட்டமையால், அந் நெஞ்சத்தின் துணை பற்றி, அன்பு நெறியாக ஆண்டவன் திருவருளைப் பெறுதற்கு இயலாமையானும், பிறிதோர் ஆறின்மையானும், "அழுதால் உன்னைப் பெறலாமே" என்றார். உலகத்தில் எத்துணை ஆற்றல் படைத்தாரும் ஒன்றைப் பெறுதற்கு விரும்புங்கால், தம் கருவி கரணங்கள் வலியிழந்து பயன்படாத நிலையில் மேற்கொள்ளப்படுவது அவலித்து அழுதலே யாகும். "பெறலாமே" என்புழி, ஏகாரம் வினாப் பொருளில் வந்தது. என் அன்பும் பொய் யானால், அழுகையும் பொய்யாகும் ஆதலின், பொய்யாக அழுதால் உன்னைப் பெறலாமோ எனப் பொருள் கோடலும் ஆம்.

அடிகள், தம் அன்பு பொய்மையானதால், வேறு புகல் இன்றி, "அழுதாலுன்னைப் பெறலாமே" என்றார். ஆயினும், அவர் அழுகை, பால் நினைந்தூட்டும் தாயை நினைந்து மழவிளங் குழவி அழுதல் போல் அன்பினால் நிகழ்வதாகும்; மற்றை அடியார்களும் இறைவன் திருவருளை வேண்டி, அன்பினால் உள்ளம் உருகிக் கண்ணீர் வடித்து அழுதமை, அன்னார் வரலாற்றான் அறியப்படும். [1] "புனிதவாய் மலர்ந்தழுத" என ஆளுடைப் பிள்ளையாரையும், [2] "நைந் துருகிப் பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும்" என்று ஆளுடை அரசையும் பற்றிச் சேக்கிழார் கூறியிருத்தல் ஈண்டு நினைக்கத்தக்கது.

'அழுதால் உன்னைப் பெறலாமா' எனக் கேட்ட அடிகள், ஒருவாறு அங்ஙனம் அழுதலும் நின்னைப் பெறுதற்கு

1. பெரிய புராணம், திருஞான சம்பந்தர் புராணம், செ. 1.
2. ஷை திருநாவு. புராணம், செ. 140.

வாயில் ஆகாது எனின், நின்னை வந்து அடைதற்கு உரிய சிறந்த நெறி பிறிது ஒன்று இன்னது என்று காட்டியருளல் வேண்டும் என்பார், "அடியேன் உனை வந்து உறும் ஆறு அருளாய்" என்றார். ஈண்டு அடியேன் என்றது, ஆட்கொண்டு அருளல் வேண்டும் என்னும் குறிப்புத் தோன்ற நின்றது. 1 "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்றபடி, அப்பெருமானை அறிந்து வழிபடுதற்கு உரிய நெறியைக் காண்டற்கும் அவன் அருளே துணை புரிய வேண்டும் ஆதலின் இங்ஙனம் கூறினார் என்க.

இதன்கண், "தேனேயமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும் மானே" என்றதனால் ஆனந்தத்தின் இயல்பும், "அழுதால் உன்னைப் பெறலாமே" என்றதனால் பரவசமாதலும் பெறப்படுதலின், ஆனந்த பரவசம் என்னும் பதிகம் நுதலிய பொருளும், "மானே யருளாயடியேன் உனை வந்துறுமாறு" என்றதனால் பத்தியும், "யானே பொய், என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்" என்றதனால் வைராக்கியமும் பெறப்படுதலின், பத்தி வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

1. திருவாசகம், சிவபுராணம், அடி 18.

## 10. ஆனந்தாதீதம்

ஆனந்தாதீதம் என்னும் வட சொற்றொடர் ஆனந்தத்தின் அதீத நிலை என விரியும். ஆனந்தம், மெய்யுணர்வினால் அநுபவிக்கப்படும் அழிவில் இன்பம் என்பது, 8, 9-ஆம் பதிகங்களின் வைத்து விளக்கிக் கூறப்பட்டது. அதீதம் என்னும் சொல், கடந்தது என்னும் பொருள் உடையதாகும். ஆகவே, அத்தொடர், அப் பேரின்பத்தின் கடந்த நிலையாகிய முடிந்த எல்லையைக் குறிக்கும் என்பது தெளிக. சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுடைய உயிர், இடையறாத சிவ பாவனையால், பாசச் சார்பை ஒழித்துச் சிவச் சார்பை யடைந்ததும், அப் பாச நீக்கத்தில் உண்டாம் அருள் விளக்கத்தில் தலைப்பட்டு, அது வாயிலாக ஆனந்த விளக்கம் நிகழப் பெறுவதாம் என்ப. பாசம் நீங்கிய வழி உண்டாவது அருள் விளக்கமாகும். அஃது, இருள் நீக்கத்தின் உண்டாம் ஒளி விளக்கம் போல்வதாம். அதன்மேல், ஆண்டவன் கருணையால் நிகழ்வது ஆனந்த விளக்கமாகும். அவ் ஆனந்தத்தில் ஞான நிலையோடு உயிர் தோய்தல் ஆனந்தத் தழுந்தல் என்று 8-ஆம் பதிகத்தும், அத்தோய்வு முதிர முதிர, அவ்வுயிர் தன்வயம் அழிதல் ஆனந்த பரவசம் என்று 9-ஆம் பதிகத்தும் கூறப்பட்டன. அங்ஙனம் தன்வயம் அழிந்த நிலையின் மேம்பட்ட நிலையே அதீத நிலை ஆகும். இந்நிலையில், காண்பவன், காட்சி, காணப்படு பொருள் என்னும் வேறுபாடு இன்றாம். தன்வயம் அழிந்த நிலையில், ஒரோ வழிப் பண்டைப் பாசத் தொடர்பால் யான் நுகர்கின்றேன் என்று உயிர் நினைவு முற்படுதலுங் கூடும். அதீதமாகிய கடந்த நிலையில், அந் நினைவு சிறிதும் நிகழாது என்பதாம். இந் நிலையின் இயல்பை, அடிகள், [1] "எனை நானென்பதறியேன் பகலிரவாவதும் அறியேன்" என்று கூறியருளிய அநுபவ உண்மையான் உணரலாம்.

1. திருவாசகம், உயிருண்ணிப்பத்து, செ. 3.

உலகியலில் ஓர் அழகிய உருவத்தைக் காணுங்கால், அதனை அழுந்திப் பார்ப்பவன் காண்பவன் ஆவான்; அங்ஙனம் பார்க்கப்படும் உருவம் காணப்படு பொருள் ஆகும்; காண்பவன் அறிவு காட்சியாகும். இவ்வேறு பாடு உள்வழி, அஃது அதீத நிலை ஆகாது. இவ் வேற்றுமை யின்றி, இன்ப மயமாக நிகழும் அநுபவமே ஆனந்தாதீதம் என்ப. இதனையே, [1] "அதீத நிலைக்கண்ணதாகிய சிவத்துவ விளக்கம் எனப்படும் பரம சுகம்" என்று சிவஞான முனிவர் கூறுவர். பரம சுகம் — மேலான இன்பம். இவ்வதீத நிலையில் அனுபவிக்கும் உயிர்க்குத் தன்னைக் குறித்து யான், எனது என்றலும், அநுபவப் பொருளாகிய இறைவனைக் குறித்து முன்னிலைப்படுத்து, நீ, நினது என்றலும் ஆகிய வேற்றுமை யுணர்ச்சி சிறிதும் நிகழாது என்பதாம். இவ் வுண்மையைத் தாயுமான அடிகள், [2] "எனதென்பதும் போய் யானெனல் போய் எல்லாம் இறந்த இடங்காட்டும், நினதென்பதும் போய் நீ யெனல் போய் நிற்கும் நிலைக்கே நேசித்தேன்" என்று கூறுவர். [இப் பாடலில் உள்ள போய் என்னும் சொல் நான்கனையும் பதிப்பிட்டார், உரை எழுதினோர் எல்லோரும், பொய் எனப் பாடங்கொண்டு வெளி யிட்டனர். இறைவனை நோக்கி, "நீ யெனல் பொய்" என்று கூறுதல் சைவ சித்தாந்த மரபிற்கு முரணுதலானும், பொருட் சிறப்பின்மை யானும், அது சிறந்த பாடம் அன்று.] எனது, யான், நினது, நீ என்னும் வேறுபாடு ஒழிந்து நிற்கும் நிலை என்பது பொருள். இதுவே அதீத நிலையாகும். இந் நிலையில், உயிர் நுகரும் பேரின்பம், கருவி கரணங்களைக் கடந்தது ஆகலின், இதன் இயல்பு இத் தன்மைத்து எனக் கூற ஒண்ணாதது என்று திருமூலர் பின் வருமாறு கூறுவர்: "மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய, சுகத்தைச் சொல்லெனிற் சொல்லுமாறெங்ஙனே" என்பது. இவ்வதீதமாகிய பேரின்ப நிலை, தன் வயம்

---

1. சிவஞான போதம், 11-ஆம் சூத்திர உரை. 2. தாயுமானர், 'தன்னை யொருவர், செ. 5.

அழிந்து நுகர்தலாகிய ஆனந்த பரவசத்தின் பின் நிகழ்வதாகலின், இஃது அதன் பின் வைக்கப்பட்டது என்க. இதனால் பதிக இயைபுண்மை புலனாயவாறு அறிக.

எண் சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

91. மாறி லாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொள் தாளிணை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
மெய்ம்மை அன்பருன் மெய்ம்மை மேவினார்
ஈறி லாதநீ யெளியை யாகிவந்
தொளிசெய் மானுட மாக நோக்கியுங்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
கடையன் ஆயினேன் பட்ட கீழ்மையே.

க-ரை: ஆண்டவன் திருவடியின்பப் பேற்றிற்கு உரிய சாதனங்களை மேற்கொள்ளத் தம் கருவி கரணங்கள் செம்மை யுடையனவாக இல்லாமையால், அழுதால் உன்னைப் பெறலாமே என்று முன்னைப் பதிகத்தின் இறுதித் திருப்பாட்டில் கூறிய அடிகள், அங்ஙனம் இறைவன் அரிதிற் பெறுதற்கு இன்றி, எளிமையில் மக்கள் வடிவில் ஞானாசிரியனாக எழுந்தருளி அருள் நோக்கம் நல்கியும், இன்பப் பேற்றிற்குப் புறம்பாக்கிய நெஞ்சத் தோடு கூடிப் பொறுத்திருக்கலானேனே என்று இப் பதிகத்தின் தொடக்கத் திருப்பாட்டாகிய இதன் கண் இரங்கிக் கூறுகின்றார்.

ப-ரை: மாறு இலாத மா கருணை வெள்ளமே—வேறு பாடு இல்லாத பேரருட் பெருக்கே, நின் மலர்கொள் தாளிணை—உன்னுடைய தாமரை மலர் போன்ற திருவடித் துணைக் கண், வேறு இலாப் பதப் பரிசு பெற்ற நின் மெய்ம்மை அன்பர்—வேற்றுமையின்றிக் கலத்தற்குரிய பக்குவத்தன்மை யடைந்த நின் மெய்யன்பர், முந்தி வந்து—முற்பட்டு வந்து, உன் மெய்ம்மை மேவினார்—நின் திருவடி இன்பம் எய்தினர்; ஈறு இலாத நீ— அழிவில்லாத நீ,

எளியை ஆகி ஒளி செய் மானுடம் ஆக வந்து நோக்கியும்—எளிமை யுடையை ஆகி ஒளி பொருந்திய மக்கள் வடிவில் ஞானசிரியனாக எழுந்தருளி வந்து, அருட் பார்வை நல்கியும், கீறு இலாத நெஞ்சு உடைய நாயினேன்—பிளவு படாத வலிய நெஞ்சத்தையுடைய நாய் போன்றவனாகிய யான், பட்ட கீழ்மை—எய்திய இவ் விழிவால், கடையன் ஆயினேன்—கடைப்பட்டவன் ஆயினேன் என்பது.

**வி-ரை:** இறைவனுடைய எண் குணங்களுள் பேரருள் உடைமை ஒன்று. அது, "மாக்கருணை" என்னப்பட்டது. அளப்பரிய அவ்வருளை மழையாகவும் கடலாகவும் கூறுதல் போல, ஈண்டு வெள்ளமாகக் கூறினர். கற்பனை கடந்த சோதியாகவுள்ள ஆண்டவன், கருணையே வடிவமாக வுடையான் ஆதலின், இங்ஙனம் கூறினர். கருணையை நீராகக் கொண்டு, அவ் வருண் மயமாக வுள்ள இறைவனை வெள்ளம் என்றார். உலகத்தில் நீர்ப்பெருக்காகிய வெள்ளம் பெருகுதல், சுருங்குதல், வற்றுதல் ஆகிய வேறுபாடுகளை யுடையதாகும். இறைவனாகிய அருள் வெள்ளம் அவ் வேறுபாடுகள் இன்றி, எக்காலத்தும் ஒரே படித்தாக நிறைந்து இருத்தலின், "மாறிலாத மாக்கருணை வெள்ளமே" என்றார். [1] "குறைவிலா நிறைவே" என்றதும் இக்கருத்துப் பற்றியே.

சார்ந்தாரை இனிமை யுறுத்தும் பேரின்பத் தேன் நிறைந்த மலரின் தன்மையைக் கொண்டன என்பார், "மலர்கொள் தாளிணை" என்றார். வேறு இலாமை—வேற்றுமை யில்லாமை; இரண்டு அற்ற நிலை. பதப்பரிசு—பக்குவத் தன்மை; ஈண்டு இருவினை யொப்பு, மலபரிபாகம் முதலிய இயல்புகளைக் குறிக்கும்; இறைவனோடு இரண்டறக் கலத்தற்குரிய தகுதி யென்பது கருத்து. இத் தகுதியால், பாசப் பிணிப்பு ஒழிந்து, மெய்யுணர்வு பெற்றுத் தூயராயினர் என்பதும், "மெய்ம்மை யன்பர்" என்றதனால், உண்மையாகிய அன்பு நெறியில் ஒழுகினர் என்பதும்

1. திருவாசகம், கோயில் திருப்பதிகம், 5.

பெறப்படும். இச் செந்நெறிச் செலவினராகிய மெய்யன்பர், இப் பொய்யுலக வாழ்க்கையினின்றும் விடுதி பெற்று, விரைவில் முற்பட்டு எய்தினர் என்பார், "முந்தி வந்து" என்றார். மெய்ம்மை — ஆகுபெயரால் என்றும் நிலையுதலை யுடைய வீட்டு நிலையைக் குறிப்பதாகும். "நின் தாளிணை", "நின் மெய்யன்பர்", "உன் மெய்ம்மை" எனச் சாதனம், நெறி, பயன் என்னும் மூன்றும் கூறப்பட்ட படியாம். இம் மூன்றிலும் சிவசம்பந்தத்தின் இன்றியமையாமையில் ஈடுபட்டு, "நின், உன்" என விடாது கூறினர்.

1 "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி" என்றபடி, "ஈறிலாத நீ" என்றார். ஈறின்மை கூறவே, தோற்றம் இன்மையும் பெறப்படும். மெய்யன்பர்க்குக் காட்சிப்பட்டு அருள் நல்கும் இறைவனுக்குத் தோற்றம் இன்மை கூறுதலினும், ஈறின்மை கூறுதலே சிறந்ததாகும். 2 "ஈறிலாதவன் ஈசன் ஒருவனே" என்னும் தமிழ் மறையும் நோக்குக. இதனால், காட்சி முதலியவற்றிற்கு அரிய பொருள் ஆவான் ஈறிலாத ஈசன் ஒருவனே என்பது தெளியப்படும். அடிகள் பிறிதோரிடத்து, 3 "அரியதில் அரிய அரியோன் காண்க" என்று கூறி யருளியதும் காண்க. இத்துணை அரிய பொருளாகவுள்ள இறைவன், கருணை காரணமாகத் தமக்கு எளிமையிற் காட்சி யளித்தான் என்பது குறித்து, "எளியை யாகி" என்றார். ஈறிலாமையான் ஆகிய அருமை இறைவற்கு இயல்பு ஆதலையும், மெய்யன்பர்க்கு வெளிப்படும் எளிமை அருள் காரணமாக நிகழ்தலையும், "எளியையாகி" என்புழி யுள்ள ஆக்கச் சொல் புலப்படுப்பதாகும். தமக்கு எளிமையாயது, திருப்பெருந்துறையிற் குருந்தமரத்து நீழலில் ஆண்டவன் மக்கள் வடிவில் ஞானாசிரியனாக எழுந்தருளியது என்பார், "மானுடமாக" எனவும், மனித வடிவில் எழுந்தருளினன் ஆயினும், தெய்விக ஒளி அவ் வுருவில் திகழ்ந்தது என்பார், "ஒளி

1. திருவாசகம், திருவெம்பாவை 1. 2. திருநாவுக்கரசர் தேவாரம், "நூறு கோடி பிரமர்." 3. திருவாசகம், திருவண்டப் பகுதி, அடி 47.

செய் மாநுடம்" எனவும் கூறியருளினர். இறைவனைப் பேரொளிப் பிழம்பாக முது நூல்கள் கூறும். அந் நிலையில் காட்சி யளிப்பின், மக்கட் பிறப்பினராகிய அடிகள் கட் புலனுக்கு அடங்காது எனக்கொண்டு, அவ் வொளியைத் தன்னுள் அடக்கி நிற்கும் மாநுட வடிவம் ஆயினன் என்பது. தெய்வத் தன்மையின் ஒரு சிறு கூறுடைய சாத்தன் என்பான், மக்கள் வடிவில் தோன்றி, மணந்த தேவந்தி என்பாளுக்குத் தன் இள நலத்தைக் காட்டுங் கால், அவள் கண்கள் தன் ஒளி வடிவத்தைக் காண இயலா எனக் கண்டு, தன் ஆற்றலால் பொறுப்பித்தான் என்று சிலப்பதிகாரம் கூறும். [1] "தேவந்தி யென்பாண் மனைவி யவளுக்குப், பூவந்த வுண்கண் பொறுக்கென்றுமேவித்தன், மூவா விளநலங் காட்டி" என்னும் பகுதியும், அதற்கு, "மக்கள் கண்ணிற்குத் தெய்வ யாக்கை காணப் பொருதாக லின், இவள் கட்குப் பொறுக்கக் கடவதென்று நிருமித்துக் கொண்டான்" என்று அடியார்க்கு நல்லார் எழுதிய உரை யும் ஈண்டு அறியத்தக்கன. இங்ஙனம் கடவுட்கூறு சிறிது அமைந்த சாத்தன் ஒளியே மக்கள் கட்புலனுற் பற்றப் படாதது ஆகுமாயின், இறை இலக்கணம் முற்றும் அமைந்த சிவபெருமான் ஒளிவடிவம் எங்ஙனம் கட்புலனுக்கு அடங் கும் என்பது உணரத்தக்கது. இனி, "ஒளி செய் மாநுடம்" என்பதற்கு, ஞான வொளியை அடிகளுக்கு அருளும் ஞானாசிரிய வடிவம் என்று பொருள் கோடலும் பொருந் தும். ஒளி—ஞானம். மல இருளை யொழித்து விளங்குதலின், ஞானம் ஒளி எனப்பட்டது என்க.

முதல் அடியில் மெய்யன்பர் தாமே இறைவனை அணுகி னர் என்பது தோன்ற, அவர் செயலாக, "முந்தி வந்து" எனவும், மூன்றாம் அடியில் அடிகள்பால் உள்ள அருள் காரணமாக இறைவன் நில வுலகத்து எளி வந்தனன் என் பது தோன்ற, இறை செயலாக, "மாநுடமாக வந்து" எனவும் கூறிய நயம் உணர்ந்து இன்புறத்தக்கது. அங்ங னம் தானே வந்து காட்சி அளித்த அளவில் அமையாது,

1. சிலப்பதிகாரம் 9, அடி 34.

தம் உயிரைத் தூய்மைப் படுத்தற்கு உரிய அருள் நோக்கம் ஆகிய நயன தீக்கையும் செய்தனர் என்பார், "நோக்கியும்" என்றார். [1] "அங்கணர் கருணை கூர்ந்த அருட்டிரு நோக்கம் எய்த" என்று திருத்தொண்டர் புராணம் கூறியதும் நயன தீக்கையையே என்க. நோக்கியும் என்புழி, உம்மை சிறப்புப் பொருளில் வந்தது.

இங்ஙனம் ஈறிலாத அரிய பொருளாகிய இறைவன், தம் பொருட்டு எளியனாதல், ஒளி செய் மானுடமாதல், வலிய வருதல், நோக்குதல் ஆகிய குணஞ் செயல்களாற் கருணை காட்டிப் பேருதவி புரிந்தும், அந் நன்றியைச் சிறிதும் நினையாத வன்னெஞ்சு பிளக்கப்பட்டிலது என்பார், "கீறிலாத நெஞ்சு" என்றார். நாய் இழிந்த பிறப்புடைய தாயினும், நன்றி மறவாமையில் சிறந்ததாகும். யான் நன்றி மறக்கும் நாயின் தன்மை யுடையேன் என்னும் குறிப்புத் தோன்ற, "கீறிலாத நெஞ்சுடைய நாயினேன்" என்றார். "கீறிலாத நெஞ்சுடையன் ஆயினேன்" எனப் பாடம் கொண்டு முடித்தலுமாம்.

[2] "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்றபடி, உய்தியில் குற்றமாகிய நன்றி மறத்தலால், இழிவு எய்திற்று என்பார், 'பட்ட கீழ்மை" எனவும், அது காரணமாக உயிர்த் தொகுதியில் கடைப்பட்டவன் ஆயினேன் என்பார், "கடையனாயினேன்" எனவும் கூறினர். "பட்ட கீழ்மை" என்புழி, மூன்றன் உருபு தொக்கு நின்றது.

இதன் கண், "வேறிலாப் பதப் பரிசு பெற்ற நின் மெய்ம்மை யன்பருன் மெய்ம்மை மேவினார்" என்றதனால், அவர் எய்தியது அதீதமாகிய ஆனந்தம் என்பது பெறப் படுதலின், **ஆனந்தாதீதம்** என்னும் பதிகம் நுதலிய பொருளும், "மாறிலாத மாக்கருணை வெள்ளம்" எனவும், ஈறிலாதவன் எனவும் இறைவனைப் பாராட்டியமையால் பத்தியும், "கீறிலாத நெஞ்சுடையேன்" என்றதனால் வைராக்கியமும் பெறப்படுதலின், **பத்தி வைராக்கிய விசித்திரம்** என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனாயவாறு அறிக.

1. பெரியபுராணம், கண்ணப்ப நாயனார் புராணம் 104. 2. திருக்குறள் 110.

92. மையி லங்குநற் கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட பின்மழுக்
கையி லங்குபொற் கிண்ணம் என்றலால்
அரியை என்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யி லங்குவெண் ணீற்று மேனியாய்
மெய்ம்மை அன்பருன் மெய்ம்மை மேவினர்
பொய்யில் அங்கெனைப் புகுத விட்டுநீ
போவ தோசொலாய் பொருத்த மாவதே.

க-ரை: அரிய பொருளாகிய இறைவன், தம் பொருட்டு மாநுட வடிவில் எளியனாய் வந்து அருட் பார்வை நல்கியும், நன்றி மறந்தவனாயினேன் என்று முன்னைத் திருப்பாட்டில் இரங்கிக் கூறிய அடிகள், அங்ஙனம் நன்றி மறத்தலே யன்றி, ஆட்கொண்டருளிய அப்பெருமானது அருமைப்பாட்டையும் நினையாமல், மிக எளிய பொருளாகவும் கருதலானேனே என்று இத்திருப் பாட்டில் மீண்டும் இரங்கிக் கூறுகின்றார்.

ப-ரை: மை இலங்கு நல் கண்ணி பங்கனே — அஞ்சனம் விளங்குதற்கு ஏதுவாகிய அருள் விழிகளையுடைய அம்மையை ஒரு கூற்றிலுடையவனே, மெய் இலங்கு வெள் நீற்று மேனியாய்—திருமேனியில் விளங்குகின்ற திருவெண்ணீற்றினால் வெண்ணிற முடையாய், வந்து என்னைப் பணி கொண்டபின்—நீ ஞானாசிரியனாக எழுந்தருளி வந்து அடியேனை ஆட்கொண்டருளிய பின்னர், மழ கை இலங்கு பொன் கிண்ணம் என்று அலால்—சிறு குழந்தை தன் கையிலுள்ள ஒளி செய்கின்ற பொற் கிண்ணத்தை எளிமையாக எண்ணுதல் போல எளிமை யாக எண்ணினேன் அல்லாமல், அரியை யென்று உன்னை கருதுகின்றிலேன்—கிடைத்தற்கு அரிய பொருள் ஆவாய் என்று நின்னை நினைந்தேன் அல்லேன், மெய்ம்மை அன்பர் உன் மெய்ம்மை மேவினர்—மெய்யன்பர் நின் வீட்டின்ப மாகிய அழிவில் வாழ்க்கையை அடைந்தனர், என்னைப் பொய்யில் புகுதவிட்டு—சிறியேனைப் பொய்ம்மை வாழ்க் கையில் புகும்படி விட்டு, நீ அங்குப் போவது பொருத்தம்

ஆவதே—நீ சிவ புரத்திற்கு எழுந்தருளுதல் பொருத்தம் ஆகுமா? சொலாய்—கூறியருள்வாயாக என்பது.

வி-ரை : அஞ்சனம் அம்மையின் திரு விழிகளில் தோய்ந்து விளக்கம் பெற்றது என்பார், "மை இலங்கு" என்றார். இலங்கும் கண் என்புழி, எச்சம் காரியப் பொருட்டு. அருட்குணமே சிவ சத்தியின் வடிவம் ஆகும். அவ் அருட் பண்பைத் திருவிழிகள் மூலம் புலப்படுத்தி, உயிர்த் தொகுதிகளை உய்யக் கோடலின், அம்மையின் கண்களை, "நற்கண்" என்றார். நன்மை—அருட்குணத் தால் ஆகிய சிறப்பு. அஞ்சனத்திற்கு விளக்கமும், ஆருயிர்த் தொகுதிக்கு அருளும் நல்கும் கண்களை உடை யவள் என்றமையால், அம்மை, தன்னைச் சார்ந்த பொருள் யாதாயினும், அதனை விளக்கமுறுத்தும், சாரக் கடவ பொருள்களில் கருணை காட்டியும் ஆதரிக்கும் இயல்புடை யாள் என்பது பெறப்படும்.

ஆண்டவன் வலிய வந்து தம்மை ஆட்கொண்டதற்கு ஏது, தம் தவம் அன்று என்பதும், அப் பெருமானிடத்து இயல்பின் அமைந்துள்ள கருணையேயாம் என்பதும் புலப் படுத்துவார், அருள் உருவினளாகிய "கண்ணி பங்கனே" என்றார். ஆண்டவன் ஞானாசிரியனாக எழுந்தருளிய ஞான்று காட்சிப்பட்ட திருக்கோலம், அடிகள் உள்ளக் கிழியின் உருவெழுதியாங்கு, அகக் கண்ணிற்குப் புலப்பட் டமையின், "மெய்யிலங்கு வெண்ணீற்று மேனியாய்" என்றார். மெய், ஆண்டவன் திருமேனி. மேனி—நிறம். ஆண்டவன் செம்மேனி யெம்மானாதலின், திருநீற்றினால் வெண்ணிறம் காணப்பட்ட தென்க. ஆண்டவன், போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலும், யோகியாய் யோக முத்தி யுதவுதலும் உடையனாதலின், அவ்விரண்டு தன்மைகளும் புலப்பட, முறையே, "மையிலங்கு நற்கண்ணி பங்கனே" எனவும், "வெண் ணீற்று மேனியாய்" எனவும் கூறுவாராயினர். வெண் ணீறு—ஞான யோகத்தின் இலச்சினையாகும்.

ஆண்டவன், தம்மை ஆட்கொள்ளுதற்கு முன், அப் பெருமானுடைய பெருமைகளை நூலுணர்ச்சி முகமாக ஆராய்ந்து, அருமை உடையன எனத் தெளிந்து போற்றிய தாம், அவ் விறைவன் வலிய வந்து பணி கொண்ட பின், எளிமையாகக் கருத நேர்ந்ததே என இரங்குவார், "வந்தெனைப் பணி கொண்ட பின்" என்றார். நூலறிவு பேசிய அளவில் இறைவன் பெருமைகளை உணர்தலினும், இறைவன் காட்சி நல்கி ஆட்கொண்ட பின் உணர்தலே சிறந்ததாகும். உலகியல் இதற்கு மாறாகும். மக்களுள் ஒரு தலைவனைப் புனைந்துரைப்பார் வாயிலாகக் கேட்பதினும், நேரிற் காண்டலிற் குறைவே காணப்படும். எல்லாம் வல்ல கடவுளின் பெருமை அங்ஙனமன்று. கேள்வி யளவினும், அநுபவக் காட்சி எத்துணையோ சிறந்ததாகும். அதற்கு மாறாக, நூலறிவிற் கேட்கப்பட்ட அருமையை, அநுபவ உணர்வில் எளிமையாகக் கோடற்கு ஏது, என் அறியாமையே என்று இரங்குவாராயினர். "பணி கொண்ட பின்" என்றதனால், நுண்ணிய இக் கருத்துக்களைப் புலப்பட வைத்தார் என்பது.

அடிகள், தம்மை ஆட்கொண்ட பின், ஆண்டவனது அருமை அறியாமைக்குக் காட்டிய எடுத்துக் காட்டு நினைந்து நினைந்து இன்புறத்தக்கது. மழ என்பது குழந்தையை உணர்த்தும். [1] "வானுந்து மாமதி வேண்டி யழுமழப் போலும்" என்னும் திருக்கோவையிலும் இப் பொருட்டாதல் காண்க. அறியாப் பருவத்துக் குழந்தையின் கையில், அதன் மகிழ்ச்சி கருதிப் பொன்னால் ஆக்கப் பட்ட விலையுயர்ந்த ஒரு கிண்ணம் கொடுக்கப்பட்டால், அதன் அருமையை அக் குழந்தை அறியாவாறு போல என்பார், "மழக்கையிலங்கு பொற் கிண்ணம் என்றலால்" என்றார். இவ் எடுத்துக்காட்டிற் பிறிதோர் உண்மையும் புலனும். அது, பொற்கிண்ணத்தின் அருமை அறியாத அம் மழ விளங் குழந்தை, அதனைக் கை நழுவ விட்டால், அது வீழ்ந்து சிதைந்து விடுமே என்னும் கவலை, தாய்

1. திருக்கோவை 147.

தந்தையர்க்கு ஏற்பட்டு, அங்ஙனம் வீழாவாறு அக் குழந்தை செல்லும் இடன் எல்லாம் தாமும் சென்று, நழுவ விடாமல் தாங்கித் துணை நின்று பாதுகாத்தல் போல, ஆண்டவன் தன்னைத் தமக்குத் தந்த அளவில் அமையாமல், பேணிக் கோடற் பொருட்டுத் தாம் செல்லுழி யெல்லாம் புறம் போந்து பாதுகாக்கும் கடப் பாடும் உடையனுவன் என்பதாம். இது கருதியே பிறி தோரிடத்து அடிகள், [1]"தேனினைச் சொரிந்து புறம் புறந் திரிந்த செல்வமே" என்று அருளிச் செய்வாராயினர். ஆண்டவன், தம் புறம் புறந் திரிதற்கு ஏது, அடிகளுக்குத் தான் அருளிய அருளமுதத்தை அடிகள் நழுவ விடாமல் துய்த்து இன்புறுதற் பொருட்டு என்பது. மழக்கை என்பதற்கு இங்ஙனம் பொருள் கொள்ளாது, அடிகளது மென்மையான கை என்று கூறுவாறும் உளர். அடிகள் தம் கையை அங்ஙனம் கருதி யிருப்பாராயின், அது எடுத்துக் காட்டாதல் அமையாமையின், அது பொருள் அன்மை அறிக.

"அரியை யென்றுனைக் கருதுகின்றிலேன்" என்று பின்னர்க் கூறப்பட்டிருத்தலின், "என்று அல்லால்" என்பது என்று எளிமையாகக் கருதியதன்றி என்னும் பொருட்டாம். அரியை— பெறுதற்கரியை. "மெய்மை யன்பர் உன் மெய்மை மேவினர்" என்பதற்கு, [2]முன் உரைத்தாங்கு உரைத்துக் கொள்க. மெய்யன்பர் மெய்மையாகிய வீட்டின்பத்தை எய்தினராக, அன்னர் குழுவுட்பட்ட அடியேனைப் பொய்மையாகிய இவ் வுலக வாழ்க்கையில் இருத்திக் கைவிட்டுச் சேறல் நின் அருட் குணத்திற்குப் பொருந்துமா என்பார், "பொய்யில் புகுத விட்டுப் போவது பொருத்தமாவதே" என்றார். அங்குப் போவதெனை இயைக்க. அங்கு—சிவபுரமாகிய அவ் விடத்து. போவது—போதல்; தொழிற் பெயர். பொருத்த மாவதே என்புழி, ஏகாரம் வினாப்பொருட்டு. என்னை விட்டு நீ போவதோ என்றதனால், நின் காட்சியில் ஈடு

1. திருவாசகம், பிடித்த பத்து, 9. 2, 91-ஆம் திருப்பாட்டு உரை.

பட்டிருக்கப் பெறின், இவ் வுலக வாழ்க்கையும் எனக்கு இனிதாகும் என்று அடிகள் கருதினரென்பது குறிப்பிற் கொள்ளத் தக்கது. [1] "நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே யிருக்கப் பெறின்" என்பதும் அடிகள் அருண்மொழி. "பொருத்தமாவதே" என வினு வடிவில் கேட்ட அடிகள், பொருத்தமாகாது என்று ஆண்டவன் திருவுள்ளக் குறிப்புணராமல் தாமே தீர் மானித்தல் தக்கதன் றெனக் கொண்டு, அவ் வினுவிற்கு உரிய விடையை ஆண்டவனே அருளல் வேண்டுமென் பார், "சொல்லாய்" என்றார். சொல்லாய், முன்னிலே ஏவல் வினை முற்று.

இதன்கண், "மழக்கை யிலங்கு பொற் கிண்ணம்" என்ற எடுத்துக் காட்டிஞல், ஆண்டவன் பெறுதற்கரியன் என்பதும், "மெய்ம்மையன்பருன் மெய்ம்மை மேவினர்" என்றதனுல், அதீதமாகிய ஆனந்தத்தின் இயல்பும் பெறப் படுதலின், ஆனந்தாதீதம் என்னும் பதிகம் நுதலிய பொருளும், "பொய்யிற் புகுதவிட்டு" என்றதனுல், வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருளும் புலனுதல் அறிக.

93\. பொருத்தம் இன்மையேன் பொய்ம்மை யுண்மையேன்
போத வென்றெனைப் புரிந்து நோக்கவும்
வருத்தம் இன்மையேன் வஞ்சம் உண்மையேன்
மாண்டி லேன்மலர்க் கமல பாதனே
அரத்த மேனியாய் அருள்செய் அன்பரும்
நீயும் அங்கெழுந் தருளி இங்கெனை
இருத்தி னய்முறை யோஎன் எம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவன் அருமைப் பாட்டை உணராமையோடு, மிக எளிய பொருளாகவும் நினையலானேனே என்று இரங்கிய அடிகள், இத் திருப் பாட்டில் அங்ஙனம் என் அறியாமையால் நினைந்ததை உணர்ந்தும், என்னை வருக என்று விரும்பி, அருள் நோக்கம்

1 திருவாசகம், திருச்சதகம் 2.

செய்யவும், அப்பெருமானை அணுகுதற்கு முயலாமல் வஞ்ச வினைக் கொள்கலனாக வாழ்ந்திருக்கலானேனே என்று தம் வினை வலியை நினைந்து துன்புறுகின்றார்.

ப-ரை: கமல மலர்ப் பாதனே—செந்தாமரை மலர் போன்ற திருவடிகளையுடையாய், அரத்த மேனியாய்—செந்நிறமான திருமேனியையுடையாய், என் எம்பிரான்—எனக்குச் சிறப்புரிமையுடைய எங்கள் தலைவனே, பொருத்தம் இன்மையேன்—திருவருட் பேற்றிற்கு உரிய தகுதி இல்லாதேன், பொய்மை உண்மையேன்—பொய் யொழுக்கத்தையும் உடையேன், என்னைப் போத என்று புரிந்து நோக்கவும்—அத்தகைய சிறியேனாகிய என்னை வருக என்று விரும்பி அருள் நோக்கம் நல்கவும், வருத்தம் இன்மையேன்—வருதற்கு முயற்சி இல்லாதேன், வஞ்சம் உண்மையேன்—ஏமாற்றும் குணமுடையேன், மாண்டிலேன்—அதனால் இறந்து ஒழிந்தேனும் அல்லேன், அருள் செய் அன்பரும் நீயும் அங்கு எழுந்தருளி—நின்னால் அருள் செய்யப்பட்ட மெய் அன்பரும் நீயும் சிவ புரத்திற்கு எழுந்தருளிச் சென்று, இங்கு என்னை இருத்தினாய்—இப் பொய்யுலக வாழ்வில் சிறியேனை இருக்கப் பணித்தாய், முறையோ—இது நியாயமாகுமா? வம்பனேன் வினைக்கு இறுதி இல்லையே—பயனிலியாகிய என் வினைக்கு அழிவு கிடையாதா? என்பது.

வி-ரை: ஆண்டவன் ஞானாசிரியனாக எழுந்தருளிய பொழுது, அடிகள் விரைந்து திருவடிக்கண் வீழ்ந்து வணங்கினமையின், முதலில் திருவடிக்காட்சியும், பின்னர் எழுந்து நின்று கண் குளிரத் தரிசித்தமையின், அடுத்து அப்பெருமானது திருமேனிப் பொலிவும், தம் உள்ளத்தில் விளக்கம் உற்றனவாக, முறையே, "மலர்க் கமல பாதனே" எனவும், "அரத்த மேனியாய்" எனவும் கூறியருளினர். மேலும் காட்சி அளவில் திருமேனியில் ஈடுபட்டமையான், கட் பொறிக்குப் புலனாய நிற வொளியைக் குறித்து, "அரத்த மேனியாய்" எனவும், திருவடிக்கண் தம் தலை தோய வீழ்ந்து வணங்கினமையான், கட்புலனும், மெய்ப்

பொறியும் முறையே, உருவத்தினும் ஊற்றின்பத்தினும் ஈடுபட்டமை குறித்து, "மலர்க் கமல பாதனே" எனவும் கூறினர் என்பதுமாம். கமல மல்ரை ஒப்புக் கூறின மையால், மென்மைத் தன்மையாகிய ஊறும், நிறவொளி யாகிய உருவமும் கொள்ளப்பட்டன.

பொருத்தம்—தகுதி. ஆண்டவன் அருட் பேற்றிற்கு உரிய தகுதியாவது, சரியை முதலிய உண்மைத் தவ ஒழுக்கம் ஆகும். அஃது இல்லாமை, அப்பொழுது அருட் பேற்றிற்கு ஆளாக்காது ஆயினும், அதனை ஒருகால் மேற்கொண்டு உய்தி பெறுதற்குத் தட்டின்றும். அம் மட்டில் அன்றி, அத் தவ ஒழுக்கத்திற்கு மாருகப் பொய் ஒழுக்கத்தையும் உடையன் ஆயினேனே; எவ்வாறு உய்வேன் என்பார், "பொருத்தம் இன்மையேன், பொய்மை உண்மையேன்" என்றார். "பொய்மை உண்மையேன்" என்புழி, எச்ச வும்மை தொக்கு நின்றது. 1 "நல்லது செய்தல் ஆற்றீராயினும், அல்லது செய்தல் ஓம்புமின்" என்றபடி, நல்லது செய்யவில்லை யானல், அதனல் விளையும் இன்பப் பேறு இழந்ததாக முடியும். பின் ஒரு கால் நல்லது செய்தற்கும் தட்டின்றும். அம்மட்டில் அன்றி, அல்லதும் செய்யின், துன்ப நுகர்ச்சி யோடு, பிறிதொருகால் உய்தி பெறுதற்கும் வழியின்ருய் முடியும் என்பது குறிப்பு.

தகுதியின்மையோடு பொய்யொழுக்கமும் உடையனுக இருத்தலை, உயிர்க்கு உயிராக நின்று உணர்ந்து வைத்தும், கருணை காரணமாக அருட் குரவனுக எழுந்தருளி, வண்ணப் பணித்தென்னை வருக என்று விரும்பி அழைத்து, அருள் நோக்கம் நல்கினுய் என்பார், "போதவென் றெனைப் புரிந்து நோக்கவும்" என்றார். அற நோக்கமும் மற நோக்கமும் என இரு திறத்து நோக்கங்களுள், எனக்கு நல்கியது அற நோக்கம் என்பார், "புரிந்து நோக்கவும்" என்றார். புரிதல்—விரும்புதல். உலகியலில் ஒரு தலைவன் தன் கீழ்ப்பட்ட ஒருவனை வாவென அழைத்தற்கும்

1. புறநானூறு.

பார்த்தற்கும் ஏது, அருளும் ஆகலாம்; வெகுளியும் ஆகலாம். அவ்வேது இன்னதெனை அத்தலைவன் முகக் குறிப்பால் அறிதல் கூடும்; அடுத்தது காட்டும் பளிங்கு போல முகம் காட்டும் ஆதலின். வெகுளி காரணம் என்பது உணர்ந்தால், என்ன தீங்கு நேருமோ என ஐயுற்று, அத் தலைவனை அவன் அணுகுதற்கு மனம் ஒருப்படான். அருள் காரணம் என்பது புலப்பட்டால், சிறிதும் தாழாது நெருங்க முயல்வான். இம்முறையில், ஆண்டவன் திருவுள்ளக் குறிப்பு, அருள் காரணமாக நிகழ்ந்தது என்பதை, " புரிந்து நோக்கவும் " என்பதனால் உணர்ந்த அடிகள், சிறிதும் தாழாது, இறைவனை அணுகிப் பணி புரியும் கடப்பாடுடையராகவும், அக்கடமை குறித்து முயலாமைபற்றி இரங்குவாராய், " வருத்தமின்மையேன் " என்றார். வருத்தம்—முயற்சி. 1 " ஆற்றின் வருந்தா வருத்தம் " என்புழி, அப் பொருட்டாதல் அறிக. அங்ஙனம் முயற்சி மேற்கொள்ளாமல் இருத்தல் மடிமைக் குற்றத்தளவில் அமையும். அம்மட்டில் இல்லாமல், உண்மையை மறைத்துக் காட்டி ஏமாற்றும் வஞ்சகச் செயலும் உடையன் ஆயினேன் என்பார், " வஞ்ச முண்மையேன் " எனவும் கூறினர்.

இனி, திருவருட் பேற்றிற்கு உரிய தகுதியில்லேனா யினும், தகுதி பெற முயலலாம். அம் முயற்சியும் இல்லேனாயினேன் என்பார், " பொருத்தமின்மையேன் வருத்தமின்மையேன் " எனவும், பொய் ஒழுக்கம் உடையேன் ஆயினும், அதனை உயிர்க்கு உயிராக விளங்கும் ஆண்டவன் அறியக்கூடுமே என அஞ்சிப் பிழை பொறுக்க வேண்டலாம்; அங்ஙனம் வேண்டாமல் அவ் வொழுக்கத்தையும் மறைத்து ஏமாற்ற நினைக்கின்றேன் என்பார், " பொய்மை யுண்மையேன் வஞ்ச முண்மை யேன் " எனவும் அடிகள் கருதினர் எனக்கொண்டு, நிரனிறைப் பொருள் கோளாகக் கோடலுமாம்.

1. திருக்குறள் 468.

எவ்வாற்ருனும் உய்தி பெறுதற்கு உரிய நெறி காணுமைக்கு ஏதுவாயது தீவினைப் பயனுகிய இவ் வூனுடலாதலின்; இதனை ஒழித்துவிட்டால், பிற்றைப் பிறப்பிலாவது திருவருட் பேற்றிற்கு இலக்காகலாமே என்பார், "மாண்டிலேன்" என்ருர்.

உலகத்தில் ஈகை, இரப்போன் தகுதி குறித்தே நிகழும் என்பது இன்று. ஈவோன் தகுதி குறித்தும் நிகழ்தல் உண்டு. சேர அரசனிடத்து ஔவை சுரப்பாடு கேட்க, அவன் பொன்னுடு கொடுத்தான் என்பர். "இரப்பவர் என் பெறினும் கொள்வர் கொடுப்பவர், தாமுணர்வர் தங்கொடையின் சீர்". இம்முறையில் அடிகள், திருவருட் பேற்றிற்கு உரிய தகுதி தம்பால் இல்லை என்பதைத் தெளிந்து தம் நிலைக்கு இரங்கினுர்; ஆயினும், தம்மை வலிந்து ஆட்கொண்டு அடியரிற் கூட்டிய ஆண்டவனது அளவில்லாத பெருமைக்கு ஏற்ப, அப் பெருமானே தம் வினை மாசு ஒழித்து அழைத்துக் கொள்ளல் முறையாகவும், அங்ஙனம் செய்யாமை குறித்துப் பின் வருமாறு இரங்குவார் ஆயினர்.

"அருள் செய் அன்பர்" என்றதனுல், நின்னுல் ஆட்கொள்ளப்படுங்கால், யான் மாத்திரம் நின் அருட்கு இடனுயது இல்லையோ என்பது அடிகள் குறிப்பு. ஒன்று அடியார் சூழலில் என்னை இருத்தலாம்; அல்லது அவரை யெல்லாம் சிவபுரத்திற்கு உய்த்து, நீ சிறிது தாழ்த்து, ஆட்கொள்ளப்பட்ட என்னைத் தகுதிப் படுத்துப் பின் அழைத்துச் செல்லலாம். அங்ஙனம் ஏதும் செய்யாது, யான் காண அம் மெய்யன்பரோடு நீயும் எழுந்தருளிச் சென்றனையே என்பார், "அன்பரும் நீயும் அங்கெழுந் தருளி" என்ருர். "நீயும் அங்கெழுந்தருளி" என்றது, குழந்தையன்பிற் கூறிய மொழியாகும். ஓர் இன்ப நிலையத்திற்குச் செல்லும் தாய் தந்தையர், தம் மக்கள் அனைவரையும் உடன் அழைத்துச் செல்லுங்கால், ஒரு மகனை விட்டுச் சேறல் தகாது. எக் காரணத்தாலாவது அங்ஙனம் விட நேர்ந்தால், "நீ பின்னர் வருக" என்று

கூறலாம். அப்படிக் கூறுதல், அம் மகனுக்குச் சிறிது ஆறுதலாக இருக்கும்; அதுவும் இன்றி, "நீ இங்கு இருக்க" என்று இருத்திச் சேறல், இருமுதுகுரவர் அன்பிற்கு மாறும் அன்றோ? அங்ஙனமே, ஈண்டு, அடிகள் தம்மை விட்டு, ஏனை அன்பருடன் ஆண்டவன் சிவ புரத்திற்கு எழுந்தருளினாலும், "பின் வருக" என்று பணியாமல், "இங்கு இருக்க" என்று கட்டளையிட்டுச் சென்றது, தமக்கு வருத்தம் விளைத்ததாகக் கொண்டு, "இங்கெனை இருத்தினாய் முறையோ" என்றார். ஈண்டு, "என் எம்பிரான்" என்றது, ஏனையடியார்க்குத் தலைவனாதலேயன்றி எனக்குச் சிறப்புரிமைத் தலைவன் அன்றோ? அங்ஙனமாகவும், இங்ஙனஞ் செய்தல் முறையாகுமோ என்னும் குறிப்புத் தோன்ற நின்றது. இவ் வுலக வாழ்க்கையை உவர்த்தும், இறையடி நீழல் பெருமலும் பயனின்றி இருத்தல்பற்றி, அடிகள், தம்மை "வம்பனேன்" என்றார். ஒருவாறு என் வினையெச்சம் இப் பேற்றிற்குத் தடையாகுமாயின், நின் அருள்நோக்கிற் பட்டும், அவ் வினைக்கு அழிவு இல்லையேல், இனி, அதற்குத்தான் முடிவு இல்லையோ என்பார், "வினைக்கு இறுதி யில்லையே" என்றார். இல்லையே என்புழி, ஏகாரம் வினாப்பொருட்டு.

இதன்கண், "அருள் செய் அன்பரும் நீயும் அங் கெழுந்தருளி" என்றதனால் குறிக்கப்பட்ட வீட்டின்பம் அதீத நிலையினதாதலின், அதுவே பெறத்தக்கது என்பது பெறப்படுதலின், ஆனந்தாதீதம் என்னும் பதிகம் முதலிய பொருள் புலனாதல் அறிக.

94. இல்லை நின்கழற் கன்ப தென்கணே
ஏலம் ஏலுநற் குழலி பங்கனே
கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்
டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்
எல்லை யில்லைநின் கருணை எம்பிரான்
ஏது கொண்டுநான் ஏது செய்யினும்
வல்லை யேயெனக் கின்னும் உன்கழல்
காட்டி மீட்கவும் மறுவில் வானனே.

க-ரை: முன்னைத் திருப் பாட்டில் ஆண்டவன் அருள் நோக்கம் நல்கியும் முயலாமல் பொய்யும்வஞ்சகமும் உடையவனாய் வாழ்ந்திருக்கலானேனே என்று வருந்திக் கூறிய அடிகள், இத் திருப்பாட்டில் ஆண்டவனை நோக்கி, என்னை அரிதின் முயன்று அன்பனாக்கினாய் ஆதலானும், நின் கருணைக்கு எல்லை யில்லை யாதலானும், என் பணி யாதாயினும், அதனை யேற்று நின் திருவடிகளை மீட்டும் காட்சிப்பட அளித்துக் காத்தருளல் வேண்டும் என வேண்டுகின்றார்.

ப-ரை: மறு இல் வானனே—குற்றமற்ற நுண்ணிய பரவெளியில் உள்ளவனே, ஏலம் ஏலும் நல் குழலி பங்கனே—மயிர்ச்சாந்து அணிந்த அழகிய கூந்தலையுடைய அம்மையை ஒரு பால் உடையவனே, எம்பிரான்—எம் பெருமானே, நின் கழற்கு அன்பு என் கண் இல்லை—நின் திருவடிக் கண் மெய்யன்பு என்பால் இன்று, கல்லை மென்கனி ஆக்கும் விச்சை கொண்டு—வலிய கல்லைக் கனிந்த பழம் ஆக்கும் வித்தையிற் பயின்று, என்னை நின்கழற்கு அன்பன் ஆக்கினாய்—அடியேனை நின் திருவடிக்கு அன்புடையனாகச் செய்தனை, நான் ஏது கொண்டு ஏது செய்யினும்—யான் எதனைக் கருவியாகக் கொண்டு எச் செயலைச் செய்யினும், நின் கருணை எல்லை இல்லை—நின் பேரருளுக்கு வரம்பு கிடையாது ஆதலின், எனக்கு இன்னும் உன் கழல் காட்டி மீட்கவும் வல்லையே—சிறியவனாகிய எனக்கு மீண்டும் நின் திருவடிக் காட்சியளித்து இவ்வுலக வாழ்க்கையினின்று திருப்பவும் ஆற்றல் உடையை ஆவாய் அன்றோ? என்பது.

வி-ரை: மறுவில் வான்—நுண்ணிய ஞானப் பரவெளி. பருப்பொருளாகிய வானின் வேறு என்றற்கு, "மறுவில்" என்னும் அடை புணர்க்கப்பட்டது. கோள், நாள் முதலிய மண்டலங்கள் இல்லாமல், தூய ஞான மயமாக வுண்மையின் மறுவிலதாயிற்று என்க. அதனையே ஈண்டு, "மறுவில் வான்" எனவும், ஆங்கு விளங்கும் இறை

வனைக் குறித்து, "மறுவில் வானன்" எனவும் கூறி யருளினர். இஃது இறைவனது சிறப்பு இலக்கணம் கருதிக் கூறியபடியாம். இறைவனுக்கு ஆகமங்களிற் கூறப்பட்ட சிறப்பு, பொது என்னும் இருவகை இலக் கணங்களுள் சிறப்பாவது, குணம், குறி இன்றி, எல்லா வற்றையும் கடந்த நிலையாகும். பொதுவாவது சத்தி யுடன் கூடி ஐந்தொழில்களையும் செய்யும் நிலையாகும். "ஏலம் ஏலும் நற்குழலி பங்கனே" என்றது பொது இலக்கணங் கருதிக் கூறியபடியாம்."

"அன்பது" என்புழி, அது, பண்டறி சுட்டாக நின்று, வீட்டின்பத்திற்கு ஏதுவாகிய மெய்யன்பை உணர்த்தும். அன்பு என்பது ஒருவருக்குத் தொடர்புடை யாரிடத்து உண்டாகும் காதலாகும். இஃது உலகியலில் தாய், தந்தை, மனைவி, மக்கள் முதலியோரைப் பற்றி உண்டாகி வளர்ந்து, அன்னரெல்லாரும் உண்மையில் தொடர்பு இலராய் ஒழிய, முடிவில், என்றும் நிலையான தொடர்புடைய ஆண்டவனைப் பற்றி நிலைபெறுவதாகும். இந் நிலையில் இது மெய்யன்பாகும். ஆகவே, அன்பு நிகழ்வதென்றால் அதற்கு இடனும் வினை முதலும் இன்றியமையாதன. ஈண்டு, இடன் தாம் முடிவாகக் கண்ட இறையடியாதலின், "நின் கழற்கு" எனவும், வினை முதலாகத் தம்மைக் குறித்து, "என் கணே" எனவும் கூறினர். பொருளுடைப் பெரியோன் ஒருவன் தன்பாற் பொருளுண்டு என்று கூற நேர்ந்தால், அக் கருத்துக் குறிப்பிற் புலப்படக் கூறுவன் அன்றி, என்பாற் பொருளுண்டு என்று வெளிப்படக் கூற நாணுவன். பொருளின்மை கூற நேர்ந்தால், "யான் பொருள் உடையேனல்லேன்" என வெளிப்படக் கூறுவன். இது, 1 "பணியுமா மென்றும் பெருமை" என்றபடி, பெருமைக் குணத்தின் பயனாகும். இம் முறை பற்றியே, தம்பால் அன்பு இன்மை கூறத் துணிந்த அடிகள், வெளிப்படையாக, "இல்லை நின்கழற் கன்பதென் கணே" என்று கூறுவா ராயினர்.

---

1. திருக்குறள் 978.

ஆண்டவனே, நின் திருவடிக்கண் உண்மை அன்பில் லேனாகிய என்னை, அன்பன் ஆக்க வேண்டுமானால், கல்லினும் வலிய என் நெஞ்சத்தைக் குழைவித்தன்றோ செய்தல் வேண்டும். செயற்கரிய இச் செயலைச் செய்தற்குப் பொதுவாக எல்லா ஆற்றலும் உடைய நீயும் ஓர் அரிய வித்தையிற் சிறப்பு முறையில் பயின்ற பின்னரே, அதன் முதிர்ச்சியினால் தலைப்பட்டிருக்கலாம் என்று எண்ணுகின்றேன் என்பார், "கல்லை மென்கனி ஆக்கும் விச்சை கொண்டு" என்றார். வன்மையோடு முதிரும் பழங்களின் நீக்குதற்கு, "மென்கனி" என்றார். "மென்கனி" என்றதனால், வலிய கல் என்பது பெறப்படும். கல்லினும் மென்மைத் தன்மையுடைய வகையுமுண்டு. விச்சை—வித்தை. ஆண்டவன், பொதுவாக எல்லா ஆற்றலும் உடையனாயினும், அன்பர்க்கு உபகரித்தற் பொருட்டு மேற்கொள்ளும் இன்னோரன்ன அரிய செயற்கும், சிறப்பு முறையில் இனமாகிய வித்தையில் திறமை படைத்தமையால் அதிகாரி ஆயினான் என்பது. கல்லைக் கனி ஆக்கிய வரலாறு இல்லையாயினும், மலையை வில்லாக வளைத்த வரலாறு உண்மையின், கனியாக்கும் திறமையும் படைத்திருக்கலாம் என்பது குறிப்பு. அடிகள், திருக்கோவையில், [1] "தெவ்வரை மெய்யெரிகாய் சிலையாண்டு என்னை யாண்டு கொண்ட, செவ்வரை மேனியன்" என்று அருளிச் செய்திருத்தலும், அதற்கு "வலியனவற்றை வயமாக்கிப் பயின்று, பின் என்னை ஆண்டான் என்பது போதர, 'காய்சிலையாண்டு என்னையாண்டு கொண்ட' வென்றார்; என்னைத் தனக்கு அடிமை கொள்ளுதல் காரணமாகப் பிறிதொன்றின் மேலிட்டுக் கல்லை வளைத்தான்; என் நெஞ்சை வளைத்தல் காரணமாக அல்லது தனக்கு ஒரு பகையுண்டாய்ச் செய்ததன்று போலும் என்பது கருத்து; 'கல்லை மென்கனியாக்கும் விச்சை கொண்டென்னை நின் கழற்கன்பனாக்கினாய்' என்பதும் அது" என்று பேராசிரியர் எழுதிய உரைக் குறிப்பும் காண்க. கல்லை வளைத்த புராண

1. திருக்கோவை, செ. 114.

கதை யுண்மையால், ஆண்டு, "சிலையாண்டு" எனச் செயற்றிறமையில் வைத்தும், கல்லைக் கனியாக்கிய கதை இன்மையால், "கல்லை மென்கனி யாக்கும் விச்சை கொண்டு" என, ஈண்டு வித்தைத் திறமையில் வைத்தும் கூறியருளினார் என்பது.

யான் அன்பு செய்தற்கு ஆற்றல் இல்லேனாயினும், நின் ஆற்றலினால் என்னை அன்பன் ஆக்கினாய் என்பார், "நின் கழற்கன்பனாக்கினாய்" என்றார். நின்னால் ஆக்கப்பட்ட அன்பனாகிய யான், இனி, மன மொழி மெய்களுள் எதனைக் கருவியாகக் கொண்டு யாது செய்யினும், எல்லையில்லாத நின் கருணைக் குணத்தால், அதனையே நின்னை அடைதற்கு உரிய தவமாக ஏற்றருளும் கடமையுடையை என்பார், "ஏதுகொண்டு நான் ஏது செய்யினும் நின் கருணை எல்லை யில்லை" என்றார். ஏது செய்யினும் என்பது, மன மொழி மெய்களால் ஆம் பணிகளுள் எச் சிறுபணி செய்தாலும் என்னும் பொருட்டு. ஆண்டவன் கருணை இத்துணைப் பணி செய்தால்தான் ஏற்றருளும் என்பது இன்றி, எல்லை யற்ற நிலையில் உண்மையால், மிகச் சிறுபணியையும் மிகப் பெரும் பணியாகக் கொண்டு பயன் அளிக்கவல்லது என்பது கருத்து.

ஆண்டவன், முன்னர்க் குருந்தமரத்து நிழலில் எழுந் தருளித் திருவடிக் காட்சி அளித்த அளவில் மறைந்து விட்டமையால், அப்பெருமான் திருவடிப் பேற்றிற்குத் தம் தவச்செயல் தக்கதாக இல்லை எனக் கண்ட அடிகள், "இறைவ, அரிதின் முயன்று என்னை அன்பன் ஆக்கி விட்டமையாலும், நின் கருணைக்கு எல்லையில்லையாதலாலும், இனி யான் ஏது கொண்டு ஏது செய்யினும், அதனையே, [1] "இயன்றதோர் பொழுதின் இட்டது மலராச், சொன் னது மந்திரமாக என்னையும் இடர்ப் பிறப் பிறப்பெனும் இரண்டின் கடற்படாவகை காத்தல் நின் கடனே" என்று கூறியபடி, நின்னை அடைதற்கு உரிய தவச் செயலாகக் கொண்டு, மீட்டும் நின் திருவடிக் காட்சியளித்து, இவ்வுலக

1. பட்டினத்தார், திருக்கழுமல மும்மணிக்கோவை, செ. 10.

வாழ்க்கையினின்றும் மீட்டருளல் வேண்டும்; இச் செயல் நினக்கு அரிது அன்று என்பார், "வல்லையே எனக் கின்னும்முன் கழல் காட்டி மீட்கவும்" என்றார். "வல்லையே" என்புழி, ஏகாரம் தேற்றம். 'இன்னும்' என்றதனால் முன்னரும் என்பது பெறப்படும்.

இதன்கண், "கல்லை மென்கனி ஆக்கும் விச்சை கொண்டு என்னை நின் கழற்கன்பனாக்கினாய்" என்றதனால், அதீதமாகிய வீட்டின்பத்திற்கு அதிகாரியாதலும், "எல்லை யில்லை நின் கருணை" என்றதனால், அப்பேற்றிற்குச் சிறந்த சாதனம் ஆண்டவனது அளப்பரிய கருணையே என்பதும் பெறப்படுதலின், ஆனந்தாதீதம் என்னும் பதிகம் நுதலிய பொருள் குறிப்பிற் புலனாதல் அறிக.

95. வான நாடரும் அறியொ ணாதநீ
மறையில் ஈறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவனை நோக்கி, எல்லை யற்ற கருணையுடைமை ஆதலின், என் பணி யாதா யினும், அதனையேற்று மீட்டும் காட்சியளித்துக் காத்தருள வேண்டும் என்று வேண்டிய அடிகள், அதற்கு ஏதுக் கூறு முகமாக, காண்டற்கு அரிய பொருளாகிய நீ எளியேனை முன்னர் ஆட்கொண்டு உபதேசித்ததும், உலகப் பற்று ஒழிந்து நன்னிலை பெறுதற் பொருட்டு அன்றோ என இத் திருப்பாட்டில் அருளிச்செய்கின்றார்.

ப-ரை: வான நாடரும் அறிய ஒண்ணாத நீ—விண் ணுலகத்தவரும் அறிய இயலாத நீ, முன் மறையில் ஈறும் தொடர ஒண்ணாத நீ—பண்டை மறைகளின் முடிவாகிய

ஞானக் கூறும் தொடர்ந்து பற்ற இயலாத நீ, ஏனை நாடரும் தெரிய ஒண்ணாத நீ—மற்றைய உலகத்தவரும் தெரிய இயலாத நீ, என்னை ஊனை நாடகம் ஆடுவித்தவா —சிறியேனை ஊனுடலைக் கொண்டு கூத்தாடும்படி செய்தவாறும், 'இன்னிதாய் ஆண்டுகொண்டவா—பின் இனிமையுற ஆட்கொண்டருளியவாறும், நான் உருகி உன்னைப் பருக வைத்தவா—யான் உள்ளம் உருகி நின் அருளமுதை உண்ணும்படி செய்தவாறும், ஞான நாடகம் ஆடுவித்தவா—அதனால் ஞானக்கூத்து ஆடும் படி செய்தவாறும், வையகத்து உடைய இச்சை நையவே —இவ்வுலக வாழ்க்கை சம்பந்தமான அவா ஒழிதற் பொருட்டாம் அன்றோ? என்பது.

வி-ரை: ஆண்டவனது அரிய தன்மையைக் கூறப் புகுந்த அடிகள், தேவருள் ஒருவன் என்று கூறும் உபசார மொழியை உண்மை எனக் கொண்டு, தமக்கு எளியன் என்று இறுமாக்கும் அவ்விண்ணவர் காட்சிக்கு அரியன் என்பார், "வான நாடரும் அறியொணாத நீ" என்றார். நாடரும் என்புழி, உம்மை சிறப்புப் பொருட்டு. "ஈறும் நாடரும்" என்று பின் வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும். "அறிய ஒண்ணாத" என்புழி, அறிய என்னும் வினை யெச்சத்தீறு தொக்கும், ஒண்ணாத என்பது இடைக் குறையாகவும் நின்றன. பின் வருவனவற்றிற்கும் ஈதொக்கும். அறிதல்—காட்சியளவையிற் காண்டல்.

மறை நூல், கன்மக் கூறு, ஞானக் கூறு என இருதிறப் படும். பின்னது சிறந்தது என்ப. அதனையே, "மறையி லீறும்" என்றார். அது கூறவே, முன்னதற்கும் ஆம் என்பது. மறை முடிவாகிய ஞானக்கூற்றில் இறைவ னுடைய பண்புகள் பல திறமாகப் பாராட்டப்படும், கடைபோக அளவிட்டு உரைக்க இயலாமையால் ஒழி வடைந்தன என்பார், "மறையிலீறு முன் தொடரொணாத நீ" என்றார். தொடர்தல்—பன்னிப்பன்னி மேற் சேறல். இனி, "ஈறு முன்" என்பதை, இறுதியும் முதலும் எனக் கொண்டு, மறையின் முடிவும் முதலும் ஆகிய ஞானக் கூறு கன்மக் கூறுகளுக்கு ஆக்குதலுமாம்.

எனை நாடர்—வான நாடர் அல்லாத மண்ணுலகத்த வரும் கீழுலகத்தவருமாம். தெரிதல்—நூலுணர்வாற் காண்டல். தேவர், இறைவனைத் தமக்கு அணியனாகக் கருதி, நூலுணர்வைப் பொருட்படுத்தாமல், காட்சியிற் காணும் தகுதியுடையேம் என்று இறுமாந்து இருத்தலின், அவர்க்கு அறியொணாதவன் எனவும், மக்கள் முதலியோர், மறை ஆகமங்களால் ஆராய்ந்து தெளியலாம் என்னும் கருத்துடையராதலின், அவர்க்குத் தெரியொணாதவன் எனவும், மறைகள் இறைவன் குணங்களைக் கூறி முடிவு காண முயறலின், அவற்றால் தொடரொணாதவன் எனவும் கூறப்பட்டன. இங்ஙனம் யாவர்க்கும் எவைக்கும் அரியனாகிய பரம்பொருளாவான், கருணை காரணமாகத் தமக்கு எளியனாக வந்து செய்த பேருதவிகளை நெஞ்சார நினைந்து, நாவாரப் புகழ்ந்து பாராட்டத் தொடங்குகின்றார்.

யான் பண்டு செய்த வினைக்கு ஈடாக, மாயையி னின்றும் ஊனுடலை உதவி, அதன் தொடர்பாகத் தந்தை, தாய், தமர், தாரம், மகவு எனும் பரிவாரங்கள் சூழ, இவ் வுலகமாகிய அரங்கில் நிலையுதல் இல்லாத வாழ்க்கைக் கூத்து ஆடும்படி புரிவித்தவாறும் என்பார், "ஊனை நாடகம் ஆடுவித்தவா" என்றார். ஊன், ஆகு பெயராக நின்று உடம்பை உணர்த்தும். "கொண்டு" என்னும் ஒரு சொல் வருவித்துரைத்தல் வேண்டும். "ஆடுவித்தவா" என்புழி, ஆறும் என்பதன் ஈறும் எண்ணும் மையும் தொக்குநின்றன. பின் வருவனவற்றிற்கும் இஃது தொக்கும்; உலக வாழ்க்கையில் ஈடுபடச் செய்தவாறும் என்பது கருத்து. இறைவன் உயிர்க்குச் செய்யும் உதவி களுள் இதுவே முதலில் எண்ணத்தக்கது. 'காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப் போல்' மருட் கேவல நிலையில் உள்ள உயிர்க்கு அறிவு விளக்கம் பெறுதற் பொருட்டுக் கன்மத்துக்கு ஈடாக, உடல் முதலியவற்றை உதவித் தவச் செயல்களுக்கு ஆளாக்கி, உய்விக்கத் தொடங்கும் முதல் உபகாரம் இதுவாம் என்பது கருத்து. அடுத்துச் சரியை முதலிய

தவங்களால் தூய்மை எய்திய உயிரின் பக்குவங் கண்டு, இறைவன் ஆட்கொள்ளுதல் நிகழ்வதாகும். அந்நிலையில் அடிகள், ஆண்டவன் ஞானாசிரியனாக எளிமையில் எழுந்தருளி, ஞானோபதேசஞ் செய்து தம்மை ஆட்கொண்டருளிய அருமையை வியந்து, "என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா" என்றார். "இனிது" என்பது "இன்னிது" என விரித்தல் விகாரம் பெற்றது, "இன்னிதாய்" என்புழிச் செய்தென் எச்சத்தை செயவென் எச்சமாகத் திரித்துக் கொள்ளல் வேண்டும். இனிது என்பது மாநுட வடிவில் ஞான குரவனாக எளிமையில் எழுந்தருளிக் காட்சியளித்ததைக் குறிக்கும்.

காட்சியளித்து உபதேசித்த அந் நிலையில், அடிகள் நெஞ்சம் உருகி, ஆண்டவனை அமுத வடிவிற் பருகி இன்புற்றனராக, அந் நிலையும் அப் பெருமான் அருளாற் கிடைத்த பேறு ஆதலின், "உருகி நான் உனைப் பருக வைத்தவா" என்றார். பருகுதற்கு உருகுதல் ஏதுவாம் என்க. உள்ளம் உருகி, உணர்வு பெருகினால் அருளமுதைப் பருகலாம் என்பது அடிகள் கருத்து. [1] "உருகிப் பெருகி யுளங் குளிர முகந்துகொண்டு, பருகற் கினிய பரங் கருணைத் தடங் கடலை" என்று பிறிதோரிடத்துக் கூறிய அடிகள் அருண்மொழியும், [2] "உரமென்னும் பொருளானை உருகிலுள்ளுறைவானை" என்னும் தமிழ் மறையும் ஈண்டு நினைக்கத் தக்கன.

உள்ளம் உருகி அருளமுதைப் பருகிய நிலையில் உலகியலை மறந்து, தம் வயம் இழந்து, எல்லாம் சிவமய மாகக் கண்டு, அக் காட்சியால் ஆனந்தக் கூத்து ஆடும்படி இறைவன் அருளிய பேருதவியை நினைந்து, "ஞான நாடகம் ஆடுவித்தவா" என்றார். [3] "நாடவர் நந்தம்மை யார்ப்ப ஆர்ப்ப, நாமும் அவர் தம்மை யார்ப்ப ஆர்ப்ப" என்று ஆரவாரித்து ஆடியது அக் கூத்து என்க. ஊனை நாடகம் கட்டு நிலையும், ஞான நாடகம் வீட்டு நிலையுமாம். ஆண்டுகொண்டதும் பருக வைத்ததும் சாதன நிலையின் பாற் படும்.

1. திருவாசகம், திருத்தெள்ளேணம் 15. 2. சுந்தரர் தேவாரம்.
3. திருவாசகம், திருப்பொற்சுண்ணம் 7.

ஆண்டவன் அளப்பரிய இப் பேருதவிகளைத் தமக்குச் செய்ததெல்லாம், இவ் வுலக வாழ்க்கையில் உள்ள பற்றை அறவே ஒழித்தற் பொருட்டு என்பார், "நைய வையகத் துடைய விச்சையே" என்றார். "இச்சையே" என்புழி, ஏகாரத்தைப் பிரித்து நையவே எனக் கூட்டுக. ஏகாரம் தேற்றப் பொருட்டு. நைதல்—அறவே யொழிதல். இறுதியில், "ஆம்" என்னும் ஒரு சொல்லை வருவித்து முடித்தல் வேண்டும். உலக வாழ்க்கை ஒழிதற் பொருட்டு, இப் பேருதவிகளைச் செய்த பின்னரும், என்னை ஈண்டு இருத்தியது என்னையோ என்பது குறிப்பெச்சமாகும்.

இதன்கண், ஊனை நாடகம் ஆடுவித்ததும், ஆண்டு கொண்டதும், பருக வைத்ததும், ஞான நாடகம் ஆடு வித்ததும், அதீத மாகிய சிவானந்த அநுபவத்திற்கு உரிய பேருதவிகயாகவும், அப்பேறு பெருமல் வருந்தலானேனே என்னும் அடிகளது இரக்கக் குறிப்புப் புலப்படுதலின், ஆனந்தாதீதம் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

96\. விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
புலைய னேனையுன் கோயில் வாயிலில்
பிச்சன் ஆக்கினாய் பெரிய அன்பருக்
குரியன் ஆக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமரம் ஆயி னுங்கொலார்
நானும் அங்ஙனே உடைய நாதனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில், அரிய பொருளாகிய நீ எளிவந்து ஆட்கொண்டது, யான் நலம் பெறற் பொருட்டன்றோ எனக் கூறிய அடிகள், அவ் வரிய தன்மையோடு, எல்லா ஆற்றலும் நிரம்பப்பெற்ற நின்னைப் பற்றி நிற்பேனை எங்ஙனம் கைவிடல் அமையும் என இத் திருப்பாட்டில் தெரிவித்துக்கொள்ளுகின்றார்.

ப-ரை: விச்சு அது இன்றியே விளைவு செய்குவாய்—வித்து ஆகிய அக் காரணம் இல்லாமலே விளைவிப்பாய், விண்ணும் மண்ணகம் யாவையும் முழுதும் வைச்சு வாங்குவாய்—விண்ணுலகம் மண்ணுலகம் முதலிய எல்லா உலகங்களையும் குறைவற நிலைபெறச் செய்து அழிப்பாய், வஞ்சகம் பெரும் புலையனேனை—(அத்தகைய நீ) வஞ்சகனாகிய மிக்க இழிதகவுடைய என்னை, உன் கோயில் வாயிலில் பிச்சன் ஆக்கினாய்—நின் திருக் கோயில் வாயில் முன்னே வைத்துப் பித்தனாகச் செய்தாய், பெரிய அன்பருக்கு உரியன் ஆக்கினாய்— பேரன்பராகிய மெய்யடியார்க்கு உரியனாகவும் செய்தாய், தாம் வளர்த்தது ஓர் நச்சு மாமரம் ஆயினும் கொல்லார்—உலகத்தவர் தம்மால் வளர்க்கப்பட்டது ஒரு முதிய நச்சு மரம் ஆயினும் தாமே வெட்டி அழிக்கமாட்டார், உடைய நாதனே—சிறியேனை அடிமையாக வுடைய என் தலைவனே, நானும் அங்ஙனே—யானும் அப்படியே ஆவேன் என்பது.

வி-ரை: படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிற்கும் இறைவன் தலைவனாயினும், படைத்தல் தொழிலில் ஓர் உண்மை ஆராயத்தக்கது. வினைக்கு ஈடாக, மாயை என்னும் வித்தினின்றும் உயிர்க்கு உடல் முதலியன இறைவனால் தரப்படுகின்றன என்பது சைவ நூற் கொள்கை. அங்ஙனமாயின், மருட் கேவல நிலையில் உள்ள உயிர்க்கு வினைத் தொடர்பு இன்மையால், முதல் தோற்றத்திற்கு ஏது என்னும் என்பது வினவாகும். அதற்கு விடையுளதாயினும், அஃது அரிதின் ஆராய்ந்து கொள்ளத்தக்கதாகும். இவ்வருமை நோக்கியே சிவஞான போதம் இரண்டாம் சூத்திரத்திற்கு நுதலிய பொருள் கூறப் புகுந்த மெய்கண்ட ஆசிரியர், "புனருற்பவம் வருமாறுணர்த்துதல் நுதலிற்று" என்று கூறினர். புனருற்பவம்—மீண்டு பிறத்தல். அஃதாவது, அழித்தற்குக் காரணனாகவுள்ள இறைவன் இடத்தினின்றும் வினைக்கு ஈடாக உயிர் மீண்டும் தோன்றுதல் என்பது கருத்து. ஈண்டுப் பேருரை வகுத்த மாதவச் சிவஞான முனிவர்,

"அஃது அங்ஙனமாக, முதலுற்பவம் வருமாறுணர்த்தாது, புனருற்பவம் வருமாறுணர்த்துவது என்னை யெனின், பிரபஞ்சம் அநாதியாகலின், அம்முதற்கோடி நம்மனோரான் அறிய வாராமையானும், ஒடுங்கியபின் மீளவுளதாமாறே.... கூறினர் என்பது" என்று கூறிப் பின்னர், "அற்றாயினும், முதலுற்பவம் ஆமாறு இவ்வியல்பிற்று என்பது" எனத் தொடங்கி, "விச்ச தின்றியே விளைவு செய்குவாய்" எனவும், "விண்ணு மண்ணக முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்" எனவும் ஓதிய திருவாக்கானும் இவ் இரு வேறு வகையும் கண்டு கொள்க" என்றுரைத்தார். இரு வேறு வகையாவன, முதலுற்பவமும் புனருற்பவமும் ஆம் என்பது.

பாலையும் கோலையும் நோக்கும் குழவிக்கும் குருடர்க்கும், அந் நோக்கம் உணர்ந்து கொடுப்பார் போல, மருட் கேவல நிலையில் மூல மலத்தாற் பிணிப்புண்டு, அசைவற்றுக் கிடக்கும் உயிர்க்கு, இறைவன் அருளால் நுண்ணிய நிலையில் விருப்பு வெறுப்பு நிகழ, அவற்றை இறைவன் உணர்ந்து, கன்ம மாயைகளைக் கொடுத்துப் பிறப்புட் படுத்துவன் என்று முதலுற்பவத்தின் இயல்பு கூறப்படுதலும் உண்டு. இது, நுண்ணிய நிலையில் நிகழ்வதால், பருமை நோக்கில், "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்று கூறப்பட்டது என்க. "விச்சது" என்புழி, "அது" பண்டறிந்ததாகிய காரணம் என்னும் பொருள் மேலதாம். [1] "விச்சின்றி நாறு செய்வானும்" என்னும் தமிழ் மறைக்கும் இதுவே கருத்து என்க. இனி, அத்தொடர், வித்தின்றி விளைவாய் எனப் பொருள்பட்டு, இறைவன் மாயையின்றியே திருமேனி கொள்ளு முறைமையை உணர்த்தியதூஉமாம் எனவும், காலத்தானும் இடத்தானும் வேறு நிற்பனவாகிய உலகத்திற் காணப்படும் வித்துப்போல் அல்லாமல், தன்னையே தாரகமாகக் கொண்டு, வேறின்றி உடனாய் நிற்பதாகிய மாயையினின்றும் விளைவு செய்குவாய் என, உலகத்து வித்திற்கும் மாயைக்கும் வேற்றுமை

1. திருநாவுக்கரசர் தேவாரம், "நரியைக் குதிரை செய்வானும்."

தோன்றக் கூறுதலே அத் திருப்பாட்டின் கருத்து ஆகலாம் எனவும், மாதவச் சிவஞான முனிவரர், சிவஞான போதப் பேருரையில் 2-ம் சூத்திரம், 2-ம் அதிகரணத்தில் தடை விடையில் வைத்து விளக்கி யிருத்தலும் அறிக.

விண்ணுலகம், மண்ணுலகம் முதலிய எல்லா உலகங்களிலும் உள்ள உயிர்ப் பொருள், உயிரில் பொருள் எல்லாவற்றையும் முற்றும் படைத்து, அளித்து,அழிக்கும் தலைமை குறித்து, "முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்" என்றார். வைச்சல் — வைத்தல்; படைத்துக் காத்தல். வாங்குதல்—ஒடுக்குதல். இதனால் உலகத் தோற்றத்திற்குக் காரணன் ஆம் தன்மை முற்றும் பரமசிவனுக்கே உரியது என்பது புலப்படுக்கப்பட்ட படியாம். உலக காரணமாந் தன்மை பரம்பொருள் இலக்கணம் என்ப.

வஞ்ச ஒழுக்கமும், அதனால் மிக்க இழிதகவும் உடையேன் என்பார், "வஞ்சகப் பெரும் புலையனேனை" என்றார். பிறப்பான் அன்றி, வஞ்சகமாகிய செயலால் எய்திய இழிதகவு என்பது குறித்துப் பெருமை அடை புணர்க்கப்பட்டது. செயலால் இழிந்தவனாகிய என்னை நின் திருமுன் வைத்து,இவ்வுலகியலில் மாறுபடச் செய்து பித்தனாக்கினாய் என்பார், "உன் கோயில் வாயிலிற் பிச்சனாக்கினாய்" என்றார். பிச்சன்—பித்தன்; பைத்தியம் பிடித்தவன். [1] "மத்த மனத்தொடு மாலிவன் என்ன மன நினைவில் ஒத்தன வொத்தன சொல்லிட" என்று முன்னர்க் கூறியது, பிச்சனாக்கியதன் பயனாகும்.

பெரிய அன்பர்—அழிவுடைப் பொருள்களின் இயல்பு அறிந்து நீங்கி,அழிவில் பொருளாகிய ஆண்டவன் இடத்து இறவாத இன்ப அன்புடைய மெய்யடியார். ஆண்டவன், தனக்கு அன்பனாக்கிய பின், தன் அடியவர் குழுவுள் இருக்கும் பேற்றைத் தமக்கு அளித்தனன் என்பார், "பெரிய அன்பருக்கு உரியனாக்கினாய்" என்றார். உரியனும் என் புழி, எச்சவும்மை தொக்கு நின்றது. [2] "அடியாரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே" என்றபடி, அடிகள் வியந்து மகிழ்ந்

1. திருவாசகம், திருச்சதகம் 3. 2. திருவாசகம், அதிசயப்பத்து.

தது, மெய்யன்பர் குழுவில் தம்மை இருக்க வைத்தது கருதியே யாம்.

ஆண்டவனால் வயப்படுத்தப்பட்டு, அவன் அடியார் குழுவுள் இருக்கும் உரிமையும் பெற்றபின், தமக்கென ஒன்றுமின்றி, [1] "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்று இருக்கும் அடிகள், அப் பெருமானை நோக்கி, "யான் மெய்யன்பு இல்லேனாயினும், நீ அடிமையாக ஏற்றுக் கொண்டமையால் என்னைக் கைவிடலாகாது என்பதற்கு, உலகியலில் வைத்து ஒரு நீதி எடுத்துக் காட்டுகின்றார். உலகத்தவர் தம்மால் வித்திட்டு வளர்க்கப்பட்ட மரம், எட்டி அல்லது அதனைப் போன்ற பிறிதொரு நச்சு மரம் ஆயினும், அதனை வளர்த்த தாமே வெட்டி யழிக்கத் துணியார். அது போல், மெய்யன்பில்லேன் ஆயினும், நின்னைச் சார்ந்தவனாதலின், என்னை வெறுத்து ஒதுக்கலாகாது என்பார், "தாம் வளர்த்ததோர் நச்சு மாமர மாயினுங் கொலார் நானும் அங்ஙனே" என்றார். பயன் மரமாயினும், முதுமை எய்தினால் வெட்டி யழித்தல் இயல்பு. தாம் வளர்த்தது, நச்சு மரத்துள்ளும் முதுமை யடைந்ததாயினும் என்றற்கு,"மா" என்னும் அடை புணர்க்கப்பட்டது. "உடைய நாதனே" என்னும் விளி, என்னை ஆதரிக்க வேண்டிய கடமை நின் பாலது என்று எடுத்துக்காட்டினால் விளக்கப்பட்ட, "நானும் அங்ஙனே" என்பதை வலியுறுத்து நிற்பதாகும்.

இதன்கண், ஆண்டவன் அடிகளைத் தன் திருக்கோயில் வாயிலிற் பிச்சனாக்கியதும், பெரிய அன்பருக்கு உரியனாக்கியதும், அதீதமாகிய சிவானந்த நுகர்ச்சிப் பொருட்டு என்பது பெறப்படுதலின், ஆனந்தாதீதம் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

97. உடைய நாதனே போற்றி நின்னலால்
பற்று மற்றெனக் காவ தொன்றினி
உடைய னேபணி போற்றி உம்பரார்
தம்ப ராபரா போற்றி யாரினுங்

1. திருவாசகம், குழைத்த பத்து 7.

கடையன் ஆயினேன் போற்றி என்பெருங்
கருணை யாளனே போற்றி என்னைநின்
அடியன் ஆக்கினாய் போற்றி ஆதியும்
அந்தம் ஆயினாய் போற்றி அப்பனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் பெறலரும் பொருளாகிய நின்னைச் சார்ந்தவனாகிய என்னை எங்ஙனம் கைவிடல் அமையும் என்று ஆண்டவனை நோக்கிக் கூறிய அடிகள், நீ கைவிடத் திருவுளங் கொள்ளின், நின்னை அல்லாமல் பிறிதொரு பற்றுக்கோடு எனக்கு யாதுளது? கூறியருள்க என்று இத் திருப்பாட்டில் விண்ணப்பம் செய்து கொள்ளுகின்றார்.

ப-ரை: ஆதியும் அந்தமும் ஆயினாய் போற்றி—முதலும் இறுதியும் ஆக விளங்குகின்றவனே வணக்கம், உம்பரார் தம் பராபரா போற்றி — மேல் உலகத்தவர்க்கு மேலான பரம் பொருளே வணக்கம், யாரினும் கடையன் ஆயினேன் போற்றி—யான் எவரினும் கடைப்பட்டவன் ஆயினேன் வணக்கம், என் பெரும் கருணையாளனே போற்றி —என்பால் பேரருளாளனே வணக்கம், என்னை நின் அடியன் ஆக்கினாய் போற்றி — சிறியேனை நினக்கு அடிமையாகச் செய்தனை வணக்கம், உடைய நாதனே அப்பனே போற்றி — என்னை ஆளாக உடைய தலைவனே என் தந்தையே வணக்கம், எனக்கு ஆவது பற்று — அடியேனுக்கு ஆதரவாக வுள்ளதாகிய பற்றுக்கோடு, இனி நின்னை அல்லால் மற்று ஒன்று உடையனோ—இப்பொழுது நின்னையல்லாமற் பிறிதொரு பொருளை யான் உடையனோ, பணி— கூறியருள்வாயாக, போற்றி—வணக்கம் என்பது.

வி-ரை: இத் திருப்பாட்டில் விளியுருபு ஏற்று நிற்கும் சொற்றோறும் வணக்கப் பொருள் குறித்துப் "போற்றி" பல கூறப்பட்டன, ஆண்டவன் இடத்துள்ள அளப்பரிய ஆர்வத்தால் என்க.

அந்தமும் என்புழி, எண்ணும்மை தொக்கு நின்றது. எல்லாப் பொருள்களும் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும்

காரணன் ஆதல் பற்றி, இறைவனை, " ஆதியும் அந்தமும் ஆயினாய் " என்றார். [1] " ஈறாய் முதல் ஒன்றாய் " என்பது தமிழ் மறை.

மாயையை அழிவில் பொருள்களில் ஒன்றாகக் கொண்டு, அதனிடத்தினின்றும் உலகம் தோன்றி, அதனிடத்தே ஒடுங்கும் என்று சைவ நூல் கூறும். அங்ஙனம் மாயையில் தோன்றி ஒடுங்கும் உலகங்களை, இறைவன் இடத்துத் தோன்றி ஒடுங்கின என்றல் எங்ஙனம் பொருந்தும் எனின், மாயையும் உலகமும் வித்தும் முளையும் போலும் ஆதலின், வித்துக்கு ஆதார மாகிய நிலம் குளிர்ந்த வழி, அதன்கண் வித்துள்ளதாக, அதனினின்றும் முளை தோன்றிய வாறு போல, மாயை, தனக்கு ஆதாரமாய் நின்று தோற்றுவிக்கும் இறைவனது சத்தியின் கண் உள்ளதாய் நிற்றலால், அச்சத்தி சங்கற்பித்த வழி, வினைக்கு ஈடாகத் தோற்றுவிக்கும் என்பவாதலிற் பொருந்தும் என்க. இது, கிழங்கினின்றும் தோன்றிய தாமரையைச் சேற்றினின்றும் தோன்றியது என்னும் பொருள்படப் பங்கயம் என்று கூறுதலானும் அறியலாம். இக்கருத்துப் பற்றியே, [2] " உலகவனுருவிற் றோன்றி யொடுங்கிடும் " என்று சிவஞான சித்தி கூறிய தூஉம் என்க. இது பரம்பொருள் இலக்கணங்களுட் சிறந்தது.

இவ்வியல்பிற்றாகிய பரம் பொருளைத் தேவரின் ஒருவன் என்று அறியாதார் கூறுப. அது பொருந்தாது என்பதைத் தெளிவுறுத்தற் பொருட்டு, " உம்பரார் தம் பராபரா " என்றார். [3] " தேவரிலொருவனென்பர் திரு வுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்றதோரார் " என்று ஞான நூல் தெளிவுறுத்ததூஉம் அறிக. பரா பரன்— மேலானவனும் தனக்குமேல் மற்றொரு பொருள் இல்லாத வனுமாம் என்னும் பொருட்டு. [4] " யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான் " என்று இறைவனையும்,

1. திருஞான சம்பந்தர் தேவாரம். 2. சிவஞான சித்தி, சூ. 1, செ. 48.
3 சிவஞான சித்தி, சூ. 1, செ. 49. 4. திருவாசகம், திருவெண்பா 8.

1 "யாவர்க்கும் கீழாம் அடியேன்" என்று தம்மையும் அடிகள் கூறுவாராதலின், அக் கருத்துத் தோன்ற, அடுத்து, "யாரினுங் கடைய னுயினேன்" எனவும், அத் துணை உயர்ந்தோன், இத்துணை இழிந்த தம்மைப் பணி கோடற்குக் காரணம் அளப்பரிய கருணையே என்பார், "என் பெருங் கருணையாளனே" எனவும் கூறினர். கருணை செய்தற்கு உரிய தகுதி தம்பால் இல்லையெனக் கொண்டு, அங்ஙனம் இல்லாத தம்பால் நிகழ்ந்தமையால், அக்கருணை பெரிதாம் என்பார், "பெருங்கருணை" என்றார். பெருங் கருணையாளனாக இருந்தமையானன்றே, சிறியே னாகிய என்னை நினக்குத் தொண்டனாக்கிப் பணி கொண் டாய் என்பார், "என்னை நின் அடியனாக்கினாய்" என்றார்.

இனி, முடிவாகத் தாம் விண்ணப்பம் செய்துகொள் ளும் செய்திக்கு ஏற்ப, ஆண்டவனை விளிகொள்ள முற் பட்டு,"உடைய நாதனே அப்பனே" என்றார். ஆண்டவன், தன்னை அடியன் ஆக்கியபடியால், என்னை ஆளாகவுடைய தலைவனே எனவும், அப்பெருமானது பேரானந்தப் பெருஞ் செல்வ நுகர்ச்சிக்கு மகன்மை முறையில் உரிமை தமக்கு உண்டு எனக்கொண்டு, "அப்பனே" எனவும் கூறுவார் ஆயினர்.

இதன் முன்னைத் திருப்பாட்டில், "நச்சுமாமர மாயி னுங் கொலார் நானும் அங்ஙனே" என்றதனல், தம்மைக் கைவிடல் ஆகாது என்று விண்ணப்பம் செய்து கொண்ட வர், "எக்காரணத்தாலாவது ஒருகால் என்னை நீ ஒதுக்கத் திருவுளங் கொண்டாலும், பற்றிய நின்னை யான் எவ்வாறு விடுவேன்? விட்டால், வேறு பற்றுக்கோடு நின்னையன்றி யாதுளது? அங்ஙனம் ஆதரவாகவுள்ள பற்றுக்கோடு பிறிது ஒன்று இருக்குமாயின், அஃது இன்னது என எனக்கு அறிவிக்க வேண்டிய பொறுப்பும் நின்பாலதே" என்பார், "நின்னலாற் பற்று மற்றெனக் காவதொன்றினி யுடையனோ பணி" என்றார். ஆவது—ஆதரவாக நின்று பயன் விளைப்பது. "இனி" என்றது, என்னை அடிமை

1. திருவாசகம், திருவெண்பா 8.

கொள்ளுதற்கு முன்னர்ப் பொய்யுலக வாழ்க்கையில் ஈடு பட்டு, அதனையே ஆதரவாகக் கடைப்பிடித்தேன் ஆயினும், அடியனாக ஆட்பட்ட இப்பொழுது என்னும் பொருள் தோன்ற நின்றது. பணி யென்றதனால், யான் கடைப் பிடித்தற்கு உரிய நெறி பிறிதொன்று உண்டெனினும், அதனைக் காட்டுதற்கும் நீயே தலைவனாவாய் என்பது போதரும். 1 "காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே" என்று தமிழ் மறை தெளிவுறுத் தருளியதூஉங் காண்க.

இத் திருப்பாட்டில், அப்பாலுக்கு அப்பாலாய் விளங் கும் இறைவனது முழுமுதல் தன்மையும், அதனினின்றும் படிப்படியாக உயிர்த் தொகுதிகளுக்கு நலம் புரிதற் பொருட்டு எளிவரும் பேரருள் திறமும் தோன்ற, முன்னி லைப்படுத்து அழைத்திருத்தல் அறிந்து இன்புறத் தக்கது. முதலில், ஆதியும் அந்தமும் ஆகினாய் என, உலகத்தோற்ற ஒடுக்கங்களுக்கு காரணன் ஆதலாகிய முதன்மையும், அடுத்து, "உம்பரார் தம் பராபரா" எனத் தேவர்க்கு அணியனாம் பரம் பொருள் தன்மையும், பின்னர், "என் பெருங் கருணையாளனே" என, மக்கட் பிறப்பினரிடத்து அருளுடையனாந் தன்மையும், அதன்பின், "உடைய நாதனே" என, அன்பர் பணி கொள்ள எழுந்தருளும் எளிமைத் தன்மையும், முடிவில், "அப்பனே" எனத் தன் பேரின்பப் பெருஞ் செல்வத்திற்கு மகன்மை முறையில் உரிமை யளிக்கும் தன்மையும் புலப்பட அருளியவாறு அறிக. செய்யுளாதலின் இம்முறை பிறழ்ந்து வந்தது.

இதன்கண், "ஆதியும் அந்தமுமாயினாய்" என்பது முதலிய விளியேற்று நிற்கும் சொற்களால், உயிர்க்கு அதீதமாகிய ஆனந்தம் அருளும் வண்மையுடையான் சிவ பெருமான் என்பதும், "நின்னலாற் பற்று மற்றினியுடை யனோ" என்றதனால், அவனை யன்றி, அப் பேறு பிறிதோர் ஆற்றால் பெற இயலாது என்பதும் பெறப்படுதலின், ஆனந்தாதீதம் என்னும் பதிகம் நுதலிய பொருள் குறிப்பிற் புலனாதல் அறிக.

1. திருநாவுக்கரசர் தேவாரம், "ஆட்டுவித்தால்."

98. அப்ப னேயெனக் கமுத னேஆ
 னந்த னேயகம் நெகஅள் ளூறுதேன்
ஒப்ப னேயுனக் குரிய அன்பரில்
 உரிய னுயுனைப் பருக நின்றதோர்
துப்ப னேசுடர் முடிய னேதுணை
 யாள னேதொழும் பாளர் எய்ப்பினில்
வைப்ப னேயெனை வைப்ப தோசொலாய்
 நைய வையகத் தெங்கள் மன்னனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் ஆண்டவனை நோக்கி, என்னைக் கைவிடின் நின்னையல்லாமல் பிறிதொரு பற்றுக் கோடு உடையனுக எங்ஙனம் ஆவேன் எனக் கூறிய அடிகள், அங்ஙனம் ஆதரவற்ற நிலையில் உள்ளவனுகிய அடியேனைப் பல்லாற்ருனும் பாதுகாக்கும் உரிமை யுடைய நீ, இப் பொய்யுலக வாழ்க்கையில் நைய வைப்பது முறையாகுமா என, இத் திருப்பாட்டில் விண்ணப்பம் செய்துகொள்ளுகின்ருர்.

ப-ரை: எனக்கு அப்பனே—, எனக்கு அமுதனே— எனக்குச் சாவா மருந்தாக வுள்ளவனே, ஆனந்தனே— பேரின்ப மயமானவனே, அகம் நெக அள் ஊறு தேன் ஒப்பனே—உள்ளம் உருக வாயூறுதற்கு ஏதுவாகவுள்ள தேனைப் போன்றவனே, உனக்கு உரிய அன்பரில் உரியனுய்—நினக்கு உரிமையுடைய மெய்யன்பரைப் போல யானும் உரிமையுடையனுகி, உன்னைப் பருக நின்றது ஓர் துப்பனே—நின்னை நுகரும்படி எனக்குக் கிடைத்து நிற்பதாகிய ஒப்பற்ற உணவாக வுள்ளவனே, சுடர் முடியனே — ஒளி விளங்கும் திருமுடியை யுடையவனே, எங்கள் மன்னனே — அடியேமாகிய எங்கள் அரசே, தொழும்பாளர் துணையாளனே — மெய் யடியார்க்கு உண்மைத் துணையாக வுள்ளவனே, தொழும்பாளர் எய்ப்பினில் வைப்பனே—தொண்டர்க்குத் தளர்ந்த நிலையில் சேம நிதியாக வுள்ளவனே, வையகத்து என்னை நைய வைப்பதோ—இப் பொய்யுலக வாழ்க்கை

யில் அடியேனைத் துன்புறும்படி வைத்தல் முறை யாகுமா? சொல்லாய்—கூறியருள்வாயாக என்பது.

வி-ரை: இத் திருப்பாட்டில் அடிகள் ஆண்டவனைத் தமக்குச் சிறப்புரிமையில் தொடங்கி, அப் பெருமானுக்கும் தம்மை உள்ளிட்ட அடியார்க்கும் உள்ள இயைபுகளை மேன்மேலும் விளக்கி விளித்தல் முகமாகக் கூறித் தம் நாவையும் நெஞ்சத்தையும் அருளமுதில் நனைத்து இன் புறுகின்றார். "எனக்கு" என்பதை முன்னும் பின்னுங் கூட்டுக. [1] அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகை வயின், அது வெனுருபு கெடக் குகரம் வருமே" என்னும் விதிப்படி, "எனக்கு அப்பனே" என்னப்பட்டது. தந்தை, தன் குடிப் பொருளாகிய உடைமைக்கு உரியவனே யன்றி உடைமையாகான். மெய்யன்பர்க்கு, ஆண்டவன் நுகர் பொருளாகிய உடைமையும் அதற்கு உடையானும் ஆவன் ஆதலின், அடுத்து, "எனக்கு அமுதனே" என்றார். அமுதம்—நுகர் பொருளாகும். ஆகவே, உடையானும் உடைமையும் அப்பெருமானே என்பது பெறப்பட்ட வாறு அறிக.

அமிர்தம் என்னும் சொல், சாவைத் தவிர்ப்பது என்னும் பொருளதாகலின், சாவா மருந்து என்னப் பட்டது; சாதற்கு ஏதுவாகிய பிணி, மூப்பு முதலிய வற்றைப் போக்குமே யொழிய, உண்மையில் சாதலைத் தவிர்ப்பதன்று. [2] "விண்ணோரமுதுண்டும் சாவ" என்று சிலப்பதிகாரம் கூறும். இதனால், இங்ஙனம் கூறியது உபசாரமே யன்றி உண்மையன்று ஆதலின், அமுதம் ஒரு கால எல்லை வரை பயன் செய்தலானும், இறைவன், என்றும் உலப்பிலா இன்பமயமாக வுள்ளான் ஆதலானும், அதன்மேல், "ஆனந்தனே" என்றார்.

சிவானந்தத்திற்கு, உலகப் பொருள்களில் நெகிழ்ச்சி யும், மிக்க இனிமையும் உடைய தேனை ஒப்புக் கூறுதல் உண்டு. [3] "உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து"

---

1. தொல். சொல். சூ. 94. 2. சிலப்பதிகாரம், வேட்டுவ வரி,
3. திருவாசகம், பிடித்த பத்து 9.

என்பதும் அடிகள் அருண்மொழியாகும். அம் முறையில், "தேன் ஒப்பனே" என்றார். அள்ளூறல்—வாயூறல், [1]"அள்ளூறித் தித்திக்கப் பேசுவாய்" என்புழியும் அப் பொருட்டாதல் அறிக. நினைக்குங்கால் நெஞ்சம் உருகு தற்கும், வாயில் அமிழ்தம் ஊறுதற்கும் ஏதுவாகவுள்ளது என்பார், "அகநெக அள்ளூறு தேன்" என்றார். [2]"நினைத் தொறும் காண்டொறும் பேசுந் தோறும் எப்போதும், அனைத்தெலும்புண்ணெக ஆனந்தத்தேன் சொரியும்" என்று அடிகள் பிறிதோரிடத்துக் கூறிய அருண் மொழியும் ஈண்டு நினைக்கத்தக்கது.

இனி, "அள்" என்பது செறிவு என்னும் பொருளது ஆகலின், "அள்ளூறுதேன்" என்பதற்கு, நெருங்கிச் சுரக்கும் தேன் எனப் பொருள் கோடலும் ஆம். நெருங்கிச் சுரத்தலாவது, இடையறாது ஒழுகுதல். இங்ஙனம் நெஞ்சம் உருக, வாயூறலுண்டாக, அத் தேன் இடையறாது ஒழுகுவதாயினும், அதனைப் பருகும் பேறும் தகுதியும் இருந்தாலன்றி, அதனாற் பயன் பெற இயலாது. ஆதலின், அதற்கு உரிய தகுதியை ஆண்டவன் தமக்கு உதவிய முறையைப் பின்வருமாறு புலப்படுத்துவாராயினர்.

ஆண்டவனது பேரானந்தப் பெருஞ் செல்வத்தை அநுபவித்தற்கு உரிய உரிமையுடைய மெய்யன்பர் என்பார், "உன்க்குரிய அன்பர்" என்றார். இல் என்னும் ஐந்தனுருபு உவமப் பொருட்டு. ஆண்டவனே, நின்னை நுகர்தற்கு உரிய மெய்யன்பரைப்போல என்னையும் உரிமையுடையனாக்கினாய் ஆதலின், ஆயினேன் என்பார், "அன்பரினுரியனாய்" எனவும், அவ்வுரிமை கொண்டு யான் நுகர்தற்கு உரிய சிறந்த உணவுப் பொருள் ஆயினை என்பார், "உனைப் பருக நின்றதோர் துப்பனே" எனவும் கூறினர். பருக நின்றது—உண்ணுதற்குச் செயப்படு பொருளாக நின்றது. நின்றதென்பது துப்பன் என்பதன் பகுதியாகிய துப்பு என்பதனோடு இயையும். பருகுதல்—குடித்தல்; நுகர்தல் என்னும் பொருளை உணர்த்தும்.

1. திருவாசகம், திருவெம்பாவை 3. 2. திருவாசகம், திருக்கோத்தும்பி 3.

[1] " பருகுவன் பைதஞே யெல்லாங்கெட " என்னும் குறளில் நுகர்தற் பொருட்டாதல் அறிக. துப்பு—உணவுப் பொருள். [2] " துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி " என்புழி அப் பொருட்டாதல் அறிக.

பின்னர், " எங்கள் மன்னனே " என்றதற்கு ஏற்ப, அரசுரிமை அடையாளங்களாகிய முடி, குடை, கோல் என்பவற்றுட் சிறந்த முடியை உடையான் என்பார், " சுடர் முடியனே " என்ருர். இம்முடி, தெய்வ அரசுக்கு உரியதாகலின், சுடர் என்னும் அடைமொழி புணர்க்கப் பட்டது. உலகில் முடியுடை அரசனைப் பேரரசன் என்பர். ஈண்டுக் கடவுட் பேரரசைக் குறிப்பிட்டபடியாம். " சுடர் முடியனே " என்பதை அடுத்து, " எங்கள் மன்னனே " என்பதை இயைத்துக் கொள்ளல் வேண்டும். எங்கள் என்றது உலக நிலைக்கு உரிய பொருட்செல்வமன்றி, வீட்டு நிலைக்கு உரிய அருட் செல்வத்தை உடைய மெய் யன்பரை உளப்படுத்துக் கூறியதாகும். துணை புரிதற்கும், எய்ப்பில் வைப்பாக நின்று பாதுகாத்தற்கும் முடியுடைத் தெய்விகப் பேரரசஞக அமைதல் அரிதாகலின், இறைவனை இங்ஙனம் கூறலாயினர்.

உயிர்த் தொகுதிக்கு, உலகத்திற் காணப்படும் சுற்றம், துணை எல்லாம், அவ்வுயிர், வினைக்கு ஈடாக எடுத்த உடலைப் பற்றி உண்டானவை யாதலின், அவ்வுடல் ஒழிவில் அவை யெல்லாம் ஒழிந்து போம். அதனுல், அத்துணை உடற்றுணை யாகுமன்றி உயிர்த்துணை ஆகாது. உயிர்க்கு உண்மைத் துணை பரம்பொருளாகிய இறைவனே யாவான். இவ் வுண்மையை உள்ளவாறு அறிவார் மெய்யடியார் ஆதலின், " தொழும்பாளர் துணையாளனே " என்ருர். தொழும் பாளர் என்பதை முன்னருங் கூட்டிப் பொருள் கொள்ளல் வேண்டும். மெய்த்தொண்டர்க்குச் சிறப்பு முறையில் துணையாளஞக இருத்தலோடு, அவர்க்குத் தளர்ச்சி நேர்ந்த இடத்து வைப்பு நிதிபோலவும் உதவும் இயல்பினன்

1. திருக்குறள் 1266. 2. திருக்குறள் 12.

என்பது குறித்து, "தொழும்பாளர் எய்ப்பினில் வைப்பனே" என்றார். இன்றியமையாமை நேர்ந்தவிடத்து எடுத்துப் பயன்படுத்தற் பொருட்டு வைக்கப் பட்ட நிதியை வைப்பு நிதி என்ப. உலகப் பொருள் எல்லாம் அழியும் இயல்பினவாதலின், என்றும் அழியாப் பொருளாக நின்று பயன் செய்வோன் இறைவன் என்பது குறிக்கொண்டு இவ்வாறு கூறினர். இங்ஙனம் சிறந்த துணையாதலையும், எய்ப்பில் வைப்பாதலையும் வேறொரு படியாக, [1]"அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை" என்று ஆளுடைய அரசர் அருளிச் செய்தமையாலும் அறிக. ஈண்டும் அடியார் என்பதை முன்னரும் இயைத்து, அடியார்க்கு அருந்துணையை, அடியார் தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை எனக் கொள்ளல் வேண்டும்.

இத்துணையும் ஆண்டவன் பெருமைக் குணங்களையும், தமக்கும் அப்பெருமானுக்கும் உள்ள இயைபுகளையும் குறிப்பிட்டு முன்னிலைப்படுத்து, இறுதியில், தம் வேண்டு கோளை வெளிப்படையில் கூற முற்படுகின்றார். இத்துணைப் பேரருளாளனாகிய நீ, என்னை ஆட்கொண்ட பின்னரும், இப்பொய்யுலக வாழ்க்கையில் இருத்தி, யான் துன்பம் உறச்செய்தல் முறையாகுமா என்பார், "எனை வைப்பதோ சொலாய் நைய வையகத்து" என்றார். வைப்பது என்பதன் பின், முறை என்னும் ஒரு சொல்லை வருவித்து உரைத்தல் வேண்டும். ஓகாரம் வினாப்பொருட்டு. வையக வாழ்க்கை, இன்பமும் துன்பமும் விரவியதாகலானும், அதுவும் நிலையுடையதன்று ஆகலானும், அதுபற்றி வருந்து வேன் அல்லேன்; இவ்வுலக வாழ்க்கையினும் சிறந்த வீட்டின்ப வாழ்க்கை ஒன்று உண்டு எனக் காட்டி, அதன்கண் தலைப்படச் செய்யாமல் விட்டு மறைந்தது, பசியாற் களைத்து உறங்கும் ஒருவனை எழுப்பி,உணவு இல்லை என்று கைவிட்டு அகறலை ஒக்கும் ஆகலின், அது குறித்து

1. திருநாவுக்கரசர் தேவாரம்.

வருந்தலானேன் என்பார், "வையகத்து நைய வைப்பது" என்றார். வீட்டின்ப நோக்கு உடையார்க்கு, இவ்வுலகியல் துன்பமேயன்றி, இன்பமும் துன்பமாம். ஆதலின் இவ் வாறு கூறலாயினர்.

இதன்கண், "ஆனந்தனே," "அகம் நெக அள்ளூறு தேன் ஒப்பனே," "உனைப்பருக நின்றதோர் துப்பனே" என்னும் சொல்லானும் சொற்றொடர்களானும் ஆண்டவன் அதீதமாகிய ஆனந்த வடிவினன் என்பதும், அதுவே தமக்குச் சிறந்த பேறும் என்பதும் பெறப்படுதலின், **ஆனந்தாதீதம்** என்னும் பதிகம் நுதலிய பொருள் தோன்று தல் அறிக.

99. மன்ன எம்பிரான் வருக என்னெனை
மாலும் நான்முகத் தொருவன் யாரினும்
முன்ன எம்பிரான் வருக என்னெனை
முழுதும் யாவையும் இறுதி யுற்றநாட்
பின்ன எம்பிரான் வருக என்னெனைப்
பெய்க ழற்கண்அன் பாயென் நாவினால்
பன்ன எம்பிரான் வருக என்னெனைப்
பாவ நாசநின் சீர்கள் பாடவே.

**க-ரை:** அடியேனைப் பாதுகாக்கும் உரிமையுடைய எம் பெருமானே, இவ்வுலக வாழ்க்கையில் வருந்தும்படி என்னை வருத்தலாகாது என்று முன்னைத் திருப்பாட்டில் தெரிவித்துக்கொண்ட அடிகள், இனி, இவ் வாழ்க்கையி னின்றும் விடுவித்து, நினக்கு அணுக்கனாய், அன்பு பூண்டு, நின் புகழ்களைப் பாடி, இன்புறுதற் பொருட்டு, அடியேனை வருக என்று பணித்தருளல் வேண்டும் என்று இத்திருப் பாட்டில் விண்ணப்பஞ் செய்துகொள்ளுகின்றார்.

**ப-ரை:** மன்ன எம்பிரான் எனை வருக என்—என்றும் நிலை பேறுடையவனாகிய எங்கள் தலைவனே அடியேனை வருக என்று கட்டளையிட் டருள்வாயாக, மாலும் நான் முகத்து ஒருவன் யாரினும் முன்ன எம்பிரான்—திரு மாலும் பிரமனும் முதலிய மற்றைத் தேவர் எவரினும்

முன்னவனாகிய எங்கள் தலைவனே, எனை வருக என்—, யாவையும் முழுதும் இறுதி உற்ற நாள்—எல்லா உலகங்களும் முற்றும் அழிவு எய்திய பேரூழிக் காலத்தின், பின்ன எம்பிரான்—பின்னும் அழிவு இன்றி இருப்பவனாகிய எங்கள் தலைவனே, எனை வருக என்—, பாவநாச எம்பிரான்—பாவத்தை ஒழிப்பவனாகிய எங்கள் தலைவனே, பெய் கழற்கண் அன்பு ஆய் பன்ன—கழல் அணிந்த நின் திருவடிக்கண் மெய்யன்பு உடையனாய்ப் புகழ் பாராட்டவும், நின் சீர்கள் பாட—நின் சிறப்புக்களை இசையுடன் பாடவும், எனை வருக என்—அடியேனை வருக என்று கட்டளையிட்டருள்வாயாக என்பது.

வி-ரை: சிவபெருமானது பரம்பொருள் தன்மையை, உலகத் தோற்றத்திற்கு முன்னும் பின்னும் என்றும் உள்ளான் என்று கூறுமுகமாகத் தெளிவுறுத் துரைத்து, முன்னிலைப் படுத்து, அடியேனை நின் பக்கல் அணுகக் கட்டளையிடல் வேண்டுமென்று கூறுவாராய், முதலில் என்றும் நிலைபேறுடைமையைக் குறித்து, "மன்ன வெம்பிரான் வருக வென்னெனை" என்றார். மன்னுதல்—நிலைபெறுதல். மன்னன் என்னும் சொல் விளியுருபு ஏற்று, மன்ன என்றாயிற்று. இனி, மன்ன என்பதற்கு அரசே எனப் பொருள் கோடலுமாம்.

என்றும் நிலையுதலையுடைய கடவுள் முதல்வனாகிய அவ்விறைவனே எங்கள் தலைவனாயினன் என்று அப்பெருமானது சார்புண்மை பற்றிய மகிழ்ச்சியால் அடுத்து, "எம்பிரான்" என்றார். பின் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். "என்னை வருக என்" என்புழி, என்பாய் என்பது, விகுதியும் இடைநிலையும் புணர்ந்து கெட்டு, "என்" என்றாயிற்று. ஆகவே, என்று கட்டளையிடுவாய் என்பது பொருளாகும். பின் வருவனவற்றையும் இவ்வாறே கொள்க.

இறைவன் என்றும் நிலையுதல் உடையவன் என்பதை விளக்கிக் கூறுமுகமாக, "மாலும் நான் முகத் தொருவன் யாரினும் முன்ன" என்றார். தேவர், மக்கள் முதலிய

எல்லா உயிர்த் தொகுதிகளுக்கும் முன்னேன் ஆவான் என்பதை, ஆக்கல், அளித்தல் ஆகிய தொழில் தலைவரைக் குறிப்பிட்டு, அன்னுரையும் ஆக்கி யளிக்கும் தலைவனய் முற்பட்டவனவான் என்ருர். நான் முகத் தொருவனும் என்புழி, எண்ணும்மை தொக்கு நின்றது. யாரினும் என்றது, அன்னுரை யுள்ளிட்ட மற்றை இந்திரன் முதலிய தேவரையும், மக்கள் முதலியோரையும் குறித்து என்க. உயிர்களின் தோற்றத்திற்குக் காரணிகனய் முற்பட்டவன் என்பது கருத்து.

உலகம் எல்லாம் சிறிதும் எஞ்சுதல் இன்றி ஒடுங்கிய பேரூழிக் காலத்தென்பார், "முழுதும் யாவையும் இறுதி யுற்ற நாள்" என்ருர். எல்லாம் ஒடுங்கிய மகா சங்காரத் தின் பின், இறைவன் ஒருவனே அழிவின்றி நிற்பனுதலின், "பின்ன" என்ருர். பின்ன என்பது பின்னுக எஞ்சி நிற்பவனே என்று பொருள் படும். [1] "ஓதத் தொலிமடங்கி யூருண்டேறி யொத்துலக மெல்லாம் ஒடுங்கியபின், வேதத் தொலி கொண்டு வீணை கேட்பார் வெண்காடு மேவிய விகிர்தனரே" என்பதும் இக்கருத்துப் பற்றியதாகும். விண்ணுலக முதலிய எல்லா உலகங்களும், அறிவுடைப் பொருளும், அறிவில் பொருளும் ஆகிய இருகூறும் கலந்தன ஆதலின், அவ் வெல்லாவற்றிற்கும் முன்னுவானும் பின்னுக நிற்பவனும் இறைவனே என்பதைப் புலப்படுக்கக் கருதிய அடிகள், படைப்போன் முதலியோரைப் படைத்தலின் முன்னவனுதலைத் திருமால், நான் முகன் முதலிய அறிவு டைப் பொருள்களைப் பற்றியும், வித்தாகிய மாயையும் தன் சக்தியின்கண் ஒடுக்குதலின், பின்னவனுதலை, யாவையும் முழுதும் என அறிவில் பொருள்களைப் பற்றியும் குறிப்பிடு வார் ஆயினர். [2] "முன்னவன் காண் பின்னவன் காண் மூவா மேனி முதல்வன் காண்" என்னும் அப்பர் அருண்மொழியும் ஈண்டு நினைக்கத்தக்கது.

இறைவனது யாண்டும் உண்மையைக் கூறிப் பின் அப்பெருமானுல் உயிர்க்கு உண்டாம் பயனைப் புலப்படுத்து

1. திருநாவுக்கரசர் தேவாரம், "பாதந் தனிப்பார்மேல்."
2. ஷை

வாராய், "பாவ நாச" என்றார். வீட்டின்பத்திற்குப் பாவத்தைப் போலவே புண்ணியமும் தடையாம் என்ப. அங்ஙனமாகவும், இரண்டையும் ஒழிப்பவனே என்னது, பாவத்தை மாத்திரம் ஒழிப்பவனே என்றது என்னை யெனின், புண்ணியமும் பாவமும் பாலும் நீரும் போலும் என்பதும், சிவஞானமாகிய நெருப்பிடைக் காய்ச்சப்படுங் கால், பாலோடு கலந்த நீர் முதலிற் சுவறுதல் போலப் பாவம் முதலில் தேய்ந்து ஒழியும் என்பதும், பின்னர்ப் பால் சுவறி நெய்யாகிப் பயன் விளைத்தல் போலப் புண்ணியம் உலகியலினின்றும் வேறுபட்டுச் சிவபுண்ணிய மாக நின்று, சிவக் காட்சியைப் பயப்பிக்கும் என்பதும் ஆன்றோர் அநுபவத்திற் கண்ட உண்மைகளாம். [1] "புண்ணிய தழல் காய் பாலளா நீர்போற் பாவமுன் பறைந்து பாலனைய, புண்ணியம் பின்சென் றறிவினுக் கரிய" என்னும் திருவிசைப்பா வானும் இவ்வுண்மை புலனாதல் அறியலாம். ஆகவே, பாவ நாசன் என்று கூறுதலே அமைவுடைத்து என்பது.

அங்ஙனமாயின், அவ்விரண்டற்கும் பொதுவாகப் பிற இடங்களில், "கன்ம நாசன்" என்று கூறுதல் எங்ஙனம் அமையும் எனின், அக் கன்மத்துள் அடங்கிய நல்வினை, [2] "இருள் சேரிரு வினை" யின்பாற் படுமாதலின் பொருந்தும் என்க. உயிர் தற்பயன் கருதாத நிலையில், அது சிவ புண்ணியமாகும். ஆதலின், கன்ம நாசன் என்னும் இடத்துச் சிவ புண்ணியம் அடங்காது என்பது கருத்து.

இனி, அடிகள் இறைவனை நோக்கி, "வருகவென்னனை" என்று பலமுறை கூறியதன் பயனை வெளிப்படுத்துக் கூற முற்படுகின்றார். முதலில் ஆண்டவன் திருவடிக்கண் மெய்யன்பு உடைமையும், அதனால் அப் பெருமானுடைய புகழ் மொழிகளைத் தம் நாவினாற் பாராட்டுதலும், அப் பாராட்டு முதிர்ச்சியில் உள்ளம் உருகி அவன் சிறப்புக்களை இசையுடன் கலந்து பாடுதலும் ஆகிய இவற்றையே விண்ணப்பித்துள்ளார். ஆண்டவன் ஈண்டுப் பயனாக

1. திருவிசைப்பா. 2. திருக்குறள் 2.

திருவடி இன்பமே தமக்கு முடிந்த பயனாயினும், அதனைக் குறிப்பிடாமல், [1] "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்றபடி, அதற்கு உரிய சாதனங்களாகிய தம் கடமைகளையே குறிப்பிட்டனர். அவ்வீட்டின்பம், [2] "தன்கடன் அடியேனையுந் தாங்குதல்" என்றபடி, அப்பெருமானது கடமையாக அருளத்தக்கது என்று ஈண்டுக் கூறுதொழிந்தார் என்பது. சாதனங்களுள் பன்னுதலும் பாடுதலும், முறையே அருச்சித்து வழிபடுதலையும் துதி பாடலையும் குறிக்கும் என்பதுமாம். "பன்னவும், பாடவும்" என்புழி, எண்ணும்மைகள் தொக்கு நின்றன.

இதன்கண், முதலும் ஈறுமாக விளங்கும் ஆண்டவன் திருவடிக்கண் மெய்யன்புவைத்து வழிபட்டு ஒழுகுதற்கு அவனால் அழைக்கப்படல் வேண்டுமென்பதும், அவ் அருளழைப்பே அதீதமாகிய இன்பப் பேற்றிற்கு ஏதுவாகும் என்பதும் பெறப்படுதலின், ஆனந்தாதீதம் என்னும் பதிகம் நுதலிய பொருள் புலனாதல் அறிக.

100. பாட வேண்டுநான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டுநான் போற்றி அம்பலத்
தாடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டுநான் போற்றி இப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டுநான் போற்றி வீடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே.

க-ரை: முன்னைத் திருப்பாட்டில் இவ்வுலக வாழ்க்கையினின்றும் என்னை விடுவித்து, நின் பக்கலில் வரக் கட்டளையிட்டருளல் வேண்டுமென்று இறைவனை நோக்கி விண்ணப்பஞ் செய்துகொண்ட அடிகள், அணுக்கனாய பின், தாம் எய்த வேண்டிய முடிவான பேறுகளை அளித்தல் ஆண்டவன் கடமையாயினும், வீட்டின்பத்தை விரைவிற்

1, 2. திருநாவுக்கரசர் தேவாரம், "தங்கடம்பனை."

பெறும் ஆர்வ மிகுதியால் இத் திருப்பாட்டில் தாமும் வெளிப்படக் கூறி வேண்டுகின்றார்.

ப-ரை: நின் மெய்யர் மெய்யனே—நின்பால் மெய் யன்புள்ள அடியார்க்கு மெய்ப்பொருளாக வுள்ளவனே, போற்றி—வணக்கம், நின்னையே நான் பாடவேண்டும்—உன்னைப்பற்றியே யான் பாடவேண்டும், நெக்கு நெக்கு உருகி பாடி நைந்து நைந்து நான் ஆடவேண்டும்—உள்ளம் நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகிப் பாடிக்கொண்டு அவசமுற்று யான் கூத்து ஆடல் வேண்டும், போற்றி—, அம்பலத்து ஆடும் நின் கழல் போது நாயினேன் நான் கூடவேண்டும்—தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் திருக் கூத்தாடும் நின் திருவடி மலரை நாய்த் தன்மையுடைய சிறியேன் அடைதல் வேண்டும், போற்றி—, என்னை இப் புழுக்கூடு நீக்கு—அது குறித்து அடியேனைப் புழுக் களுக்கு இடமாகிய இவ்வுடலினின்றும் விடுவித்தருளல் வேண்டும், போற்றி—, நான் பொய்யெலாம் வீட வேண் டும்—யான் இப்பொய்யுலக வாழ்க்கையைப்பற்றிய எல்லா வற்றையும் விட்டொழிக்கச் செய்தல்வேண்டும், போற்றி—, வீடு தந்து அருளு போற்றி—அழிவில் இன்பமாகிய வீட்டு நிலையைத் தந்து அருளுவாயாக வணக்கம் என்பது.

வி-ரை: மெய்ம்மையாகிய அன்பும் ஒழுக்கமும் உடையார் மெய்யர் ஆயினும், அம் மெய்ம்மை, சிவ பெருமானைப் பற்றியதாக நிகழ்தல் வேண்டும் என்பது குறித்து, "நின் மெய்யர்" என்றார். மெய்யர்க்கு மெய்யனாதல், ஆண்டவன் உளன் என உணர்ந்து நம்புவார்க்கு உளனாய் நின்று, அவர் வேண்டுவன அளித்துக் காப்போனாதல். நின்னையே, என்புழி, ஏகாரம் தேற்றப் பொருட்டு. "நின்னையே நான் பாடவேண்டும்" என்றதனால், பிற தேவரையாதல், மக்கள் முதலியோரையாதல் மறந்தும் பாடலாகாது என்பதும், அதற்கும் நீயே உதவி புரிதல் வேண்டும் என்பதும் போதரும். [1] "பொய்ம்மையாளரைப் பாடாதே யெந்தை புகலூர் பாடுமின் புலவிர்காள்" என்பர் தம்பிரான் தோழர். இது மொழிப்பணி.

1. சுந்தரர் தேவாரம், "தம்மையே புகழ்ந்து."

"நெக்கு, நெக்கு உருகி" என்றதனால், கல்லினும் வலிய நெஞ்சம், ஆண்டவனை நினைந்து நினைந்து, கரைந்து உருகுதல் வேண்டும் என்பது போதரும். [1] "உருகு மனத்தடியவர்கட்கு ஊறுந்தேனை" என்பது அப்பர் அருண்மொழி. உள்ளம் உருகிய நிலையிலே, இறைவன் விளக்கம் உண்டாம் என்பது கருத்து. நைதல்—தன் வயம் அழிதல். வலிய நெஞ்சம், இறைவனை நினைந்து முதலிற் குழைதலும், பின்னர் உருகுதலும், முடிவில் தன் வயம் அழிதலும் ஆகிய மூன்று நிலைகளையும் எய்தும் என்பது. விரிந்த நினைவுகள், குழைவு தோன்றிய நிலையில் சுருங்கு தலும், சுருங்கி எஞ்சிய எண்ணங்கள், உருகிய நிலையில் ஒடுங்குதலும், எண்ணங்களின் ஒடுக்கத்தில் தன் நிலை அழிதலும் உளவாம் என்க. இஃது உள்ளப்பணி.

உருகி, நைந்து என்னும் செய்தென் எச்சங்கள், [2] "சினை வினை சினையொடு முதலொடுஞ் செறியும்" என்னும் விதிப்படி முதலோடு முடிந்தன. தன் வயம் அழிந்த நிலையில் ஆனந்தக்கூத்து நிகழும் ஆதலின், "பாடி நைந்து நைந்துருகி நெக்கு நெக்கு ஆடவேண்டும் நான்" என்றார். ஆடல் இன்றியும் நிகழும் பாடல் பற்றி, முதலில் நின்னையே பாடவேண்டும் எனவும், பாடலுடன் நிகழும் ஆடல்பற்றி, அடுத்துப் பாடி ஆட வேண்டும் எனவும் கூறப்பட்டன. இது மெய்ப்பணி.

இங்ஙனம் முக்கரணங்களும் ஆண்டவன் பணியில் ஈடுபட்டு நிகழ்தல், அப் பெருமான் திருவடி நீழலில் இயைதற் பொருட்டாம் என்பார், "அம்பலத்தாடும் நின் கழல் கூடவேண்டும்" என்றார். ஆண்டவன் ஞானாசிரியனாக எழுந்தருளி உபதேசித்து மறைந்த பொழுது, [3] "நாயினேனை நலமலி தில்லையுட் கோலமார்தரு பொதுவினில் வருகெனக்" கட்டளையிட்டனன் எனக் கூறுவார் ஆதலின், ஆங்கு வரப் பணித்த குறிப்பினை உணர்ந்த

1. திருநாவுக்கரசர் தேவாரம். 2. நன்னூல், வினையியல், சூ. 26.
3. திருவாசகம், கீர்த்தித் திருவகவல் 127.

அடிகள், ஈண்டுத் தில்லையம்பலத்துத் திருக் கூத்தாடும் நின் திருவடி அடைதல் வேண்டும் என்று கூறுவாராயினர்.

கழற்போது—திருவடி மலர். தூய மலரிற் கூடுதற்குத் தடையாக, இவ்வூனர் புழுக்கூட்டில் இருக்கலாமா? இதனை விரைவிற் கழித்தருளல் வேண்டும் என்பார், "இப் புழுக் கூடு நீக்கு எனை" என்றார். கூட்டு, இழிவு கருதிற்று. ஆண்டவன் திருவடி மலர், சிவஞான மணத்திற்கும், பேரின்பத் தேனுக்கும் இருப்பிடமாகும். உடல், மூடை நாற்றத்திற்கும் புழுக்களுக்கும் உறைவிடமாகும். ஆதலின், முதலில் இழிந்த இப் புழுக்கூட்டினின்றும் நீக்கி யருளல் வேண்டும் என்றார் என்பது.

பொய்யெலாம் என்பது, அழியும் இயல்பினவாகிய இவ் வுலக வாழ்க்கைக்கு உரிய பொருள்களைப்பற்றி உண் டாம் பல திறத்து அவாக்களையும் குறிப்பதாகும். [1] "அவா வென்ப எல்லா வுயிர்க்கும் எஞ்ஞான்றும், தவா அப் பிறப் பீனும் வித்து" என்ப ஆதலின், அவ் அவா என்னைச் சாராதபடி, அவற்றை ஒழித்து அருளல் வேண்டும் என்றார். அவாவை ஒழித்தலே பிறவாமைக்கு ஏதுவாம் ஆதலின், அதன் ஒழிவில், என்றும் அழிவு இல்லாத பேரின்பப் பெரு வாழ்வு ஆகிய வீட்டு நிலையை அளித்து அருளல் வேண்டும் என்பார், "வீடு தந்தருளு" என்று முடிவாக வேண்டு வார் ஆயினர்.

வீட்டின்பப் பேற்றிற்குச் சாதனமாகிய மெய்யன்பு, மன மொழி மெய்கள் தூயனவாய், இறை பணியில் தலைப் படலால் உண்டாம் என்பதும், அம் மெய்யன்பினால் எய்தப் படும் இறைவன் திருவடி இயைபிற்குத் தடையாக வுள்ளது உடற்சுமை யாதலின், அதுவும், அதுபற்றி உண் டாய அவாவும் ஒழிக்கப்படல் வேண்டும் என்பதும், அவ் வொழிவில், சாத்தியமான வீட்டின்பம் எய்தலாம் என்ப தும், அடிகள் வேண்டுகோள் முகமாகக் கூறிய இத் திருப் பாட்டால் நன்கு அறியத்தக்கனவாம்.

1. திருக்குறள் 361.

இத் திருச்சதகத் திருப்பாட்டுக்கள் எல்லாவற்றினும் பரந்து கிடந்த பொருள் அனைத்தையும் இவ்விறுதித் திருப் பாட்டில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கும் அருமை உணர்ந்து இன்புறத்தக்கது. இறுதியில், "மெய் யர் மெய்யனே" என்றது, இத் திருச்சதகத்தின் முதல் திருப்பாட்டாகிய, "மெய்தான் அரும்பி" என்பதன் முத லொடு இயைந்து, அந்தாதித் தொடையாயினமை அறிக. இங்ஙனம், "மெய்" யென்னும் சொற்றொடர் நிலையே அன்றி, முக்கரணங்களும் இறைவன் வயப்படல் வேண்டும் என்னும் இத் திருச் சதகத்தின் முதல் திருப்பாட்டின் கருத்தாகிய பொருள் தொடர் நிலையும் இத் திருப்பாட்டில் அமைந்திருத்தல் உணர்ந்து இன்புறத்தக்கது.

இதன் கண், "பாட வேண்டும்", "நைந்து நைந்துருகி ஆட வேண்டும்" என்பனவற்றால் பத்தியின் இயல்பும், "இப்புழுக்கூடு நீக்கு", "பொய்யெலாம் வீட வேண்டும்" என்பனவற்றால் வைராக்கியத்தின் இயல்பும் பெறப்படுத லின், பத்தி வைராக்கிய விசித்திரம் என்னும் சதகம் நுதலிய பொருளும், அவா வொழித்து, வீடு தந்து அருளல் வேண் டும் என்றதனால், அதீதமாகிய இன்ப நிலை பெறப்படுதலின், ஆனந்தாதீதம் என்னும் பதிகம் நுதலிய பொருளும் புலனாதல் அறிக.

திருவாதவூர் அடிகள் அருளிச்செய்த திருவாசகத் திருமறைக் கண் உள்ள திருச்சதகத்திற்குப் பாண்டி வளநாட்டில், பூங்குன்ற நாட்டுத் தலைநகராகிய மகிபாலன்பட்டி, மகாமகோபாத்தியாய முதுபெரும் புலவர், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் இயற்றிய கதிர் மணி விளக்கம் என்னும் பேருரை முற்றுப் பெற்றது.

திருச்சிற்றம்பலம்.



## * திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 24 | 6 | மெற்கொள் | மேற்கோள் |
| 45 | 20 | சிவ | சீவ |
| 46 | 5 | நிரனிரை | நிரனிறை |
| ,, | 11 | குறிபிற் | குறிப்பிற் |
| 66 | 24 | பொருளர்கி | பொருளாகி |
| 77 | 24 | உன்ளத்தால் | உள்ளத்தால் |
| 80 | 11 | குரவில் | குரலில் |
| 88 | 20 | முனைத்திருங்கு | முனைத்திருக்கு |
| 100 | 5 | வீழ்ச்சியைய் | வீழ்ச்சியைப் |
| 105 | 19 | வந்தார், ஒருவரை | வந்தார் ஒருவரை, |
| ,, | 29 | என்தாம் | என்பதாம் |
| 106 | 5 | விடுவித்ததற்கு | விடுவித்தற்கு |
| ,, | 11 | எழுவாகிய | எழுவாயாகிய |
| 108 | 6 | அளவில் | அளவில் |
| 121 | 23 | வடிவில் | வடிவில் |
| 124 | 28 | தனத்கு | தனக்கு |
| 125 | 20 | நுழைவறியா | நுழைவரியான் |
| 127 | 17 | என்பது | என்பதும் |
| 128 | 10 | உபகரித்ததைத் | உபகரித்ததைக் |
| 133 | 29 | வாதலின், | வாதலின். |
| 134 | 26 | ஆகுங்காலும் | ஆகுங்காறும் |
| 136 | 11 | அறிவு, ஆற்றல் | அறிவாற்றல் |
| 138 | 35 | ஆட்பாலரவர் | ஆட்பாலவர் |
| 140 | 20 | பொட்படுத்து | பொருட்படுத்து |
| 169 | 1 | மாறிநின்றனை | மாறிநின்றெனை |
| 175 | 10 | அளவற்றுக் | அளவறுக் |
| 176 | 25 | நெஞ்செ | நெஞ்சே |
| 178 | 30 | களவு, | களவு— |
| 183 | 35 | அடி 171 | அடி 117 |

* சில இடங்களில் மெய்யெழுத்துக்களின் புள்ளி தேய்ந்திருப்பவை திருத்தத்திற் சேர்க்கப்பட்டில ; அறிந்து வாசிக்க.

## * திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 24 | 6 | மெற்கொள் | மேற்கோள் |
| 45 | 20 | சிவ | சீவ |
| 46 | 5 | நிரனிரை | நிரனிறை |
| ,, | 11 | குறிபிற் | குறிப்பிற் |
| 66 | 24 | பொருளர்கி | பொருளாகி |
| 77 | 24 | உன்ளத்தால் | உள்ளத்தால் |
| 80 | 11 | குரவில் | குரலில் |
| 88 | 20 | முனைத்திருங்கு | முனைத்திருக்கு |
| 100 | 5 | வீழ்ச்சியைய் | வீழ்ச்சியைப் |
| 105 | 19 | வந்தார், ஒருவரை | வந்தார் ஒருவரை, |
| ,, | 29 | என்தாம் | என்பதாம் |
| 106 | 5 | விடுவித்ததற்கு | விடுவித்தற்கு |
| ,, | 11 | எழுவாகிய | எழுவாயாகிய |
| 108 | 6 | அளவில் | அளவில் |
| 121 | 23 | வடிலில் | வடிவில் |
| 124 | 28 | தனத்கு | தனக்கு |
| 125 | 20 | நுழைவறியாஎ | நுழைவரியான் |
| 127 | 17 | என்பது | என்பதும் |
| 128 | 10 | உபகரித்ததைத் | உபகரித்ததைக் |
| 133 | 29 | வாதலின், | வாதலின். |
| 134 | 26 | ஆகுங்காலும் | ஆகுங்காறும் |
| 136 | 11 | அறிவு, ஆற்றல் | அறிவாற்றல் |
| 138 | 35 | ஆட்பாலரவர் | ஆட்பாலவர் |
| 140 | 20 | பொட்படுத்து | பொருட்படுத்து |
| 169 | 1 | மாறிநின்றனே | மாறிநின்றெனே |
| 175 | 10 | அளவற்றுக் | அளவறுக் |
| 176 | 25 | நெஞ்செ | நெஞ்சே |
| 178 | 30 | களவு, | களவு— |
| 183 | 35 | அடி 171 | அடி 117 |

* சில இடங்களில் மெய்யெழுத்துக்களின் புள்ளி தேய்ந்திருப்பவை திருத்தத்திற் சேர்க்கப்பட்டில; அறிந்து வாசிக்க.

## திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 185 | 28 | பிரிவது | பிறிவது |
| 189 | 29 | ஒழிபு | ஒழிவு |
| 194 | 9 | அழியா | கழியா |
| ,, | 33 | வாவூர | வாதவூர |
| 197 | 4 | ஞானசிரிய | ஞானாசிரிய |
| 213 | 7 | அத்தந்தரத்தின் | அத்தந்திரத்தின் |
| 217 | 15 | காணர | காரண |
| 220 | 29 | வாழ்க்கையில் | வாழ்க்கையில். |
| 254 | 26 | அளித் | அளித்து |
| 258 | 20 | விளக்கி | விலக்கி |
| 271 | 5 | துன்புறுத்தும் | துன்புறுத்துப் |
| 289 | 5 | தலைவனைய் | தலைவனைல் |
| ,, | 6 | கருதில் | கருதிப் |
| 298 | 9 | பரும் | பருவம் |
| 435 | 15 | பேருத[illegible] | பேருதவிகளா |
| 444 | 13 | உன்ன [illegible] | உள்ளவ |
| 448 | 3 | இன், [illegible] மையா | இன்றியமையா |
| 451 | 26 | மாயையும் | மாயையையும் |
| 452 | 16 | கரிய | கறிய |

குறிப்பு: திருச்சதகம் 32-ஆம் திருப்பாட்டை

அறிவி லாத எனைப்புகுந் தாண்டுகொண்
டறிவதை யருளிமேல்

எனச் சீர்பிரித்து வாசிக்க.